# உன்னால் கடக்க முடியும்

**THE WISDOM OF THE SANDS -II**

ஓஷோ



2

கண்ணதாசன் பதிப்பகம்



# உன்னால் கடக்க முடியும்

## பாகம் - 2

## ஸூஃபிசம் பற்றிய பிரசங்கங்கள்

## The Wisdom of The Sands (Volume - II)

ஓஷோ

தமிழாக்கம்:

**வானமாமலை**

கண்ணதாசன் பதிப்பகம்

23, கண்ணதாசன் சாலை,
தியாகராய நகர்,
சென்னை - 600017
தொலைபேசி: 24332682 / 24338712

**கிளைகள் : மதுரை ❖ கோவை ❖ பாண்டி**

முதற் பதிப்பு : ஜனவரி, 2018
இரண்டாம் பதிப்பு : மே, 2018

E-mail : **sales@kannadasan.co.in**
Our Web site : **www.kannadasan.co.in**

பதிப்பாசிரியர்: **காந்தி கண்ணதாசன்**

**UNNAL KADAKKA MUDIYUM BHAGAM 2 - Tamil**

Originally Published in English as THE WISDOM OF THE SANDS - Volume II by Osho



**Price Rs. 300/-**

| | |
|---|---|
| Translated by | : **VAANAMAMALAI** |
| Second Edition | : May 2018 |
| Publishing Editor | : **Gandhi Kannadhasan** |
| Published by | : **Kannadhasan Pathippagam**<br>23, Kannadhasan Salai,<br>Thiyagaraya Nagar, Chennai-600 017.<br>Ph.: 044-24332682 / 24338712. |

**ISBN:978-81-8402-809-6**

Our Branches : No: 1212, Range Gowder Street,
**Coimbatore** - 641001. Ph: 0422 - 2479774
1, Annai Complex, III Street, Vasantha Nagar,
**Madurai**-625 003. Ph: 0452 - 2373793
37, Bharathy Street, **Puducherry** - 605 001.
Ph: 0413 - 2221241

| | |
|---|---|
| Inner Layout's | : Sivaa Graphics, Ph: 839475707 |
| Cover Design by | : naanaas@gmail.com. Ph: 9941011196 |
| Printed by | : VASAN Print Mfg Co, Ch-14. |

# பொருளடக்கம்

# அறிமுகவுரை

*''உன் ஆடைகளைக் கிழித்துக்கொண்டு ஆற்றினிலே குதி. ஒருக்கால் யாரேனும் உன்னைக் காப்பாற்றலாம்.''*

இந்நூலின் முதல் கதையில் வரும் ஒரு சில வரிகள் பூனாவில் (இந்தியா) ஞான குருவான ஓஷோவுடன் வாழும் எனக்கு இவ்விடத்தில் எனக்கான சாரத்தை எடுத்துரைக்கின்றது.

*இந்தக் கதை நம்பிக்கையைப் பற்றியது. இது ஒரு குறிப்பீடு. இதை நீங்கள் நினைவில் வைத்துக்கொண்டால் நம்பிக்கை எனும் வாழ்க்கையின் கணநேரத் தோற்றத்தைக் காண்பீர்கள். இந்த உருவகக் கதையை நாங்கள் இங்கே வாழ்ந்து பார்க்க முயற்சித்துக் கொண்டிருக்கிறோம். இது உங்கள் கதை. இக்கதையினுள் வாருங்கள். வெறும் வார்த்தைகள் மட்டுமல்ல, அதன் பொருளுக்குள் வாருங்கள். அதன் பிறகு இக்கதையை வாழ்ந்து பாருங்கள். வாழ்ந்தால் மட்டுமே நீங்கள் அறிய முடியும்.*

எனக்கு பல வருடங்களாக அதைத் தெரிந்துகொள்ள விருப்பம். ஆனால் அது அச்சமூட்டுவதாக இருந்தது. அது பழையது மற்றும் பழக்கமானதை விட்டுவிட்டு அறியாததிற்குள் வீழ்வது போலாகும்.

*நாடுதல் மற்றும் இறைவனை, உண்மையை, ஆனந்தத்தை தேடுதல் இந்தத் தருணம் திரும்பத்திரும்ப வருகின்றது,*

அதாவது நேர்வுக்குள்ளாவது. சாமர்த்தியம் அனைத்தும் இதற்கு எதிரானது. முழு மனதும் இதை எதிர்க்கும்.

ஆக நான் பலமுறை அறிவுப்பூர்வமாக இந்த முடிவிற்கு வந்துள்ளேன். ''குதிக்கலாமா? ஆனால், ஏன்? எப்படி உறுதி கொள்வது? என்னை யாராவது காப்பாற்றுவார் என்பதை எப்படித் தெரிந்துகொள்வது? இது பைத்தியக்காரத்தனம்! ''மிகவும் ஆபத்தானது'' பலமுறை குதிப்பதுபற்றி யோசித்து இருக்கிறேன். ஒரு சில சமயங்களில் குதித்துவிட்டேன் என்று கூட நினைத்திருக்கிறேன். ஆனால் மனம் தந்திரமானது. நான் குதிக்கும் துணிவு பெற்றுவிட்டேன் என்று நினைக்கும் போது, நான் இலவம்பஞ்சுத் தலையணை மீது விழுந்து இருக்கிறேன் என்பதை அறிந்துகொள்வேன். மற்றவர் கண்ணுக்குத் துணிவு உள்ளவனாகத் தோன்றினாலும், என்னுள் ஆழமாய் ஆபத்துக்கள் குறைவாகவே இருக்கும்.

ஆபத்தை எதிர்கொள்வதுபற்றி நான் உண்மையில் புரிந்து கொள்ளவில்லை என்று நினைக்கிறேன். என் வாழ்நாள் முழுவதும் வாழ்க்கையைக் கட்டுப்பாட்டில் வைத்து ஒரு பாதுகாப்பான, ஸ்திரமான உலகை உருவாக்க அறிவுறுத்தப் பட்டேன். இது ஆபத்துக்களை எதிர்கொள்வதற்கு முரணானது. நான் உறுதியான, தகுதியுடைய தற்சார்புடைய பெண் என்ற பெருமிதம் கொண்டிருந்தாலும், உள்ளிருந்து ஒரு குரல் ''இது தவறு'' என்று கூக்குரலிடும். வெளிப்புறத்தில் நான் வெற்றிகர மாகத் தோன்றினாலும், உள்ளுககுள் அச்சம், சந்தேகம் மற்ற நம்பிக்கையின்மை நிறைந்து இருந்தது. நான் கடினமாக உழைத்து உருவாக்கிய பாதுகாப்பு உணர்வு என்னை அழுத்திக் கொண்டிருந்தது. இறுதியில் அது ஒரு மாயத்தோற்றம் என்றானது. நான் சுய வளர்ச்சியில் மேலும் ஆழமாய் இறங்கினாலும் ஏதோ ஒரு இழப்பு இருந்தது எனக்குத் தெரிந்தது. மேலும் அதிகம் இருக்கிறது என்பதை எப்படியோ அறிந்துகொண்டேன்.

நான் எங்கே செல்வது? சிகிச்சை உதவி செய்யும், ஆனாலும் அது அதன் எல்லைகளைக் கண்டுவிட்டது. நான் பசித்து

இருந்தேன். மேலும் அதிகம் வேண்டி பசி இருந்தது, அது என்னவென்று என்னால் தெளிவுபடுத்த முடியவில்லை. ஆனால் இருக்கிறது என்பது தெரிந்தது.

*இதயமானது துணிச்சல் மேற்கொள்ளும், மர்மங்களை ஆராயும், புதைந்துகிடக்கும் அனைத்தையும் தேடிக் கண்டுபிடிக்கும். இதயம் என்றும் யாத்திரையிலேயே இருக்கும். திருப்தியே அடையாது. அடி ஆழத்தில் அதிருப்தி, ஒரு வகையான ஆன்மிக மனநிறைவின்மை... இதயம் துணிகரச் செயலை நாடுகிறது- ஆபத்திற்காக ஏங்குகிறது, அறியப்படாதது, தெரியாதது, பாதுகாப்பற்றதற்காக ஏக்கம் கொள்கிறது. சமுத்திர அனுபவத்தை நாடுகிறது, கரைந்து போக ஆசை. முழுமையில் மறைந்து போக அதற்கு விருப்பம். ஆனால் அறிவு பயப்படுகிறது. சாவதில் அச்சம், மறைந்து போதலில் அச்சம்.*

இந்த ஏக்கம்தான் நான் குதிக்க வேண்டும், துணிய வேண்டும் என்பதை எனக்குப் புரிய வைத்தது. நான் நாடுவது எனக்குப் பரிச்சயமான பழையதில் இல்லை. எப்படியோ, எங்கேயோ மேலும் அதிகம் உள்ளது, அது எனக்குள்ளேயே வாழ்ந்து வருகிறது. பல வருடங்களாக (ஒருக்கால் பல ஜென்மங்களாக) பக்குவப்படுத்தப்பட்டு, திட்டமிடப்பட்டு தீண்டப்படாமல் என்னுள் இருப்பது. எனக்கான கேள்வி. 'என் பாதுகாப்பை உதறிவிட்டு பலன்பற்றிய எந்த உத்திரவாதமும் இல்லாமல் நான் ஆற்றினில் குதிக்க முடியுமா?' நான் அகமகிழ்வு, நம்பிக்கை மற்றும் நேசமான தருணங்களை அனுபவித்து இருக்கிறேன். ஆக, வாழ்க்கை இப்படித்தான் இருக்க வேண்டும் என்று அறிந்தேன்.

*பாதுகாப்பின்மைக்குள் போக நீங்கள் தயாரானால்தான் நீங்கள் நம்பிக்கை கொள்ள முடியும், அறியப்படாத பிரதேசத்தில் வரைபடம் இல்லாமல் உங்கள் படகை நீங்கள் செலுத்தத் தயாரானால் மட்டுமே நம்பிக்கை கொள்ளமுடியும். நம்பிக்கை கொள்ளுதல் என்றால், அதீதமான துணிச்சல்*

*என்று பொருள். ஒரு துணிச்சலானவர்மட்டும் சமயப் பற்றுடன் இருக்கமுடியும், ஏனென்றால் துணிச்சல் உள்ளவர் மட்டுமே 'ஆம்' என்று சொல்லமுடியும்.*

இது எல்லாமே குதிப்பதுபற்றியும் துணிவதுபற்றியும், மேலும் கடவுள், வாழ்க்கை, இருப்பு ஆகியவை உங்களுக்குத் தேவையானதை வழங்கும் என்ற நம்பிக்கை கொள்வதுபற்றியதும் இது. இந்தப் புத்தகம் இங்கே தொடங்கி இங்கேயே முடிகிறது — காரணம் இதுவே குரு — சீடர் உறவு முறையின் மையமாகும்: நம்பிக்கை. ஆம், நம்பிக்கை என்பதுவே உருமாற்றம், அது விவரிக்க இயலாத உருமாற்றத்தைத் தரக்கூடியது.

*தொடக்கத்தில் நம்பிக்கை என்பது ஒரு உணர்வு, அதனுடைய இறுதி மலர்தலில் அது இருப்பு.... நீங்கள் நம்பிக்கை கொண்டால் ஏதோ ஒன்று எப்போதும் நடக்கும், உங்கள் வளர்ச்சிக்கு உதவும். உங்களுக்கு வேண்டியது வழங்கப்படும். அந்த குறிப்பிட்ட நேரத்தில் தேவையானது எதுவோ அது உங்களுக்கு கொடுக்கப்படும்... அதுவே நம்பிக்கையின் அழகு. போகப்போக வாழ்க்கை, இருப்பு உங்களுக்கு வழங்குகிறது என்ற வழிமுறைகளைக் கற்றுக் கொள்வீர்கள், இருப்பு உங்களைப் பற்றி அக்கறை கொள்கிறது என்பதைப் புரிந்துகொள்வீர்கள்.*

ஓஷோ போன்ற ஒரு உண்மையான குருவுடன் மட்டும் அப்படியொரு குதிப்பு சாத்தியம். அவர் அறியாத ஒன்றின் சுவை. நம் ஒவ்வொருவருக்குள்ளும் இருக்கும் மற்றும் நம் அனைவருக்கும் சாத்தியப்படும் ஒன்றின் கணநேரத் தோற்றம் ஓஷோ. அவருடைய சந்நிதானமே ஒரு சூழலை உருவாக்கும் (நாங்கள் அதை புத்தாஃபீல்ட்.... புத்தர் களம் என்றழைப்போம்). அவருடைய முன்னிலையில் உருவாகும் சூழல் நமக்குத் தேவையான அன்பு, விழிப்புணர்வு, பரிவு ஆகியவை உணர்ந்து நாமே ''குதிப்பிற்கு'' சக்தி பெறுவோம். அவர்தான் நம்முடைய அகக் குருவிற்கான பாலம், வழிகாட்டி.

> *குருவானவர் ஒரு வாயிற்கதவு. அறியாத ஒன்றின் சைகை, ஒளி வழிகாட்டி, ஆனால் ஒரு மனிதர் அல்ல. ஒரு திறந்த கதவு, காட்டு வெளியிலிருந்து கேட்கும் ஓர் குரல், ஓர் தூண்டுதல், தெய்வீகத்திற்கு இழுக்கும் ஓர் வசீகரம், ஓர் அமைப்பு, ஆனால் மனிதரல்ல.... அதிகபட்சம் குரு ஒரு சம்பவம். குருவுக்குள் நோக்கி குருவுடன் ஒத்துணர்வு கொண்டு குருவின்பால் நேசம் கொள்வதினால் நீங்கள் நம்பிக்கை பெறுகிறீர்கள். அறியாததிற்குள் இனி நீங்கள் குதிக்க முடியும்.*

ஒவ்வொரு நாளும் குதிப்பதற்கு நமக்கு வாய்ப்பை வழங்கு கிறது. ஒவ்வொரு தருணமும் வளர்வதற்கான ஓர் வாய்ப்பு.

> *ஒவ்வொரு மனிதனும் பிரகாசமான வாய்ப்புகள் உடைய மனிதன். ஏனென்றால், ஒவ்வொரு மனிதனுக்கும் இறைவனே இறுதி மலர்தலாக இருக்கிறான்.*

இந்த தனித்தன்மை வாய்ந்த குருவை அனுபவிக்க இந்தப் புத்தகம் ஒரு அழைப்பு. இது சூஃபிக் கதைகள் பற்றிய காலை தொடர் பிரசாரங்கள், மற்றும் சீடர்கள் மற்றும் வருகையாளர்கள் கேள்விகளுக்குப் பதில்கள். இக்கதைகள் இறுதி இலக்கை சுட்டிக்காட்டும் வழிகாட்டிகள்.

> *சூஃபிக் கதைகள், வெறும் கதைகள் அல்ல. அவை உங்கள் பொழுதுபோக்குக்காக அல்ல. உங்களுக்கு ஒரு வேலை கொடுப்பதற்காகவும் இல்லை. அவை கற்றுக் கொடுக்கும் கருவிகள். எதையோ சுட்டிக்காட்டுகின்றன, எதையோ காட்டுகின்றன. அவை சுட்டிக் காட்டும் குறிமுட்கள். அறியாதவரை நோக்கி ஏவப்படும் அம்புகள், நிலவை சுட்டும் விரல்கள்.*

கதைக்குள் இருக்கும் கதைக்கு பகவானால் நம்மை இட்டுச் செல்ல முடிகிறது. அது வார்த்தைகளைக் கடந்த ஒன்று. இந்தப் பிரசங்கங்கள் நம் மீது அன்பையும், பரிவையும் பொழிவதற்கு

அவருக்கு ஒரு சாக்கு. மென்மையாகவும் (சமயங்களில் அவ்வாறு இல்லாமலும்) நம்மை எல்லாம் அறியாததை நோக்கி இட்டுச் செல்கிறார்.

சாத்தியங்கள் கணத்தில் அடங்கா. ஆக குதியுங்கள்! துணியுங்கள். நீங்கள் இழக்கக் கூடியதெல்லாம் உங்கள் அகங்காரம், உங்கள் ஆட்டங்கள் மற்றும் போலி அடையாளங்கள். மறுபக்கத்தில் மெய்ம்மையும், வெளிப்படைத் தன்மையும், வாழ்க்கையில் மகிழ்ச்சியும் காத்திருக்கின்றன. குதியுங்கள், புத்தகத்தினுள் குதியுங்கள், ஓஷோவிற்குள் குதியுங்கள். ஒருக்கால் யாரேனும் உங்களைக் காப்பாற்றலாம்.

**மா தேவ ரிதம்பரா**

ஏப்ரல் 1980

# விளக்க முடியாத வாழ்க்கையுடைய மனிதன்

2 மார்ச் 1978

ஒரு காலத்தில் மோஜீத் என்ற
பெயருடைய மனிதன் இருந்தான்.
ஒரு சிறு நகரில் வாழ்ந்த அவன்
அங்கே ஒரு இளநிலை அதிகாரியாகப் பணிபுரிந்து
வந்தான்.
அவனுடைய பணி நாட்கள்
எடைகளும் அளவுகளுக்குமான
ஆய்வாளராகவே
கழிந்துவிடும் போலத்தோன்றியது.

ஒரு நாள் தன் வீட்டருகே உள்ள
பழங்காலக் கட்டிடத்தின்
தோட்டத்தினூடே நடந்து செல்கையில்,
சூஃபிக்களின் புதிரான வழிகாட்டி கிதிர்
மினுமினுக்கும் பச்சை ஆடையில்
மோஜீத் முன் தோன்றினார்.
கிதிர் சொன்னார்,''பிரகாசமான
வாய்ப்புகள் உடைய மனிதனே, உன்
வேலையை விட்டுவிட்டு, மூன்று நாட்கள்
கழிந்து என்னை ஆற்றோரமாக சந்திப்பாயாக.''
அவர் பின்னர் மறைந்து போனார்.

நிலைதடுமாறியவாறு தன் மேல் அதிகாரியிடம்
சென்று தான் பணி விலகுவதாகச்
சொன்னான் மோஜீத்.
ஊர் மக்கள் அனைவருக்கும் இது
தெரிந்து போனது.
''பாவம் மோஜீத், பைத்தியமாகி விட்டான்'' என்றனர்.
ஆனால் அவன் இடத்தை நிரப்ப

பல பேர் போட்டியிட்டதால், மோஜீத்தை
விரைவிலேயே மறந்துபோயினர்.

முன்குறிப்பிட்ட நாளில் மோஜீத்
கிதிரை சந்தித்தான்.
அவர் அவனிடம் சொன்னது,
''உன் ஆடைகளைக் கிழித்துக்கொண்டு
ஆற்றினிலே குதி.
ஒருக்கால் யாரேனும் உன்னைக் காப்பாற்றலாம்.''

மோஜீத் அவ்வாறே செய்தான்.
இருந்த போதிலும் தான் ஒரு பயித்தியமோ
என்று யோசித்தான்.

அவனுக்கு நீச்சல் தெரியுமாகையால், அவன்
மூழ்கவில்லை.
ஆனால் வெகு தூரம் போய் விட்டவனை,
ஒரு மீனவன் தன் படகில் இழுத்துப் போட்டான்.
''முட்டாள் மனிதனே, ஆற்றோட்டம்
வேகமாக உள்ளது, என்ன செய்ய
முயற்சிக்கிறாய்?'' என்று கேட்டான்.
''உண்மையிலேயே எனக்குத் தெரியாது''
என்றான் மோஜீத்.
''நீ ஒரு பைத்தியம்'' என்றான் மீனவன்.
''சரி உன்னை ஆற்றுப்பக்கம் உள்ள என்
நாணல் குடிசைக்குக் அழைத்துச் செல்கிறேன்,
பிறகு உனக்கு என்ன செய்யமுடியும்
என்று பார்க்கலாம்.''

மோஜீத் நன்றாகப் பேசக் கூடியவன்
என்று தெரிந்துகொண்ட மீனவன்,
அவனிடமிருந்து எழுதப்படிக்கத் தெரிந்து கொண்டான்.
பரிமாறாக, மோஜீத்திற்கு உணவு கொடுத்தான்.

மோஜீத் மீனவனுக்கு அவன்
வேலையில் உதவி செய்தான்.
சில மாதங்கள் கழித்து கிதிர்
மீண்டும் தோன்றினார்.
இம்முறை மோஜீத்தின் படுக்கையின் காலடியில்,
''எழுந்திரு, இந்த மீனவனை விட்டுப்போ.
உனக்கு வேண்டியது வழங்கப்படும்'' என்றார்.

மீனவனைப் போன்று உடையணிந்த
மோஜீத் உடனேயே குடிசையை விட்டு அகன்றான்.
ஒரு நெடுஞ்சாலையை வந்தடையும் வரை சுற்றித்
திரிந்தான்.
விடியலின் போது கழுதை மீது
சந்தைக்குப் போகும் ஒரு விவசாயியைக் கண்டான்.
''வேலை தேடுகிறாயா?'' என்று கேட்ட
விவசாயி,''ஏனென்றால் வாங்கியவற்றைத்
திரும்பக் கொண்டு வர எனக்கு ஒரு ஆள் வேண்டும்.''

மோஜீத் அவனைப் பின்தொடர்ந்தான்.
அந்த விவசாயியிடம் இரண்டு வருடம் வேலை பார்த்தான்.
இந்தக் காலக்கட்டத்தில் விவசாயம் பற்றி
நிறைய தெரிந்துகொண்டான். ஆனால் வேறு எதுவுமில்லை.
ஒருநாள் மதியம் அவன் கம்பளி கட்டிக்கொண்டிருந்தபோது,
கிதிர் அவன் முன் தோன்றி,
''இந்த வேலையை விட்டுவிட்டு
மோசுல் நகரத்திற்குப் போ, உன்
சேமிப்பை வைத்து தோல் - வியாபாரியாகு'' என்றார்.
மோஜீத் அடிபணிந்தான்.

மோசுலில் அவன் ஒரு தோல் வியாபாரியாக அறியப்பட்டான்.
வாணிகம் செய்து வந்த மூன்று வருடங்களில்
அவன் கிதிரைப் பார்க்கவேயில்லை.
அவன் ஏராளமான பணம் சேமித்துவிட்டான்,
அவன் வீடு ஒன்று வாங்கலாம் என்று

யோசித்துக் கொண்டிருந்தபோது கிதிர் வந்தார்.
''உன் பணத்தை என்னிடம் தா. இந்த
ஊரை விட்டுப்போய் தூரத்து சமர்கண்ட்
நகரம் சென்று அங்கு உள்ள பலசரக்கு
வியாபாரிக்கு வேலை செய்.''
மோஜீத் அவ்வாறே செய்தான்.

இப்போது சந்தேகத்திற்கு இடமின்றி
அவனிடம் அறிவுணர்விற்கான
அறிகுறிகள் தென்பட்டன.
அவன் நோயாளிகளைக் குணப்படுத்தினான்.
கடையில், ஓய்வு நேரத்தில் உடன்
இருந்தோருக்கு வேலை செய்தான்.
விளங்கா மெய்மைகள் பற்றிய அவனறிவு
மேலும் மேலும் ஆழமாயிற்று.

மதகுருக்கள், வேதாந்திகள் மற்றும் பிறரும் அவனைக் கண்டு
''யாரிடம் கற்றுக் கொண்டாய்?'' என்று கேட்டனர்.
''அதை சொல்வது கடினம்'' என்றான் மோஜீத்.
உங்கள் வாழ்க்கைத்தொழிலை எப்படித்
தொடங்கினீர்கள்? என்று சீடர்கள் கேட்டனர்.
''ஒரு இளநிலை அதிகாரியாக'' என்றான்.
''உடல் சார்ந்த விருப்பு வெறுப்புக்களைக் களைய
உங்களை அர்ப்பணித்துக் கொள்ளும் பொருட்டு
வேலையைத் துறந்தீர்களா?''
''இல்லை, சும்மா விட்டுவிட்டேன்''என்றான் மோஜீத்.
அவர்களால் அவனைப் புரிந்துகொள்ள முடியவில்லை.

அவன் வாழ்க்கை கதையை எழுதக்கோரி
மக்கள் அவனை அணுகினார்கள்.
''உங்கள் வாழ்க்கையில் என்னவாக இருந்தீர்கள்?'' என்று
கேட்டனர்.
''ஆற்றுக்குள் குதித்தேன், ஒரு மீனவனானேன்.
அடுத்து நாணல் குடிசையிலிருந்து

நடுநிசியில் வெளியேறினேன்.
அதன் பிறகு பண்ணையில் வேலையாள் ஆனேன்.
கம்பளிக் கட்டிக் கொண்டிருந்தபோது, மனம்
மாறி மோசுலுக்குப் போனேன்,
அங்கே தோல் வியாபாரியானேன்.
கொஞ்சம் பணம் சேர்த்தேன், ஆனால் அதையும் கொடுத்து
விட்டேன்.
அங்கேயிருந்து சமர்கண்ட் நடந்து போனேன்.
ஒரு பலசரக்கு வியாபாரிக்கு வேலை செய்தேன்.
இப்போது நான் இங்கே இருக்கிறேன்.''

''ஆனால் உங்களுடைய விசித்திரமான
பண்புக்கூறுகள் மற்றும் அதிசயமான
உதாரணங்களை உங்களின் இந்த புரிந்து
கொள்ள முடியாத நடத்தை விளக்கவில்லையே'' என்றனர்
வாழ்க்கை வரலாற்று ஆசிரியர்கள்.
''அது அப்படித்தான்'' என்றான் மோஜீத்.

ஆக, மோஜீத்திற்காக ஒரு அற்புதமான,
கிளர்ச்சியூட்டும் கதையை வாழ்க்கை
வரலாற்று ஆசிரியர்கள் உருவாக்கினர்.
காரணம், எல்லா சந்நியாசிகளும்
தங்களுக்கென ஒரு கதை வைத்திருக்க வேண்டும்.
மேலும் அந்தக் கதை கேட்பவர்களின்
ஆர்வத்திற்கு உகந்ததாக இருக்க வேண்டும்,
வாழ்க்கையின் மெய்மைகளுக்கு உடன்பட்டு அல்ல.

கிதிர் பற்றி நேரடியாகப் பேச எவருக்கும் அனுமதி இல்லை.
அதனால்தான் இந்தக் கதை உண்மையல்ல.
இது வாழ்க்கையின் உருமாதிரியாக்கம்.
இதுவே மாபெரும் சூஃபி ஒருவரின்
உண்மையான வாழ்க்கையாகும்.

★★★

நாம் இன்று பார்க்கப்போகும் கதை மிகப்பெரிய கதை களில் ஒன்று. சூஃபி கதைகளுக்கு மட்டுமே உரிய சுவை இதற்குண்டு. இது ஒப்பற்றது. உங்களால் இந்தக் கதையைப் புரிந்துகொள்ள முடியுமென்றால், நீங்கள் சமயத்தின் ரகசியத்தைப் புரிந்துகொண்டீர்கள் எனலாம். இக்கதையைப் புரிந்து கொள்ள முடியவில்லை என்றால், உங்களால் சமயத்தைப் புரிந்து கொள்ளவே முடியாது.

சமய உணர்வின் அடித்தளத்திற்கு உரியது இந்தக் கதை. இது இல்லாமல் சமயம் சார்ந்த உருமாற்றம் இருக்க முடியாது. அதனால், கதையை முடிந்தளவு கவனமாகக் கேளுங்கள். இந்தக் கதை உங்கள் உயிருக்குள் அமிழ்ந்து போகட்டும். இந்தக் கதை ஒரு கதவைத் திறக்க முடியும், உங்கள் வாழ்க்கையில் ஒரு தீவிர மாற்றத்தைத் தர முடியும், இதன் காரணமாக நீங்கள் முன்பு இருந்ததுபோல் இருக்கவே முடியாது. ஆனால் கதையை, நுணுக்கமாக, கவனமாக, அதிக நேசத்துடன் புரிந்துகொள்ள வேண்டும். ஏனென்றால் இது ஒரு விசித்திரமான கதை.

இது வெறும் கதையல்ல. சூஃபிக் கதைகள் எல்லாம் வெறுங்கதைகள் அல்ல. அவை உங்களை மகிழ்விப்பதற்காக அல்ல. உங்களை வெறுமனே ஈடுபடுத்துவதற்காகவும் அல்ல. அவை கற்றுக் கொடுக்கும் கருவிகள். அவை எதையோ சுட்டு கின்றன. எதையோ காண்பிக்கின்றன. அறியாததை நோக்கி இருக்கும் அம்புக்குறிகள், நிலவை சுட்டிக்காட்டும் விரல்கள். சூஃபிக்களின் இந்த பழமொழியை நினைவிற்கொள்ளுங்கள்: ''என் விரலைக் கடித்துவிடாதே, நான் சுட்டிக்காட்டும் இடத்தைப் பார்.''

இது போன்ற கதைகளினால் எளிதாகப் பொழுதுபோகலாம். ஆனால் குறிக்கோள் அதுவல்ல. கருத்தை தவற விடுகிறீர்கள்.

இவை அப்பால் உள்ளதைப் பற்றிய சிந்தனைகள். சொல்ல முடியாதவற்றை சொல்கின்றன, வெளிப்படுத்த இயலாதவற்றை வெளிப்படுத்த முயற்சிக்கின்றன. அவை இயல்பான வாழ்க்கை பற்றிய கதைகள் அல்ல. இவ்வுலக வாழ்க்கைக்குரிய விஷயங்கள் பற்றி அல்ல. உண்மையின் அடி ஆழத் தேடலுக்குரியவை. உங்கள் உயிருருவின் மையத்திற்கு உரியவை. அவை அழகான கருவிகள். நீங்கள் கவனமாக இருந்தால், கதையின் மீது தியானம் செய்தால் கதைக்கு இணையாக, உங்கள் உயிருக்குள் வேறு ஒன்று தன்னை வெளிப்படுத்திக்கொள்ளத் தொடங்கும். கதை ஒரு தளத்திலும், வெளிப்படுத்துதல் மற்றொரு தளத்திலும் நடக்கும், ஒரு இணையொத்த தளத்தில் நடைபெறும். ஒரு போக்குடன் நடைபெறும் இந்த வெளிப்படுத்துதலை நீங்கள் ருசித்துப் பார்க்கத் தொடங்கவில்லை என்றால் நீங்கள் கருத்தைத் தவறவிடுகின்றீர்கள் என்பது ஞாபகத்தில் இருக்கட்டும். தவற விடுவது மிக எளிது. கருத்தைத் தவறவிட புத்திசாலித்தனம் தேவையில்லை. எந்த முட்டாளுக்கும் இது சாத்தியம், ஆனால் புரிந்துகொள்வதற்கு அதிக அறிவு தேவை. ஆக, கவனமாக இருங்கள். அந்தச் சில கணங்கள் ஒருங்கிணைப்போடு இருங்கள். முற்றிலுமாக கேளுங்கள். வெறுமனே உங்கள் காதுகளாய் இருங்கள். ஒன்றியிருங்கள். அளப்பரிய மதிப்புடைய செய்தி இந்தக் கதை மூலம் தெரிவிக்கப்படுகிறது.

லூயிஸ் கரோலின் 'த்ரூ தி லுக்கிங் கிளாஸ்'' என்ற நூலில் பின்வரும் பகுதி வருகிறது.

தன்னால் நம்பவே முடியாத உலகில் நின்றுகொண்டிருந்த அலைசிடம் ராணி சொன்னாள், ''உனக்கு அவ்வளவாகப் பழக்கமில்லை என்று என்னால் உறுதியாகச் சொல்ல முடியும். ஏன், சில சமயங்களில் நான் காலை உணவிற்குமுன் நடக்கவே முடியாத ஆறு விஷயங்களை நம்பியிருக்கிறேன்''

ஆம், இந்தக் கதையின் ரகசியம் இதுவே. அளவிடமுடியாத மதிப்புடைய ஒன்றை லூயிஸ் கரோல் சொல்லித் தருகிறார். இந்தக் கதையின் ரகசியம், நம்பிக்கை கொள்ளும் கலை,

வாழ்தலுக்கு ஆம் என்று சொல்லும் கலை. இயலாத ஒன்றின் மீது நம்பிக்கை கொள்வது. இயலாதது, இயலக்கூடியதாகும். இது எப்படி நடக்கும்? உண்மையில் விஷயங்கள் நடக்க முடியாமல் போவதற்கு ஒரே காரணம் உங்களுக்கு நம்பிக்கை கொள்ளும் துணிவு இல்லை. ஒவ்வொரு எண்ணமும் ஒரு பொருளாக முடியும். உணர்வு நிலைக்குள் நடப்பதை புற உலகில் மெய்மைப்படுத்த முடியும். வெளியில் நடப்பதனைத்தும் முதலில் உள்ளே நடக்க வேண்டும். விதை உள்வாங்கப்பட்டு மரம் வெளிப்படுத்தப்படுகின்றது. நம்பிக்கை கொள்ளும் இதயம் உங்களிடமிருந்தால், இயலாதது என்று ஏதுமில்லை. கடவுள் கூட இயலாத ஒன்றில்லை.

ஆனால், நம்பிக்கை கொள்ளும் ஒரு இதயம் வேண்டும். நம்பிக்கை கொள்ளும் மனது அல்ல. ஏனென்றால் அடிப்படையில் மனதால் நம்பிக்கை கொள்ள முடியாது, அது நம்பிக்கை கொள்ளும் திறமையற்றது. மனதால் சந்தேகப்பட மட்டுமே முடியும்; சந்தேகம் மனதின் இயல்பு, அது மனதிற்கு உள்ளார்ந்த ஒன்று. ஆகவே நீங்கள் நம்பிக்கைகளை தலைக்குள் வலுக்கட்டாயமாக திணித்துக் கொண்டிருந்ததால், அந்த நம்பிக்கைகள் உங்கள் சந்தேகங்களை மறைக்கமட்டுமே செய்யும். அதிலிருந்து வேறு ஒன்றும் ஆகாது. இங்கேதான் மொகமதியர்கள், கிறிஸ்துவர்கள், ஹிந்துக்கள் மற்றும் ஜெயினர்கள் இருக்கின்றனர்; அவர்கள் நம்பிக்கை மனதைச் சார்ந்தது. மனமானது நம்பிக்கை கொள்ளும் திறமையற்றது. மனதால் நம்ப முடியாது, சந்தேகப்படவே முடியும். மரங்களில் இலைகள் வளர்கின்றாற் போல் மனதிலிருந்து சந்தேகம் உதிர்க்கும்.

நம்பிக்கை இதயத்திலிருந்து பிறக்கிறது. இதயத்தால் சந்தேகப்பட முடியாது, அதனால் நம்ப மட்டுமே முடியும். ஆக இந்த ''மன — நம்பிக்கை'' — நான் பைபிள் மீது நம்பிக்கை வைத்திருக்கிறேன், குரான்மீது நம்பிக்கை, தஸ்காபிடல்மீது நம்பிக்கை, மஹாவீரர்மீது நம்பிக்கை, அல்லது, மோசஸ், அல்லது மாவோ சேதுங் இவை எல்லாம். போலி-நிகழ்வுகள்.

தலையால் போலிப்பொருட்கள், பிரதியீடுகளை மட்டுமே உருவாக்க முடியும். அதிலேயே நீங்கள் ஈடுபட்டு இருக்கலாம், ஆனால் உங்கள் வாழ்க்கை வீணாகிவிடும். நீங்கள் பாழ்நிலமாக பாலைவனமாக இருப்பீர்கள். நீங்கள் என்றும் மலர மாட்டீர்கள். பாலைவனச் சோலை என்னவென்று அறிய மாட்டீர்கள். மகிழ்வு, கொண்டாட்டம் எதையும் அறிய மாட்டீர்கள்.

ஆக, நான் நம்பிக்கை கொள்வதால் இயலாதவற்றை இயலச் செய்ய முடியும் என்று கூறினால், இதயப்பூர்வமாக நம்புவதைச் சொல்கிறேன். ஒரு களங்கமற்ற, வெகுளியான இதயத்திற்கு, ஒரு குழந்தையின் இதயத்திற்கு மறுக்கத் தெரியாது, ஆம் என்பதே அறியும். குழந்தை உள்ளுக்குள் ''இல்லை'' என்றும் வெளியில் ''ஆம்'' என்றும் சொல்வதாக அர்த்தமில்லை. அப்படியென்றால் அது தலை சார்ந்ததாகிவிடும். அது மனதின் தலையின் வழிமுறை. வெளியில் ஆம், உள்ளே இல்லை. தலை சிதைவுற்ற ஒன்று. அது எப்போதும் முழுமையானதும் அல்ல. மற்றும் ஒன்றுபட்டது அல்ல. இதயம் ஆம் என்றால் அதற்கு ஆம் என்றே பொருள். அதில் சச்சரவிற்கு இடமில்லை. பிறழ்ச்சி கிடையாது. ஆம் என்பதில் இதயம் ஒன்றுபட்டுள்ளது. அதுவே உண்மையான நம்பிக்கை, அது இதயம் சார்ந்த இயல்நிகழ்வு. அது சிந்தனையல்ல. ஒரு உணர்வு, இறுதியாக அது வெறும் உணர்வு மட்டுமல்லாமல் அது இருத்தல் ஆகிறது.

தொடக்கத்தில் நம்பிக்கை ஒரு உணர்வுதான், அதன் இறுதி மலர்தலில் அது இருத்தல், உயிருருவாகிறது.

நம்பிக்கை எனச்சொல்லப்படுவது தலையில் இருப்பது. எப்போதும் உங்கள் உணர்வு ஆகாது. உங்கள் உயிருரு ஆக முடியாது. மேலும் ஏதோ ஒன்று உங்கள் உயிருரு ஆகாவிட்டால் அது வெறும் புனைவியல் கனவு, சக்தி விரயம்.

ஆனால் நம்புவது எனில் துணிதல் வேண்டும். அது தெரிந்தால் ஆச்சரியப்படுவீர்கள். சந்தேகம் அதீத கோழைத்தனம் ஆனது. அஞ்சாநெஞ்சர்கள் சந்தேகப்படுவர், கோழைகளே நம்புவார்கள் என்று வழக்கமாக கேள்விப்பட்டு இருப்பீர்கள். ஒரு வகையில்

அது உண்மைதான். மனதில் மட்டுமே நம்பிக்கை என்பது கோழைத்தனம். உங்களுக்கு இந்த ''தலைகொண்டு'' நம்புவோரை மட்டும்தான் தெரியும். ஆகவே அது மெய்மையோடு ஒத்துப் போகிறது. நீங்கள் மசூதிகள், தேவாலயங்கள் மற்றும் கோயில்களுக்குள் சென்றால் அங்கே கோழைகள் நிரம்பி இருப்பதைக் காணலாம். ஆனால் உண்மையான நம்பிக்கை கோழைத்தனம் இல்லை, அது பெரும் துணிவு, அது வீரத் தன்மை.

அச்சத்தின் காரணமாகவே சந்தேகம் எழுகின்றது. தன்னைப் பாதுகாத்துக் கொள்ளவேண்டும் என்ற ஏக்கத்தால், சந்தேகம் எழுகின்றது. நீங்கள் பாதுகாப்பின்மைக்குள் செல்லத் தயாராக இருந்தால், முன் அறியாத பிரதேசத்திற்குள் போகத் துணிந்தால், வரைபடம் இல்லாமல் உங்கள் படகைச் செலுத்த முனைந்தால் மட்டுமே நீங்கள் நம்பிக்கைகொள்ள முடியும். நம்பிக்கை எனில் அதீதத் துணிவு, துணிவுள்ளவர் மட்டுமே சமயச்சார்புடன் இருக்க முடியும், ஏனென்றால் துணிவுள்ளவர் மட்டுமே ஆம் என்று சொல்ல முடியும்.

சந்தேகம் தற்காப்பாகும். ஒருக்கால் அதனால் நீங்கள் பாது காக்கப்பட்டாலும் கூட, நீங்கள் சிக்கியிருப்பீர்கள், உங்களால் நகர முடியாது, ஏனென்றால் ஒவ்வொரு நகர்வும் அச்சத்தைத் தரும். அதற்கு காரணம் ஒவ்வொரு நகர்தலும், அறியாத பரிச்சயமற்ற பகுதிகள் நகர்வதாகும். நினைவிற் கொள்ளவும் சந்தேகம் என்பது அச்சத்தின் துணைப்பொருளாகும்.

அப்படியானால் நம்பிக்கை கொள்தல் என்பது என்ன? நம்பிக்கை என்பது நேசத்தின் துணைப்பொருள். நேசிப்பது எப்படி என்று அறிந்தவர் மட்டுமே எப்படி நம்புவது என்று அறிவர். நேசம் இதயத்திலிருந்து வருகிறது, நம்பிக்கையும் அவ்வாறே. சந்தேகம் தலைக்குரியது, அச்சமும் அதுபோலவே. தலையில் வாழும் ஒரு மனிதன் கோழையாகவே இருப்பான். உண்மையில் அவன் கோழை என்பதாலேயே தலைசார்ந்து வாழ்கிறான். இதயத்தைநோக்கி நகர அவனுக்குப் பயம்.

ஏனென்றால் இதயம் உங்களை எங்கே இட்டுச்செல்லும் என்று சொல்ல முடியாது.

இதயம் ஒரு சாகசன். மர்மங்களை ஆராயும் ஒன்று. மறைந்து இருப்பதை கண்டுபிடிக்கக் கூடியது. இதயம் எப்போதும் யாத்திரை செய்து கொண்டு இருக்கிறது. அதற்கு நிறைவு என்பது இல்லை. அடியாழத்தில் ஒரு அதிருப்தி, ஒரு ஆன்மிக அதிருப்தி. எங்கேயும் நிலைகொள்ளாது. நகர்தலின் மீது காதல்.

இறுதிநிலை வந்தவுடன், அதற்கப்பால் போவதற்கு ஒன்றுமில்லை என்ற பிறகே இதயம் திருப்தியாகிறது. இம்மைக்குரியது அதை திருப்தி செய்யாது. இதயம் மரபு சார்ந்தது இல்லை, இதயம் எப்போதும் புரட்சிகரமானது. ஒரு நிலையிலிருந்து மற்றொரு நிலைக்கு தாவிக்கொண்டே இருக்கும். எப்போதும் துலாவும், அது எப்போதும் துணிந்து செயல்படும். எது இருக்கிறதோ அதை வைத்து அறியாததற்கு பந்தயம் வைக்கும். மெய்மையை அறிந்துகொள்ள அவா. இறைவன் என்பது எல்லாம் அதுவே.

இதயம் துணிகரச் செயலை நாடும், ஆபத்திற்காக ஏங்கும். அறியாதது, மற்றும் பாதுகாப்பற்றதிற்காக ஏங்கும். சமுத்திர அனுபவத்திற்காக மிகுந்த விருப்பம் கொள்ளும். அதற்கு கரைந்து போக வேண்டும். முழுமைக்குள் காணாமல்போக வேண்டும். தலைக்கு பயம் அதிகம், சாவதற்கு பயம். காணக்கிடைக்காமல் போவதற்கும் பயம்.

ஆறு பாலைவனத்தை எதிர்கொண்டபோது அது சொல்லக் கேட்டது, ''ஆவியாகிப் போய்விடாதே. நீ எங்கே போய் சேர்வாய் என்று யாருக்குத் தெரியும்? அதன்பிறகு நீ யாராக இருப்பாய்? உன் அடையாளம் என்றென்றிற்கும் அழிக்கப் பட்டு விடும். நீ இப்போது உள்ளதுபோல் மறுபடியும் ஆக முடியாது.'' இது தலையின் வாதம். ஆனால் பாலைவனத்தின் மெல்லொலி இதயத்திற்குப் புரிந்தது. வெகு ஆழத்தில் ஏதோ ஒன்று நம்பிக்கையை உணர்ந்தது. ''ஆம்! இது என் விதியல்ல. வெறுமனே ஒரு ஆறாக ஓடி பாலைவனத்தில் தொலைந்து

போதல். அதற்கப்பால் போக வேண்டும், நான் துணிய வேண்டும். அது ஆபத்தானது, மேலும் எந்தவித உத்திரவாதமும் கிடையாது.'' துணிவதற்கு சிந்திக்கத் தொடங்கிய உடனேயே, எங்கேயோ உணர்வு அற்ற நிலையின் அடி ஆழத்தில் ஆறு உணரத் தொடங்கியது. க்ஷண நேரத்தோற்றங்கள், நினைவலைகள் எழத் தொடங்கின. அது உணரத் தொடங்கியது, ''ஆம், எங்கோ ஏதோ அனுபவம் உள்ளது. நான் இதற்கு முன்னால் காற்றின் கையிலே இருந்திருக்கிறேன்.''

நீங்கள் நம்பத்தொடங்கினால் உங்கள் உணர்வற்ற நிலை பல விஷயங்களை உங்களுக்கு வெளிப்படுத்தத் தொடங்குகிறது. நம்பிக்கை கொள்ளும் மனதிற்கே மற்றும் நம்பிக்கை கொள்ளும் உயிருருக்கு மட்டுமே அது தன்னை வெளிப்படுத்திக் கொள்கிறது. சமயம் என்பது இந்த நம்பிக்கையின் நறுமணம், அது அப்பழுக்கு இல்லாதது, முழுமையானது. நாத்திகம் பலவீனத்தின் செயல்பாடு, மலட்டுத்தன்மை உடையது. ஒரு சமுதாயம் தன் வீரியத்தையும் இளமையையும் இழந்து செத்துக்கொண்டிருக்கும் போதுதான் அது நாத்திகமாகிறது. இளமையுடன், துடிப்புடன் ஒரு சமுதாயம் இருக்கும்போது அது அறியாததைத் தேடுகிறது, ஆபத்திற்காக ஏங்குகிறது. அது ஆபத்தான வகையில் வாழ முயற்சிக்கிறது. காரணம் வாழ்வதற்கான ஒரே வழி அதுதான்.

ஒரு கதை சொல்கிறேன் கேளுங்கள்:

ஒருநாள் நாத்திகன் ஒருவன் மலைமுகட்டில் நடந்துசெல்லும் போது வழுக்கிக் கீழே விழுந்து விடுகிறான். கீழே விழுகையில் பாறை இடுக்கில் வளர்ந்து இருந்த ஒரு சிறிய மரத்தின் கிளையைப் பற்றிக் கொள்கிறான். தொங்கியபடி குளிர்காற்றில் ஊசலாடிக் கொண்டிருந்தவனுக்கு தன் நம்பிக்கையற்ற நிலை புரிந்தது. கீழே கடும் பாறைகள், மேலே ஏறுவதற்கோ வழியில்லை. கிளையைப் பற்றிய அவனது பிடி பலவீனமாகிக் கொண்டிருந்தது.

''சரி, இனி கடவுள்தான் என்னைக் காப்பாற்ற முடியும். நான் கடவுளை நம்பியதே இல்லை, ஆனால் நான் தவறாக இருந்திருக்கலாம். இழப்பதற்கு என்ன இருக்கிறது?'' என்று

நினைத்த அவன் சப்தமாக அழைத்தான், ''இறைவா, நீ இருப்பது உண்மை என்றால் என்னைக் காப்பாற்று, நான் உன்னை நம்புகிறேன்''. பதில் ஒன்றும் வரவில்லை.

மறுபடியும் அழைத்தான். ''இறைவா, தயை கூறு. நான் உன்னை நம்பியதே இல்லை, ஆனால் இப்போது என்னைக் காப்பாற்றினாலும், நான் உன்னை நம்பத் தொடங்குவேன்.''

திடீரென மேகங்களில் இருந்து ஒரு கர்ஜனை குரல் கேட்டது. ''இல்லை. நீ நம்ப மாட்டாய், உன் வகை பற்றி நான் அறிவேன்.'' ஆச்சரியப்பட்ட மனிதன், ''இறைவா! தயவுசெய்து காப்பாற்று, நீங்கள் சொல்வது தவறு. நான் உண்மையாகச் சொல்கிறேன், நான் நம்புவேன்.''

''இல்லை, நீ செய்ய மாட்டாய். இதைத்தான் அவர்கள் எல்லோரும் சொல்வார்கள்'' அந்த மனிதன் கெஞ்சினான், வாதாடினான்.

கடைசியாக இறைவன் சொன்னார், ''சரி, நான் உன்னைக் காப்பாற்றுகிறேன்... நீ பிடித்திருக்கும் அந்தக் கிளையை விட்டுவிடு.''

''கிளையை விட்டு விடுவதா?'' என்று கூச்சலிட்டான். ''நான் என்ன பைத்தியம் என்று நினைக்கிறீர்களா?''

நாத்திகம் எப்போதும் கோழைத்தனமானது. உண்மையான தைரியசாலி சமயச்சார்பு கொண்டாக வேண்டும், சமயச் சார்புடையவர் அவசியமாக துணிவு கொண்டவர். ஆக நீங்கள் ஒரு கோழை சமயச்சார்புடன் இருப்பதைக் கண்டால் ஏதோ தவறு என்று புரிந்துகொள்ளலாம். ஒரு கோழைத்தனமான மனிதன் சமயசார்புடன் இருக்க முடியாது. அவரது சமயம் ஒரு தற்காப்பு, ஒரு கேடயம்.'' அவர் மாற்றம்கொள்வது அன்பு மற்றும் துணிவினால் அல்ல, அது அச்சத்தினால். 'இல்லை' என்று மறுக்கமுடியுமானால் அவர் இல்லை என்றிடுவார். 'ஆம்' என்று சொல்வதற்குக் காரணம், மரணம் அங்கே இருக்கிறது,

வியாதி இருக்கிறது, ஆபத்து அங்கே தெரிகிறது. அதனால் அவர் நினைக்கிறார், ''எனக்கு இழப்பதற்கு என்ன இருக்கிறது? ஏன் நம்பக்கூடாது? ஏன் பிரார்த்தனை செய்யக்கூடாது?'' அவருடைய பிரிவிற்கான போலியானது, அது வெறும் அச்சத்தின் வெளிப்பாடு, அச்சத்தின் காரணமாக கோயிலுக்கு, தேவாலயத்திற்கு மற்றும் பூசாரியிடம் செல்கிறார்.

ஒரு மனிதன் உண்மையிலேயே துணிவுள்ளவனாக இருந்தால் அவன் ஒரு குருவிடம் செல்வான், பூசாரியிடம் அல்ல. உயிரற்ற தேவாலயம் அல்லது கோயிலுக்கு அல்ல. உயிரோடு இருக்கும் இயல் நிகழ்வை தேடத்தொடங்குவான். அவன் ஒரு கிறிஸ்து அல்லது புத்தர் அல்லது கிருஷ்ணரிடம் போவான். தேவாலயத்திற்கு அல்ல. பழமைவாதம் நோக்கிச் செல்ல மாட்டான். கடந்த காலத்தில் வாழாமல் நிகழ்காலத்திற்குள் வருவான். செயல்படுவது எல்லாம் துணிவின் வெளிப்பாடாகும். அவன் ''ஆம்'' என்றால் அது துணிவினால், இருப்பின் மீதுள்ள நேசத்தினால், முழுமையில் நானும் ஒரு அங்கம் என்ற புரிதலினால் சொல்கிறான். அவன் தனித்து இல்லை. 'இல்லை' என்று சொல்வது ஒருவரின் சொந்த வேர்களுக்கு, மூலத்திற்கு இல்லை என்று சொல்வது போலாகும். மரம் பூமிக்கு மறுப்பு தெரிவித்தால் மரத்தின் கதி என்னவாகும்? அது தற்கொலை செய்வது போல. சூரியனுக்கே மறுப்பு தெரிவித்தால் மரம் என்னவாகும்? தற்கொலை செய்துகொள்ளும். பூமிக்கும், சூரியனுக்கும் மரம் மறுப்பு சொல்ல முடியாது. மரம் சூரியனுக்கு, பூமிக்கு, காற்றுக்கு, மேகங்களுக்கு 'ஆம்' என்று சொல்லியாக வேண்டும். ஒவ்வொரு நாளும் மரம் 'ஆம்' என்ற பாவத்திலேயே தொடர்ந்து இருக்கவேண்டும். அப்படியானால்தான் மரம் மலர முடியும், பசுமையாக இருக்க முடியும் மற்றும் உயிரோடு இருந்து வளரமுடியும்.

மனிதன் இருப்பில், வாழ்தலில் வேரூன்றி இருக்கிறான். யாரிடம் இல்லை என்று மறுத்துக் கூறுகிறீர்கள்? உங்களுடைய சொந்த பூமிக்கு, சொந்த ஆகாயத்திற்கு, உங்களின் சொந்த சூரியனுக்கு. நீங்கள் முடங்கிப்போகத் தொடங்குவீர்கள். உண்மையிலேயே துணிவான மனிதன் தன்னைச் சுற்றிப்

பார்க்கிறான். நான் இந்த முழுமையின் ஓர் அங்கம் என்பதை உணர்கிறான், அதைக் காண்கிறான். அதைப் பார்க்கையில் 'ஆம்' என்ற நிலையில் நெகிழ்ந்து போகிறான். இசைந்து கொடுப்பதில் நிலைத்து இருக்கிறான். எதற்கும் துணியத் தயாராக இருக்கிறான். அவனுடைய 'ஆம்' என்பதற்காக எது தேவையோ அதற்கெல்லாம் தயாராக இருக்கிறான்.

சோரன் கிர்கிகார்ட் ஒரு நீதிக்கதை எழுதியிருக்கிறார் :

ஒரு காலத்தில் பணிவுள்ள ஒரு சாதாரண இளம் பெண்ணை அரசன் ஒருவன் நேசித்தான். இந்த அரசன் மிக சக்தி வாய்ந்தவனாக நன்றாகத் தன்னை ஸ்தாபித்துக்கொண்டவன். ஆதலால் அரசுரிமை துறக்காமல் அவனால் அந்தப் பெண்ணைத் திருமணம் செய்துகொள்ள முடியாது. அவளைத் திருமணம் செய்துகொண்டான் என்றால், அவளை என்றென்றுக்கும் நன்றிக் கடன்பட்டவளாக்க முடியும் என்பதை அரசன் அறிவான். அவளுடைய மகிழ்ச்சியில் ஏதோ ஒரு இல்லாக்குறை இருக்கக் கூடும் என்று அரசனுக்குத் தோன்றியது. அவள் எப்போதும் அவனை போற்றுவாள், நன்றி கூறுவாள், ஆனால் அவனை நேசிக்க முடியாது. ஏனென்றால் அவர்களுக்கு இடையே உள்ள சமமின்மை மிகப்பெரியது. அவளுடைய எளிய பின்னணியை மற்றும் அவளுடைய நன்றிக்கடனை அவனால் எப்போதும் மறக்க முடியாது.

அதனால் அவன் வேறு ஒரு வழியை எடுத்துக்கொண்டான். அவளை ராணியாக்குவதற்குப் பதில் அவன் அரசப் பதவியைத் துறப்பது. அவன் ஒரு சாதாரண குடிமகனாகி தன் காதலைத் வெளிப்படுத்துவது. இதைச் செய்வதில் ஒரு அபாயம் உள்ளதை உணர்ந்தான். அவன் ராஜ்ஜியத்தில் உள்ள மக்கள் அவனை முட்டாள் என நினைப்பார்கள், ஒருக்கால் அப்பெண்ணின் பார்வையிலும் அப்படியே தோன்றலாம். அவன் அரசப் பதவியையும் இழந்து, அவளாலும் நிராகரிக்கப்படலாம். குறிப்பாக, அவளுக்குத் தான் ராணியாக முடியவில்லை என்ற ஏமாற்றம் ஏற்பட்டால். ஆயினும் இந்த இடர்நேர்வை எதிர்

கொள்ள அந்த அரசன் முடிவு செய்தான். அது மேலானது என்று நம்பினான், காதல் ஈடேற எல்லா ஆபத்துக்களையும் எதிர் கொள்ளலாம் என்று நம்பினான்.

நாடுதல், இறைவனைத் தேடுதல், உண்மை அல்லது ஆனந்தத்தைத் தேடுதல்-இந்தத் தருணங்கள் மீண்டும் மீண்டும் வரும், துணிய வேண்டும். எல்லா சாமர்த்தியமும் இதற்கு எதிரானது. முழு மனதும் இதை எதிர்க்கும். மனம் இவ்வாறு சொல்லும், ''என்ன செய்யப்போகிறாய்? நீ யாருக்காக நாட்டைத் துறக்கிறாயோ அந்தப் பெண்ணே உன்னை நிராகரிக்கலாம். அவளுக்கு ராணியாவதில் மட்டுமே ஆர்வம் என்றால், உன்னைத் திரும்பிக்கூட பார்க்க மாட்டாள். நாடே உன்னை முட்டாளென நினைக்கும், யாருக்குத் தெரியும் அவளும் உன்னை ஒரு முட்டாள்தான் என்றே நினைக்கக் கூடும்.'' ஆனால் அரசன் துணிவதற்கு முழு முடிவு செய்தான்.

முழுவதிலுமாகத் துணிவது நல்லது. நேசத்தை அடைய மிகக்குறைவான, மிகச்சொற்பமான சாத்தியக்கூறு இருந்தாலும் கூட ஒருவர் எல்லாவற்றையும் ஆபத்திற்கு உட்படுத்தலாம். எல்லாவற்றையும் மறுபடியும் மறுபடியும் பல முறை நேசம் அடையும் வரை, இறைவனை அடையும் வரை ஆபத்திற்கு உட்படுத்தலாம். வழக்கமாக நாம் வரையறைகளோடு இறைவனைத் தேடுவோம், நாடுவோம். எதையும் ஆபத்திற்கு உட்படுத்தாமல் நம் சூழ்நிலைகள் அனுமதிக்கும் வரம்புக்குள் செய்வோம். நீங்கள் பணம் சம்பாதிக்கின்றீர்கள், வாழ்க்கையில் வெற்றி பெறுகிறீர்கள். உங்களால் கோயிலுக்காக அல்லது தியானத்திற்காக ஒரு மணி நேரம் செலவிட முடியும். எப்பொழுதாவது ஒருமுறை பிரார்த்தனை கூட செய்வோம். குறைந்தபட்சம் இரவில், தூங்கப்போவதற்குமுன் இரண்டு நிமிடம் அதே பிரார்த்தனையை சொல்லித் தூங்கிவிடுவது. சமய சார்பு கொண்டுள்ளதாக நீங்களும் நல் உணர்வு கொள்வீர்கள்.

சமயம் என்பது செய்வது அல்ல, அது இருப்பது. அது இருபத்து நான்கு மணிநேரமும் உங்கள் உயிருருவில் பரவி

இருக்கவேண்டும், அல்லது அது இல்லவே இல்லை. தூங்கும்முன் ஒரு இரவுப் பிரார்த்தனை என்பது உங்கள் மீது நீங்களே விளையாடிக் கொள்ளும் ஒரு தந்திரம்.

இதுபோன்ற 'பகுதி-மத=சார்பு' உதவாது. ஒரு மனிதர் முழுவதுமாக இறங்கவேண்டும். கோழைகளால் இது முடியாது. ஆதலினால் நான் உங்களுக்கு நினைவூட்டுகிறேன். சமயம் துணிவுள்ளவர்களுக்கும், சக்தி வாய்ந்தவர்களுக்கும் மற்றும் உறுதியான ஆன்மா படைத்தவர்களுக்கு மட்டுமே. பலவீனமானவர்களுக்கு இல்லை. எப்போதும் பேரம் பேசிக் கொண்டு இருப்பவர்களுக்கு இல்லை. வியாபார மனம் படைத்தோருக்கு அல்ல, ஆபத்தை எதிர்கொள்ளத் துணியும் சூதாட்டக்காரர்களுக்கு மட்டும்தான்.

*இப்போது கதைக்கு: விளக்க முடியாத வாழ்க்கையுடைய மனிதன்.*

வாழ்க்கை எப்போதும் விளக்கமுடியாத ஒன்று, உங்களிடம் அது இருந்தது என்றால். நீங்கள் உண்மையிலேயே உயிர்த் துடிப்புடன் இருந்தால். அதை பற்றி விளங்காத ஏதோ இருக்கிறது. அதை எந்த வகையிலும் விளக்கிக்கூற முடியாது. உங்கள் வாழ்க்கையை விளக்க முடியுமானால் நீங்கள் உயிரோடு இல்லை என்று எளிதாக அர்த்தம் செய்யலாம். தன் வாழ்க்கையை முடிவின்றி விளக்கிக்கூறக் கூடிய மனிதனை நீங்கள் கண்டீர்கள் என்றால், அவன் ஒரு கம்ப்யூட்டர், ஒரு இயந்திரம், ஆனால் உயிருடன் இல்லை என்று தர்க்க ரீதியாக உறுதியாகச் சொல்லலாம். இறந்துபோனவற்றைதான் தொடக்கத்திலிருந்து முடிவு வரை விளக்கிச் சொல்ல முடியும். வாழ்க்கை ஒரு மர்மம். ஆக எப்போதெல்லாம் ஒருவர் உயிருடன் இருக்கின்றாரோ அவர் மர்மமாய் இருக்கிறார். அப்படி உயிருடன் இருக்கும் ஒரு மனிதரை நீங்கள் எதிர்கொள்ளும்போது, ஒருவித மர்மத்தை உணர்வீர்கள், ஏதோ ஒரு விளக்குவதற்கு முடியாத நிகழ்வு. கண்டுபிடிக்க முடியாத ஏதோ ஒன்றினால் நீங்கள் தொடப்படுவீர்கள். வாழ்க்கையைப் பற்றி நீங்கள் எந்தக்

கணிதமும் வைத்திருக்க முடியாது. உள்ளார்ந்த வகையில் வாழ்க்கை ஒரு கவிதையாகவே இருக்கிறது. அது காணப்பட வேண்டிய ஒரு அழகு, விளக்கக்கூடிய உண்மையல்ல.

*ஒரு காலத்தில் மோஜீத் என்ற பெயருடைய மனிதன் இருந்தான்....*

மோஜீத் என்ற சொல் அழகானது, அது இரண்டு விஷயங்களைக் குறிக்கின்றது. நேரடியாக எடுத்துக் கொண்டால் 'உளதான' இருக்கின்ற ஒருவர் என்று பொருள்படும். மோஜீத் என்றால் அகநிலையில் இருக்கின்ற, விழிப்புணர்வுடைய என்றும் பொருள் கொள்ளலாம்.

இரண்டாவது அர்த்தம் முதல் விளக்கத்திலிருந்து வருகிறது. நிகழ்காலத்தில் வாழ்கின்றவன், நிகழ்காலத்திற்கு உளதாய் உள்ள ஒருவர். இந்த இரண்டுமே ஒரு விஷயத்தின் இரண்டு அம்சங்கள் ஆகும். உள்ளுக்குள் உளதாய் இருந்தால், உணர்வு நிலை பற்றி உளதாய் இருந்தால், இரண்டாவது தானாகவே நடக்கும் - அதாவது நிகழ்காலத்தில் உளதாய் இருப்பீர்கள். உங்களுக்கு கடந்த காலம், வருங்காலம் எதுவும் இருக்காது, உங்களுக்கு இந்தத் தருணம் மட்டுமே இருக்கும். இந்தத் தருணம், இந்தக் கணம் விசாலமானது, பரந்து கிடக்கும் ஒன்று, இந்த கணத்திற்குள் முடிவின்மை அடங்கியுள்ளது. நிகழ்காலத்தில் வாழ்பவர் மட்டுமே, நிகழ்காலத்திற்கு உளதாய் இருப்போர் மட்டுமே, முடிவின்மை என்பது என்ன என்று அறிவர். மரணமற்ற வாழ்வு அறிவர். விளக்க முடியாத மர்மத்தை இவர்கள் அறிவர்.

ஆனால், இதைத் தெரிந்துகொண்டாலும்கூட நீங்கள் வேறு எவருக்கும் விளக்கிக் கூற முடியாது. சுட்டிக்காட்ட முடியும், எப்படி அடைவது என்று சொல்லலாம். ஆனால், அது என்னவென்று சொல்லமுடியாது. அது ஏன் அப்படி என்று உங்களால் சொல்லமுடியாது. ஏன் என்பது இங்கு இல்லை, வெறுமனே அது அங்கே உள்ளது. விளக்கம் ஏதுமின்றி வாழ்க்கை உளதாய் உள்ளது. அதற்கு 'ஏன்' என்பது கிடையாது. வேதாந்திகள், ஏன்? ஏன்? ஏன்? என்று சிந்தித்துக்

கொண்டே இருக்கிறார்கள். ஏன் என்பதற்குப் பதில் கூற பல வழிமுறைகளை உருவாக்கிக்கொண்டே போகின்றனர். ஆனால் ஒரு பதில் கூட உண்மையில்லை. அது எப்போதும் உண்மையாக இருக்காது, காரணம், நீங்கள் தொடக்கத்திலிருந்தே தவறான கேள்வியைக் கேட்கிறீர்கள். தவறான கேள்வியைக் கேட்டால், சரியான பதிலுக்கு வர முடியாது. தவறான கேள்விகள் தவறான பதில்களுக்கு இட்டுச் செல்லும். ஏன்? ஒரு தவறான கேள்வி.

அறிவியல் ஏன் என்று கேட்பதில்லை. அதேபோல் சமயமும் ஏன் என்று கேட்பதில்லை. அகத்தின் அறிவியலே சமயம்; புறத்தின் சமயமே அறிவியல். இந்த இரண்டிற்கும் நடுவில் இருப்பது தத்துவம், வெறுமனே இரண்டிற்கும் நடுவிலே நின்று கொண்டிருக்கிறது. ஏன் என்று கேட்டு, அதிகம் கலப்புற்று, ரொம்பவே குழம்பிப் போய்விடுகிறது. ஏன் என்பது கேட்க முடியாதது, கேட்கக்கூடாதது. ஏன் என்பதற்கு ஏதோ ஒரு வகை விளக்கத்தை நீங்கள் கண்டுபிடித்தாலும், மறுபடியும் இந்தக் கேள்வி கேட்கப்பட்டாக வேண்டும். ''இந்த உலகம் ஏன் இருக்கிறது?'' யாரோ ஒருவர், ''கடவுள் அதைப் படைத்தார்'' என்று பதில் சொல்வார். அடுத்த கேள்வி, ''கடவுள் ஏன் அதைப் படைத்தார்?''. மறுபடியும் வேறு ஒருவர், ''அவர் உலகை இதற்காக அல்லது அதற்காக படைத்தார்'' என்று பதில் சொல்வார். அப்படியும் கூட ஏன் என்ற கேள்வி மறுபடியும் மறுபடியும் தொடர்புடையதாகவே இருக்கும். ஒவ்வொரு பதிலும் கேள்வியை மேலும் ஒருபடி ஆழத்திற்குத் தள்ளும். ஆனால் கேள்விதான் கரையாது.

''ஏன்?'' ஒரு பொருத்தமற்ற கேள்வி. ஏன் என்ற கேள்வியுடன் நீங்கள் வேதாந்தத்திற்குள் நுழைகின்றீர்கள். சமயம் ஏன் என்று கேட்பதில்லை. ''என்ன?'' என்றுகூட கேட்பதில்லை. ஒன்றை மட்டுமே கேட்கிறது: எப்படி? அறிவியலும் எப்படி என்று கேட்கிறது, அதனால், அறிவியல் தொழில்நுட்பமாகிறது. சமயம் என்பது யோகம், தந்திரம், சூஃபிசம், ஜென் என்றாகிறது. இவையெல்லாம் அக உலகின் தொழில்நுட்பங்கள்.

*ஒரு காலத்தில் மோஜீத் என்ற பெயருடைய மனிதன் இருந்தான். ஒரு சிறுநகரில் வாழ்ந்த அவன் அங்கே ஒரு இளநிலை அதிகாரியாக பணிபுரிந்துவந்தான். அவனுடைய பணிநாட்கள் எடைகளும் அளவுகளுக்குமான ஆய்வாளராகவே கழிந்துவிடும்போலத் தோன்றியது.*

எடைகளும் அளவுகளுக்குமான ஆய்வாளர் - இப்படியாகத்தான் லட்சக்கணக்கான மனிதர்கள் தங்கள் வாழ்க்கையை முடித்துக் கொள்கின்றனர். யாரோ ஒருவர் ஒரு உருப்படாத அலுவலகத்தில் தலைமை கணக்காளராக இருந்து முடிப்பார். யாரோ ஒருவர் ஸ்டேஷன் மாஸ்டர், மற்றொருவர் வியாபாரி, வேறு ஒருவர் தன் வாழ்வை வியாபாரியாக ஓட்டிக் கழிப்பார். இவை எல்லாம் பயனற்றவை. நான் ஸ்டேஷன் மாஸ்டராக வேண்டாம் என்று சொல்லவில்லை, அதுவாகவே இருந்துவிடாதீர்கள். நீங்கள் எடைகளும் அளவுகளுக்குமான ஆய்வாளராகி விட்டாலும்கூட என்ன அடைந்துவிட்டீர்கள்? வாழ்க்கையிலிருந்து என்ன கிடைத்தது? உங்கள் மெய் உணர்தல் என்ன? நீங்கள் மெய்யாக வாழாமல் வாழ்ந்துகொண்டிருக்கிறீர்கள். வாழ்வே இல்லாத ஒரு உயிரற்ற ஒரு வாழ்க்கைத்தரம் உங்களுக்கு இருக்கலாம். ஆகவே ஒரு எடைகளும் அளவுகளுக்குமான ஆய்வாளராகவே மோஜீத்தின் வாழ்வு முடிந்துவிடும் என்று மக்கள் நினைத்தார்கள். ஆனால், மோஜீத் ஒரு வித்தியாசமான மனிதன், காரணம் அவனிடம் விழிப்புணர்வு இருந்தது. உளதாய் இருந்தான். வெகு ஆழத்தில், மற்றவர் அறியாமல் அவன் தியானம் செய்து கொண்டு இருந்திருப்பான். அவன் புறவாழ்க்கை ஒன்று. அக வாழ்க்கை வேறொன்று. அமைதிக்குள் மேலும் மேலும் ஆழமாய் சென்று கொண்டு இருந்திருப்பான். மேலும் அதிகமாக சிந்தனைகள் இன்றி இருந்திருப்பான் — அப்படியானால்தான் நீங்கள் நிகழ்காலத்தில் இருக்க முடியும்.

சிந்தனைகள் உங்களை நிகழ்காலத்திலிருந்து திசை திருப்பு கின்றன. சிந்தனைகள் உங்கள் உயிருரு மீது மேகங்களாகப் படர் கின்றன. நீங்கள் தொடர்பற்று போகிறீர்கள், நிகழ்காலத்திலிருந்து

இணைப்பறுந்து போகின்றீர்கள். சிந்தனைகள் எப்போதும் நிகழ்காலத்தைச் சேர்ந்தவை அல்ல, அவை கடந்த காலத்திற்கோ அல்லது வரும் காலத்திற்கோ உரியவை.

இந்த மனிதன் உண்மையிலேயே நிகழ்காலத்திற்கு உளதாய் இருப்பவன் என்றால், அவன் இரவில் எல்லோரும் உறங்கிக் கொண்டிருக்கும்போது, யாருக்கும் கூறாமல் தியானம் செய்துகொண்டே இருந்திருப்பான். அவதானித்துக் கொண்டு இருந்திருக்க வேண்டும். அவன் இயல் உலகில் இருந்து கொண்டே ஒரு சாட்சியாக, கவனிப்பாளனாக இருந்திருக்க வேண்டும். இந்த அவதானிப்பு போகப்போக அவனுள் 'இருத்தலை' உளதான தன்மையை உருவாக்கி இருக்க வேண்டும். அவனுடைய இருப்பு பிரகாசமாயிற்று. அதனாலேயே அவன் மோஜீத் என்று அழைக்கப்படுகிறான்.

*ஒரு நாள் தன் வீட்டருகே உள்ள பழங்காலக் கட்டிடத்தின் தோட்டத்தினூடே நடந்து செல்கையில், சூஃபிக்களின் புதிரான வழிகாட்டி கிதிர் மினுமினுக்கும் பச்சை ஆடையில் மோஜீத் முன் தோன்றினார்...*

இப்போது நீங்கள் இதைப் புரிந்துகொள்ள வேண்டும். கிதிர் என்பது வெறும் பெயர் மட்டுமே. உங்களின் அக ஆழத்திற்கான பெயர். உங்கள் மையமானது உங்களுடைய சுற்றளவிற்கு, அதாவது வெளிப்புறத்திற்கு மெல்லிய குரலில் மறை செய்தி அனுப்பத் தொடங்கும்போது கிதிர் பிரசன்னமாகிறார். உங்களுடைய அடிப்படையான உயிருரு உங்களின் புறத்திற்கு அடிப்படையில்லாததுடன் மெல்லப் பேசத் தொடங்கியவுடன், அத்தியாவசியமான ஆன்மா அத்தியாவசியமற்றதுடன் பேசும் போது கிதிர் உங்களுடன் பேசுகிறார். இது வெறும் உருவகம் மட்டுமே, கிதிர் யாரோ வெளியில் இருக்கும் ஒருவர் அல்ல. நீங்கள் அமைதியடையும் போது, உளதாய் இருக்கும்போது, நீங்கள் ஒரு மோஜீத் ஆகும் போது, ஒரு தருணம் வரும். அப்போது உங்களின் அக வழிகாட்டி உங்களுடன் பேசத்தொடங்கும். அந்த அக வழிகாட்டியே கிதிர் என்று அறியப்படுகிறது.

பச்சை சூஃபிக்களின் நிறம். அது வாழ்வைக் குறிக்கிறது. அது புத்துணர்ச்சியை, உயிரோட்டத்தை, மௌனத்தை, அமைதியைக் குறிக்கின்றது. பச்சையை தங்கள் அடையாளமான நிறமாக சூஃபிக்கள் தேர்ந்து எடுத்துக் கொண்டுள்ளனர். வெறுமனே பச்சையைப் பார்க்கும்போது ஒருவிதமான அமைதி உங்களைச் சூழ்ந்துகொள்வதை நீங்கள் உணரமுடியும். அதனால்தான் மலைப்பிரதேசங்களுக்குச் செல்வது சிலிர்ப்பூட்டுவதாக இருக்கிறது. மறைபொருளான மரங்கள் சூழ்ந்து இருக்கும் ஒரு வனச்சூழலில் வெறுமனே அமர்ந்து இருப்பது மிகவும் குறிப்பிடத்தக்கது. அது உங்களை மறுபடியும் தொடக்க நிலையாக, மூலமுதலாக்குகிறது. அது உங்களுக்கு காடுகளின் அடிமூல அமைதியை நினைவுபடுத்துகிறது. நீங்களும் ஒரு சமயத்தில் மரங்களாக இருந்தீர்கள். மரங்கள் போல்அமைதியாக இருந்தீர்கள், மற்றும் மரங்களைப் போன்று வேரூன்றி இருந்தீர்கள் என்பதை நினைவுபடுத்துகிறது.

மினுமினுக்கும் பச்சை ஆடையில் கிதிர் மோஜீத் முன் தோன்றினார்.

*கிதிர் சொன்னார், ''பிரகாசமான வாய்ப்புகள் உடைய மனிதனே''*

ஞாபகம் இருக்கட்டும், உங்கள் அடியாழ மையம் உங்களிடம் எப்போதெல்லாம் பேசுகிறதோ அது இந்த வகையில்தான் பேசும். '' பிரகாசமான வாய்ப்புகள் உடைய மனிதனே. ''-காரணம் என்னவெனில் பிரகாசமான வாய்ப்புகள் இல்லாத மனிதனே கிடையாது. நீங்கள் அதை அடைய முடியாமல் போகலாம், அது வேறு விஷயம், ஆனால் அதுதான் உங்கள் விதி. நீங்கள் அதை அடைந்திருக்கக் கூடும். நீங்கள் அதை தவறவிட்டு விட்டீர்கள் என்றால், பொறுப்பு உங்களையே சாரும். விதை அங்கே இருந்தது, அது வளர்வதற்கு நீங்கள் உதவி செய்யவில்லை. இல்லையென்றால் அது பெரும் மரமாக வளர்ந்து இருக்கும், ஆயிரக்கணக்கான பறவைகள் அதில் கூடுகள் கட்டியிருக்கும், ஆயிரக்கணக்கான வழிப்போக்கர்கள் அதன் நிழலில் இளைப்பாறி

இருப்பார்கள், மலர்கள் பூத்திருக்கும், இருப்பு. உங்கள் மூலமாக கொண்டாட்டம் அனுபவித்து இருக்கும்.

நீங்கள் மரமாக உருவாகவில்லை என்றால் நீங்களே பொறுப்பாவீர்கள். தேவையானதெல்லாம் இயற்கை வழங்கியுள்ளது. ஒவ்வொரு மனிதனும் பிரகாசமான வாய்ப்புகள் உடையவனே, காரணம் ஒவ்வொரு மனிதனுக்கும் இறுதி மலர்தலாக இறைவன் இருக்கிறான்.

> *கிதிர் சொன்னார், 'பிரகாசமான வாய்ப்புகள் உடைய மனிதனே, ''உன் வேலையை விட்டுவிட்டு, மூன்று நாட்கள் கழித்து என்னை ஆற்றோரமாக சந்திப்பாயாக'' அவர் பின்னர் மறைந்து போனார்.*

நீங்கள் தியானத்திற்குள் வெகு ஆழமாகப்போகும் போது, இது மறுபடியும் மறுபடியும் நடக்கும். உங்கள் சுற்றளவும் மையமும் வெகு அருகாமையில் வரும் தருணம் வரும். இரண்டிற்கும் இடையே தடை ஏதும் இருக்காது. ஒரு திரைச்சீலை கூட இருக்காது. மையம் கூறுவது உங்களுக்குத் தெளிவாகவும் சப்தமாகவும் கேட்கும். மறுபடியும் உங்களை மேகங்கள் மறைக்கும். மீண்டும் பழைய பழக்கங்கள், எண்ணங்கள் வந்து உங்கள் உள்வழிப்பாதைகளை நெருக்கியடிக்கும். மையமும் சுற்றளவும் பிரிந்துபோகும். இது உங்களுக்கும் பலமுறை ஆகும். என்னைச் சுற்றி இருப்போருக்கும் இது பலமுறை ஆகப்போகிறது. பல சமயங்களில் நீங்கள் மையத்திற்கு வெகு அருகில் வருவீர்கள், கிட்டத்தட்ட ஞானம் பெற்றதுபோல் உணர்வீர்கள். 'வந்தடைந்து' விட்டோம் என்று தோன்றும், மறுபடியும் தொலைந்து போகும். இது இயற்கைதான். என்றென்றுக்கும் அது நிலைபெறும் முன்னர் இதுபோல பலமுறை நடக்கும். இறுதிச் சமாதி நிலை அடையும் முன்பு பல ஞான உதயங்கள் (சடோரி) தோன்றி மறையும். சிறிய க்ஷணநேரத் தோற்றங்கள், சாளரம் திறந்து மறுபடியும் மூடிக் கொள்வது, இது பலமுறை நடக்கும். திடீரென கதவு திறக்கப்பட்டு காட்சியைக் காண்பீர்கள். மின்னல் போன்ற அனுபவம் ஏற்படும், மறுபடியும் காணாமல் போய் இருட்டு சூழும்.

*நிலை தடுமாறியவாறு தன் மேல் அதிகாரியிடம் சென்று தான் பணிவிலகுவதாகச் சொன்னான் மோஜீத்.*

எப்போது மையம் சுற்றளவிடம் முதல் முறையாக பேசுகிறதோ நீங்கள் நிலைதடுமாறிப் போகிறீர்கள், தொடர் நடுக்கத்தில் இருப்பீர்கள். மரணிப்பது போல் உணர்வீர்கள். எனக்கு என்ன ஆகிறது? நான் பைத்தியம் ஆகிக்கொண்டு இருக்கிறேனே? என்றெல்லாம் உங்களுக்கு தோன்றும். முதல் முறையாக மையம் பேசும்போது அது என்னவென்று உங்களால் புரிந்துகொள்ள முடியாது. முன்னர் இந்தக் குரலை நீங்கள் கேட்டதே இல்லை, உங்களுக்குள் யாரோ ஒருவர் வாழ்ந்து கொண்டிருக்கிறார் என்று நீங்கள் நினைத்துக்கூடப் பார்க்கவில்லை. வெளிப்புறத்தோடு அவ்வளவு ஈடுபாடு கொண்டு இருக்கிறீர்கள். வெளியிலிருந்து வரும் குரல்கள், பெற்றோர், ஆசிரியர்கள், பூசாரிகள் ஆகியோரின் குரல்கள்.

இங்கே ஒருவர் தன் அம்மாவின்பால் பெரும் ஈடுபாடு கொண்டுள்ளார். தான் ஏகலைவன் பற்றி கேட்ட அதே மனிதர்தான், மீண்டும் மீண்டும் கேட்கிறார். இப்போது அவருடைய கேள்வி. ''யார் பெரியவர். தாயா அல்லது குருவா?'' அவர் கேட்கிறார். ''குருவை 'கொல்' என்று தாய் சொல்கிறாள் என்றால், தாயின் கட்டளையைப் பின்பற்ற வேண்டுமா? இல்லை குரு தாயைக் 'கொல்' என்றால் யார் சொல் கேட்க வேண்டும்?''

அம்மாவிடம் அதீத அன்பு போல அவர் தன் தாயைக் கொல்ல வேண்டும். ''உன் தந்தையை, தாயை, உன் சகோதரர்களை நீ வெறுத்தால் மட்டுமே என்னைப் பின்பற்ற முடியும்'' இதனை ஏசு சொல்கையில் அவர் குறிப்பிடுவதும் அதைத்தான். இதைவிட ஆழமான விசித்திர சம்பவம் ஒன்று ஆவணப்படுத்தப்பட்டுள்ளது.

ஒரு சீடர் புத்தரிடம் விடைபெற்றுக்கொண்டு இருந்தார். அவர் புத்தரின் மொழியைப் பரப்புவதற்காக தூரதேச யாத்திரைக்குப் போகிறார். அவர் புத்தரின் பாதம் தொட்டு ஆசீர்வாதத்திற்காகக்

காத்திருந்தார். புத்தர் அவரை ஆசீர்வதித்து சபையைப் பார்த்துச் சொன்னார், ''பாருங்கள் சகோதரர்களே, இவர் ஒரு அரிதான சீடர். அரிதானது என்ன? இவர் தன் தாயையும் தந்தையையும் கொன்று விட்டார்.''

அவர் அப்படி ஒன்றும் செய்ததே இல்லை. இந்த மனிதர் தன் பெற்றோர்களைக் கொல்வார் என்று யாரும் நினைத்துக்கூடப் பார்த்ததில்லை. அவர்கள் கண்டதில் மிகவும் அமைதியான, அன்பான மனிதர்களில் ஒருவர், கருணையின் அவதாரம்.

யாரோ ஒருவர் கேட்டார். ''எங்களுக்குப் புரியவில்லை. இவர் தன் தாய் தந்தையரைக் கொன்றுவிட்டார் என்பதின் மூலம் என்ன சொல்ல வருகின்றீர்கள்?''

புத்தர் சொன்னார், ''மிகச் சரியாக அதைத்தான் சொல்கிறேன். அவர் தனக்குள் இருக்கும் தாய் தந்தையரின் குரலைக் கொன்றுவிட்டார். தன் பெற்றோர்களில் குரல். அது உங்களுக்குள் வெகு ஆழமாய் வேரூன்றியுள்ளது.

இந்த மனிதர் தாய் மற்றும் குருவைப்பற்றி கேட்டுக்கொண்டே இருக்கிறார்...எனக்குத் தோன்றுவது என்னவென்றால், அவர் பயப்படுகிறார். இப்போது சந்யாசி ஆகிவிட்டார், வீட்டுக்கு திரும்பிப்போக பயம், அம்மாவைக் கண்டு பயம். இப்போது பெரிய மன அழுத்தத்தில் இருக்கிறார்.

ஒரு முறை ஒரு குருவைத் தேர்ந்து எடுத்துக்கொண்ட பிறகு மற்றவை எல்லாம் தொடர்புடையதற்றது. அம்மா, அப்பா எதுவும் பொருந்தாது. குருவைத் தேர்வு செய்யாவிட்டால் எல்லாம் பொருத்தமாகும். ''உன் அப்பா அம்மாவைக் கொல் என்று குரு சொல்ல கட்டுப்பட்டுள்ளார். அப்படியே அர்த்தம் செய்து கொள்ளக்கூடாது, ஆனால் உளவியல் ரீதியாக எடுத்துக் கொள்ளவேண்டும். ஒரு நாள் குரு இப்படியும் சொல்லக்கூடும், ''இப்போது என்னையும் கொல்!''

அதைத்தான் புத்தர் சொல்கிறார். இவர் அரிதான சந்யாசி. தன் தாய் மற்றும் தந்தையை கொன்ற அரிய பிக்கு.'' வேறு ஒருநாள்

அவர் சொல்வார், ''என்னை வழியில் சந்தித்தாயானால், என்னைக் கொன்றுவிடு. என்றாவது உனக்கும் இறுதி அடைதலுக்கும் இடையே நான் வந்தேன் என்றால், என்னைக் கொன்றுவிடு, என்னை அழித்துவிடு.''

குரு இரண்டு விஷயங்களைக் கற்றுக்கொடுக்க வேண்டியுள்ளது. முதலில் கொலை... உன் அம்மா அப்பாவை கொல், ஆசிரியர்களைக் கொல், பூசாரிகளைக் கொல். பிறகு ஒருநாள் தன்னைக் கொல்வதற்கும் குரு கற்றுக்கொடுப்பார். நீங்கள் முழுசுதந்திரத்துடன் போகலாம், குரு இனி ஒரு தடையாக இருக்க மாட்டார்.

முதல் முறையாக உங்களிடம் மையம் பேசும்போது பெரிய அளவில் கிளர்ச்சி, குழப்பம் வருவது நிச்சயம். ஏனென்றால் நிறுவப்பட்டவை எல்லாம் அகற்றப்படும். நீங்கள் இதுவரை பாதுகாப்பாக உணர்ந்தது எல்லாம் இனி இருக்கப்போவதில்லை. நீங்கள் இதுவரை அர்த்தமுள்ளதாக கருதியதெல்லாம் இனி அர்த்தமற்றதாகும். எல்லாமே தலைகீழாக மாறும், காரணம் மெய்மையின்பால் மையத்தின் அணுகுமுறை சுற்றளவின் அணுகுமுறையிலிருந்து வேறுபடுகிறது. ஆழமானது மேற்பரப்புடன் பேசும்பொழுது கட்டாயம் அதீத நடுக்கம் வரும், நிலைதடுமாறும்.

> *நிலைதடுமாறியவாறு தன் மேல்அதிகாரியிடம் சென்று தான் பணியில் இருந்து விலகுவதாக சொன்னான் மோஜீத்.*

ஆனால் வேறு வழி இல்லை. நீங்கள் தியானிப்பவர் என்றால், மேலும் மையம் உங்களுடன் பேசி கிதிர் தோன்றுவாரானால் கிதிர் என்றால் அக வழிகாட்டி. கிதிர் தோன்றி ''இப்போது இதைச் சொல்'' என்று சொன்னால், நீங்கள் உளதாய் இருப்பவர் எனில் உங்களை எதிர்த்துக் கொண்டாலும் கூட நீங்கள் செய்தாக வேண்டும். உங்களுக்குத் தெரியுமா என் சன்னியாசிகள் பலர் தங்களையும் மீறி இங்கே இருக்கின்றனர்.

அசோகர் இருக்கிறார். சன்னியாசி ஆகமாட்டேன் என்று பல வருடங்களாக என்னுடன் போராடிக் கொண்டிருக்கிறார். அவர் சன்னியாசி ஆகிவிட்டார். அவர் ஏற்றுக்கொண்டே ஆக வேண்டும், ஆனால் போராட்டம் தொடருகிறது. பழையது முற்றிலுமாகப் போகவில்லை. பழையது உள்ளே வந்து உடைமையேற்க முயல்வது சில சமயங்களில் நடக்கும். அவர் தன்னையும்மீறி சன்னியாசியாக இருப்பவர். இதுபோன்று பலர் உள்ளனர். இது இயற்கைதான், ஏனென்றால், நீங்கள் சுற்றளவுடன் அந்த அளவிற்கு உங்களையே அடையாளப்படுத்திக் கொண்டு விட்டதால், மையத்திலிருந்து குரல் கேட்கத் தொடங்கியவுடன் பிரச்சினை எழுகின்றது. யாரைத் தேர்ந்து எடுப்பது, அம்மாவா அல்லது குருவா? ஆசிரியரா அல்லது குருவா? கடந்த காலமா இல்லை நிகழ்காலமா? எது? மையத்திலிருந்து குரல் ஒலிக்காத போது தேர்விற்கே இடமில்லை. சில விஷயங்கள் உள்ளன. ஆனால் எல்லாமே மேல்மட்டத்திலேயே இருக்கின்றன. எந்த உடை போட்டுக் கொள்ளலாம் அல்லது கூடாது, எந்தத் திரைப்படத்திற்குப் போகலாம் அல்லது போக வேண்டாம், எந்தப் புத்தகத்தைப் படிக்கலாம் அல்லது வாங்கலாம்-இது போன்ற விஷயங்கள், அர்த்தமற்ற தேர்வுகள். நீங்கள் எந்த உடை அணிந்தாலும் அது பெரிய வேறுபாடு ஏற்படுத்தாது. ஒரு படத்திற்குப் போவது அல்லது நீங்கள் இந்த மனிதர் அல்லது அந்த பெண்மணியின் பால் நேசம் கொள்வது எதுவுமே பெரிய வித்தியாசத்தை ஏற்படுத்தப் போவதில்லை.

ஆனால் மையத்திலிருந்து குரல் ஒலித்தபிறகு நீங்கள் இரண்டு உலகங்களோடு பிரிவுற்று இருப்பீர்கள். இணைக்க முடியாத இரண்டு உலகுகள். பெரும் பாதாளம் உள்ளது. நீங்கள் பிளவுண்டு இருப்பீர்கள். பெரும் குழப்பத்தில் இருப்பீர்கள். ஆனால் நீங்கள் தியானம் செய்பவராக இருந்தால் மட்டுமே இந்தக் குழப்பத்தை உள்வாங்கிக் கொண்டு இந்த ஒழுங்கின்மையிலிருந்து ஒரு ஒழுங்கமைவைக் கொண்டு வரமுடியும். ஆதலினால் தியானத்திற்கு என் வலியுறுத்தல். ஏனென்றால் ஆழ்ந்த தியானம்

இல்லையென்றால் உங்களால் என்னைப் புரிந்துகொள்ள முடியாது, என்னுடன் பயணிக்க முடியாது.

சில மக்கள் இருக்கின்றனர். குறிப்பாக இந்தியர்கள்... அவர்கள் இங்கே வந்து *''சத்சங்கம்''* போதும், உங்கள் அருகாமையே எங்களுக்கு வேண்டும், ஏன் தியானம் செய்ய வேண்டும் என்பார்கள். அவர்களுக்குப் புரிவதில்லை. அவர்கள் என் முன்னிலையில் இருக்க முடியாது, ஏனென்றால் அவர்கள் இன்னமும் உளதாய் இல்லை. இன்னமும் மோஜீத் இல்லை. என் அருகாமையில் இருப்பது உண்மையான சத்சங்கம் இல்லை. ஏனென்றால் என் அருகில் உட்கார்ந்துகொண்டே நீங்கள் ஆயிரத்தோரு சிந்தனைகளை சிந்தித்துக்கொண்டு இருக்கலாம். நீங்கள் உடல் ரீதியாக இங்கே இருந்தாலும் நீங்கள் மனரீதியாக இங்கே இல்லாமல் இருக்க முடியும். இவ்வுலகில் எங்கே வேண்டுமானாலும் இருக்கலாம். வேறு கிரகத்தில் கூட சஞ்சரிக்கலாம். இது *சத்சங்கம்* அல்ல.

நீங்கள் இங்கே இருந்தாலன்றி, வெறுமனே உடலால் மட்டுமல்ல மனதாலும் கூட, உங்களின் முழு இருப்பும் என்னைச் சூழ்ந்துகொண்டால் ஒழிய, இந்தக் கணத்தில் மெய்யாகவே இருந்து, தொடர்பு கொண்டு இணைத்துக் கொண்டால் மட்டுமே அது *சத்சங்கமாகும்.*ஆனால் அது ஈடேற நீங்கள் தியானம் செய்ய வேண்டும். மக்கள் சோம்பேறிகள். கடவுள் பரிசாக கிடைக்க வேண்டும் என்பர், அதற்கு தகுதியாகக்கூட முயற்சி செய்ய மாட்டார்கள்.

அவன் பணி விலக வேண்டும் என்றான்.

ஊர் மக்கள் அனைவருக்கும் இது தெரிந்து போனது. ''பாவம் மோஜீத்! பைத்தியமாகிவிட்டான்'' என்றனர்.

ஓர் தியானம் செய்பவரைப் பற்றி இப்படித்தான் சொல்லப் படுகிறது. உங்களைப் பற்றியும் இப்படித்தான் சொல்லப்படும் என்று நினைவிற் கொள்ளுங்கள். இது ஏற்கனவே சொல்லப்பட்டு இருக்கவேண்டும். ''பாவம் மோஜீத்! பைத்தியமாகி விட்டான்'' என்று அவர்கள் எல்லோரும் சொன்னார்கள். இதை சொன்னதற்கு

காரணம் உலகில் உள்ள அனைவரும் அவன் நல்ல மனநிலை உடையவன் என்று நினைத்துக்கொண்டிருக்கின்றனர். ஒருவர் ஏன் தியானம் செய்ய வேண்டும் என்று அவர்களால் நினைத்துப் பார்க்க முடியவில்லை. எதற்காக? தியானம் அல்லது பிரார்த்தனை செய்யும் ஒருவரைப் பார்த்து தொடர்ந்து கேட்பார்கள், ''ஏன் நீ இதில் இறங்குகிறாய்? எதற்காக? நாபியை அமைதியாய் பார்த்துக் கொண்டு ஏன் உன் நேரத்தை வீணாக்குகிறாய்? நேரத்தை வீணடிக்காதே' நேரம் என்பது பணம்'. பல விஷயங்கள் செய்யலாம். நேரத்தை வீணாக்காதே. போன காலம் திரும்பி வராது. மௌனமாக கண்ணை மூடிக்கொண்டே என்ன செய்துகொண்டு இருக்கிறாய். கண்ணைத் திறந்து உலகில் போட்டியிடு. உலகம் என்பது பிழைத்து வாழ்தலுக்கான போராட்டம். அமைதியாய் இருந்து தியானிப்பவர்கள் தொலைந்துபோவார்கள். எதையாவது அடையவேண்டுமென்றால் போராடு, ஆளுமை உணர்வு கொள், அடங்கிப்போய் இராதே.''

வாழ்க்கை இரண்டு செயல்வகை அல்லது பாங்கு உடையது என அறிந்துகொள்ளுங்கள். செயல்பாடு மற்றும் செயலற்ற பாங்கு. செயல்பாங்கு செயலின் மீது நம்பிக்கை வைக்கின்றது, செயலற்ற பாங்கு உள்வாங்கிக் கொள்வதின் மீது நம்பிக்கை வைக்கிறது. தியானம் என்பது செயலற்ற பாங்கைச் சேர்ந்தது. 'வே--வு--வே'' என்று சீன மொழியில் அழைப்பார்கள். அதற்கு செயலற்ற செயல் என்று பொருள். அதாவது செயலின்மை மூலம் செயல்படுவது, எதையும் செய்யாமலே செயல்படுவது. ஆக, தியானம் என்பது செயலற்ற பாங்காகும். உலகம் ஒரே பாங்கில் வாழும் மனிதர்களால் நிரம்பியுள்ளது. அதாவது செயல் பாங்கு மனிதர்கள். செயல்பாங்கிலே வாழும் ஒரு மனிதரால் செயலற்ற பாங்கிற்குள் நுழைந்து விட்ட மனிதருக்குள் என்ன நடக்கிறது என்று புரிந்து கொள்ளமுடியாது.

இப்போது மோஜீத் செயலற்ற பாங்கிற்குள் நுழைகின்றான். இது ஒரு புரட்சி. இது சன்னியாசம் அவன் உலகைப்பார்த்து விட்டான், பல வகைகளில் செயல் புரிந்துவிட்டான், பலவற்றை செய்துவிட்டாள், இப்போது, இதே போல் செய்து

கொண்டேயிருத்தல், எடைகள் மற்றும் அளவுகளுக்கான ஆய்வாளரே இறுதி கதி என்பதை அவன் அறிவான். அவனுக்கு அதில் இனி ஈர்ப்பு ஏதுமில்லை. எது ''உள்ளதோ'' அதைப் பார்க்க வேண்டும், அறிந்து கொள்ள வேண்டும் என்ற ஆவல் அவனுக்கு. மரணம் அவனைத் தாக்கு முன் மரணமற்றது பற்றி ஏதோ தெரிந்துகொள்ள அவனுக்கு விருப்பம். அவன் துணிகின்றான்.

''பாவம் மோஜீத் பைத்தியமாகி விட்டான்'' என்று நிச்சயமாக மக்கள் நினைப்பார்கள்.

> *''ஆனால் அவன் இடத்தை நிரப்ப பல பேர் போட்டியிட்டதால், மோஜீத்தை விரைவிலேயே மறந்து போயினர்''*

இப்படித்தான் நடக்கும். நீங்கள் சந்யாசி. ஆனால் சில நாட்களுக்கு மக்கள் நீங்கள் பைத்தியம் என்றுதான் நினைப்பார்கள். பிறகு உங்களை மறந்துவிடுவர். அவர்களுக்கு செய்வதற்கும் யோசிப்பதற்கும் ஆயிரத்தோரு விஷயங்கள் உள்ளன. உங்களைப் பற்றியே நினைத்துக் கொண்டிருக்க முடியாது. நீங்கள் ஒரு பைத்தியம் என்பதை இயல்பாக எடுத்துக் கொள்வார்கள். நீங்கள் ஒரு பைத்தியம், இப்போது அதைப் பற்றியே சிந்தித்துக் கொண்டிருந்தால் என்ன பயன்?

நீங்கள் துறந்தால், தப்பிப்போனால், செயலற்ற பாங்கிற்கும் நகர்ந்தீர்கள் என்றால், சில நாட்கள் உங்களைப் பற்றி நினைப்பார்கள். அதன் பிறகு எல்லாம் மறைந்துவிடும். ஏனென்றால் உங்கள் இடத்திற்கு அளவுக்கதிகமான பேர் காத்திருக்கின்றனர். நீங்கள் இறந்துபோன பிறகு உடனேயே உங்கள் இடம் நிரப்பப்படும். உங்கள் மரணத்திற்காக காத்துக் கொண்டிருக்கின்றனர். நீங்கள் போன பிறகு - உங்கள் வீடு வேறு ஒருவரால் நிரப்பப்படும். உங்கள் பணியிடம் வேறு ஒருவருக்குப் போகும். உங்கள் வங்கி இருப்பு மற்றொரு பெயருக்கு மாற்றப்படும். எல்லாரும் காத்துக் கொண்டிருக்கின்றனர். உண்மையில் அவர்களுக்கு கவலை: ''ஏன் இவ்வளவு தாமதம்? ஏன் போகமாட்டேன் என்கிறாய்? இங்கே உள்ள எல்லோரும் மற்ற

எல்லோருடைய மரணத்திற்காக காத்துக் கொண்டிருக்கின்றனர். ஏனென்றால் வாழ்க்கை என்பது அப்படியோர் கடும் போட்டி. கொலைவெறியுடைய போட்டி! விரைவிலேயே அவர்கள் அவனை மறந்தனர்.

> *முன் குறிப்பிட்ட நாளில் மோஜீத் கிதிரை சந்தித்தான். அவர் அவனிடம் சொன்னது, ''உன் ஆடைகளைக் கிழித்துக் கொண்டு ஆற்றினிலே குதி. ஒருக்கால் யாரேனும் உன்னைக் காப்பாற்றலாம்''*

இவ்வார்த்தைகள் மிகவும் அர்த்தமுள்ளவை.

கிதிர் சொல்கிறார், ''*உன் ஆடைகளைக் கிழித்துக்கொண்டு ஆற்றினிலே குதி*''

இதைத்தான் நானும் உங்களுக்குச் சொல்லிக்கொண்டே இருக்கிறேன். பல பேருக்கு சொல்லப்பட்டது. ஆனால் சிலரே கேட்கின்றனர். பலர் அழைக்கப்படுகின்றனர். சிலர் மட்டுமே வருகின்றனர்.

இப்போது எந்தக் காரண காரியமும் இல்லாமல் இந்தப் பாவப்பட்ட மோஜீத் வருகிறான். கிதிர் சாதாரணமாக ''*உன் ஆடைகளைக் கிழித்துக்கொண்டு ஆற்றினிலே குதி*'' என்கிறார்.

சில நாட்களுக்கு முன்னால் ஒரு அழகான பெண்மணி, சாரதா, சன்னியாசி ஆனார். அடுத்த நாள் அவள் ஒரு கடிதம் எழுதினாள். ''அது விரைவாகவும், திறமையாகவும் முடிக்கப்பட்டது''. அவள் உண்மையில் சன்னியாசியாக தயாராக இல்லை, நான் தான் அவளை சன்னியாசத்திற்கு தூண்டி இழுத்துவிட்டேன். இயல்பாகவே, தான் வஞ்சகமாக இழுக்கப்பட்டு விட்டோம் என்று அவளுக்குத் தோன்றியிருக்கலாம். தான் அறிந்து விருப்பத்துடன் அவள் வரவில்லை, தன் உணர்வற்ற ஆசை இருந்தது. இல்லையென்றால் நான் அவளை உந்தித்தள்ளியிருக்க மாட்டேன்.'' ஆனால் பின்னர் அவள் யோசித்துப் பார்த்து இருக்கலாம், ''என்ன நடந்தது?''— அவள் ஒரு சன்னியாசி ஆகிவிட்டாள். அவள் உலகம் நன்றாக அறிந்தவள், நிதிசார்ந்த

விஷயங்களில் தேர்ந்தவள். உலகாயத விஷயங்கள் அறிந்தவள். இவ்வளவு விரைவாக திறமையாக நடந்தேறிவிட்டதே என்று எண்ணியிருப்பாள், சன்னியாசியாக அவள் தயாராகக்கூட இல்லை. ஆனால் இப்போது அவள் சன்னியாசி. ஆனால் அவள் புத்திசாலியும்கூட. விரைவிலேயே நான் அவளை சன்னியாசத்திற்கு உந்தித் தள்ளவில்லை என்பதைப் புரிந்து கொண்டாள். நான் வெறுமனே அவளுடைய அக வழிகாட்டியைப் பிரதிபலித்துக் கொண்டே இருந்தேன். இதைத்தான் நான் தொடர்ந்து செய்து கொண்டேயிருக்கிறேன். வெளியில் இருக்கும் குருவானவர் கிதிரின் பிரதிபலிப்பு மட்டும்தான்.

உங்கள் அக வழிகாட்டியை நீங்களே புரிந்துகொள்ள முடியாது, அதனால்தான் வெளியில் இருக்கும் ஒரு குரு தேவைப்படுகிறார். உங்கள் அக வழிகாட்டியைப் புரிந்துகொள்ள முடியாததிற்குக் காரணம் உங்களுக்கு அந்த மொழி தெரியாது. அந்த வார்த்தைகள், அந்தக் குறியீடுகள் அந்த உருவகங்கள், அந்த மெல் ஓசைகள், அந்தச் சப்தங்கள் எல்லாமே உங்களுக்கு பரிச்சயமற்றவை. உங்கள் அக வழிகாட்டி உங்களுக்கு எப்படி செய்தி தருகிறார் என்பதுபற்றி நீங்கள் முழுவதுமாக அறிந்திருக்க மாட்டீர்கள். வெளியில் இருக்கும் உங்களுடைய கிதிரின் புறத்தெறிவை திரையிட்டுக் காட்டுபவரே குரு என்பவர். வெளியில் இருக்கும் குரு உங்கள் அக குருவை நீங்கள் புரிந்துகொள்ள உதவி செய்பவர். உங்கள் அக குருவை முழுமையாக நீங்கள் புரிந்துகொண்ட பிறகு, வெளியில் இருக்கும் குரு சொல்வார். ''நீ என்னை உன் பாதையில் கண்டால், என்னைக் கொன்று விடு.'' இப்போது கிதிர் இதனை மோஜீத்திடம் சொல்கிறார். என்ன நடக்கப்போகிறது என்று ஒரு அறிமுகம் இல்லாமலும், நடக்கப் போவதைப்பற்றி அவனுக்கு ஒரு ஊக்கம் அளிக்காமலும், ஏன் அவன் ஆடையை கிழித்துக்கொண்டு ஆற்றினிலே குதிக்க வேண்டும் என்று விளக்கம் தராமலேயே இவ்வாறு கதிர் சொல்கிறார். ஏன்?

இங்கே 'ஏன்' என்பதே இல்லை. நீங்கள் ஒரு குருவுடன் வாழ்கிறீர்கள் என்றால் 'ஏன்' என்பது கிடையாது. அப்படியானால் தான் நீங்கள் குருவுடன் இருக்கின்றீர்கள்.

*''உன் ஆடைகளைக் கிழித்துக்கொண்டே ஆற்றினிலே குதி''*

அது மட்டுமல்லாமல் அவர் மேலும் சொல்வது,

*''ஒருக்கால், யாரேனும் உன்னைக் காப்பாற்றலாம்''*

இங்கே ஒரு உத்திரவாதமும் இல்லை. குருவின் மொழி எப்போதும் இப்படித்தான் இருக்கும். ஒருவேளை குரு உத்திரவாதம் அளித்தாரென்றால் உங்களுக்கு நம்பிக்கை தேவை இருக்காது. உத்திரவாதமே உங்கள் நம்பிக்கையாக செயல்படும். நீங்கள் உத்திரவாதத்தை நம்புவீர்கள், ஆனால் நீங்கள் அந்த மர்மமான வாழ்க்கை மற்றும் அதன் மர்மமான வழிமுறைகள் மீது நம்பிக்கை வைக்கமாட்டீர்கள். குரு எப்போதும் ''ஒருக்கால்'' என்றுதான் சொல்வார்.

பலர் என்னிடம் வந்து கேட்பார்கள், ''நாங்கள் சன்னியாசிகள் ஆனோம் என்றால், ஞானம் பெறுவோமா?'' அவர்களுக்கு நான் சொல்வது, ''ஒருகால் நடக்கலாம், ஒருக்கால் இல்லாமலும் போகலாம். யாருக்குத் தெரியும்?'' நான் ''ஒருக்கால்'' என்று சொல்லியாக வேண்டும். ஒருக்கால் என்ற உணர்வை நான் உங்களுக்கு ஊட்டியாக வேண்டும், காரணம், அப்படியானால் தான் நீங்கள் துணிய முடியும். நூறு சதவீத உத்திரவாதம் அளித்துவிட்டால், நம்பிக்கையின் தேவை எங்கே வருகிறது? எதுவுமே உத்திரவாதத்திற்கு உரியதல்ல, எல்லாமே திறவுநிலையை சார்ந்தது. அதனால்தான் துணிவதற்கு முன்வருபவர்கள், துணிந்து இறங்குவதற்கு வீரம் உள்ளவர்கள் மட்டுமே சன்னியாசத்தைத் தேர்ந்து எடுக்கின்றனர். தியானத்திற்குள் நுழைகின்றவரை, ஆன்மீகப் பாதையில் நடக்கின்றனர்.

*மோஜீத் அவ்வாறே செய்தான். இருந்த போதிலும் நான் ஒரு பைத்தியமோ என்று யோசித்தான்.*

உங்களைப்பற்றி நீங்களே பலமுறை யோசித்து இருக்கிறீர்களா? ''நான் இங்கே என்ன செய்து கொண்டு இருக்கிறேன்?'' இது மீண்டும் மீண்டும் உங்கள் மனதில் தோன்றும். நான் எதற்குள் இறங்கியிருக்கிறேன்? எதற்காக நான் காவி தரித்து

இருக்கிறேன்? ஏன் மாலை போட்டுக்கொண்டு இருக்கிறேன்? இந்தப் பைத்தியக்கார மனிதனுடன் நான் என்ன செய்துகொண்டு இருக்கிறேன்? இவர் ஒரு வெறும் பைத்தியமாகக்கூட இருக்கலாம், யாருக்குத் தெரியும்? இவர் ஞானம் அடைந்தவர் என்பதற்கு என்ன உத்திரவாதம்?''

இது இயற்கையானதுதான். ஆனால் நேசிப்பவர், நம்பிக்கை கொள்பவர் இதை எல்லாம் தாண்டிப் போய்க் கொண்டேயிருக்கிறார். மனம் உங்களைப் பின்தொடர்ந்து வந்துகொண்டே இருக்கும். தெரு நாய்களைப் போலத் துரத்தும், குரைக்கும். ஆனால் நீங்கள் அதை கவனிக்காவிட்டால், மெல்ல மெல்ல இந்த நாய்களை பின்னே விட்டுச்செல்ல முடியும். அவைகளின் குரைப்பு மேலும் மேலும் தூரமாகிப் போகும். ஒரு நாள், திடீரென நீங்கள் தனியாய் இருப்பீர்கள். மனம் இனி இல்லை. அந்த நாள், ஒரு மிக அதிக மகிழ்ச்சியான நாளாகும்.

*மோஜீத் அவ்வாறே செய்தான், இருந்த போதிலும் நான் ஒரு பைத்தியமோ என்று யோசித்தான்.*

யார்தான் அப்படி யோசிக்க மாட்டார்கள்? இது அபத்தமாகத் தெரிகிறது. கடவுளின் ஷணநேரத் தோற்றத்தை கிதிர் தனக்குக் காட்டுவார் என்ற எண்ணத்தில் மோஜீத் அங்கு சென்று இருக்கலாம். அல்லது இந்த மர்மத்தின் கதவுகளைத் திறப்பதற்கு ஒரு சாவியை கொடுப்பார் அல்லது மறை பொக்கிஷங்களைக் காட்டுவார் அல்லது ஏதோ ஒன்று என்று எண்ணிப் போயிருக்கலாம். ஆனால் இந்த மனிதரோ ''ஆடைகளைக் கிழித்துக்கொண்டே ஆற்றில் குதி, ஒருக்கால் யாரேனும் உன்னைக் காப்பாற்றலாம் என்கிறார்'' அவ்வளவுதான்.

ஆனால் அவன் செய்தான். நான் உங்களிடம் ''ஆற்றில் குதி'' என்று சொல்லும்போது இதை ஞாபகத்தில் வைத்துக் கொள்ளுங்கள். மனம் இதை எதிர்க்கும். இது இயற்கைதான் என்று நான் அறிவேன். நீங்கள் இதைச் செய்தால்தான் வேறு ஏதோ ஒன்று சாத்தியமாகும்.

*அவனுக்கு நீச்சல் தெரியுமாகையால் அவன் மூழ்கவில்லை. ஆனால் வெகுதூரம் போய் விட்டவனை ஒரு மீனவன் தன் படகில் இழுத்துப்போட்டான். ''முட்டாள் மனிதனே, ஆற்றோட்டம் வேகமாக உள்ளது, என்ன செய்ய முயற்சிக்கிறாய்'?' என்று கேட்டான். ''உண்மையிலேயே எனக்குத் தெரியாது'' என்றான் மோஜீத்.''*

''அவனுக்கு நீச்சல் தெரியுமாகையால்....'' நீங்கள் ஆற்றுக்குள் குதித்தால் உங்களால் நீந்த முடியும் என்பதை நான் அறிவேன், ஏனென்றால் நீச்சல் என்பது ஒரு இயல்பான செயற்பாடு. ஒருவர் அதைக் கற்றுக்கொள்ள வேண்டியதில்லை. நான் இங்கே வெளியில் இருக்கும் ஆறு அல்லது நீச்சலைப் பற்றி பேச வில்லை. நான் அக விழிப்புணர்வு நிலை பற்றிச் சொல்கிறேன், நீங்கள் அதற்குள் குதித்தால்... அதைத்தான் குறிக்கின்றது. அந்த இணையொத்த கதையை நீங்கள் புதிர் அவிழ்க்க வேண்டும். அது உங்களுக்கு இயற்கையாகவே அறிந்த ஒன்று. எந்த மீனாவது நீந்தக் கற்றுக் கொள்வதைப் பார்த்திருக்கிறீர்களா?

ஒருமுறை மீன்பிடிக்கத் தடைசெய்யப்பட்ட இடத்தில் மீன்பிடித்துக் கொண்டு இருந்தபோதும் முல்லா நஸ்ருதீன் பிடிபட்டுவிட்டார். முல்லா ஒரு மீனை எடுத்துக்கொண்டு இருக்கும்போது ஆய்வாளர் திடீரென வந்து கையும் களவுமாகப் பிடித்துவிட்டார். அவர் மீனை உடனே நீரில் போட்டுவிட்டு கலங்காமல் உட்கார்ந்து இருந்தார். ஆய்வாளர் கேட்டார், ''என்ன செய்துகொண்டு இருக்கிறீர்கள் முல்லா?''

முல்லா, ''நான் மீனுக்கு நீச்சல் கற்றுக் கொடுத்துக்கொண்டு இருக்கிறேன்.''

எந்த மீனுக்கும் நீச்சல் பாடம் தேவையில்லை. மீன் அங்கேயே பிறந்த ஒன்று. நீச்சல் அதற்கு சுவாசிப்பது போன்றது. உங்களுக்கு யார் சுவாசிக்கக் கற்றுக் கொடுத்தார்கள்? அஞ்சத் தேவையில்லை. நீங்கள் நம்பிக்கை கொள்ளத் தயார் என்றால், உங்கள் விழிப்புணர்வு நிலை ஆற்றுக்குள் குதிக்கத் தயார் என்றால், எப்படி

நீந்த வேண்டும் என்று உங்களுக்கே தெரியவரும். அதிகபட்சம் என்ன நடக்கலாம் என்றால், வெகு தூரம் நகர்ந்து சென்ற பிறகு உங்களை ஒரு மீனவன் தூக்கிவிடலாம். அதிகபட்சம் ஆற்றுப் போக்கினில் நகர்ந்து போகலாம். மூழ்கிப்போக முடியாது. நீங்கள் விழிப்புணர்வு நிலைமைக்குரியவர், அந்த ஆற்றின் ஓர் அங்கம்.

அந்த மீனவன் சொன்னான்.

''முட்டாள் மனிதனே என்ன செய்ய முயற்சிக்கிறாய்?...''

''உண்மையிலேயே எனக்குத் தெரியாது'' என்றான் மோஜீத்.

அந்த பதிலின் அழகைப் பாருங்கள். அவன் என்ன செய்கின்றான் என்று உண்மையிலேயே அவனுக்குத் தெரியாது, காரணம், எதற்காக என்று அவனுக்குக் கூறப்படவில்லை. ''நான் ஏன் ஆற்றுக்குள் குதிக்க வேண்டும்? ஏன் ஆடையை கிழித்துக் கொள்ளவேண்டும்? அதில் என்ன இருக்கிறது? அவன் காரணத்தை கிதிரிடம் கேட்கவில்லை. அதுவே நம்பிக்கை. அதுவே அறியாததிற்குள் செல்வது. இதைப் பற்றி நான் தொடர்ந்து சொல்லி வருகிறேன். இதுதான் துணிகரச் செயல், பற்றிக்கொள்ளாத மனம், இதுதான் துணிவு என்பது.

*''உண்மையிலேயே எனக்குத் தெரியாது'' என்றான்.*

அவன் சொல்வது உண்மைதான், ஏனென்றால், அவனுக்குத் தெரியாது. தெரிந்து ஒரு விஷயத்தைச் செய்தால் அது துணிவல்ல. தெரிந்து செய்தால் அது நம்பிக்கையும் அல்ல. உங்கள் அறிவைத்தான் நம்புகிறீர்கள்.

இங்கே இரண்டு விதமான சன்னியாசிகள் இருக்கின்றனர். நான் சொன்னவுடன் ஆற்றில் குதித்தவர். மற்றொன்று, யோசனை செய்து, அடைகாத்து, சாதக - பாதகங்களைச் சிந்தித்துப் பார்த்து, பிறகு ஒருநாள் முடிவெடுப்பது. இப்படி முடிவெடுப்பது, அவர் மனதிலிருந்து வருவது, அந்த முடிவு அவரது கடந்த காலத்தை

சேர்ந்தது. அவருடைய சொந்த சூழ்நிலை அமைப்பின் காரணமாக வருவது, அவருக்கான என் வேலை கடினமாகி விடுகிறது. ஏனென்றால், அவருக்கு வழங்கப்பட்ட முதல் சந்தர்ப்பத்தை அவர் தவறவிட்டு விட்டார். தன் அகங்காரத்தைப் பற்றிக் கொண்டு இருக்கிறார். முதல் சந்தர்ப்பத்தைப் பயன்படுத்திக் கொண்டு குதித்து இருந்தால், விஷயங்கள் மிக எளிமையாய் இருந்திருக்கும். அந்த மாதிரி மனிதர்களும் இங்கே இருக்கின்றனர். அந்தவகையினர்தான் பெரும்பாலானவர். ஏன் என்று கேட்காமல், வெறுமனே குதித்தவர்கள் இடையே தான் என் வேலை இருக்கிறது. இவர்கள் ஏன் என்று கேட்கவில்லை, என் கண்களுக்குள் பார்த்து ஒரு பைத்தியக்காரத்தனமான ஆசை களை உணர்ந்தனர். என்னுடன் வருவதற்கு ஒரு அடங்கா தாகம், எங்கே சென்று முடியும் என்று அறியாமலேயே என்னுடன் வருவதற்கு ஒரு ஆவல்.

> *''நீ ஒரு பைத்தியம்'' என்றான் மீனவன். ''சரி! உன்னை ஆற்றுப் பக்கம் உள்ள என் நாணல் குடிசைக்கு அழைத்துச் செல்கிறேன். பிறகு உனக்கு என்ன செய்ய முடியும் என்று பார்ப்போம்.''*
>
> *மோஜீத் நன்றாகப் பேசக்கூடியவன் என்று தெரிந்துகொண்ட மீனவன், அவனிடமிருந்து எழுதப் படிக்கத் தெரிந்து கொண்டான். பரிமாறாக மோஜீத்திற்கு உணவு கொடுத்தான்.*
>
> *மோஜீத் மீனவனுக்கு அவன் வேலையில் உதவி செய்தான். சில மாதங்கள் கழித்து, கிதிர் மீண்டும் தோன்றினார்.*
>
> *இம்முறை மோஜீத்தின் படுக்கையின் காலடியில், ''எழுந்திரு, இந்த மீனவனை விட்டுப்போ, உனக்கு வேண்டியது வழங்கப்படும்'' என்றார்.*

இப்போது விஷயங்கள் மாறி வருகின்றன. மோஜீத் நம்பிக்கை கொள்கிறான். அகவழிகாட்டியும் மரியாதை கொடுக்கிறது. இம்முறை படுக்கையின் காலடியில் தோன்றினார்.

இது மரியாதையை வெளிப்படுத்துவது. இனி மோஜீத் சாதாரண மனிதன் இல்லை. நம்பிக்கை அவனை மாற்றி உள்ளது. அவனை உருமாற்றம் செய்திருக்கிறது. அவன் துணிகரமானவன். அச்சமில்லாதவன். ஏன் என்று கேட்காதவன். அவனுக்கு எப்படி நேசிப்பது என்று தெரியும். கடந்த காலத்தின் பளுவை சுமக்காமலேயே எப்படி வருங்காலத்திற்குள் ஊடுருவ முடியும் என்று அவனுக்குத் தெரியும். அக வழிகாட்டியும் மரியாதை தருகிறது.

*கிதிர் சொல்கிறார், ''எழுந்திரு, இந்த மீனவனை விட்டுப் போ..''*

அது நடுராத்திரி. வாழ்க்கை நிலையாய் இருக்கிறது, மீனவன் மகிழ்ச்சியாய் இருக்கிறான். எப்போதெல்லாம் நிலை கொள்கின்றீர்களோ, அப்போது அகவழிகாட்டி உங்களை மறுபடியும் நிலை குலையச் செய்யும். நிலைப்படுத்திக் கொள்ளும்போது குரு உங்களை நிலைகுலையச் செய்வார். ஏனென்றால் நீங்கள் கடவுள் முன் எங்கேயும் நிலைபெற்று விடக்கூடாது, அதனால்தான் இந்தத் தொடர் நிலை குலைதல். எல்லாமே பாதையில் இருக்கும் நிலயங்கள் மட்டுமே. ஓரிரவு தங்கலாம், மறுநாள் காலை நீங்கள் புறப்பட்டாக வேண்டும்.

நடுநிசியில் கிதிர் சொல்கிறார், ''எழுந்திரு! இந்த மீனவனை விட்டுப்போ'' குருவுடன் இருக்கையில் இப்பொழுது மட்டும்தான், நாளை என்பது இல்லை. ''இப்போது இளைப்பாறு, ஆனால் காலையில் சென்றுவிட வேண்டும்.'' இவ்வாறு சொல்வது எளிதாகவும் பரிவன்போடும் இருந்திருக்கும். ஆனால் எப்போது? அது 'இப்பொழுதே' என்று தான் இருக்கும். ஒரு குருவிற்கு காலம் என்பது இப்பொழுது இருப்பது மட்டுமே. மேலும் புறவெளி என்பது இங்கே இருப்பது மட்டுமே.

*''உனக்கு வேண்டியது வழங்கப்படும்''*

விஷயங்கள் இப்போது மாறிவிட்டன. *''ஒருக்கால் உனக்கு வழங்கப்படலாம்''* என்று சொல்லவில்லை. சொற்பொருள் வகையில் இத்தகைய சிறிய நயநுட்ப வேற்றுமைகள். நீங்கள்

கதையின் புதிரை அவிழ்க்கத் தொடங்கலாம். முதலில் அவர் கூறியது ''ஒருக்கால் யாரேனும் உன்னைக் காப்பாற்றலாம்'' இப்போது ''உனக்கு வேண்டியது வழங்கப்படும்'' என்கிறார்.

எது மாறியிருக்கிறது? மோஜீத் வெளிக்காட்டிய நம்பிக்கையே போதுமானது. இதனால் ''ஒருக்கால்'' என்று சொல்லத் தேவையில்லை. ''ஒருக்கால்'' அவனை சோதித்து முடித்துவிட்டது, அவன் தன் மனோதிடத்தை நிரூபித்து விட்டான். இனி விஷயங்களை உள்ளபடியே சொல்லலாம்.

மெய்நிலையில் ஒருக்கால் என்பது இல்லை. நீங்கள் தியானம் செய்தால் சமாதி நிலை உத்திரவாதம் அளிக்கப்படுகிறது. ஒரு உயிர்த்துடிப்புள்ள குருவின்பால் அன்புகொண்டால் ஞானம் உத்திரவாதமாகிறது. ஒருக்கால் என்பது இல்லை, ஆனால் ஒருக்கால் பிரயோகிக்கப்படுவதற்கு காரணம் நீங்கள் நம்பிக்கையில் வளர்வதற்கு ஒரு வாய்ப்பு தர வேண்டும் என்பதற்காகவே. நம்பிக்கை எழுமாயின் ஒருக்கால் அவசியமற்றுப் போகிறது.

மோஜீத் உடனேயே குடிசையைவிட்டு அகன்றான். அவன் கால அவகாசம் கூட கேட்கவில்லை. ''நாளைக்குப் போகட்டுமா. இரவில் எங்கே போவேன். அவ்வளவு இருட்டாக உள்ளது. இரவில் போய் என்ன பிரயோஜனம், அதுவும் எங்கே போவது?''

இல்லை, எந்தக் கேள்வியும் இல்லை. வெறுமனே குடிசையை விட்டு வெளியேறினான்.

> *மீனவனைப் போன்று உடையணிந்த மோஜீத் உடனேயே குடிசையை விட்டு அகன்றான். ஒரு நெடுஞ்சாலையை வந்தடையும்வரை சுற்றித் திரிந்தான். விடியலின்போது கழுதைமீது சந்தைக்குப் போகும் ஒரு விவசாயியைக் கண்டான். ''வேலை தேடுகிறாயா?'' என்று கேட்ட விவசாயி ''ஏனென்றால் வாங்கியவற்றை திரும்பிக் கொண்டுவர எனக்கு ஒரு ஆள் வேண்டும்.''*

மோஜீத் அவனைப் பின்தொடர்ந்தான்....

அகப்பிரயாணத்தில் இப்படித்தான் நடக்கும். நீங்கள் நம்பிக்கை கொண்டால், ஏதோ ஒன்று எப்போதும் நடக்கும், அது உங்கள் வளர்ச்சிக்கு உதவும். உங்களுக்கு தேவையானது வழங்கப்படும். ஒரு குறிப்பிட்ட சமயத்தில் உங்களுக்கு தேவையானது வழங்கப்படும், ஆனால் அதற்கு முன்னர் அல்ல. உங்களுக்கு தேவை என்று வரும்போது கிடைக்கும், ஒரு கணம் கூட தாமதம் இருக்காது. தேவை என்ற போது உடனேயே கிடைக்கப் பெறுவீர்கள். அதுதான் நம்பிக்கையின் சிறப்பு. வாழ்க்கை உங்களுக்கு எவ்வாறு வழங்குகிறது, உங்கள் மீது தொடர்ந்து அக்கறை செலுத்துகிறது என்ற வாழ்க்கையின் வழிமுறைகளை போகப்போகக் கற்றுக் கொள்வீர்கள். கருத்தற்ற, அலட்சியமான இயலுலகில் நீங்கள் வாழவில்லை. அது உங்களைப் புறக்கணிக்கவில்லை. நீங்கள் தேவையில்லாமல் கவலைப்படுகிறீர்கள். எல்லாமே வழங்கப்பட்டுள்ளது. இந்தச் சாமர்த்தியத்தை நீங்கள் அறிந்து கொண்டால் எல்லா கவலைகளும் இல்லாது போகும்.

> *மோஜீத் அவனைப் பின்தொடர்ந்தான். அந்த விவசாயியிடம் இரண்டு வருஷம் வேலை பார்த்தான். இந்தக் காலகட்டத்தில் விவசாயம் பற்றி நிறையத் தெரிந்து கொண்டான். ஆனால் வேறு எதுவுமில்லை.*

இதுவும் இங்கே நடக்கும்.

ஆஷீஷ் தச்சு வேலை பற்றி நிறையக் கற்றுக் கொண்டு இருக்கலாம், ஆனால் வேறு ஏதாவது? கிருஷ்ணா ஒரு தேர்ந்த காவலாளி ஆகியிருக்கலாம், வேறு ஏதாவது? முக்தா தோட்ட வேலையும், தீக்ஷா சமையலும் கற்றுக்கொண்டு இருக்கலாம். ஆனால் வேறு விஷயங்கள் ஏதாவது உண்டா? இந்த யோசனை உங்கள் மனதில் பலமுறை தோன்றி இருக்கலாம். ''நான் இங்கே என்ன செய்துகொண்டு இருக்கிறேன்? மூன்று வருடம் போய்விட்டது. நான் தரையை சுத்தம் செய்துகொண்டு

இருக்கிறேன். தியானம் என்னாவது? ஞானம் எங்கே? 'இறுதி' பற்றி ஒன்றுமே இல்லையே? அதற்காகத்தானே வந்தேன், ஆனால் இங்கே தரையைத் துடைத்துக்கொண்டும், காய்கறிகளைக் கழுவியும் அல்லது பூச்செடிகளுக்குத் தண்ணீர் பாய்ச்சியவாறும் இருக்கிறேன். உண்மையான இலக்கு என்னாவது?''

நீங்கள் தரையை சுத்தம் செய்துகொண்டு இருக்கையில் ஏதோ ஒன்று உங்களுக்குள்ளும் சுத்தமாகி வருகிறது என்று 'நம்பிக்கைக்கு' மட்டுமே தெரியும். நீங்கள் செடிகளுக்கு தண்ணீர் விட்டுக்கொண்டு இருக்கும் பொழுது யாரோ வெகு ஆழத்தில் உங்கள் உயிருருக்கும் நீர் விட்டுக்கொண்டு இருக்கிறார்கள், நீங்கள் நம்பிக்கைகொண்டால் எல்லாம் சாத்தியமாகும், நம்பிக்கையின் மாயம் அவ்வகைப்பட்டது. சுத்தம் செய்வது தியானமாகும். சமையலும் தியானம், கழுவுவதும் தியானமே. தியானம் என்பது வாழ்க்கைக்கு அப்பாற்பட்டது அல்ல. அது எந்த ஒரு செயலுக்கும் தரத்தைக் கொண்டுவரவல்லது, அந்தச் செயல் உடனே உருமாற்றம் அடைகிறது.

> *ஒரு நாள் மதியம் அவன் கம்பளி கட்டிக்கொண்டு இருந்த போது கிதிர் அவன் முன் தோன்றி, ''இந்த வேலையை விட்டுவிட்டு மோசுல் நகரத்திற்குப் போ, உன் சேமிப்பை வைத்து தோல் வியாபாரியாகு'' என்றார்.*

இதுதான் நடந்து கொண்டிருக்கிறது. மாதுரி நூலகத்தில் வேலை செய்கிறார். திடீரென ஒருநாள் அவளுக்கு செய்தி வருகிறது. ''நூலக வேலைக்குப் பதிலாக, வேறு வேலைசெய்'' நம்பிக்கை இருந்தால், கோபம் வராது, மனக்கலக்கம் வராது. ஏனென்றால் இங்கே நீங்கள் நூலகமோ, சமையல்அறையோ அல்லது எதுவோ அங்கங்கே இருக்கப்போவதில்லை. அவை எல்லாமே கருவிகள்! நீங்கள் இங்கே இருப்பது நம்பிக்கை கொள்வதற்கான வழிமுறைகளை கற்றுக் கொள்வதற்குத்தான்.

மோஜீத் தோல் வியாபாரியாக இருந்ததே இல்லை. ஆனால் கேட்டுக்கொண்டான்.

*மோஜீத் அடிபணிந்தான்.*

சீடனுக்கான இலக்கணம் இதுவே. அப்படியே அடி பணிவது.

> *மோசுலில் அவன் ஒரு தோல் வியாபாரியாக அறியப் பட்டான். வாணிகம் செய்து வந்த மூன்று வருடங்களில் அவன் கிதிரைப் பார்க்கவேயில்லை. அவன் ஏராளமான பணம் சேமித்துவிட்டான். அவன் வீடு ஒன்று வாங்கலாம் என்று யோசித்துக் கொண்டிருந்தபோது கிதிர் வந்தார்,' ''உன் பணத்தை என்னிடம் தா. இந்த ஊரைவிட்டுப் போய் தூரத்து சமர்கண்ட் நகரம் சென்று அங்கு உள்ள பலசரக்கு வியாபாரிக்கு வேலை செய்.'' மோஜீத் அவ்வாறே செய்தான்.*

இது உங்களுக்கும் பலமுறை நடக்கும். இந்தக் கதை உங்களின் கதை. நீங்கள் ஓர் சூஃபியின் உலகில் வாழ்ந்து கொண்டு இருக்கிறீர்கள். அதனால்தான் நான் சொன்னேன், முடிந்தவரை இந்தக் கதையை மிகக் கவனமாக கேளுங்கள், அது உங்களுக்குள் அமிழ்ந்து போகட்டும்.

மோஜீத் நிறையப் பணம் சேகரித்து விட்டான், இயல்பாகவே வீடு வாங்க யோசித்துக்கொண்டே இருந்தான். மேலும் மூன்று வருடங்களாக கிதிரிடமிருந்து எந்தச் செய்தியும் இல்லை. நீங்கள் வீடு வாங்கலாம் என்று யோசிக்கும் தருணம், நீங்கள் நிலையாய் இருக்கலாம் என்று எண்ணும் தருணத்தில் குரு வந்து நிலைகுலைய வைப்பார். வீடு பற்றிய யோசனை இல்லை என்றால் கிதிர் வந்திருக்க மாட்டார். ஆனால் பணம் வந்த கணம், ஒரு குடும்பஸ்தனாகலாம் என்ற சாத்தியம் வரும்போது, வீடு வாங்கி இனி நிலையாய் என்று எண்ணுகையில் குரு தோன்றுவார்.

குருவுடன் இருக்கையில் நீங்கள் எதிலும் என்றென்றிற்கும் நிலையாய் இருக்க முடியாது. குரு உங்களைத் தொடர்ந்து மாற்றிக்கொண்டே இருக்கவேண்டும். உங்கள் வேர்கள்

மண்ணில் ஆழமாகப் பாய்ந்துள்ளன என்று நினைக்கும்போது நீங்கள் களைந்தெறியப்படுவீர்கள். ''இந்த வேலையை நான் கற்றுக்கொண்டேன், அதைத் திறமையாகச் செய்கிறேன் என்று உங்களுக்குத் தோன்றியகணமே உங்கள் வேலை மாற்றப்படும். நீங்கள் ஒரு 'புத்த களத்தில்' வாழ்வதற்கான காரணம் இதுவல்ல. இதற்கான காரணம் உங்களை எப்போதும் பாதுகாப்பின்மையிலேயே வைத்திருப்பது, என்றாவது ஒரு நாள் நீங்கள் நிச்சயமின்மையின் சிறப்பைப் புரிந்து கொள்வீர்கள். அப்படியானால் நீங்கள் நிலைத்து இருப்பதை மறந்துவிட்டு உங்கள் யாத்திரையே இலக்காகிவிடும். பயணமே இலக்காகும்போது உங்கள் வாழ்க்கை ஒரு சன்னியாசியின் வாழ்க்கையாகிறது.

*கிதிர் வந்தார்''உன் பணத்தை என்னிடம் தா....''*

மோஜீத் மூன்று வருடம் தொடர்ந்து வேலை செய்திருக் கிறான், பணம் சம்பாதித்து உள்ளான்., இப்போது எல்லா நம்பிக்கைகளும் அழிந்துவிட்டன. பணம் மட்டுமே எடுத்துக் கொள்ளப்படவில்லை, அவன் வெகுதூரம் நடந்துசென்று ஒரு தூரத்து சமர்கண்ட் நகரம் சென்று அங்கு உள்ள பலசரக்கு வியாபாரிக்கு வேலை செய்ய உத்திரவிடப்பட்டான்.

*மோஜீத் அவ்வாறே செய்தான். இப்போது சந்தேகத்திற்கு இடமின்றி அவனிடம் அறிவுணர்விற்கான அறிகுறிகள் தென்பட்டன.*

அது இயற்கையானதுதான். அந்தளவிற்கு நம்பிக்கை வைத்தால் எவ்வளவு காலம் நீங்கள் இருட்டில் இருக்க முடியும்? இப்படிப்பட்ட நம்பிக்கை, அதீதமான நம்பிக்கை இருந்தால் எவ்வளவு காலம் சாதாரணமாக இருக்க முடியும்? அசாதாரணமான விஷயங்கள் அவனைச் சுற்றி நடக்கத் தொடங்கின.

*இப்போது சந்தேகத்திற்கு இடமின்றி அவனிடம் அறிவுணர்விற்கான அறிகுறிகள் தென்பட்டன.*

அவன் சுடர்ஒளி வீசத்தொடங்கினான்.

*அவன் நோயாளிகளைக் குணப்படுத்தினான். கடையில், ஓய்வு நேரத்தில் உடன் இருந்தோருக்கு சேவை செய்தான். விளங்கா மெய்மைகள் பற்றி அவனறிவு மேலும் மேலும் ஆழமாயிற்று.*

அவனுக்கு எதுவும் கற்றுக் கொடுக்கப்படவில்லை!

இந்தக் கருத்தைக் கவனியுங்கள்: எதுவும் கற்றுத் தரப்பட வில்லை, எந்தத் தகவலும் வழங்கப்படவில்லை, ஆனாலும் விளங்கா மெய்மைகள் பற்றிய அவனது உள்நோக்கு வளர்ந்து கொண்டு இருந்தது. அது மட்டுமல்ல அவனே ஒரு புதிராகி விட்டான். இப்போது அவன் தொடுதலினால் மக்கள் குணமடைந்தனர். அவனைச்சுற்றி ஏதோ ஒன்று இருப்பதை மக்களால் காண முடிந்தது. ஒரு ஒளிவட்டத்தைப் பார்க்க முடிந்தது. மக்கள் அவனிடம் வந்தபோது ஒரு வெகு அதிக குளிர்ச்சியான சக்தியின் அருகில் இருப்பது போன்று உணர்ந்தனர். ஆயிரத்தொரு கவலைகளோடு வந்தார்கள், திடீரென அந்தக் கவலைகள் எல்லாம் காணாமல் போயின. மோஜீத் அருகில் இருக்கையில் சமயத்தைப் பற்றி ஏதோ உணரத் தொடங்கினர். ஆழமான மர்மங்கள் நடந்துகொண்டு இருந்தன.

அறிவு, தகவல் எல்லாமே கடன் வாங்கப்பட்டவை. உண்மையான சமயம் அறிவாக நடந்தேறுவதில்லை. ஆனால் அது ஒரு வெளிப்பாடாகவே நடக்கும். மெய்மை பற்றிய மனிதனின் முயற்சியே அறிவாகும். வெளிப்பாடு என்பது கடவுளைச் சார்ந்தது மனிதனுடையதல்ல. யாரேனும் தேவையான அளவு நம்பிக்கை கொண்டாரானால், கடவுள் தன்னை வெளிப்படுத்திக் கொள்வார், அவருடைய விளங்கா மெய்மைகளைத் திறந்து காட்டுவார்.

உங்களின் ஆர்வத்தால் அந்த மெய்மைகள் திறக்கப் படுவதில்லை, அந்த விளங்கா மெய்மைகள் யாவும் உங்கள் நம்பிக்கையின் காரணமாக திறக்கப்படுகின்றன. ஆர்வத்தினால் வெளிவருவது அறிவு, அருள் வெளிப்பாட்டினால் கிடைக்கக் கூடியது ஞானம்.

இப்போது நறுமணம் பரவத் தொடங்கியது.

*மதகுருக்கள், வேதாந்திகள் மற்றும் பிறரும் அவனைக் கண்டு, ''யாரிடம்.... கற்றுக்கொண்டாய்?'' என்று கேட்டனர்.*

இதை எப்போதும் முட்டாள் மனிதர்கள் கேட்பதுண்டு. ''யாரிடம் கற்றுக் கொண்டாய்?'' மதகுருக்கள், வேதாந்திகள், பேராசிரியர்கள், தத்துவ அறிஞர்கள், பண்டிதர்கள், எல்லோருக்கும் ஒரு வழிதான் தெரியும். அது அறிவு பெறுவது. ''யாரிடமிருந்து இந்த அறிவைப் பெற்றாய்? யார் உனக்குத் தகவல் அளித்தது? யார் உன் குரு?'' நேர் எதிர் வழியில் தெரிந்து கொள்வது பற்றி அவர்கள் அறியமாட்டார்கள். அதுதான் உண்மையான வழியில் அறிந்துகொள்வது. யாரும் உங்களுக்கு அறிவு புகட்டுவது இல்லை. நீங்கள் வெறுமனே மேலும் மேலும் அமைதியானால், ஏற்றுக்கொள்ளும் பண்பு கொண்டால். மேலும் மேலும் மென்மையான பண்பு கொண்டும், மென்மையானால் திடீரென ஒரு அறியாத சக்தியிடமிருந்து உங்களுக்கு விஷயங்கள் வெளிப்படத் துவங்கும். எந்த ஆசிரியரும் கிடையாது. வாழ்க்கையே குருவாகிறது.

மோஜீத் சொன்னது ''யாரிடம் கற்றுக் கொண்டேன் என்று சொல்வது சற்று கடினம். யாரிடமும் கற்றுக்கொள்ளவில்லை. நான் படித்ததே இல்லை, நான் கற்றறிந்த மனிதனே கிடையாது அது நிச்சயமாக நடந்தது. எனக்கு சில விஷயங்கள் தெரியவந்துள்ளன. ஆனால் யாரிடமிருந்து என்று தெரியாது. யார் என் உயிருருவை ஊடுருவுகிறார்கள், எங்கேயிருந்து அப்பால் உள்ளது என்னை ஊடுருவியுள்ளது, எதுவும் எனக்குத் தெரியாது.

*''அதைச்சொல்வது கடினம்'' என்றான் மோஜீத்.*

*''உங்கள் வாழ்க்கைத் தொழிலை எப்படித் தொடங்கினீர்கள்?' என்று சீடர்கள் கேட்டனர்.*

*''ஒரு இளநிலை அதிகாரியாக'' என்றான்.*

இது பொருத்தமற்றது. அவன் தன் பிழைப்பை எப்படித் தொடங்கினான் என்று கேட்கவில்லை, எப்படி ஒரு பெரிய துறவியானாய் என்றுதான் கேட்கின்றனர்.

ஆனால், ''அது எனக்குத் தெரியாது. எனக்குத் தெரிந்தது எல்லாம் நான் ஒரு நகரத்தில் இளநிலை அதிகாரியாக இருந்தேன், அவ்வளவுதான். எடைகளும் அளவுகளுக்குமான ஆய்வாளராகவே இருந்திருப்பேன்'' என்றான்.

சீடர்கள் துருவிப் பார்த்தனர்.

*''உடல் சார்ந்த விருப்பு வெறுப்புக்களைக் களைய உங்களை அர்ப்பணித்துக் கொள்ளும் பொருட்டு வேலையைத் துறந்தீர்களா?''*

*'இல்லை... சும்மா விட்டு விட்டேன்.''*

இந்த விஷயத்தைப் பாருங்கள். ஏதோ ஒன்று கிடைப்பதற்காக ஒன்றை விட்டுக்கொடுத்தால் அது துறத்தல் ஆகாது. சொர்க்கம் நாடி உலகைத் துறந்தால் அது துறத்தல் அல்ல. அது வெறும் பேரம். நீங்கள் சாதுர்யமான மற்றும் கணக்கிடும் மனிதர்.

அவன் சொல்கிறான், ''இல்லை. நான் சும்மா விட்டுவிட்டேன். விடுவதற்கு பெரிய காரணம் இல்லை. உண்மையில் விடுவதற்கு நான் ஒரு பைத்தியமாய் இருந்திருக்க வேண்டும். ஏதோ ஒன்றிற்காக அலைந்துகொண்டு இருந்தேன். வெறுமனே, விட்டுவிட்டேன்.''

*அவர்களால் அவனைப் புரிந்துகொள்ள முடியவில்லை.*

ஏனென்றால், உந்துதல் இல்லாமல் ஒருவர் எப்படி எதையும் செய்ய முடியும்? ஆனால் எந்த உந்துதலும் இல்லாமல் எப்படிச் செயல்பட முடியும் என்று நம்பிக்கை அறியும்.

*அவன் வாழ்க்கைக் கதையை எழுதக்கோரி மக்கள் அவனை அணுகினர்.*

படிப்படியாக அவன் புகழ் பெற்றான்.

*'உங்கள் வாழ்க்கையில் என்னவாக இருந்தீர்கள்?'' என்று கேட்டனர்.*

அவனது பதிலைக் கேளுங்கள், மிக அழகான ஒன்று.

*ஆற்றுக்குள் குதித்தேன், ஒரு மீனவனானேன். அடுத்து நாணல் குடிசையிலிருந்து நடுநிசியில் வெளியேறினேன். அதன் பிறகு பண்ணையில் வேலையாள் ஆனேன். கம்பளிக் கட்டிக்கொண்டே இருந்தபோது, மனம் மாறி மோசுலுக்குப் போனேன், அங்கே தோல் வியாபாரியானேன். கொஞ்சம் பணம் சேர்த்தேன். ஆனால் அதையும் கொடுத்து விட்டேன். அங்கேயிருந்த சமர்கண்டுக்கு நடந்து போனேன். ஒரு பல சரக்கு வியாபாரிக்கு வேலை செய்தேன். இப்போது நான் இங்கே இருக்கிறேன்.*

இது என்ன மாதிரியான ஆன்மிக வாழ்க்கை?

*''ஆனால் உங்களுடைய விசித்திரமான பண்புக்கூறுகள் மற்றும் அதிசயமான உதாரணங்களை உங்களின் இந்த புரிந்துகொள்ள முடியாத நடத்தை விளக்கவில்லையே'' என்றனர் வாழ்க்கை வரலாற்று ஆசிரியர்கள்.*

*'அது அப்படித் தான்'' என்றான் மோஜீத்.*

அவன் முழுமையாக ஏற்றுக்கொள்கிறான். ''அது அப்படித்தான்'' அவனுக்கும் அது புதிராக இருக்கிறது. ஏனென்றால் ஆன்மிகவாதியாக, அவனும் குறிப்பாக எதையும் செய்யவில்லை. ஆன்மிகவாதியாக குறிப்பாக எதையும் செய்வது என்பது அதை இழப்பதற்கான உறுதியான வழி. ஆன்மிகம் ஒரு பரிசு. அது நம்பினோருக்கு தானாக வருவது. மிதமிஞ்சி நேசிப்போருக்கும், எந்தவித தூண்டுதலும் இல்லாமல் நேசிப்போருக்கும் அது நடக்கும். துணிவுள்ளவர்கட்கு அது நடக்கும். ஆபத்தான வாழ்க்கை வாழ அதீதமாய் விழைவோருக்கு அது நடக்கும்.

*ஆக, மோஜீத்திற்காக ஒரு அற்புதமான, கிளர்ச்சியூட்டும் கதையை வாழ்க்கை வரலாற்று ஆசிரியர்கள் உருவாக்கினர்.*

*காரணம் எல்லா சன்னியாசிகளும் தங்களுக்கென ஒரு கதை வைத்திருக்க வேண்டும். மேலும் அந்தக் கதை, கேட்பவர்களின் ஆர்வத்திற்கு உகந்ததாக இருக்க வேண்டும், வாழ்க்கையின் மெய்மைகளுக்கு உடன்பட்டு அல்ல....*

இப்படியாகத்தான் உலகின் எல்லா கதைகளும் உருவாக்கப் பட்டன. ஏசு ஒரு கன்னியாஸ்திரிக்கு பிறந்தவர் அல்ல. கேட்போரின் ஆர்வத்தைப் பூர்த்தி செய்யும் பொருட்டு உருவாக்கப்பட்ட கதை அது. ஏசு தனிச்சிறப்பு மிக்கவராக இருக்க வேண்டும். அப்படியானால்தான் மக்கள் மகிழ்ச்சியாய் இருப்பர். அவர்களுடைய குரு பிரத்யேகமானவர். ஆக, எல்லா உலக சமயங்களும் கதைகளைப் புனைந்துகொண்டே இருக்கின்றன. அவை உண்மையல்ல. உங்கள் ஆர்வப்பூர்த்திக்காக மட்டும் அவை தரப்பட்டுள்ளன. ''ஏசு எப்படி சாதாரணமாக ஒரு பெண்ணின் கர்ப்பப் பையிலிருந்து பிறந்து இருக்க முடியும்? அவர் அசாதாரணமானவர்.'' உண்மை என்னவெனில் ஏசு மிகச் சாதாரணமானவர்களில் ஒருவர். புத்தரும் அப்படியே. கிருஷ்ணரும் அப்படிப்பட்டவரே.

ஆனால் இந்தக் கதைகளுக்குள் சென்றீர்கள் என்றால் யாருமே சாதாரணம் அல்ல. அற்புதங்கள் மிகுந்துள்ளன. நடக்கக் கூடாதவை, நடக்க முடியாதவை நடக்கும். உங்கள் உணர்ச்சிகளைப் பூர்த்தி செய்வதற்கான புனைவுகளே இந்தக் கதைகள். இந்தக் கதைகளுக்குப் பின்னால் உண்மையான வாழ்க்கைகள் தொலைந்து போய்விட்டன.

உண்மையிலேயே அசாதாரணமான மனிதர் வெகு சாதாரணமாய் வாழ்கின்றனர். இது ஏனென்றால் உங்கள் அங்கிகாரம் இல்லாது போன பிறகு நீங்கள் எப்படி அசாதாரணமாக வாழமுடியும்? அகங்காரத்தை விட்டொழித்த பிறகு நீங்கள் ஒரு சாதாரணம் இயல்பு வாழ்க்கை வாழ்வீர்கள். ''நாங்கள் மரம் வெட்டுவோம், கிணற்றிலிருந்து தண்ணீர் மொண்டு வருவோம். எவ்வளவு அற்புதமானது! மரம் வெட்டுவது அற்புதமானதா? தண்ணீர் எடுத்து வருவது விந்தைச் செயலா? ஆமாம் அப்படித்தான்.

ஆக வாழ்க்கை வரலாற்று ஆசிரியர்கள் மோஜீத்தைப் பற்றிய கதைகளை உருவாக்கினர். காலம் காலமாக இதைத்தான் செய்துகொண்டே இருக்கின்றனர், எல்லாமே பொய்யாக்கங்கள். உங்களுக்கு உண்மையான ஏசு அல்லது புத்தரை தெரியாது.

இங்கே என் முழு முயற்சியும் உங்களிடம் உண்மையைக் கொண்டு வருவதுதான். அவர்களுடைய உண்மையான கதைகளை சொல்வது. அதனால்தான் நான் எல்லோரையும் புண்படுத்துவதாக எண்ணுகிறார்கள். நான் மஹாவீரர் எப்படி இருந்தாரோ அப்படிச் சொல்கிறேன், அவர்களுடைய புனைவிற்கு ஏற்றார்போல் அல்ல, அதனால் ஜெயினர்களுக்கு வருத்தம். அவர்களது புனைவு என்னவென்றால், மஹாவீரருக்கு வேர்த்ததேயில்லை, அதுவும் இந்தியாவைப் போன்ற ஒரு நாட்டில்... ஒரு முறை மஹாவீரரை பாம்பு கடித்து விட்டது, ரத்தத்திற்குப் பதில் அவர் உடலிலிருந்து பால் வெளியேறிற்று. உங்கள் உடலில் ரத்தத்திற்குப் பதில் பால் ஓடுகிறது என்றால் விரைவிலேயே அது தயிராகிவிடும்.

அவ்வளவு முட்டாள்தனமானது! ''ஆனால் இதுபோன்ற கதைகளை உருவாக்க வேண்டும், குரு அசாத்தியமானவராக இருக்கவேண்டும். மஹாவீரர் சிறுநீர் கழித்ததே இல்லை. மலஜலம் கழித்ததே இல்லை. நரகம் போல துர்நாற்றம் எடுத்திருப்பார். ஆனால் இவைதான் கதைகள். இதேதான் ஒவ்வொரு குருவை பற்றிய விஷயமும். வாழ்க்கை வரலாற்று ஆசிரியர்கள் உங்கள் அறிவுப்பசி ஆர்வத்தை திருப்தி செய்கின்றனர். உங்கள் உணர்வுகள் திருப்தியாகுமாறு பார்த்துக் கொள்வார்கள். ஆனால் அது எல்லாமே பொய்மையாகிறது.

கிறிஸ்துவை நான் ஒரு மனிதனாக பாவித்துப் பேசுவதால் கிறிஸ்துவர்களுக்கு கோபம். அவர் மனிதனே. ஆனால் எல்லா மனிதர்களும் தெய்வீகமானவர்கள், அதனால் அவரும் தெய்வீகம் படைத்தவரே! எல்லா மிருகங்களும் தெய்வீகமே, அதனால் அவரும் தெய்வீகமே. அவருடைய தெய்வத்தன்மை ஒன்றும் தனிச்சிறப்புடையதல்ல. அது இருப்பின் மிக மிகச்

சாதாரண பண்பாகும். இருப்பு இறைவனால் நிறைந்தது. இறைவனால் பொங்கி வழிகின்றது, இறைவனால் திணித்து வைக்கப்பட்டது.

முகமதியர்களுக்கும் கோபம். ஹிந்துக்களுக்குப் பெரிய கோபம். ஏன் இந்த மனிதர்கள் என்னிடம் கோபமாக உள்ளார்கள்? நான் அவர்களது புனைவுகளை அழிப்பதே அவர்களின் கோபத்திற்குக் காரணம். தங்கள் புனைவுகளோடு ரொம்பவே பற்றுக் கொண்டுள்ளார்கள். உங்களுக்கு உண்மை தெரிய வேண்டுமானால் நீங்கள் எல்லாப் புனைவுகளையும் அழிக்கவேண்டும். எந்தப் புனைவையும் நம்பாதீர்கள், ஏனென்றால் உண்மை மட்டுமே விடுதலை தரும்.

*கிதிர் பற்றி நேரடியாகப் பேச எவருக்கும் அனுமதி இல்லை. அதனால்தான் இந்தக் கதை உண்மையல்ல.*

சூஃபிக்களின் சிறப்பு என்னவென்றால், அவர்கள் இந்தக் கதையும் உண்மையானது அல்ல என்கின்றனர். ஏனென்றால், யாருக்கும் கிதிர் பற்றி பேச அனுமதி இல்லை. அக வழிகாட்டி மிக நுட்பமானது, அது வார்த்தைகளால் வெளிப்படுத்த முடியாத ஒன்று. அதனால் சொல்லப்பட்டது எதுவானாலும் அது அடையாளமானது மட்டுமே.

*அதனால்தான் இந்தக் கதை உண்மையல்ல. இது வாழ்க்கையின் உருமாதிரியாக்கம்.*

இது வெறுமனே இடுகுறிதான், ஓர் அடையாள நீதிக்கதைதான். எதையோ சுட்டிக்காட்டுகிறது. இது ஒரு குறிமுள்.

*இதுவே மாபெரும் சூஃபி ஒருவரின் உண்மையான வாழ்க்கையாகும்.*

உண்மையான வாழ்க்கை உருவகமாகவும், இடுகுறியாகவும் அடையாளப்படுத்தப்பட்டுள்ளது. இந்தக் கதையை எழுத்துச் சார்பாக, அப்படியே புரிந்துகொள்ளக்கூடாது. இது நம்பிக்கை பற்றிய கதை. இது அச்சாக இப்படியே நடக்கவில்லை. நடக்கவும் தேவையில்லை. வெறும் அடையாளம் மட்டுமே.

இதை நீங்கள் நினைவிற் கொண்டீர்களானால் நம்பிக்கை உடைய உண்மையான வாழ்க்கை பற்றிய ஒரு கணநேரத்தோற்றம் உங்களுக்கு கிடைக்கும். நாம் இந்த நீதிக்கதையை இங்கே வாழ்ந்துபார்க்க முயற்சி செய்கிறோம். இது உங்கள் கதை. இந்தக் கதைக்குள் இறங்குங்கள். வார்த்தைகள் மட்டுமல்ல, ஆனால் அதன் பொருளிலும் கூட. இந்தக் கதையை வாழ்ந்து பாருங்கள். வாழ்ந்து பார்த்தால் மட்டுமே நீங்கள் அறிவீர்கள்.

# உருவாவதை விட்டுவிடுங்கள்! இருத்தலே போதுமானது!

மார்ச் 3 - 1978

## முதல் கேள்வி

*உங்களுடன் சண்டையிட வேண்டும் என்ற எண்ணம் இருந்துகொண்டேயிருக்கிறது. பல விஷயங்கள் கருதி நான் கூச்சலிட வேண்டும். ஆனால் அதற்கான வாய்ப்பு இல்லை என்று நினைக்கிறேன். உதாரணமாக, இன்று காலை ஒரு கேள்விக்குப் பதில் அளிக்கையில், இங்கே ஒரு மரபு உருவாக்குவதில் நாம் எல்லோரும் ஈடுபட்டுள்ளோம் என்றும், இங்கே நடப்பதை ஒருவர் முழுவதுமாக ஏற்றுக் கொள்ளவில்லை என்றால், அவர் வெளியேறலாம் என்று குறிப்பிட்டீர்கள்.*

*இந்த இடத்தில் மரபு வழி இருக்கிறது என்று நினைக்கிறேன், சிலர் அதிகாரப் பயணத்தில் ஈடுபட்டுள்ளனர். எனக்கு அது பிடிக்கவில்லை. உங்கள்பால் உள்ள உணர்வின் காரணமாகவும் என் நண்பர்கள் மற்றும் எனக்காகவும் நான் இங்கே இருக்கிறேன். ஆனால் எனக்கு இந்த அமைப்பு மற்றும் அதன் அதிர்வுகள் பிடிக்கவில்லை. நான் வெளியேற வேண்டுமா?*

தயவு செய்து.

## இரண்டாவது கேள்வி.

*மனம் ஏன் உள்ளது? அது நம் உயிருருவின் உண்மையான அங்கம்போல் இருக்கிறது. அது இல்லாமல் இயங்க விரும்புகிறேன். ஆனால் ஏன், ஏன், ஏன் அது உள்ளது? சில சமயங்களில் அது விழிப்புணர்வை திரையிட்டு மறைக்கின்றார் போலத் தெரிகிறது. ஆனால் மிகவும் நடைமுறைக்கு உரியதாகவும் தெரிகிறது. செயல்பட உதவுகிறது. மனத்திற்கான இடம் உண்டா அல்லது அது முற்றிலுமாக கடந்துபோக வேண்டிய ஒன்றா?*

ஏன்? ஒரு தவறான கேள்வி. விஷயங்கள் வெறுமனே உள்ளன. அவற்றிற்கு 'ஏன்?' என்பது கிடையாது. ஏன் என்ற கேள்வி ஏற்றுக்கொள்ளப்பட்டால் அது மேலும் மேலும் தத்துவத்திற்கு இட்டுச் செல்லும். அதில்லாமல் தத்துவம் ஒரு தரிசு நிலம். அங்கே நீங்கள் பாலைவனைச் சோலையை கையாள முடியாது. அது வெறும் பாலைவனம். ஏன் என்ற கேள்வி கேட்டவுடனேயே நீங்கள் தவறான திசையில் செல்லத் தொடங்குகிறீர்கள்; நீங்கள் வீடு திரும்ப மாட்டீர்கள்.

'இருப்பு' அல்லது இயலுலகு இருக்கிறது, அதற்கு ஏன் என்பது கிடையாது. அது ஒரு விளங்காமெய்மை என்று நாம் கூறும்போது இதைத்தான் குறிக்கின்றோம். காரணம் அதற்கு ஏன் என்பது கிடையாது. உண்மையில் அது இருக்கக் கூடாது. ஆனால் அது இருக்கிறது. இருக்க வேண்டிய தேவையில்லாமல் ஆனால் அங்கே இருக்கிறது. 'ஏன்' என்பது மனம் சார்ந்த கேள்வி.

உங்களுக்கு இப்போது பெரும் புதிராய் இருக்கலாம். ஏனென்றால், மனம் தன்னைப் பற்றியே கேள்வி எழுப்புகிறது. 'மனம் ஏன் உள்ளது?' என்ற கேள்வி மனத்திலிருந்து வருகிறது. பதில்களும் மனத்திலிருந்து வரும். மேலும் ஒவ்வொரு பதிலையும் புதிய கேள்வியாக மாற்றும் திறமை மனதிற்கு உள்ளது. நீங்கள் ஒரு கெடுவட்டத்தில் சுற்றிச் சுற்றி வந்துகொண்டிருப்பீர்கள். ஏன் என்ற கேள்வி கேட்பதினால் நீங்கள் மனதின் பொறிக்குள் விழுகின்றீர்கள். 'ஏன்' என்ற கேள்வி விடப்படவேண்டியது; அதுதான் நம்பிக்கை என்பதின் பொருளாகும்.

மனம் இருக்கிறது. அது என்ன என்பதை பார்க்கலாம். எப்படியுள்ளது என்று தெரிந்துகொள்ள முயற்சிக்கலாம். ஆனால் ஏன் என்று கேட்க முடியாது. ஏன் என்பதை தெரிந்து கொள்ள இருப்பின் தொடக்கத்திற்கே நாம் போக வேண்டும், என்றாலும் தொடக்கம் என்பது இருந்ததேயில்லை. ஏன் என்பதற்குரிய அடியாழத்திற்குச் செல்ல வேண்டும், அடியாழம் என்பதும் இல்லை. ஏனென்றறிய அடித்தளத்தை நாட வேண்டும். ஆனால் அடித்தளம் ஏதுமில்லை. இதுதான் தத்துவார்த்த வினவலுக்கும்

சமயம்சார்ந்த தேடலுக்கும் உள்ள வேறுபாடு. தத்துவம் ஏன் என்று கேட்டுவிட்டு ஏன் என்ற கேள்வியின் குழைச் சேற்றில் தொலைந்து போகிறது. சமயம் ஏன் என்பதைப் பற்றி அக்கறை கொள்வதில்லை, அறிவியலும் ஏன் என்பதைப் பற்றிக் கவலைப்படாது. சமயம் மற்றும் அறிவியலின் அணுகுமுறை நடைமுறைக்கேற்றது. முற்றிலும் நடைமுறைக்கு உட்பட்டது. ''மனம் என்றால் என்ன?'' என்று கேட்பது சாத்தியமானது. மனம் இருப்பதால் நீங்கள் இருக்கிறீர்கள். அதற்குள் பார்க்க முடியும், கவனிக்க முடியும். அது என்ன என்று தெரிந்துகொள்ள முடியும். விழிப்புணர்வு அதன் ரகசியத்தை வெளியிட முடியும். ஏன் என்று தெரிந்துகொள்வதற்கு நீங்கள் பின்னோக்கிப் போக வேண்டும். ஆதி முதலுக்கு, தொடக்கத்திற்கு போக வேண்டும். அது சாத்தியமில்லை. மனம் என்பது என்ன என்று கேளுங்கள். விரைவில் அதன் மெய்மையை தெரிந்துகொள்ள முடியும்.

சிந்திக்கும் வழிமுறையைத் தவிர மனம் என்பது வேறு ஒன்றுமில்லை, வெறும் எண்ணங்களின் போக்குவரத்து. மனம் என்ற புலன் உறுப்பு கிடையாது. அது வெறும் கண்ணாடி. கண்ணாடி இரண்டு நிலைகளில் இருக்கமுடியும். முதலில் ஏதோ ஒன்றைப் பிரதிபலிக்கும்போது - மனிதர்கள் கடந்து போகின்றனர், கண்ணாடி உரு எடுத்துக் காட்டுகிறது. படங்கள் தோன்றி மறைகின்றன. இதுதான் மனத்தின் நிலை. உணர்வு நிலையாது. புறமெய்மையை பிரதிபலிக்கின்றது. அடுத்தது, கண்ணாடியின் மற்றொரு நிலை, எதுவும் பிரதிபலிக்கப்படாத நிலை, எதுவும் கடந்து போவதில்லை. கண்ணாடி முற்றிலுமாக அமைதி காக்கின்றது. படம் எதுவும் தோன்றுவதில்லை. இதுவே தியானம்.

வெளியுலகம் மனதின்மீது பிரதிபலிக்கப்படும்போது மனம் ஒரு உணர்வுநிலையில் இருக்கின்றது. வெளி உலகம் பிரதிபலிக்கப்படாதபோது அதே உணர்வு நிலை தியானமாகிறது. மழையும் தியானமும் உணர்வுநிலை என்ற மெய்மையின் இரண்டு கூறுகள். புறத்தின் காரணமாக மனத்தில் சுமை

ஏற்றப்பட்டுள்ளது. சுமை இறக்கப்பட்ட உணர்வு நிலைதான் தியானம். எதுவும் பிரதிபலிக்கப்படவில்லை. உணர்வு நிலை தூய்மையாய் இருக்கிறது. எந்த அந்நியப் பொருளும் அதனுள் அசைவதில்லை. மெய்மைக்கான உணர்வுநிலையின் எதிர்வினையாற்றலே, மனம். எதையும் பிரதிபலிக்காமல் வாளாவிருக்கும் உணர்வு நிலைதான் தியானம்.

மனதோடு சண்டையிட வேண்டிய அவசியமில்லை. வெறுமனே புரிதல், கவனிப்பு, விழிப்புணர்வு கொள்தல், இதுவே போதும், மனம் தளிராய் தொடங்கும்.

*நீங்கள் கேட்கிறீர்கள், ''ஏன் மனம் உள்ளது? அது நம் உயிருருவின் உண்மையான அங்கம்போல் இருக்கிறது.''*

அப்படித்தான்.

அது இல்லாமல் இயங்க விரும்புகிறேன், அது ஏன் உள்ளது?

அதன் இருப்பு நீங்கள் மற்றொரு நிலை இருப்பதைத் தெரிந்து கொள்வதிலிருந்து தடுக்கப் போவதில்லை. உண்மையில் இரண்டு நிலைகளுமே ஒரு சக்தியைச் சார்ந்தவை. ஒரு சக்தியின் பண்பு வேறுபாடுகள். மனம் இல்லாமல் உங்களால் தியானம் செய்ய முடியாது, மனம் இல்லாமல் தியானத்தைப் பற்றி எதுவும் தெரிந்துகொள்ள முடியாது. அதனால்தான் விலங்குகளுக்கு தியானம் பற்றித் தெரியாது. புத்தர்கள் அங்கே பிறப்பதில்லை. ஏன்? மனம் இன்னமும் பிறக்கவில்லை. மனம் இன்னமும் பிறக்கவில்லை என்றால் மனமற்ற நிலையை நீங்கள் எப்படித் தெரிந்துகொள்ள முடியும். மனம் இருக்க வேண்டும்; அப்படியானால்தான் நீங்கள் சில சமயங்களில் மனதைத் தள்ளி வைத்துவிட்டு மனம் இல்லாத நிலையில் மெய்மைக்குள் பார்க்க முடியும். மனம் அத்தியாவசியமானது.

நீங்கள் மனதைக் கடந்து வரவேண்டும் என்று நாங்கள் சொல்லும் போது நாங்கள் மனதுக்கு எதிரானவர்கள் என்று அர்த்தமாகாது. வெறுமனே உங்களுக்கு ஒரு தகவல் தருகிறோம்.

மனதோடுமட்டுமே முடிந்துபோய் விடாதீர்கள். தியானத்தின் தொடக்கம் மட்டுமே மனம். அதை ஒரு உந்துபலகையாகப் பயன்படுத்திக் கொள்ளுங்கள். தியானத்தை அடையாத ஒரு மனிதன் விதையோடு தங்கிவிடுகிறான், அதுதான் எல்லாமும் என்று எண்ணுகிறான். விதை நிலத்திற்குள் விழுந்து காணாமல் போய்விட வேண்டும். மரம் விதையைக் கடந்துபோக வேண்டும், அப்படியானால்தான் விதை முழுமை பெறும். இது முரண்பாடானது. விதை தன்னுடைய இறப்பில்தான் முழுமை அடைகின்றது. தியானத்தில்தான் மனம் முழுமை பெறுகின்றது. தியானம் மனத்தின் மரணம். ஆனால் அதுதான் அதனுடைய செயல்பாடு — அது வெறுமனே தியானத்திற்காக வழி செய்து கொடுக்கின்றது.

ஆக, மனம் தியானத்திற்கு எதிரி அல்ல. நீங்கள் அதை எதிரியாக்கிக் கொள்ளலாம். அது உங்களைப் பொருத்தது. மனத்துடன் பகைமை பாராட்டினால் ஒரு நண்பனை எதிரியாக்குகிறீர்கள். படிக்கல்லை தடைக்கல்லாக மாற்றுகிறீர்கள். எப்போதும் நினைவில் கொள்ளுங்கள்; எதுவுமே தேவையற்றது இல்லை. பொருட்களின் முழு சீரிசைவிற்கு எல்லாவற்றிற்கும் ஓர் இடம் உண்டு. மனம் கண்டிப்பாக வேண்டும்!

ஏடன் தோட்டத்தை விட்டு ஆதாம் புறப்பட்டவுடன் என்ன செய்தான்? அவன் மனதை உருவாக்கத் தொடங்கினான். எனவேதான் அடையாள குறியான 'அறிவு விருட்சம்'. அறிவு விருட்சம் தரும் கனியை உண்ண ஆதாமிற்கு தடை. ஏன் அது தடை செய்யப்பட்ட ஒன்று? ஏனென்றால் அவனை ஈர்த்து சாப்பிட வைக்க அது ஒன்றே வழி. ஆதாம் கடவுளுக்குக் கீழ்ப்படிய மறுத்தான் என்று இல்லை. கீழ்ப்படியாததால் அவன் கடவுளின் விருப்பத்தைப் பூர்த்தி செய்தான். அறிவு விருட்சத்தின் கனியை ஆதாம் சாப்பிட வேண்டும் என்று கடவுள் விரும்பினார். அதற்காகத்தான் தடை. எனவேதான் ''அதிலிருந்து சாப்பிடாதே'' என்று கட்டளை இட்டார்.

ஏடன் தோட்டம் என்பது பெரிய தோட்டம். முழு இயல் உலகமும் ஏடன் தோட்டமாகும். லட்சக்கணக்கான மரங்கள்

இருந்தன. ஆதாமை தன்னிச்சையாக விட்டு இருந்தால் அவனால் அறிவு விருட்சத்தைக் கண்டுபிடித்து இருக்க முடியாது. லட்சக் கணக்கான மரங்களுக்கிடையே ஒரு மரத்தைக் கண்டுபிடிப்பது கிட்டத்தட்ட நடவாத காரியம். ஆனால் கடவுள், ''இந்த மரத்திலிருந்து உண்ணாதே'' என்று தெளிவாக்கி விட்டார். ஆதாமிற்குள் ஆசையை உண்டாக்கினார். பாம்பு அவனைத் தவறாகத் தூண்டவில்லை. அதைச் செய்தது கடவுளே!

ஏன் இந்தத் தூண்டுதல்? — காரணம் மனம் உருவாக்கப்பட வேண்டும். இல்லையென்றால் ஆதாம் ஒரு விலங்கைப் போல வாழ்ந்திருப்பான். மகிழ்ச்சியாக, ஆனால் விழிப்புணர்வற்று வாழ்ந்திருப்பான். விழிப்புணர்வு இல்லாத மகிழ்ச்சி என்ன மாதிரியானது? நீங்கள் உலகத்திற்கே அரசனாக இருக்கலாம். ஆனால் அதை உணர்ந்திருக்கவில்லை என்றால் அதில் என்ன அர்த்தம் இருக்கிறது? ஒரு வகையான மகிழ்ச்சியில் விலங்குகள் வாழ்கின்றன, ஆனால் உணர்வின்றி தங்கள் மகிழ்ச்சி பற்றி அறியாமல் வாழ்கின்றன. நீங்கள் மகிழ்ச்சியில் உள்ளீர்கள் என்பது தெரியாமல் இருந்தால், அந்த மகிழ்ச்சியில் அர்த்தமேயில்லை. அதற்கு பதிலாக சோகமாக இருக்கலாம். அறிதல் அவசியம்.

சாக்ரடீஸ் சொன்னதாகக் கூறப்படுவது, ''நான் மகிழ்ச்சியற்று இருக்கவேண்டுமானாலும்கூட நான் சாக்ரடீஸாகவே இருக்க விரும்புகிறேன். ஒரு நிறைவுகொண்ட பன்றியாக அல்ல. நிறைவில்லாத சாக்ரடீஸாக இருப்பேனேதவிர நிறைவுள்ள பன்றியாக அல்ல. என்ன சொல்கிறார் சாக்ரடீஸ்? அவர் சொல்வது விழிப்புணர்வு. எந்த மகிழ்ச்சியையும் விட அதிக மதிப்புடையது, ஏனென்றால் விழிப்புணர்வில்தான் மகிழ்ச்சி ஆனந்தமாக மாறும். ஆதாம் கட்டளையை மீறியாக வேண்டும். கடவுள் இதை அழகாக மனோதத்துவ ரீதியாக திட்டமிட்டுள்ளார். ஆதாம் தவறிப்போய் அறிவு விருட்சத்திலிருந்து கனியை உண்டு மனதை உருவாக்க கடவுள் உறுதி செய்தார். ஏனென்றால் மனம் இல்லாமல் ஆதாமுக்கு தியானம் தெரியாமல் போகும். வழி தவறாவிட்டால், ஆதாம், ஏசுவாக உருவாக்கி இருக்க முடியாது.

அவன் 'வீடு திரும்பியிருக்க' முடியாது. வீடு திரும்ப வழி தவறியிருக்க வேண்டும். ஒரு சன்னியாசியாக வேண்டுமானால் ஒருவர் பாவத்தின் இருண்ட பிரதேசங்களுக்குள் சென்று வரவேண்டும்; வேறு வழியில்லை.

வானில் ஒரு மரம் நெடுக வளர வேண்டுமானால், அது இரண்டு மண்ணில் தன் வேர்களை ஆழமாகப் பாய்ச்ச வேண்டும்.

நீட்ஷே சொன்னார்: ''மரம் ஒன்றிற்கு சொர்க்கத்தைத் தொட வேண்டுமானால் அது தன் வேர்களை நரகத்திற்கு அனுப்ப வேண்டும்.'' உங்கள் வேர்களை நரகத்திற்கு அனுப்பாமல் நீங்கள் சொர்க்கத்தில் மலர முடியாது. ஆதாம் நரகத்திற்குப் போயாக வேண்டும், அவர் சொல் மீறியாக வேண்டும். ஏனென்றால் கீழ்ப்படியாமையின் மூலம்தான் நீங்கள் கீழ்ப்படிதலின் சிறப்பைக் கற்றுக் கொள்ள முடியும். அவனுக்கு சந்தேகம். காரணம் என்றாவது ஒருநாள் சந்தேகத்தின் மூலமாக நம்பிக்கையின் விளங்கா மெய்மைகள் வெளிப்படுத்தப்படும். அவன் ஒரு மனம் ஆகவேண்டும். நீங்கள் ஒரு மனமாக உருவாகிய பிறகு, தான் என்ற எண்ணம் உருப்பெற்ற பிறகு சரணாகதிக்கு சாத்தியம் உண்டு. அப்படியானால்தான் மனதைக் கடந்து போகும் சாத்தியம் உருவாகும்.

ஆக, நான் உங்களிடம் மனதைக் கடந்து போகவேண்டும் என்று சொன்னால் ஒரு கணம்கூட நான் மனதிற்கு எதிரானவன் என்று நினைக்காதீர்கள். நான் எப்படி மனதிற்கு எதிராக இருக்க முடியும்? மனம் இல்லாமல் அதை எப்படிக் கடக்க முடியும். அதற்கு அப்பால் போக முடியும்? மனம் அத்தியாவசியமானது, வழித்தடத்தில் இருக்கும் நண்பன். ஆனால் அதுவரையில்தான். ஒருவர் அதையும் தாண்டிச் செல்ல வேண்டும். மனதின் வேலை உங்களை அதுவரை அழைத்துச் செல்வது, இதனால் நீங்கள் அதற்கும் அப்பால் செல்ல முடியும்.

*சில சமயங்களில் அது விழிப்புணர்வை திரையிட்டு மறைக்கின்றாற் போலத் தெரிகிறது. ஆனால் மிகவும்*

*நடைமுறைக்கு உரியதாகவும் தெரிகிறது, செயல்பட உதவுகிறது.*

அது உண்மைதான். மனம் விழிப்புணர்வை திரையிட்டு மறைத்துவிடுகிறது; அதுதான் மனதின் செயல்பாடு. உங்களால் சமாளிக்க முடிகின்ற அளவிற்குதான் அது மெய்மை பற்றி உங்களுக்கு விழிப்புணர்வு ஏற்படுத்தும். இல்லையென்றால் நீங்கள் பித்துப்பிடித்துப் போவீர்கள்.

எல்லா திசைகளிலிருந்தும் கோடிக்கணக்கான வழிகளில் ஒவ்வொரு கணமும் வாழ்க்கை உங்கள்மீது மோதுகிறது. மனம் தொன்னூற்றி எட்டு சதவீதத்தை மறைத்துவிடுகிறது. இரண்டு சதவீத மெய்மையைமட்டுமே அது உங்களுக்குள் அனுமதிக்கின்றது. அதுவும் பெரிதும் மாற்றியமைக்கப்பட்ட வடிவில், அதாவது நீங்கள் கிரகித்துக் கொள்ளக்கூடிய வடிவில் மட்டும். முழுமையை உங்களால் ஏற்றுக்கொள்ள முடியவில்லை. மனம் அதை குறுக்கி மிகச் சிறிய அளவில் மெய்மையை அனுமதிக்கின்றது.

குழந்தை பிறந்தவுடன் நேரடியாக உணவைச் சாப்பிட முடியாததைப் போன்றதுதான் இதுவும். தாய் உணவை உண்டு, உணவைப் பாலாக மாற்றிய பிறகு குழந்தை பாலைக் குடிக்கும். மெல்ல மெல்ல குழந்தை நேரடியாக உணவை சாப்பிடத் துவங்கும். ஆக, மனம் ஒரு தேவையான உறுப்புதான். அது இல்லாமல் நீங்கள் இறந்து போயிருப்பீர்கள், மெய்மை தாங்க முடியாததாய் இருந்திருக்கும். எத்தனை வர்ணங்கள், எவ்வளவு சத்தங்கள், எத்தனை எத்தனை மனிதர்கள், அது குழந்தையை பைத்தியமாக்கியிருக்கும், உலகம் பல பரிமாணங்களை உடையது. இது எல்லாமே குழந்தையின் உணர்வு நிலை மீது விழுந்தது என்றால், நிச்சயமாக அது மென்மையாக இருக்கும். குழந்தையை அழித்துவிடும். இதிலிருந்து குழந்தையை காப்பாற்றியாக வேண்டும். சின்ன சின்னத் துகள்கள் மட்டுமே அனுமதிக்கப்பட வேண்டும். மெதுவாகத்தான் குழந்தையால் அதிகமாக செரிமானம் செய்ய முடியும்.

நீங்கள் வாழ்நாள் முழுவதும் ஒரு குழந்தையாகவே இருக்கும்போதுதான் பிரச்சினை எழுகின்றது. அதுதான் பிரச்சினையேதவிர மனம் எந்தப் பிரச்சினையையும் உருவாக்குவதில்லை. நீங்கள் குழந்தைபோல் இருந்துகொண்டு பாலுக்கு அடிமையாகிவிட்டீர்கள். எந்நாளும் வேறு எதையும் சாப்பிட முடியாது. அது முட்டாள்தனம். ஒரு குறிப்பிட்ட காலகட்டத்திற்கு பால் சரியான உணவாக இருந்தது. அது மட்டுமே உணவு, ஒரே ஊட்டச்சத்து. ஆனால் ஒரு தருணம் வரும். குழந்தை நகர்ந்து சுதந்திரமாக இருக்க வேண்டும். அது தொடர்ந்து தாய்ப்பாலை சார்ந்தே இருக்கக்கூடாது.

மனம் உங்களை மெய்மையிலிருந்து காப்பாற்றுகிறது. அது தொடக்கத்தில் அவசியமானது. ஆனால் பாதுகாப்பு சிறையாகக் கூடும். இங்கேதான் பிரச்சினையே எழுகின்றது. உங்களைப் பாதுகாக்கும் காவலாளியே சிறை அதிகாரியாகிவிடலாம். அவர் அந்த அளவிற்கு உங்களுக்குப் பாதுகாப்பு கொடுப்பதால் நீங்கள் அவருடைய பாதுகாப்பை சார்ந்து இருக்க வேண்டி வரும். சுயசார்போடு இருக்கமுடியாது. மெய்மையைப் பற்றி சிறு துகள்களையே மனம் உங்களுக்கு வழங்குகிறது என்று நீங்கள் உணரும் தருணம் உங்களுக்கு ஏற்படும்போது நீங்கள் அதிருப்தி கொள்வீர்கள். ஓர் உண்மையான புத்திசாலிக்கு மனம் காரணமாக நிச்சயமாக அதிருப்தி ஏற்படும். அறிவற்றோரே மனதிலேயே தங்கிவிடுவீர். மனம் துணுக்குகளையே தருகிறது என்பதை புத்திசாலி மனிதர்கள் ஒருநாள் அல்லது மற்றொரு நாள் உணரத்தான் செய்வார்கள். நான் இனி குழந்தையில்லை! ''நான் வளர்ந்துவிட்டவன். என் உயிருருக்குள் பெரிய சாளரங்களை வைத்துக்கொள்ள முடியும், மேலும் பெரிய கதவுகள் சாத்தியம், என்னால் அதிகமான மெய்மைகளை என்னுள் அனுமதிக்க முடியும்.'' மனம் அனுமதிப்பதைவிட பெரிய ஜன்னல்களை, உதவிகளை உருவாக்கத் தொடங்குவது - இதுதான் தியானம் என்பது. எப்போது உங்கள் ஜன்னங்கள் மிகப் பெரியதாகி அவர்கள் காணாமல் போகின்றனவோ அதுவே *சமாதி*. இப்போது நீங்கள் *மெய்யாகவே* வளர்ந்துவிட்டவர். இதுவே பௌத்தத்

தன்மை; இதுவே கிறிஸ்துவமாக இருப்பது, இனி உங்களுக்கு எந்தப் பாதுகாப்பும் தேவையில்லை.

இது நீங்கள் ஒரு சிறு மரக்கன்றை நடும்போது, அதைப் பாதுகாக்க வேண்டும். மரம் வளர்ந்து உரம் பெற்ற பிறகு நீங்கள் பாதுகாப்பை விலக்கிக் கொள்கிறீர்கள். அது தன்னைத்தானே பாதுகாத்துக் கொள்ளும். மனதைப் பொருத்தவரை பிரச்சினை என்னவென்றால், அதை விலக்கி வைக்க எவருமில்லை. சமூகம் அதை உருவாக்குகிறது, பெற்றோர்கள் உருவாக்குகிறார்கள். கல்லூரியும், பல்கலைக்கழகமும் அதை உருவாக்குகிறது. ஆனால், அதை அழிக்க உதவுவார் யாரும் இல்லை. அது குருவின் வேலை. முன்னர் இருந்ததுபோல் இப்போது குருக்கள் இல்லாததினால் உலகம் மிகவும் ஏழ்மை அடைந்துவிட்டது.

இப்போது ஒரு குருவைக் கண்டுபிடிப்பது கடினம். ஆசிரியர்களை நீங்கள் கண்டுபிடிக்க முடியும். நிறைந்து இருக்கின்றனர். ஆனால் ஒரு குருவைக் கண்டுபிடிப்பது மிகவும் கடினம்.

ஒரு குருவிற்கும் ஆசிரியருக்கும் இடையே என்ன வேறுபாடு இருக்கிறது? ஆசிரியர் மனதை உருவாக்குகிறார். குரு அதை அழிக்கின்றார். ஆசிரியர் உங்களுக்குக் கற்றுத் தருகிறார். அறிவு புகட்டுகிறார். ஆசிரியர் ஒரு பாம்பு. பள்ளி ஒரு பாம்பு. அது உங்களுக்கு அறிவு விருட்சத்திலிருந்து கனி உண்ண உதவுகிறது. அது உண்மையில் பெரிய உதவிதான். அது உங்களை ஏடன் தோட்டத்திலிருந்து வெளியே கொண்டு வருகிறது. சந்தேகம் கொள்ள கற்றுக்கொடுக்கின்றது. எல்லாவிதமான பந்தங்களிலிருந்தும் விடுபடும்பொருட்டு அத்துமீறக் கற்றுக் கொடுக்கின்றது. ஆனால் இறுதியில் மனமே ஒரு பந்தமாகி விடுகிறது. அதிலிருந்து விடுபடக் கற்றுக்கொடுக்க யாருமில்லை. பல்கலைக்கழகம் உங்களை முழுமைபெற்ற ஆதாம் ஆக்குகிறது. ஆனால் அங்கேயே எல்லாம் நின்று போகின்றன. நாமும் அத்தோடு கல்வி முடிந்தது என நினைக்கிறோம். அது உண்மையில் பாதி கல்விதான். பாதிப் பயணம்தான் முடிந்துள்ளது. உண்மையான பாதி இன்னமும் இருக்கிறது.

யாராவது தேவைப்படுகிறார்கள், ஏதோ இடம் தேவை, ஏதோ ஒரு சூழ்நிலை தேவைப்படுகிறது. அங்கே சென்று நீங்கள் கற்றுக்கொண்டதெல்லாம் கரைத்துவிடலாம். கற்றதை நினைவகற்றலாம். — அதுவே *சத்சங்கம்*. குருவுடன் இருப்பது. குருவுடன் இருக்கும்போது கற்றது அகற்றப்படுகிறது. நீங்கள் கற்றதெல்லாம் நெகிழ்வாகிறது. நீங்கள் ஆதாமைக் காணத் தொடங்குகிறீர்கள். நீங்கள் ஏசுவாக உருவாகத் தொடங்குகிறீர்கள்.

மனதிற்கு என பயன்கள் இருக்கின்றன. அது நடைமுறைக்கு உட்பட்டது. அது தேவையானது. நீங்கள் தியானிப்பவரானால் கூட மனம் தேவைதான். ஆனால் அப்போது அது சேவகனாக இருக்குமே தவிர எசமானாக அல்ல.

நான் மனதைப் பயன்படுத்துகிறேன். உங்களுடன் பேச மனதைப் பயன்படுத்த வேண்டும். அப்படியானால் அது ஒரு அழகான இயந்திரமாகிறது; நீங்கள் பயன்படுத்திக் கொள்ளலாம். அது உங்கள் நினைவுகளை சேமித்து வைக்கிறது. அனுபவங்களைத் தாங்கி நிற்கின்றது. தேவையானது, தேவையற்றது என விஷயங் களைப் பாகுபடுத்தி பிரிக்கின்றது. வாழ்க்கைக்கு அது அவசியம், புத்தருக்கும்கூட அது தேவைதான்.

ஆனால், புத்தர் தானே அதைத் தாண்டிப் போய்விட்டார். அதை விஞ்சி நிற்கின்றார். நீங்கள் கால்களைப் பயன்படுத்திக் கொள்வதைப் போல அவர் தேவையானபோது மனதைப் பயன்படுத்திக் கொள்கிறார். நீங்கள் ஓடும்போதும், நடக்கும் போதும் உங்கள் கால்களைப் பயன்படுத்திக்கொள்கிறீர்கள். ஆனால் படுத்து இருக்கும்போது கால்களைப் பயன்படுத்து வதில்லை. அதற்கு அவசியமில்லை. ஆனால் சாதாரணமாக அப்படியிருப்பதில்லை. மனம் உங்களைப் பயன்படுத்திக் கொள்கிறது. நீங்கள் படுத்து இளைப்பாறிக்கொண்டு இருக்கிறீர்கள். மனம் ஓடிந்துகொண்டேயிருக்கிறது. தேவையற்ற விஷயங்களைத் துரத்திக் கொண்டு இருக்கிறது. நீங்கள் சலித்துப் போகிறீர்கள், அது நிற்க வேண்டும் என விரும்புகிறீர்கள்,

''நில்'' என்று கூச்சலிடுகிறீர்கள். ஆனால் அது நிற்பதில்லை. அது உங்கள் சொல் கேட்பதில்லை. நீங்கள் எசமானன் அல்ல. கொஞ்சம்கூட உங்களைப் பற்றி அதற்கு அக்கறை இல்லை. நீங்கள் தூங்கவேண்டும் என்று விரும்புகிறீர்கள், மனம் தொடர்ந்து போய்க் கொண்டேயிருக்கிறது.

நான் ஒருவரைப் பற்றி கேள்விப்பட்டு இருக்கிறேன். அவர் பெரிய தத்துவ ஞானி. அவருக்கு தூக்கமின்மை நோய். ஒரு பெரிய தத்துவ ஞானி கண்டிப்பாக தூக்கமின்மையால் அவதிப்பட்டேயாக வேண்டும். அவர் தூக்கத்தை எல்லாம் இழந்தார். அவர் சதா யோசித்துக் கொண்டேயிருப்பார். தூக்க மின்மை அவரைப் பைத்தியமாக்கிக் கொண்டு இருந்தது. எல்லா வழிகளையும் முயன்று பார்த்தார்.

ஒவ்வொருவரும் ஒரு வழி சொன்னார்கள். ''ஒன்றிலிருந்து நூறு வரை எண்ணுங்கள், பின்பு தலைகீழாக எண்ணுங்கள்'' அவர் எண்ணிக்கொண்டே இரவைக் கழித்தார். பொழுது விடிந்தும் கூட எண்ணிக்கை நின்றபாடில்லை. தூக்கம் தொலைந்தது. மற்றொருவர் ''இதைச் சாப்பிடு'' என்பார். வேறு ஒருவர், ''இந்தப் பயிற்சியை செய், இந்த மந்திரத்தை ஜபி'' என்றார். எல்லாவற்றையும் முயன்று பார்த்தும் ஒன்றும் உதவவில்லை.

வருடங்கள் கடந்து போயிற்று, பைத்தியமே ஆகிவிட்டார். ஒருநாள் தலையில் சுட்டுக்கொண்டு தற்கொலை செய்து கொண்டார். அதற்குப் பிறகு கூட அவரால் தூங்க முடியவில்லை என்று கதை போகிறது. மனம் தொடர்ந்தது, ஏனென்றால் மனம் என்பது உடல் அல்ல.

எனக்கு இந்தக் கதை பிடிக்கும். தூக்கமின்மை அப்படிப்பட்ட ஒன்று. நீங்கள் தற்கொலை செய்துகொண்டால்கூட, மனம் உங்களோடுதான் இருக்கும். நீங்கள் பேயாய் மாறிப்போனாலும் உங்களால் தூங்க முடியாது. ஏனென்றால், மனம்தான் உங்கள் எசமானன். மனதின் மீது ஆதிக்கம் கொள்வதுதான் பிரச்சினையே தவிர மனமே அல்ல. எப்போதும் நினைவில் கொள்ளுங்கள். மனம் தானே ஒரு பிரச்சினையல்ல. நீங்கள்தான் மனதை உங்கள்

எசமானராக்கி விட்டீர்கள். அதை பதவியிறக்கம் செய்யுங்கள், அதன் இடத்தில் அதை வையுங்கள். உங்கள் எசமானர் ஸ்தானத்தை மீட்டெடுங்கள். மனம் உங்கள் சேவகனாக இருக்க வேண்டும். இதுதான் 'சுவாமி' என்பதன் பொருள் - அதனால்தான் சன்னியாசிகள் 'சுவாமி' என்று அழைக்கப்படுகின்றனர். மனதின் மீது தன் எசமானுத்துவத்தை நிலைநாட்டியவரை 'சுவாமி' என்கிறோம். அவர் இனி மனதிற்கு அடிமையில்லை.

ஆனாலும் மனதின் நடைமுறைப் பயன்பாடு தொடரும். நீங்கள் அதை அதிக புத்திசாலித்தனத்தோடு பயன்படுத்த முடியும். ஏனென்றால் நீங்கள் அதன் கையாட்சியில் இருக்கமாட்டீர்கள். உங்களால் தேர்ந்து எடுக்க முடியும். உங்களால் கவனிக்க முடியும். உங்களால் மனதை மேம்படுத்த முடியும்.

*''மிகவும் நடைமுறைக்குரியதாகவும் தெரிகிறது. செயல்பட உதவுகிறது. மனதிற்கென இடம் உண்டா அல்லது அது முற்றிலுமாக கடந்துபோக வேண்டிய ஒன்றா?'' என்று கேட்கிறீர்கள்.*

அதற்கென ஓர் இடம் உண்டு. ஆனாலும் அது முற்றிலுமாக கடக்கப்பட வேண்டிய ஒன்று. உண்மையில் நீங்கள் அதை முற்றிலும் கடந்துவிட்டால், அதை நீங்கள் பயன்முறையாகவும் திறமையாகவும் பயன்படுத்த முடியும்.

## மூன்றாவது கேள்வி.

*நான் இங்கே ஒரு பார்வையாளராகத்தான் வந்து இருக்கிறேன். இங்கே நடப்பதை எல்லாம் பார்த்து நான் குழம்பிப்போய் உள்ளேன். இது எல்லாமே எனக்கு பைத்தியக்காரத்தனமாக தோன்றுகிறது.*

ஆம். அப்படித்தான். பைத்தியக்காரத்தனமாக தோன்றக் காரணம் இது வித்தியாசமானது. உங்களுக்கு இது பரிச்சய மில்லாததால் பைத்தியக்காரத்தனமாக தெரிகிறது. நீங்கள் ஒரு பார்வையாளராகவே இருந்தீர்கள் என்றால் இந்த இடம் கிறுக்குப்பிடித்த இடம் என்ற எண்ணத்தோடுதான்

திரும்பிப் போவீர்கள். என்ன நடக்கிறது என்று உங்களுக்கு உண்மையிலேயே தெரிந்துகொள்ள வேண்டுமென்றால், உள் உறுப்பினர் ஆகிவிடுங்கள். விஷயங்களுக்குள் செல்லுங்கள். பங்கேற்றுக் கொள்ளுங்கள். நல்லறிவு கொண்ட மானிடம் என்று அழைக்கப்படுகின்ற மானிடம் உண்மையில் நல்லறிவு நிலையில் இல்லை. இயல்பு மனிதர் உண்மையில் இயல்பு நிலையில் கிடையாது. இயல்பான மனிதர்தான். இயல்பு நிலை என்றால் ஏசு இயல்பற்றவர். புத்தரும் இயல் கடந்தவர், ஜலாலுதீன் ரூமியும் பிறழ்வானவர். ஆனால் நீங்கள் இயல்பான மளிகைக்கடைக்காரராக, வங்கி மேலாளராக, அரசியல்வாதியாக, பள்ளி ஆசிரியராக, எடைகள் மற்றும் அளவுகளுக்குமான ஆய்வாளராக இருக்க விரும்புகிறீர்களா? இப்படியான இயல்பு மனிதராக இருக்க விருப்பமா? கிறிஸ்து, புத்தரைப் போன்று ஏதோ ஒன்று ஆக வேண்டும் என்ற ஆழமான அவா உங்களுக்கு இல்லையா? ஆனால் அவர்கள் இயல்புநிலை கடந்தவர்கள். வாழ்க்கைக்கான அவர்களின் எதிர்வினை பிரத்யேகமானது. மக்கள் எப்போதும் அவர்களை பித்தர்களாகவே நினைத்தார்கள்.

உண்மையில் நீங்கள் துயரப்பட்டு இருந்தால் நீங்கள் இயல்பாக இருப்பதாக மக்கள் நினைப்பார்கள். ஏனென்றால் எல்லோருமே துயர்மிகுந்தே இருக்கின்றனர். நீங்கள் மகிழ்ச்சியாக ஆனந்தமாகத் துள்ளிக் கொண்டிருந்தால், நீங்கள் சற்றே பித்துப் பிடித்தவர் என்றுதான் மக்கள் நினைப்பார்கள். ஏனென்றால் வாழ்க்கை அப்படித்தான் உள்ளது. நீங்கள் எப்படி மகிழ்ச்சியில் பொங்கி வழிய முடியும்? எப்படி ஆடிப்பாட முடியும்? நீங்கள் ஒரு பைத்தியமாகத்தான் இருக்க வேண்டும். உங்களுக்குள் ஏதோ ஒன்று தளர்ந்துபோய் உள்ளது. அதை இறுக்கி சரிசெய்ய வேண்டும். வாழ்க்கையே சோகமயமாக இருக்கிறது. எப்போதும் கவலையோடு இருக்கின்றனர். திடீரென நீங்கள் சிரிக்கத் தொடங்குகிறீர்கள். வாழ்க்கை என்பது வேடிக்கையல்ல, அது கருத்தார்ந்த விஷயம். நீங்கள் என்னவென்றால் ஆடிக் கொண்டிருக்கிறீர்கள்?

இந்த இடம் பித்துப்பிடித்த இடம். ஆனால் வெளியிலிருந்து இதைப் பார்க்காதீர்கள். வாழ்க்கையின் சில விஷயங்களைப் பங்கேற்பதன் மூலமாக மட்டுமே அறிந்துகொள்ள முடியும். ஏனென்றால் இங்கே நடப்பது என்னவென்று புரிந்து கொள்வதற்கு உங்களுக்கு வேறோர் பார்வைக் கோணம் தேவை. உங்களுடைய சாதாரண வகையினங்கள் போதாது. இங்கே நடப்பவற்றை உங்களால் ஒரு புறாக்கூண்டில் அடைக்க முடியாது. இதற்கு முகப்பு சீட்டு அளிக்க இயலாது. அதைத்தான் செய்ய விரும்புகிறீர்கள். ஒரு அடையாளச் சீட்டு வழங்க முற்படுகின்றீர்கள். இது ஒரு கத்தோலிக்க தேவாலயம் எனில், உங்களுக்கு அது வருத்தம் தராது. ''சரி இது ஒரு கத்தோலிக்கத் தேவாலயமா? அதனால்தான் கத்தோலிக்கம் போல் உள்ளவை.'' முடிந்தது. அடையாளச் சீட்டிடுதல் ஆயிற்று. இனி நீங்கள் அதைப்பற்றி கவலைப்படத் தேவையில்லை.

இந்த இடம் அவமதிப்பானது. சிறிய விஷயங்கள் கூட மக்களிடையே அவமதிப்பை உண்டாக்குகிறது. ஏனென்றால் அவர்கள் இங்கே முற்சாய்வுகள் நிறைந்து வருகின்றனர். இதை ஒரு ஹிந்து ஆசிரமமாக பார்த்தீர்களானால் உயிரற்ற, மந்தமான முட்டாள்தனமாக மனிதர்கள் யோகம் பயின்று கொண்டு இருப்பதைக் காண்பீர்கள். ஒரு சாரமும் இல்லை. உயிர்த்துடிப்பு இல்லை. காலையிலிருந்து மாலை வரை கண்ணை மூடி அமர்ந்து இருப்பதைக் கண்டு, ''சரி, இங்கு யோகம் பயின்று கொண்டிருக்கிறார்கள்.'' முடிந்தது! நீங்கள் அந்த இடத்தை அடையாளப்படுத்தி விட்டீர்கள்.

நான் எந்தவிதமான சீட்டிடுதலையும் அனுமதிப்பதில்லை. நீங்கள் அடையாளப்படுத்தவே முடியாது. இது இயல்முரணிய மானது. இதைக் கிறிஸ்துவம் என்றோ, பௌத்தம் என்றோ அழைக்க முடியாது. ஹிந்து, யூதம் என்றும் கூற முடியாது. இது எல்லாமே அடங்கியதும் அவை எதுவுமே இல்லாததுமாகும். இது புதியதோர் பார்வையின் பிறப்பு. ஒரு புதிய வாழ்க்கை, ஒரு புதிய சமயம். ஒரு புதிய மரபு; ஒரு புதிய வருங்காலம், ஒரு புதிய மனிதன்.

இதனால்தான் எல்லா மதசார்புடைய மனிதர்களும் எனக்கு எதிராக உள்ளனர். நான் சமயசார்பற்றவன் என்று அவர்கள் நினைக்கின்றனர். அவர்கள் ஏன் அவ்வாறு நினைக்கின்றனர்? காரணம், என்னை அவர்களால் அடையாளக் குறியிட முடியவில்லை, வகைப்படுத்த முடியவில்லை. குழம்பிப்போய் உள்ளார்கள். நான் சொல்வது அவர்களுக்குப் புரியவில்லை, ஏனென்றால், நான் சூஃபிக்களைப் பற்றி பேசுகிறேன். ஹிந்துக்களைப் பற்றி பேசுகிறேன். ஜென் மற்றும் தந்திரம் பற்றியும் பேசுகிறேன். அது அவர்கள் புரிதலுக்கு அப்பாற்பட்டது. அவர்கள் குகைகளில் வாழ்கின்றனர்; இது திறந்த வானம். அவர்கள் எதிர்மறை வாழ்க்கை மனநிலையில் வாழ்கின்றனர். ஆனால் இது வாழ்க்கை உறுதிப்பாடு. உங்கள் வாழ்க்கையை அழித்துக் கொண்டால்தான் கடவுளை உணர முடியும். ஒரு மதிநுட்பமான தற்கொலை, உளம்சார்ந்த தற்கொலை தேவை என்று நினைக்கின்றனர். இங்கே வாழ்க்கையை நேசிப்பது ஒன்றே கடவுளுக்கான பாதை. வாழ்க்கை மீது ஆழமான அன்பு இருந்தால் நீங்கள் கடவுளைக் கண்டுபிடிக்க முடியும்; வேறு வழியில்லை.

சில மனிதர்களுக்கு எல்லாமே தெளிவாக வரையறுக்கப்பட்டு, தர்க்கரீதியாக இருக்க வேண்டும். அப்போதுதான் அவர்கள் மனம் அது என்ன என்று கண்டறியும். அது ஒரு தருக்கப் பொருத்தமற்ற இடம், பகுத்தறிவிற்கு ஒவ்வாத அபத்தமான இடம்.

நீங்கள் குறிப்பிட்ட கருத்துகளோடு இங்கே வருகின்றீர்கள். அவை நிறைவேறாத போது நீங்கள் குழப்பம் அடைகிறீர்கள். கோபம் வருகிறது, அவமதிப்பை உணர்கின்றீர்கள். இந்த இடம் முழுவதுமே பலர் அவமதிக்கப்படும் வண்ணமே உருவாக்கப் பட்டுள்ளது. ஏனென்றால், இது அந்த வகை மக்களைத் தடுத்து நிறுத்துவதற்கான என் பிரத்யேக வழி. யாரோ ஒருவர் படி வாயிற்கருவருகே வருகிறார். பளிங்குக் கதவுகளைக் கண்டதும் தப்பி ஓடிப்போகிறார், நல்லது அவர் அன்பிற்கு நன்றி! இதற்குக் காரணம் அவர் ஒரு இந்திய வகை ஆசிரமத்தை எதிர்பார்த்து வந்தார்.

பளிங்குக் கல் வைத்த வாயிற்கதவையல்ல. அவர் எண்ணங்கள் நொறுங்கிவிட்டன. அவர் இங்கே மக்கள் ஏழ்மையில் வாழ்வதை மாற்ற விரும்பினார். ஒரு வகையான ஆன்மிக அழுக்கில் காண விரும்பினார். மக்கள் பசியில் கிட்டத்தட்ட பட்டினியிலே, விரதம் இருப்பதைக் காண விரும்பினார். பளிங்குக் கதவு இவர் போன்றோரை தடுத்து விடுகிறது. அவர்கள் உள்ளே வருவதை நான் விரும்பவில்லை.

சிறிய விஷயங்கள் மக்களை அவமதிக்கின்றன. சிறு விஷயங்கள் எப்படி தடைகளாக மாறுகின்றன என்று அவர்களும் பார்ப்பதில்லை. அரூப்பின் அம்மா கீதா ஒரு கேள்வி எழுதியிருக்கிறார். அவருக்கு தன் குடும்பம் என்மீது அதிக ஆர்வம் காட்ட வேண்டும் என்று ஆசை. ஆனால் பிரச்சினை எங்கு வருகிறது என்றால் விசித்திர மான தொப்பிகளோடு என் படங்கள்! அது பிரச்சினையை உருவாக்குகிறது. நல்லது இப்போது நிறையத் தொப்பிகளைக் கொண்டு வாருங்கள். இதுபோன்ற மனிதர்கள் இங்கே எனக்குத் தேவையில்லை. ஏனென்றால், இப்படிப்பட்ட முட்டாள் மனங்கள் தள்ளிவைக்கப்பட வேண்டும். இந்த மனங்களால் வளர முடியாது.

இந்தப் புதிய சமூகத்தில் உண்மையான அஞ்சாநெஞ்சர்கள் மட்டுமே உள்ளே நுழைவதற்கு வழி செய்யப்போகிறேன். ஆயிரத் தொரு விஷயங்கள் அவர்களைத் தடுத்து நிறுத்தும். ஏனென்றால் இத்தகைய மனிதர்கள் உள்ளே வந்தாலும் வெளியேறத்தான் போகின்றனர். ஏன் அவர் மீது நேரத்தை வீணடிக்க வேண்டும். அவர்களை வெளியே வைத்திருப்பதே நல்லது.

நீங்கள் வெறும் வருகையாளர் என்றால் இங்கே நடப்பதின் முக்கிய கருத்தை தவறவிட்டு விடுவீர்கள். நீங்கள் நடனத்தின் ஓர் அங்கமாக வேண்டும். விஷயத்திற்குள் வாருங்கள். தியானம் செய்யுங்கள். நினைவில் கொள்ளவும், ஒருக்கால் நீங்கள் பங்கேற்காமல் திரும்பிச்சென்றால் இந்த இடத்தைப் பற்றி நீங்கள் எதைச் சொன்னாலும் அது தவறாகத்தான் இருக்கும்.

அயர்லாந்தில் ஒரு சர்க்கஸ் கம்பெனி நாட்டைச் சுற்றி நிகழ்ச்சிகள் நடத்திக்கொண்டிருந்தது. ஒரு கிராமத்தில் கூடாரமிட்டு இருந்தபோது, சர்க்கஸைச் சேர்ந்த கழைக்கூத்தாடி ஒருவன் அந்த ஊர் தேவாலயத்திற்குச் சென்று அங்கு பாவ மன்னிப்பு கேட்டான்.

பாவ மன்னிப்பு கேட்டு முடிந்தவுடன் பாதிரி, இவனைப் பார்த்து, ''உன்னை எனக்குத் தெரியவில்லையே? ஊருக்குப் புதியவனா'' என்று கேட்டார்.

''ஆமாம். ஃபாதர். நான் சர்க்கஸ் கழைக்கூத்தாடி'' என்று பதிலளித்தான்.

''ஓ அது இங்கே வந்திருக்கிறதா? நான் பாதிரியார் ஆகையால் அங்கே எல்லாம் போக முடிவதில்லை. ஆனால் எனக்கு இந்த செப்பிடு வித்தைகளில் ஆர்வம் உண்டு. எனக்காக சில வித்தைகள் செய்துகாட்ட முடியுமா?'' என்றார்.

''என்னது இங்கேயே, இப்போதா?'' என்றான் கழைக் கூத்தாடி.

''ஆமாம், செய்துகாட்டு, இங்கே யாரும் இல்லை'' என்றார் பாதிரி.

கழைக்கூத்தாடியும் சக்கரம் சுழல்வது, குட்டிக் கர்ணம் போடுவது என்று வித்தை காட்டினான்.

ஆனால், இருவருமே எதிலும் மூக்கை நுழைக்கும் ஒரு மூதாட்டி பின்னால் இருப்பதை கவனிக்கவில்லை. அவள் சில நிமிடங்கள் என்ன நடக்கிறது என்று பார்த்துவிட்டு ஓடிப்போய், தன் தோழியிடம் சொன்னாள். ''ஆ பெண்ணே: வீட்டுக்குப் போய் 'டிரவுசர்' போட்டுக் கொண்டு வா. அந்த கிழ முட்டாள் பாதிரி என்ன மாதிரியான தவம் எல்லாம் இப்போது கற்றுக் கொடுக்கிறான் என்று பார்க்க வேண்டும்!''

ஆக, நீங்கள் பங்கேற்று உள்ளிருந்து பார்க்காவிட்டால் எல்லாமே தவறாகத்தான் தெரியும். இங்கே ஒரு பார்வையாளராக

மட்டும் இருக்காதீர்கள். இது அனுபவிக்கப்பட வேண்டிய இடம். இங்கே நடப்பது தேகரீதியான இயல் நிகழ்வுகள் அல்ல. வெறுமனே அவற்றைப் பார்த்து, சில புகைப்படங்கள் எடுத்துக் கொண்டு வீட்டிற்குப் போய் "ஃபோட்டோ ஆல்பமில்' போட்டு வைத்துக் கொள்ள முடியாது. அப்படியானால் இதன் ஆன்மாவைத் தவற விடுவீர்கள். இது உங்கள் உயிருருவின் அடி ஆழத்தில் பதிவு செய்யப்பட வேண்டும்.

அதனால் பங்கேற்பாளர் ஆகுங்கள், வெளியாளாக இருக்காதீர்கள். இப்படிச் செய்தாலும் இது பித்துப்பிடித்தாக இருக்கிறாரே என்று சொல்வீர்கள். ஆனால் 'பித்து' என்பதன் பொருள் இப்போது முற்றிலும் வேறாக இருக்கும்.

**நான்காவது கேள்வி:**

*ஒரு அமெரிக்க விகடகவியின் இந்த மெய்யுரை எனக்கு அதிகம் பிடிக்கும். "திறந்த மனது என்பது ஒரு நல்ல கருத்துதான். ஆனால் நீங்கள் அதையே உங்கள் வாழ்க்கையின் அடிப்படை குறிக்கோளாக வைத்துக் கொண்டால் நீங்கள் இறுதியில் உருவாகப்போவது ஒரு காற்று சுரங்கத்தை ஒத்திருக்கும்."*

சில சமயங்களில் அதைப்போலத்தான் நான் இங்கே உணர்கிறேன். பல்வேறு நடவடிக்கைகள் என்னைப் பல திசை களில் அலைக்கழிக்க, எந்தத் திசையும் தெளிவாக கடவுளை நோக்கி இருப்பதாகத் தெரியவில்லை. என்ன செய்வது?

பரோதா, கடவுள் எந்தக் குறிப்பிட்ட திசையிலும் இல்லை. கடவுள் எல்லா திசைகளிலும் இருக்கின்றார். ஒரு குறிப்பிட்ட திசையில் அவரைத் தேடுவது என்பது தவறவிடுவதற்கான நிச்சயமான வழி. கடவுள் அங்கே இல்லை. கடவுள் இங்கே இருக்கிறார். கடவுள் உங்களைச் சூழ்ந்து இருக்கிறார். நீங்கள் அவரை சுவாசிக்கின்றீர்கள். அவரை உண்கிறீர்கள், குடிக்கின்றீர்கள், அவரிடம் காதல் செய்கின்றீர்கள், இவையெல்லாம் கடவுள் என்று நீ ங்கள் அடையாளம் காணவில்லையா? நீங்கள் திசை கேட்கின்றீர்கள்.

கடவுள் எந்தத் திசையிலும் இல்லை. எல்லாத் திசைகளும் கடவுளுக்குள் இருக்கின்றன. கடவுள் முழுமையாவார். முழுமை எப்படி ஒரு திசையில் இருக்க முடியும்? வடக்கு, தெற்கு, கிழக்கு, மேற்கு, மேலே, கீழே. கடவுளுக்கென்று திசை கிடையாது. வெறுமனே இந்தக் கடவுள் என்ற சொல்லை 'முழுமை' என்ற சொல் கொண்டு மாற்றி வையுங்கள். நான் சொல்வது என்ன என்று உங்களுக்குப் புரியும். இந்த இடத்தின் நோக்கமே நீங்கள் எல்லா திசைகள், எல்லா பரிமாணங்களையும் விட்டு விடுவதற்கு உங்களுக்கு உதவி செய்வதாகும். ஒரு நாள் நீங்கள் முற்றிலும் திசையற்று இருப்பீர்கள். அந்தக் கணத்தில் எல்லாமே நின்றுபோகும். நீங்கள் எங்கேயும் போகமாட்டீர்கள். ஏனென்றால், போவதற்கு வேறு இடம் இல்லை. நீங்கள் இப்போது இங்கே உள்ளீர்கள். நீங்கள் ஒரு *மோஜீத்*, நிகழ்காலத்திற்கு ஆஜராகி உள்ளீர்கள். அந்தக் கணத்தில் கடவுளைப் பற்றியெல்லாம் மறந்து விடுகின்றீர்கள். அந்தக் கணத்தில் கடவுள் பற்றியே நினைவு வந்தால் நீங்கள் கடவுளைத் தவறவிடுவீர்கள். கடவுள் என்ற சொல் கடவுள் இல்லை. கடவுளின் உருவப்படங்களும் கடவுள் இல்லை, கடவுள் பற்றிய விவரிப்புகளும், மனிதனும் உருவாக்கல்தான், எல்லாமே மனித மனதின் தயாரிப்புகள். அந்தக் கணத்தில், உலகம் முற்றிலுமாக நிற்கும்போது, திசைகளின்றிப் போகும்போது, நீங்கள் திடீரென இங்கே நிற்கையில், செல்வதற்கு திசைகள் இல்லாமல், செய்வதற்கு ஏதுமின்றி, கொள்வதற்கு எதுவுமில்லாமற் கடந்தகாலம், வருங்காலம் என்று இல்லாமல், முற்றிலுமாக இங்கேயே இப்பொழுது நீங்கள் இருக்கும்போது - அந்தக் குறிப்பிட்ட கணத்தில் கடவுள் உங்களுக்கு நிகழ்கின்றார்; இது வேதாந்திகள், இறையியலாளர்களின் கடவுள் இல்லை. மெய்யுணர்வாளர்களின் கடவுள் - எக்கார்ட், போகேம், ரூமி, ஹில்லஜ், போதி தர்மா ஆகியோரின் கடவுள். இந்த மறைஞானிகளின் கடவுளை நீங்கள் அறிவீர்கள்.

கடவுள் சுட்டுப் பொருள் அல்ல. ஏனென்றால், நீங்கள் எதைச் சுட்டிக்காட்டினாலும் அது ஒரு பகுதியாகத்தான் இருக்க

முடியும். நீங்கள் கடவுளைக் காண முடியாது. ஏனென்றால் காண்பது எதுவானாலும் ஒரு பகுதிதான் என்பதை நினைவிற் கொள்ளவும்.

உங்கள் பிரச்சினை எனக்குப் புரிகிறது. நீங்கள் கடவுளை தேடத் துவங்கும்போது நீங்கள் ஒரு திசையைத் தேடுகின்றீர்கள், ஒரு இலக்கைத் தேடுகின்றீர்கள். முன்னர் பணத்தைத் தேடினீர்கள். இப்போது கடவுளைத் தேடுகிறீர்கள். பணமோ, அதிகாரமோ இலக்காக இருந்தது. இப்போது அது கடவுள் இலக்காகிவிட்டது. நீங்கள் மாறவில்லை. பணம் வருங்காலத்தில் இருந்தது. இப்போது கடவுள் வருங்காலத்திலும் இருக்கிறார். பணம் ஒரு குறிப்பிட்ட திசையில் இருந்தது. இப்போது கடவுள். நீங்கள் மாறவில்லை. எதுவுமே மாறவில்லை. நீங்கள் வெறுமனே ஆசைப்படும் பொருளை மட்டுமே மாற்றியுள்ளீர்கள்.

திசை என்றால் விரும்புதல் என்று அர்த்தம் கொள்ளவேண்டும். ஆசைப்படுதல் திசையை உருவாக்குகிறது. முதலில் நீங்கள் சந்தையை நோக்கிப் போகின்றீர்கள். 'வால்ஸ்டிரீட்' நோக்கிப் போகிறீர்கள். இப்போது இமாலயத்திற்கு போகிறீர்கள். ஆனால் இன்னும் போய்க்கொண்டு இருக்கிறீர்கள். எங்கே போய்க் கொண்டுதான் இருக்கிறீர்கள். வால்ஸ்டிரீட்டுக்குப் பதிலாக இமாலயம் அவ்வளவே. முதலில் புதுடில்லி போய் பிரதமராகவோ, ஜனாதிபதியாகவோ விருப்பப்பட்டார்கள் - இப்போது ஒரு இமாலயக் குகைக்கு சென்று ஞானம் பெற வேண்டும். ஆனால் ஏதோ ஒன்றாக உருவாக வேண்டும் என்பது மட்டும் தொடர்கிறது. உருவாதல்தான் பிரச்சினை. நீங்கள் என்னவாக உருவெடுப்பீர்கள் என்பது பிரச்சினையில்லை. ஆனால் உருவாக வேண்டும் என்ற விருப்பம்தான் பிரச்சினை. உங்களுடைய தற்போதைய நிலையில் உங்களுக்கு நிறைவு இல்லை. உங்களுக்கு ஓர் இலக்கு உள்ளது.

மேம்படுத்திக் கொள்ள விரும்புகிறீர்கள், உங்களுக்கு முன்னேற்றம் தேவை. இதைச் செய்ய வேண்டும், அதைச் செய்ய வேண்டும் - அப்படியானால்தான் உங்களுக்கு திருப்தி.

இலக்கு என்பது அகங்காரத்தின் விளையாட்டு — இதை நீங்கள் புரிந்துகொள்ளும்போது. இதைத்தான் நீங்கள் புரிந்துகொள்ள வேண்டும் என்கிறோம். நீங்கள் என்னுடன் இருக்கும்போது, இது உங்களுக்கு நடக்குமானால் புரட்சி ஏற்பட்டுவிட்டது எனலாம். உருவாவதை விட்டுவிடுங்கள். இருத்தலே போதும். நீங்கள் யாராக இருக்கின்றீர்களோ அதைத் தவிர வேறு ஒருவராக ஆக வேண்டியதில்லை. நீங்கள் இருக்கும் நிலையிலேயே முழுமையாக உள்ளீர்கள். உங்களுடைய எல்லாக் குறைபாடுகளுடனும் நீங்கள் முழுமையானவர். எல்லா வரையறைகளுடனும் நீங்கள் வரையறைகளை பெற்றவர். கடவுள் உங்களைப் பற்றி முழு மகிழ்ச்சியுடனே இருக்கிறார். நீங்கள்தான் மகிழ்ச்சியாக இல்லை; அதுதான் பிரச்சினை. உங்கள்மீது மகிழ்ச்சி கொள்ளவில்லை என்றால், அவர் உங்களை திரும்பப் பெற்று இருப்பார். அவர் தொடர்ந்து உங்களுக்குள் சுவாசித்துக் கொண்டு இருக்கிறார். இது சரியான அறிகுறி. அவர் உங்கள் மீது மகிழ்ச்சியாய் இருக்கிறார். நீங்கள் வேறு ஒருவராக மாற அவர் விரும்பவில்லை. நீங்கள் எப்படி உள்ளீர்களோ அப்படியே அவருக்குத் தேவைப்படுகிறீர்கள். நீங்கள் ஏற்றுக் கொள்ளப்படுகிறீர்கள். வரவேற்கப்படுகிறீர்கள்.

ஆனால், உங்களுக்கு உங்களைப் பற்றியே மகிழ்ச்சி இல்லை. கடவுளைவிடப் பெரிய பெரிய யோசனைகள் எல்லாம் உங்களுக்கு இருக்கின்றன. நீங்கள் கடவுளை விட அதிகமான நிறைவு விரும்பி. ஆனால் கடவுள் ஒரு நிறைவு விரும்பியாக இருக்க முடியாது. இல்லையெனில் அவர் உளநோய் உடையவராகியிருப்பார். நிறைவு விரும்பிகள் எப்போதும் உளநோய் கொள்வர். ஒரு சுத்த நிறைவு விரும்பியினால் ஆரோக்கியமாக இருக்க முடியாது. முழுமையாக இருக்க முடியாது. உளநலத்தோடு இருக்க வாய்ப்பில்லை, எப்போதும் ஓர் இறுக்கம். இலக்கு ஒன்று இருக்கிறது. இலக்கு தூரத்தில் இருக்கிறது. அவர் மேலும் மேலும் மகிழ்ச்சி அற்றவராகிறார். நாட்கள் கடந்துபோக மரணம் அருகே வருகிறது. இலக்கு

மேலும் அதிகம் தூரத்தில் உள்ளது. அடைவது துர்லபம் போலத் தோன்றுகிறது. மேலும் மேலும் உளச்சோர்வுதான்.

உங்களிடமிருந்து எல்லா இலக்குகளையும் எடுத்துவிட நான் இங்கே இருக்கிறேன். உங்கள் இலக்குகளை உங்களால் துறக்க முடியும் என்றால், நீங்கள் உலகைத் துறந்துவிட்டீர்கள். கருத்தை நன்றாக கவனியுங்கள்! நான் உலகைத் துறக்க வேண்டும் என்று சொல்லவில்லை. உங்கள் கடையை, உங்கள் மனைவியைத் துறக்கவேண்டும் என்று நான் சொல்லவில்லை. எதையும் துறக்கச்சொல்லவில்லை. நான் சொல்வதெல்லாம் உங்கள் இலக்குகளைத் துறந்துவிடுங்கள். இலக்குகளைத் துறப்பதினால் நீங்கள் ஒரு சன்னியாசி ஆகின்றீர்கள். ஒரு சன்னியாசி பற்றிய என் பார்வை இதுவே.

வருங்காலத்தைப் பற்றிக் கவலைப்படாத ஒருவர், சன்னியாசி இந்த கணத்தில் வாழும் ஒருவர், முடிந்தளவிற்கு முழுமையாக வாழ்பவர். இந்த கணத்தை அனுபவித்து வாழ்பவர். எதையோ இழுத்துக்கொண்டு இருக்கிறோம் என்ற உணர்வில்லாமல் குற்ற உணர்வில்லாமல் வாழ்பவர் சன்னியாசி. எதுவும் இழக்கப்படவில்லை. இலக்குகளை விட்டுவிடுங்கள்; அப்படியானால் திசைக்குத் தேவையிருக்காது. நீங்கள் கடவுள், மோட்சம், நிர்வாணம், ஞானம் என்று ஒரு குறிப்பிட்ட இலக்கைத் தேடி வந்திருப்பீர்கள். இந்த யோசனைகளை எல்லாம் விட்டுவிடுங்கள். அதன் பயனின்மையைப் பாருங்கள். உங்களைப் பித்தனாக்குகிறது. பைத்தியமாய் வைத்திருக்கிறது. உங்கள் பாதுகாப்பின்மைக்கு உணவளிக்கின்றது. உங்கள் உளநோய்க்கு மூலகாரணமே இவைதான். இதைத் தெரிந்து கொண்டால் திசைகள் பற்றி எல்லாவற்றையும் மறந்து விடுவீர்கள். இலக்குகள் இல்லையென்றால் திசைகள் இல்லை. மேலும் இலக்கு என்று ஒன்று இல்லாவிட்டால் பாதையும் இல்லை. இலக்குகள் காணாமல் போகும்போது, திசைகளும் இல்லாமல் போகும். திசையற்றுப் போகையில் பாதைகளும் மறைகின்றன. அப்படியானால் நீங்கள் முற்றிலுமாக இங்கே இருக்கின்றீர்கள்.

வேறு எதுவும் இல்லை. இதுவே மெய்யுணர்தல், ஞானம். மெய்யுணர்தல் இலக்கல்ல. அது கடவுளோடு இருத்தல். அவசரப் படாதீர்கள். விரைந்துகொண்டே இருக்காதீர்கள். அமைதியாக இருந்துகொண்டு எது இருக்கிறதோ அதைக் கவனியுங்கள். எப்படி இருக்க வேண்டும் என்பதற்காக அலையாதீர்கள். வெறுமனே எது இருக்கிறதோ அதைக் கவனியுங்கள். கடவுள் எது இருக்கிறதோ அதில் மறைந்து இருக்கிறார். கடவுள் ஒரு திசை அல்ல.

*''சில சமயங்களில் அதைப்போலத்தான் நான் இங்கே உணர்கின்றேன். பல்வேறு நடவடிக்கைகள் என்னைப் பல திசைகளில் அழைக்கின்றன.''*

உங்கள் இலக்குகளை அழிக்க கருவிகளும், வழிமுறைகளும் இருக்கின்றன. நீங்கள் ஒரே திசையில்தான் போக முடியும். நான் உங்களுக்கு பல திசைகளைக் காட்டுவதால் நீங்கள் செலவழிந்து போவீர்கள். அதுதான் கருவியே. உங்களுக்கு பல்வேறு தியானங்களைத் தருகிறேன். பல வழிமுறைகளைக் கற்றுத் தருகிறேன். கூடிய விரைவில் நீங்கள் திசை பற்றிய உணர்வை இழந்து விடுவீர்கள். நீங்கள் குழம்பிப் போய் இருப்பீர்கள். அந்தக் குழப்பம் மகத்தானது.

லாவோட்சு சொன்னார். ''என்னைத் தவிர எல்லோரும் புத்திசாலியாக இருப்பார்கள் போல! நான் குழம்பிப் போய் இருக்கிறேன். அவரே, ''எல்லோரும் புத்திசாலி, நானே முட்டாள்'' என்கிறார். அவர் அறிந்துள்ளார். முட்டாளாக இருப்பதினால் அவர் தெரிந்துகொண்டார். குழப்பமாக இருப்பதினால் எங்கே போகவேண்டும், என்ன செய்ய வேண்டும் என்று தெரியாததால் அவர் நின்றுவிட்டார். அந்த நிறுத்தத்தில் நிகழ்வதுதான் மெய்யுணர்வு.

நீங்கள் இப்போது வாழும் இந்த இடம், நான் உங்களுக்காக கிடைக்கச் செய்த இடைவெளியானது உங்களை பித்தனாக்கக் கூடிய அனைத்தையும் எடுத்துவிடுவதற்கு, எல்லாவற்றையும் அழிப்பதற்காக, இதற்கெல்லாம் மூலகாரணத்தை அழிப்பதற்காக. உங்கள் காலடியில் இருக்கும் நிலம் காணாமல் போனவுடன்,

முதலில் நீங்கள் பயப்படுவீர்கள். கைவிடப்பட்டார்போல உணர்வீர்கள். ஆனால் விரைவிலேயே அந்தப் படுகுழியில் அடிப்பரப்பே இல்லாத பாதாளத்தில் வீழ்வதை ரசிப்பீர்கள். ஒருமுறை திசைகள் இல்லாமல், இலக்குகளின்றி ஊன்றுகோல்கள் இல்லாமல் வாழத் தொடங்கியவுடன் வாழ்க்கை அபரிமிதமாய் நிகழும். நீங்கள் கடவுளைத் தேடிப்போக வேண்டாம். கடவுள் உங்களிடம் வருவார். கடவுள் உங்களிடம் வந்து கொண்டிருக்கிறார். சாத்தியமாகும் ஒவ்வொரு திசையில் இருந்தும் வந்து கொண்டிருக்கிறார். உங்களை நோக்கிப் பாய்கிறார். ஆனால் நீங்கள்தான் வீட்டில் இல்லை. நீங்கள் எப்போதும் மோஜீத்தாக இல்லை, என்றும் உளதாய் இல்லை.

பண்டைய திபெத்திய நீதிக் கதை உண்டு. ஒரு மனிதன் கடவுளிடம் தொடர்ந்து பிரார்த்தனை செய்து கொண்டிருக்கிறார். ''என்னிடம் வா, என்னிடம் வா'' என்று அழுது அழைக்கிறார். இறுதியாக கடவுளும் வருகிறார். ஆனால் கடவுள் வரும்பொழுது அந்த மனிதன் அங்கு இல்லை. சில சமயங்களில் கடவுள் வரும்போது அவன் உடல் மட்டுமே இருக்கும். உடலாய் கடவுளை அடையாளம் காண முடியாது. அவர் ஆன்மிகப் பிரயாணத்தில் இருப்பார். அவன் எங்கு உள்ளானோ அங்கு இருப்பதேயில்லை. இப்படியே போய்க் கொண்டிருக்கிறது. அவனும் ஒரு நாள் இறந்து போகிறான். இப்போது அவனுக்கு கடவுள்மேல் உண்மையான கோபம். கடவுளை நேரில் சந்திக்கும்போது கத்திக் கூச்சலிடுகிறான். ''நான் அழுது, அழுது அழைக்கும்போது நீ வரவேயில்லை! மறைநூல்களில் ''யாராவது அழைத்தால் வருவேன் என்று கூறியிருக்கிறாய்''. உன் வாக்குறுதி என்னவாயிற்று?'' என்று கூப்பாடு போட்டான்.

கடவுள் சொன்னார். ''நீ என்ன பேசிக் கொண்டிருக்கிறாய்? உன் மேல் எனக்கு சலிப்பு ஏற்பட்டுவிட்டது. கோடிக்கணக்கான முறை நான் வந்தேன். நீதான் அங்கு இல்லை! நீ வேறு எங்கோ இருந்தாய். உன்னை எப்படிக் கண்டுபிடிப்பது? உன்னை நான் கண்டுபிடிக்க நீ அனுமதிக்கவே இல்லை.''

இதுதான் என் செய்தியும்கூட. கடவுள் உங்களைக் கண்டுபிடிக்க அனுமதியுங்கள். நீங்கள் அவரைத் தேடிப் போக வேண்டியதில்லை. நீங்கள் எங்கே என்று தேடுவீர்கள்? உங்களுக்கு அவர் முகவரி தெரியாது. அவர் பெயர் தெரியாது. அவருக்கு அது கிடையாது. அவர் வடிவம் என்னவென்று உங்களுக்குத் தெரியாது. எப்படி அடையாளம் காண்பீர்கள்? தெருவில் போகும்போது நீங்கள் அவர் மீது முட்டிக் கொண்டாலும் கூட நீங்கள் ஒரு கனவனாக இருந்தால் 'மன்னியுங்கள்' என்று கூறிவிட்டு, போய்விடுவீர்கள். அதுவும் இல்லையென்றால் கோபப்பட்டுக் கத்தி, அவருடன் சண்டையிடுவீர்கள். எப்படி அவரை அடையாளம் காண்பீர்கள்?

எகிப்தில் மறைஞானிகள் கூறுவது, ''சீடன் தயாராக இருக்கும் போது, குரு வருவார். பக்தன் தயாராக இருக்கும்போது கடவுள் தோன்றுவார்.'' இது மிகவும் பொருளுடைய சொல் வழக்கு, ஆழமான குறிப்புடையது. சீடனால் குருவைக் கண்டுபிடிக்க முடியாது. கண்டுபிடித்தாலும் அடையாளம் காணமுடியாது. எப்போதும் குரு தான் சீடனை அடையாளம் காண்பார். சீடன் தயாராய் இருக்கும்போது குரு தோன்றுவார். அதற்கு முன் அல்ல. எல்லா திசைகளும் விட்டுவிடப்பட வேண்டும்.

இந்தத் திசைகள்தான் நீங்கள் கடவுளுக்குள் காணாமல் போவதைத் தடுப்பதற்கு காரணம். உங்கள் தேடல்தான் நீங்களாக கண்டுபிடிக்காமல் இருப்பதற்கு காரணம். தேடுவதை நிறுத்துங்கள். கண்டுபிடியுங்கள்! உண்மையில் தேடுவதை நிறுத்துங்கள். கடவுள் உங்களைக் கண்டுபிடிப்பார்.

## ஐந்தாவது கேள்வி:

*அற்புதங்கள் நடக்கின்றனவா? கிறிஸ்து உண்மையிலேயே கன்னிமேரிக்குப் பிறந்தவரா?*

நான் உங்களுக்கு இரண்டு கதைகள் மட்டும் சொல்கிறேன்.

சந்தேகமே இல்லை. குளோரியா கர்ப்பமாக இருந்தாள்.

''என் தொலைபேசியில் உன் கணவரை அழைத்து இந்த நல்ல சேதியைச் சொல்லலாம் குளோரியா'' என்று டாக்டர் அனுமதி கொடுத்தார்.

''ஆனால் டாக்டர், நான் திருமணமாகாதவள்.''

''அப்படியா சரி, உன் காதலனுக்குத் தகவல் கொடு'' என்றார் டாக்டர்.

''ஆனால் எனக்குக் காதலனே இருந்தது கிடையாது டாக்டர்!''

''ரொம்ப நல்லது. வீட்டுக்குப் போய் உன் அம்மாவிடம் கிறிஸ்துவின் இரண்டாம் வருகைக்குத் தயாராகச் சொல்லு.''

அடுத்தது இரண்டாம் கதை:

அந்த பேதைப் பெண் டாக்டரிடம் தான் கொஞ்ச நாட்களாக உடம்பு சரியில்லாமல் இருப்பதாகச் சொன்னாள். பரிசோதனை களை முடித்த டாக்டர் அவள் கர்ப்பமாய் இருப்பதைச் சொன்னார்.

''ஆனால் அதற்கு சாத்தியமேயில்லை, நான் எந்த ஆணோடும் இருந்ததில்லை'' என்று அங்கலாய்த்தாள்.

டாக்டரும் பொறுமையாக சற்றே விலாவாரியாக வாழ்க்கையின் உண்மைகளை அவளுக்கு விளக்கிச் சொன்னார்.

அதிர்ந்துபோன அந்தப் பெண், ''அப்படியா, அந்த கேடுகெட்ட முதல் உதவி பயிற்சியாளர் என்னிடம் இது செயற்கை சுவாச முறைப் பயிற்சி என்று சொன்னானே'' என்றாள்.

அற்புதங்கள் எல்லாம் நடப்பதில்லை. நடக்கமுடியாது. அற்புதங்கள் யாவையும் ஏதாவது பிரத்யேகமாக வேண்டுமே என்பதற்கான மனிதனின் முட்டாள்தனமான மன ஆசைகள். பரபரப்பிற்கான ஆசை. இவையெல்லாம் புராதன துப்பறியும் கதைகள். வேறு ஒன்றுமில்லை. கிறிஸ்து கன்னிமேரிக்குப் பிறந்தார். வெறும் பண்டைய நாவல்கள், புதினங்கள்.

ஜெ.கிருஷ்ணமூர்த்தி துப்பறியும் நாவல்கள் மட்டுமே படிப்பார் என்பது உங்களுக்குத் தெரியுமா? அவருடைய சீடர்களில் ஒருவர் என்னிடம் வந்து சொன்னார். ''எனக்கு ஒரே புதிராக இருக்கிறது. கிருஷ்ணமூர்த்தி துப்பறியும் தகவல்களையும் கதைகளையும் மட்டும்தான் படிப்பார் என்று தெரிந்து கொண்டேன். எனக்கு ரொம்பக் கவலையாக இருக்கிறது. அவர் புனித நூல்களைக் குறை கூறிக் கொண்டேயிருக்கிறார். மேலும் அவர் சொல்கிறார். ''நான் பாக்கியசாலி, உலகின் எந்தப் புனித நூலையும் நான் படித்ததில்லை.''

நான் வந்தவரிடம் சொன்னேன். ''நீங்கள் கவலைப்பட வேண்டியதில்லை, ஏனென்றால் நான் இரண்டையும் படித்திருக்கிறேன். புனித நூல்கள், துப்பறியும் கதைகள் - இரண்டிற்கும் இடையே எந்த வேறுபாடும் எனக்குத் தெரியவில்லை. இரண்டும் ஒன்றுதான். துப்பறிவாளர் நவீனமானவர். புராண இலக்கியங்கள் பண்டைய காலத்தியவை. அவை துப்பறியும் கதைகளின் பழைய வகை எழுத்துப்பாணி அவ்வளவே.''

பாருங்கள், ஏசு கிறிஸ்துவின் கதையில் ஒரு நவீனப் படத்திற்கு தேவையானது எல்லாம் இருக்கும் - ஒரு கன்னிப்பெண்ணுக்குப் பிறந்தார் என்ற பெரிய பரபரப்பான விஷயம். அடுத்து முப்பது வருடங்களுக்கு அப்படியே காணாமல் போய்விட்டார். எங்கே இருக்கிறார்? யாருக்கும் தெரியாது. இது பெரிய ஆவலைத் தூண்டுகிறது; திடீரென பன்னிரண்டு சீடர்களோடு அவர் தோன்றுகிறார். அவர் ஓரினச் சேர்க்கையாளரோ என்று சந்தேகம் கொள்ளும் மனிதர்கள் அங்கு இருக்கிறார்கள். எல்லாமே ஆண்களா? ஏன் இந்த ஆண்கள் மட்டுமே சங்கத்தை எங்கு போனாலும் கூட்டிப் போகிறார்? இப்போது பெரிய அளவில் சந்தேகம்... நீங்கள் யூதர்களை அறிவீர்கள். உலகின் மகா ஓரினச் சேர்க்கையாளர்கள் யூதர்கள். ஆக, யாருக்குத் தெரியும்! பிறகு திடீரென ஒரு நாள் வேசி ஒருத்தி வந்து சேர்கிறாள். அவளுக்கு அதீதமான நெருக்கத்தை அவர் அனுமதிக்கிறார். இப்போது

சந்தேகம் வலுக்கிறது. மேக்டலீன் வந்தவுடன் மதிப்பிற்குரியோர் எல்லாம் ஏசுவிற்கு எதிராக திரும்புகின்றனர். ''இது சரியில்லை, ஒரு போதகர் வேசியுடன் பழகலாமா? இரண்டு துருவங்கள் ஆயிற்றே, போதகரும் வேசியும் இது பொருந்தவில்லை.'' ஆனால் இதன் காரணமாக பரபரப்பிற்கு பஞ்சமில்லை. அடுத்ததாக அவருடைய சொந்த சீடன் ஜூடாஸ் துரோகம் செய்கிறான். வெறும் முப்பது வெள்ளிக்காக ஏசுவைக் காட்டிக் கொடுக்கிறான். இதற்கு மேல் ஒரு பரபரப்பான கதைக்கு என்ன வேண்டும்? எல்லாமே இருக்கின்றன.

இவையெல்லாமே பின்பற்றுவோரினால் உருவாக்கப் பட்டவை. ஏசு ஒரு எளிமையான மனிதர், மிக எளியவர், மிகச் சாதாரணமானவர். முற்றிலும் வாழ்க்கையை எளிதாக எடுத்துக் கொண்ட சாவகாசமான மனிதர். அவருடைய ஒரே குற்றம். அவர் தனக்கு வேண்டியதைச் செய்துகொண்டு இருந்தார். பழங்காலக் குப்பைகளைப் பின்பற்றவில்லை. அசலாக இருந்ததுதான் குற்றம், வேறு ஒன்றுமில்லை. ஆனால் உண்மையான அற்புதம் என்னவென்றால் அவர் அசலாக இருப்பது. மற்றதெல்லாம் அர்த்தமற்றவை, அவை வெறுமனே இடைப்பட்ட தரக்கோளாறின் ஆர்வப் பூர்த்திக்காக மட்டுமே. இந்த விஷயங்களை எல்லாம் திரும்பப் பெறுங்கள். இந்த உலகில் ஒரு கிறிஸ்துவர்கூட இருக்க மாட்டார். அவர் சிலுவையில் அறையப்பட்டார். இதைப் பின்வாங்குங்கள். அவர் சிலுவையில் இடப்படவில்லை. ஒரு மளிகைக் கடைக்காரராக நூறு ஆண்டுகள் வாழ்ந்த பின்னர் படுக்கையில் உயிர் நீத்தார். தொன்னூற்றி ஒன்பது சதவீத கிறிஸ்துவர்கள் சொல்லக் கூடியது. ''அப்படியானால் அது முடிந்தது. இந்த மனிதனைப் பின்பற்றுவதில் என்ன பயன்? அவர் படுக்கையில் இறந்துபோனாரா? ஒரு போதகர். சிலுவையில் அல்லவா இறக்க வேண்டும்; படுக்கையில் அல்லவே. படுக்கையில் சாதாரணமானவர்கள் இறப்பார்கள். அசாதாரணமானவர்கள் இறக்க ஏதாவது புது வழி கண்டுபிடிக்க வேண்டும்.

விஷயங்களை எளிமையாக்குங்கள். ஏசு ஒரு பெண்ணின் மீது காதல் கொள்கிறார். பன்னிரண்டு குழந்தைகள் பெற்றுக் கொள்கிறார். அக்காலத்தில் பன்னிரெண்டு பெரிய எண்ணிக்கை இல்லை. கருத்தடை சமாச்சாரங்கள் கிடையாது. ஆக, பன்னிரெண்டு பிள்ளைகள் பெறுகிறார். அவருடைய குழந்தைகளின் குழந்தைகள் என பெரிய குடும்பம். ஒரு தாத்தாவாக நூறு வயது வரை வாழ்கிறார். எல்லா கிறிஸ்துவர்களும் சொல்வார்கள். ''தொலைந்தது, இவர் நம்ம ஆள் கிடையாது.''

அல்லது இப்படிப் பார்க்கலாம். மேரிக்கு ஒரு காதலன் இருந்திருக்கலாம். ஒருக்கால் ஏசு ஜோசப்பிற்கு பிறக்காதவராக இருக்கலாம். அது சாத்தியமானதே. இப்போது இந்தக் காதலன் விஷயத்தை மறைக்க வேண்டும். ஏனென்றால், இறைத்தூதர்கள் காதலில் பிறக்கக் கூடாது. அவர்கள் திருமண பந்தம் எனும் மரண பந்தத்தில்தான் பிறக்க வேண்டும். திருமணம் காரணமாகவே பிறக்க வேண்டும். அவர்கள் மரபு சார்ந்தே இருக்க வேண்டும். இப்போது விஷயம் மிகவும் எளிதாகத் தோன்றுகிறது. அறிவிக்க முடியாத ஒரு தந்தை ஏசுவிற்கு இருக்கிறார். இப்போது ஒரு கதை உருவாக்கப்பட்டது. அது அற்புதமாகவும் மாறிவிட்டது. நீங்கள் மேரியின் காதலனை விவரிக்கும் ஒரு பழைய புனித நூலை கண்டுபிடிக்கிறீர்கள் எனில் எவ்வளவு பேர் ஏசு கிறிஸ்துவிற்கு ஆதரவு கொடுப்பார்கள்? அவர் உடனேயே நிராகரிக்கப்படுவார்.

அது இன்னும் அழகாக இருந்திருக்கும். திருமணமல்லாது ஒரு காதல் விவகாரத்திலும் பிறந்து இருப்பது - ஏனென்றால் ஒரு குழந்தை அன்பினால் பிறக்கிறது. அந்தக் குழந்தைக்கு ஆழமான உயிருரு இருக்கும். திருமணங்கள் வெறும் மேம்போக்கான ஜீவர்களை உருவாக்குகிறது. ஏனென்றால் திருமணத்தில் இரண்டு உடல்கள் சந்திக்கின்றன. இரண்டு ஆன்மாக்கள் சந்திப்பதேயில்லை. என்னைப் பொருத்தவரையில் ஏதோ ஒரு காதலில் ஏசு பிறப்பது, பெரும் உணர்ச்சியில் அந்த

மகிழ்ச்சியில் முழு ஈடுபாட்டில் பிறப்பது முற்றிலும் ஏற்றுக் கொள்ளத்தக்கது. ஏசுவைப் போன்ற ஒரு மனிதர் காதலினால் வெளிவர வேண்டும். ஆனால் அது போப்பிற்கு, வாடிகன் பாதிரிகளுக்கு, இறையியலாளர்களுக்கு சரியாகப்படாது. அவர்கள் மரபுடனேயே இருப்பார்கள். இதனால் இந்தப் புனைவு உருவாக்கப்பட வேண்டும்.

அற்புதங்கள் நிகழ்கின்றன. ஆனால் அவையெல்லாம் புனித நூல்கள் கூறும் அற்புதங்கள் அல்ல. உண்மையான அற்புதம் என்னவென்றால், ''இறைவா! இந்த மனிதர்களை மன்னித்துவிடு. என்ன செய்கிறோம் என்றறியாமல் செய்கின்றனர்'' என்று கடவுளிடம் பிரார்த்தனை செய்தவாறு ஏசு சிலுவையில் அறையப்பட்டவாறு இறந்துபோகிறார். இது ஓர் அற்புதம். அவர் உயிர் மீட்டெழுந்தது அல்ல; அது ஒன்றுமேயில்லை. உண்மையான அற்புதம் என்னவெனில் அவர் சிலுவையில் அறைந்து கொல்லப்படுவது, அழிக்கப்படுவது, நிந்திக்கப்படுவது. தக்காளிப் பழங்களையும், வாழைப்பழத் தோல்களும் எறியப்பட்டு, துப்பப்பட்டு, எல்லா வழிகளிலும் பழி கூறப்பட்டும் கூட அவர் சொல்கிறார், ''பரமபிதாவே, இவர்களை மன்னியும். இந்த மனிதர்கள் என்ன செய்கிறோம் என்றறியாமல் செய்கின்றனர். அவர்கள் உணர்வு நிலையின்றி இருக்கின்றனர். அவர்கள் விழித்து இருக்கவில்லை. அவர்கள் செய்வதெல்லாம் ஒரு விதக் களிப்பில். அவர்களை மன்னித்து விடுங்கள்''. இதுவே அற்புதம்.

தண்ணீர் மீது நடப்பது அற்புதம் அல்ல. கல்லை ரொட்டியாக மாற்றுவதும் அற்புதம் இல்லை. இவையெல்லாம் மந்த புத்திக்காரர்களையும் புல்லறிவாளர்களையும் திருப்தி செய்வதற்கு மட்டுமே.

ஆனால் கிறிஸ்து மனிதர்களுக்கு ஒரு புதிய உள்நோக்கு தொடங்கி வைக்கத் துணிந்தார். ''அன்பே கடவுள்'' என்று பிரகடனம் செய்தார். இதுதான் அற்புதம். அவர் கூறும் அற்புதம் என்னவென்றால், ''முன்னர் உங்களுக்குச் சொல்லப்பட்டது.

யாராவது உங்களின் ஒரு கண்ணைப் பிடுங்கினால் நீங்கள் அவர்களின் இரண்டு கண்ணையும் பிடுங்கு. இதுதான் உங்களுக்கு சொல்லப்பட்டது. ஆனால் நான் உங்களுக்குச் சொல்வது, யாராவது உங்களை ஒரு கன்னத்தில் அறைந்தால் மறு கன்னத்தையும் காட்டுங்கள்'' இது அற்புதமாகும்.

அற்புதங்கள் அமைதியான இயல்நிகழ்வுகளாகும். அவை அதிக அற்புதத்தன்மை கொண்டு இருக்காது. அவை செய்திக்கு உகந்ததாய் கூட இருக்காது. அவை எல்லாம் முடிவற்ற மௌனத்தில் ஏற்படும் சன்னமான ஒலிகளாகும். ஆனால் இவையே உண்மையான அற்புதங்கள் ஆகும். உங்களுக்கு அற்புதங்கள் நடக்கின்றனவா இல்லையா என்று உண்மையிலேயே தெரிந்து கொள்ள வேண்டுமென்றால்... அற்புதங்கள் நடக்கின்றன. ஆனால் அவை என்ன என்று உங்களுக்குத் தெரியாது. நீங்கள் அற்புதங்கள் என்று நினைத்துக்கொண்டு இருப்பவையெல்லாம் வெறும் புனைவுகளே. ஆனால் மதிகெட்ட மனம்தான் இவற்றிற்காக அலைகின்றது.

இந்த விஷயங்களோடு ஆன்மிகம் அதிகமாகவே கலந்து போய்விட்டது. ஆனால் இது கூட்டத்தினர்களை ஈர்க்கின்றது. ஆனால் இது ஒரு கூட்டு மனப்பான்மையை மட்டுமே ஈர்க்க முடியும். உங்கள் எல்லோருக்கும் கூட்டு மனப்பான்மையின் ஏதோ ஒரு அம்சம் உங்களுக்குத்தான் இழக்கின்றது. அந்தக் கூட்டு மனப்பான்மை விடப்படவேண்டும். அப்படியானால்தான் நீங்கள் என்னுடன் முழுமையாக இருக்க முடியும்.

அன்று ஒரு நாள் நான் பேசிக்கொண்டு இருக்கையில் இவையெல்லாம் ஒரு வகை 'சர்க்கஸ்' என்று சொன்னேன் - அதாவது சில மனிதர்கள் திருநீறும் கைகடிகாரங்களையும் தருவிப்பது. நான் அசோக்கைப் பார்த்தேன்; அவனுக்கு நான் சத்ய சாய்பாபாவை குறிப்பிடுவேன் என்று கவலையாகிவிட்டது. அசோகாவுக்கு சத்யசாய் பாபாவும் அவருடைய அற்புதங்கள் மீதும் ஆர்வம் அதிகம். நான் இதைப்பற்றி பேசும்போது அவன் தலையை தாழ்த்தி வைத்துக்கொண்டு இருந்தான். அவனுக்கு

அதிக பயம். அவனுக்காக நான் அனுதாபப்பட்டேன். நான் சத்யசாய் பாபாவைக் குறிப்பிடவில்லை. ''சரி அதை மறந்து விடுங்கள். அசோகா வருத்தப்படுவான். அவன் புதிய சன்னியாசி, அவனிடம் நான் இவ்வளவு விரைவில் கடினமாக இருக்க முடியாது.''

உங்கள் எல்லோருக்கும் அந்தக் கூட்டு மனப்பான்மை இருக்கிறது. இதனால் சாதாரணமானவராகவே இருப்பீர்கள். அசலாக இருங்கள். நீங்களாக இருங்கள். அறிவுக் கூர்மையான கண்களோடு வாழ்க்கையை நோக்குங்கள்.

## ஆறாவது கேள்வி:

> *நான் ஆயாசமாய் இருக்கிறேன். எந்நேரமும் செத்துப் போய் கொண்டிருப்பதுபோல் உணர்கிறேன். ஆனால் என்ன மாறுகிறது? ஒன்றுமில்லை. நான் இறந்துபோனால்கூட, வாழ்வும் சாவும் முழுமையானவையாக முழு வட்டமானது. நான் தொடர்ந்து என் வாலைச் சுற்றி ஓடிக்கொண்டே இருக்கிறேன். நான் நிற்பதற்கு இடமே இல்லையா? நிற்பதற்கு ஒரு கணம். ஒரே ஒரு கணம்? ஆனால் நான் கடந்து போய்க்கொண்டே இருக்கிறேன். ஓடிக்கொண்டே இருக்கிறேன். நான் இழந்ததைக் கூட அறிவதில்லை. அடுத்து நான் அழுகின்றேன். என்னால் வேறு என்ன செய்ய முடியும்.*

சங்கீதம், ஒருவர் ஒவ்வொரு கணத்திலும் இறந்தும் போய்க் கொண்டிருக்கிறார். ஆனால் அது பாதிக் கதைதான். மற்றொரு பாதி: ஒருவர் பிறந்துகொண்டும் இருக்கிறார். இல்லையென்றால் நீங்கள் எப்படி செத்துக்கொண்டேயிருக்க முடியும்? ஒரு கணத்தில் நீங்கள் இறந்துபோன பிறகு வேறு எதுவும் மிஞ்சி இருக்கப்போவதில்லை. பிறகு யார் மறுபடியும் இறந்துபோவார்? நீங்கள் ஒவ்வொரு கணமும் பிறந்து கொண்டும் இருக்கிறீர்கள். அதனால்தான் நீங்கள் மறுபடியும் இறந்து மறுபடியும் பிறக்க முடியும். வாழ்க்கை எடுப்பது வாழ்வு

- சாவு என்ற வழிமுறையாகும். ஒருபுறம் பிறப்பு, மறுபுறத்தில் சாவு. ஒவ்வொரு கணமும் நடந்து கொண்டிருக்கிறது. நீங்கள் ஒரு பாதியை மட்டும் பார்க்கிறீர்கள். அது அச்சமூட்டுகிறது. ஆயாசம் அளிக்கின்றது. முழுவதையும் பாருங்கள்.

ஒன்று இறந்துபோகும்போது அது மற்றொரு வடிவில் பிறக்கின்றது; ஒரு அலை ஓய்ந்தவுடன் மற்றொன்று தோன்றுகிறது. பூமியில் ஒரு மலர் விழும்போது மற்றொரு மொட்டு மலர்கின்றது. வாழ்க்கை தொடர்ச்சியானது. முடிவற்றது. பிறப்பும், இறப்பும் அதில் வரும் நிகழ்வுகள். அது பிறப்பில் தொடங்கி, இறப்பில் முடிவதில்லை. உங்களுடைய இரண்டு கால்களையும் நீங்கள் பயன்படுத்துவதுபோல அது பிறப்பையும் இறப்பையும் பயன்படுத்துகிறது. பிறப்பையும் இறப்பையும் இரண்டு இறக்கைகள் போல வாழ்க்கை பயன்படுத்துகின்றது. வாழ்க்கையானது பிறப்பும் இல்லை. இறப்பும் இல்லை. இரண்டிற்கும் இடையில் உள்ளது. ஒவ்வொரு கணத்திலும் நீங்கள் இறக்கின்றீர்கள். ஒவ்வொரு கணத்திலும் நீங்கள் பிறக்கின்றீர்கள். நீங்கள் கேட்பது என்னவென்றால், 'எல்லாம் நின்று போகும் ஒரு கணத்தை நான் கண்டுபிடிக்க முடியுமா?'' அந்த கணம் ஒவ்வொரு கணத்திலும் இரண்டு நடைமுறைகளுக்கு இடையே வருகின்றது. ஒன்று இறப்பு. மற்றொன்று பிறப்பு. இவ்விரண்டிற்கும் நடுவே ஒரு இடைநிறுத்தம் வருகிறது. அந்த இடை நிறுத்தம்தான் நிகழ்காலம். அந்த இடை நிறுத்தத்தில் நீங்கள் இருக்கமுடியுமானால் நீங்கள் ஒரு மோஜீத் ஆகிவிடுவீர்கள். இதில் குரு உங்களுக்குத் தோன்றுவார். உங்கள் குரு உங்களிடம் பேசத் தொடங்குவார்.

சங்கீதம், நீங்கள் மூச்சை கவனிப்பது போன்று ஏதாவது செய்தால் நன்றாக இருக்கும். மூச்சை உள்ளே இழுக்கவேண்டும். சுவாசத்தை மாற்ற வேண்டாம். ஏதோ ஒரு வகை *பிராணாயாமம்* செய்ய சொல்லவில்லை; ஆழ்ந்த மூச்சு, நீண்ட அல்லது குறுகிய மூச்சு எடுத்து விட தேவையில்லை. சுவாசத்தை எதுவும் செய்யத் தேவையில்லை. வெறுமனே அதை உள்ளே வர அனுமதியுங்கள்.

அது இயற்கையாக தானாகவே வருகின்றது; அதை நீங்கள் கவனியுங்கள். சும்மா கவனித்துக்கொண்டே இருங்கள். கவனிப்பு, கவனிப்பு, கவனிப்பு. அது வருகிறது, வருகிறது. ஒரு குறிப்பிட்ட கணத்தில் எல்லாமே நிற்கின்றது. மூச்சு உள்ளே வரவில்லை. இன்னமும் வெளியே போகவுமில்லை. அடுத்து வெளியே போகத் தொடங்குகிறது. அதை கவனியுங்கள், அதனுடன் வெளியே செல்லுங்கள். மறுபடியும் ஒரு கணம் வருகிறது. மூச்சு வெளியே போகிறது - ஒரு நிறுத்தம். மிக நுணுக்கமான ஒரு நிறுத்தம். ஒரு இடைவெளி. மூச்சு அசைவதேயில்லை. அது வெளியேறவும் இல்லை. உள்ளே வரவும் இல்லை. தொடர்ந்து கவனித்தீர்கள் என்றால் இந்த இரண்டு கணங்களையும் நீங்கள் கண்டுபிடிக்க முடியும். மூச்சு வெளியேறியவுடன் நிறுத்தம் வருகிறது. நீங்கள் நிறுத்தவேண்டும் என்று நான் சொல்லவில்லை. அப்படியானால் முழு கருத்தையும் தவறவிடுவீர்கள். அது தானாகவே வரும். இரண்டு மூச்சுகளுக்கும் இடையே, அதாவது உள்ளே வருவது மற்றும் வெளியேறுவது, இரண்டு நிறுத்தங்கள் வரும். அதை கவனியுங்கள்.

> *''நான் நிற்பதற்கு இடமே இல்லையா?'' என்று கேட்கிறீர்கள்.*

ஓர் இடம் உள்ளது. புத்தர் அந்த இடத்தை மிக மிக ஆழ்ந்த வகையில் பயன்படுத்தினார். பல்லாயிரக்கணக்கான மனிதர்கள் அந்த இடைநிறுத்தத்திற்கு வந்து சேர்ந்தனர். அது மிகவும் பழைமை வாய்ந்த, ஆழமாகச் செல்லும் தியான வழிமுறையாகும். அதன்பிறகு நீங்கள் பலவற்றில் கவனிப்பு செய்ய முடியும். ஏனென்றால் அந்தக் கணம் பல வழிகளில் வரும். ஒரு சிந்தனை விலகும். அடுத்தது இன்னும் வரவில்லை. இரண்டு சிந்தனைகளுக்கும் நடுவே ஒரு இடைவெளி, ஒரு சிறு வெற்றிடம். அந்த வெற்றிடத்திற்குள் நகருங்கள், அந்த வெற்றிடத்தில் லயித்து இருங்கள். முழு உலகமே நின்றுபோகும். பல வழிகளில் நீங்கள் இதைக் காணமுடியும். உதாரணமாக நீங்கள் ஒரு பெண்ணுடன் புணர்ச்சியில் ஈடுபட்டு இருக்கும்போது, ஒரு உச்சத்தை அடைவீர்கள். வீரியம் பெரிதாகிக் கொண்டே

போகும். ஒரு குறிப்பிட்ட கணத்தில் உங்களால் மீண்டு வர முடியாது. ஒரு திருப்புமுனை. அந்தக் குறிப்பிட்ட கணத்தில்தான் நீங்கள் முழுமையினால் ஆட்கொள்ளப்படுகிறீர்கள். நீங்கள் இங்கே இல்லை. தான் என்ற எண்ணம் மறைந்துவிடுகிறது. அதுவே புணர்ச்சியின் சிறப்பு. ஒரு கட்டத்திலிருந்து நீங்கள் திரும்ப முடியும். வழிமுறையை நிறுத்த முடியும். ஆனால் இதற்கு அடுத்த கட்டத்திலிருந்து உங்களால் திரும்ப முடியாது. நீங்கள் இதில் நெடுந்தூரம் சென்றுவிட்டீர்கள். இதைக் கடந்துதான் போக வேண்டும். அந்த இரண்டு தருணங்களுக்கு இடையே ஒரு இடைவெளி இருக்கிறது. வேண்டுமானால் இப்போது புணர்தலை நீங்கள் நிறுத்தலாம். பின்வாங்கலாம். ஆனால், அதற்கு அடுத்த கணமே உங்களால் திரும்ப முடியாது. மீள்வதற்கான சாத்தியக்கூறு இல்லை. நீங்கள் புணர்ச்சிப் பரவச நிலையை கடந்துபோயாக வேண்டும். இந்த இரண்டிற்குள் நடுவே ஒரு இடைவெளி உள்ளது. அந்த இடைவெளியைக் கண்டுபிடியுங்கள். உலகமே அந்த இடத்தில் நின்று போகிறது.

மறுபடியும் நீங்கள் உச்சநிலை அடைந்தபிறகு, விந்து வெளியேறும். புணர்ச்சிப் பரவச நிலை அடைவீர்கள். உச்ச நிலை அடைந்துவிட்டீர்கள். மறுபடியும் திரும்புவீர்கள். இந்த இரண்டிற்கும் இடையே ஒரு வெற்றிடம். அந்த வெற்றிடத்தைக் கண்டுபிடியுங்கள். கண்டுபிடித்தால் தியானத்தின் இரகசியத்தைக் கண்டுபிடிப்பீர்கள். இந்த இடைவெளிகளை தியானங்களாக தந்திர சாஸ்திரம் பயன்படுத்தி உள்ளது. அவை மகத்தானவை. மூச்சுகளுக்கிடையே நீங்கள் கண்டுபிடிக்கும் இடைவெளி அவ்வளவு தீவிரமானது அல்ல. ஏனென்றால், சுவாசம் ஒரு சாதாரணமான இயல்நிகழ்வுதான். மனதில் தோன்றும் இரண்டு சிந்தனைகளுக்கு இடையே கவனித்தால் நீங்கள் அந்த இடைவெளியை கண்டுபிடிக்க முடியும். ஆனால் புணர்ச்சி பரவச நிலையில் உள்ள இடைவெளியை நீங்கள் கண்டுபிடிக்க முடியுமானால் அது தீவிரமாக இருக்கும். உங்கள் வாழ்க்கையின் அதி தீவிரமான அனுபவம் இதுவே. இங்கே நீங்கள் கட்டுக்

கடங்காமல் போகிறீர்கள். இங்கே நீங்கள் ஆயிரமாயிரம் துகள்களாக வெடித்துப்போகிறீர்கள். அகங்காரம் வெறும் துகள்களாக உடைகிறது. எல்லாமே அந்த கணத்தில் காணாமல் போகின்றன. நீங்கள் அந்த இடத்தில் இல்லை. ஆயினும், ஏதோ ஒன்று இருக்கிறது. அந்த 'ஏதோதான்' உங்கள் மெய்மை. உங்களின் அத்தியாவசியமான மென்மையாகும்.

> நீங்கள் கேட்கிறீர்கள், ''நான் ஆயாசமாய் இருக்கிறேன். எந்நேரமும் செத்துப்போய்க் கொண்டிருப்பதுபோல் உணர்கிறேன். ஆனால் என்ன மாறுகிறது? ஒன்று மில்லை. நான் இறந்துபோனால்கூட வாழ்வும் சாவும் முழுமையானவைதான். முழு வட்டமானவை. நான் தொடர்ந்து என் வாலைச் சுற்றி ஓடிக்கொண்டே இருக்கிறேன்.''

அதை நீங்கள் நிறுத்த வேண்டும். உங்கள் வாலைச் சுற்றி ஓடிக் கொண்டிருப்பது ஒரு மிக மிக நச்சுவட்டமானது. நீங்கள் அதைப் பிடிக்க முடியாது. நீங்கள் பனி காலத்தில் ஒரு நாய் வெயிலில் குளிர்காய்ந்து கொண்டிருப்பதை பார்த்ததில்லையா!

ஆனால், திடீரென நாய் குதித்து எழும். வாலும் கூடவே குதிக்கும். நாய்க்கு பித்துப் பிடித்து விடும். சுற்றி சுற்றி வாலைப் பிடித்துப் பார்க்கும். இதுதான் நடக்கிறது.

உங்கள் வாலைத் துரத்திக் கொண்டு இருக்காதீர்கள். இந்தக் கதையைக் கேளுங்கள், இங்கே ஆபத்து இருக்கிறது...

ரயில் வரும் பாதையில் ஒரு நாய் குறுக்கே ஓடியது. ஆனால் நாய் இடைதூரத்தை தவறாக கணித்ததால் ரயில் நாயின் வாலை துண்டித்துவிட்டது.

நாய் தன் காயங்களை நக்கிவிட்டு, மறுபடியும் தன் துண்டான வாலைத் தேடி தண்டவாளத்திற்கு வந்தது. உடனேயே மற்றொரு ரயில் வந்து நாயின் தலையை துண்டித்தது.

கதையின் நீதி: ஒரு வால் துண்டைத் தேடிப் போக தலையை இழந்துவிடாதே!

வாலை நீங்கள் கண்டுபிடிக்கவே முடியாது. ஆனால் வாலைத் தேடிக்கொண்டே இருந்தீர்கள் என்றால், உங்கள் தலையையும் தொலைத்து விடுவீர்கள்.

இடைவெளிகள் எப்போதும் இருந்து கொண்டேயிருக்கும். நீங்கள் சற்றே அதிகக் கவனிப்புடன் இருக்கவேண்டும். சற்றே அதிக விழிப்புணர்வுடன் இருக்கவேண்டும்.

## கடைசி கேள்வி:

*ஞானம் ஏற்பட தனிச்சிறப்பான இடம், பிரத்யேக காலம் தேவையா?*

ஒவ்வொரு இடமும் சிறப்பானதுதான், ஏனென்றால் ஒவ்வொரு இடமும் இறைவனால் நிரம்பி வழிகின்றது. எந்த இடமும் சாதாரணமானது அல்ல. உங்கள் கழிவறையில் கூட ஞானம் ஏற்படலாம்! உங்கள் கழிவறையைக் கண்டு ஞானம் பயப்படப் போவதில்லை. எங்கு வேண்டுமானாலும் ஞானம் பெறலாம். நீங்கள் புனிதமான இடம் தேடிப் போக வேண்டாம். அப்படி ஏதுமில்லை. முழு இயல் உலகும் புனிதமானதே! நீங்கள் வாரணாசி அல்லது ஜெருசலேம் அல்லது கப்பாவிற்கு போக வேண்டியதில்லை. எல்லாம் அபத்தம். எல்லா இடங்களும் கடவுள் நிறைந்தவைதான். ஒவ்வொரு புள்ளியும் சிறப்பானது.

என்ன சிறப்பான காலத்தைப் பற்றியா கேட்டீர்கள்? ஞானம் அடைவதற்கு ஏதோ ஒரு காலம், ஒரு குறிப்பிட்ட பருவம் இருக்கிறதா என்ன? ஞானம் உண்மையில் ஏற்படுவதில்லை. அது ஏற்படக்கூடிய ஒன்றென்றால் ஒருக்கால், ஒரு குறிப்பிட்ட மண், பருவம், இடம், சில குறிப்பிட்ட நாட்களில் அது சாத்தியமாகக் கூடியது என்று சொல்லலாம். ஆனால் ஞானம் ஏற்படும் ஒன்றல்ல. ஞானம் என்பது வெறுமனே அடையாளம் தெரிந்துகொள்வது. நீங்கள் எப்போதும் ஞானம் உடையவர் என்பதை அடையாளம் காண்பதாகும். நீங்கள் எந்த ஒரு கணத்திலும் அதைத் தொலைக்கவில்லை என்று அறிந்து கொள்ளுதலாகும். அதனால்தான் நீங்கள் ஜென் குருக்களின் விசித்திரமான *சடோரி* அனுபவங்களை எதிர்கொள்கிறீர்கள்.

யாரோ ஒருவர் கடைத்தெரு வழியே போய் கொண்டிருக்கும் போது, வேறு யாரோ 'வைர சூத்திரத்தை' சொல்வதைக் கேட்கிறார். ஒரே ஒரு வரியைக் கேட்டதில் அவருக்கு ஞானம் பிறக்கிறது. இது எவ்வாறு சாத்தியம்? வைர சூத்திரத்தின் ஒரே வரியை கேட்டதில், அதாவது நீங்கள் தொடக்கத்திலிருந்தே ஞானம் அடைந்தவர் என்றதை கேட்டதினால் சாத்தியமாகுமா? ஆம். எதுவும் நடக்கக்கூடியது, ஏனென்றால் ஞானம் அடைவது உங்களது இயல்பு. உங்களுக்கான இயல்பு. அது ஏதோ புற விஷயமானது அல்ல. பூ ஏற்கெனவே மலர்ந்து கொண்டிருக்கிறது. நீங்கள் அதை கவனிப்பதில்லை. வேறு எங்கோ பார்த்துக் கொண்டு இருக்கிறீர்கள். நீங்கள் உங்களுக்குள்ளே பார்ப்பதில்லை.

அது நடக்கக்கூடும். திடீரென குரு, சீடனை அடிக்கும்போது சில சமயங்களில் நடக்கும். குருவின் கைத்தடி தலையில் படும்போது ஏதோ ஒன்று தூண்டிவிடப்படுகிறது. சிந்தனை ஓட்டம் நிற்கின்றது. சட்டென அறிந்து கொள்கிறோம். விழிப்புணர்வு நிலை கொள்கிறான்.

எதுவானாலும் சரி.... ஒரு சீடன் பல மாதங்களாக, வருடக் கணக்காக அமைதியாக உட்கார்ந்து தியானம் செய்து கொண்டே இருந்தான். பிறகு குரு வந்தார். அவர் கையோடு கொண்டு வந்த செங்கலை புத்தர் போல் அமர்ந்திருக்கும் சீடன் முன்பு தேய்க்கத் தொடங்கினார். மணிக்கணக்காக ஆடாமல் அசையாமல் கற்சிலை போல் உட்கார்ந்து இருப்பதில் சீடன் தேர்ச்சி பெற்று இருந்தான். இப்போது குரு தரையில் செங்கலைக் கொண்டு தேய்க்கிறார். நிச்சயமாக சீடனுக்குப் பெரும் இடையூறாக இருந்திருக்கும். பல் கூசியிருக்கும். ஒருவர் தன் முன்னே கல்லைத் தேய்த்துக் கொண்டிருக்கிறார். வேறு எவருமில்லை. தன் குருவே அப்படிச் செய்கிறார்! முடிந்தவரை கட்டுப்படுத்திப் பார்க்கிறான் சீடன். ஒரு கட்டத்தில் ''நிறுத்துங்கள், என்ன செய்துகொண்டிருக்கிறீர்கள்?'' என்றான். ''நான் இந்த செங்கலை வைத்து ஒரு கண்ணாடி செய்ய முயற்சி செய்கிறேன். தேய்த்துத், தேய்த்து ஒரு நாள் அது முகம் பார்க்கும் கண்ணாடி ஆகிவிடும்'' என்றார் குரு.

சீடன் சிரித்தான், ''நீங்கள் பைத்தியமாகிவிட்டீர்கள் போல.''

குரு சொன்னார், ''நீ மட்டும் என்ன? உன் மனம் என்னும் செங்கல்லை வருடக்கணக்காக தேய்த்துக் கொண்டிருக்கிறாய், ஏதாவது நடக்கும் என்று நினைத்துக்கொண்டிருக்கிறாயா?'' சட்டென மேகங்கள் விலகின. ''அட!'' என்ற சீடனுக்கு முற்றிலும் விளங்கியது, குருவின் கால்களில் விழுந்தான்.

ஆனால், அறியாமையின் அளவு மிக மென்படலமாக இருக்கும் தருணங்களை குரு கவனித்து செயல்பட வேண்டும்.

அனூப்பிடமிருந்து ஒரு கேள்வி, அவர் கேட்கிறார், ''பகவான், நீங்கள் ஏன் என்னை அடிக்கக்கூடாது?''

அனூப்! நீங்கள் ரொம்ப கனத்து இருக்கிறீர்கள். உங்களைச் சுற்றி பெரிய அடிதாங்கிகளை வைத்திருக்கிறீர்கள். நான் காத்துக் கொண்டிருக்கிறேன். நீங்கள் வருவதற்கு பதிலாக, மேலும், அதிகமாக அடி தாங்கிகளைச் சேர்த்துக் கொண்டு இருக்கிறீர்கள். உங்களின் இருப்பு இங்கே முழுமையாக இல்லை. அரைமனதாக இருக்கிறது. வந்து போகிறீர்கள். நீங்கள் நினைக்கிறீர்கள். ஏதாவது நடந்தால் சரி, ஏதும் நடக்கவில்லை என்றாலும் சரி, இந்தச் சமூகத்தோடு நீங்கள் ஈடுபடவில்லை. நீங்கள் ஒரு சன்னியாசி. ஆனால் வெளியில் இருக்கிறீர்கள். குடும்பத்தில் ஒருவராகவில்லை. என்னிடம் உறவுமுறை வேண்டும் என்று விரும்புகிறீர்கள். ஆனால் குடும்பத்தோடு உறவுகொள்ள பயப் படுகிறீர்கள். நினைவிற் கொள்ளுங்கள். இந்தக் குடும்பத்தோடு உறவுகொள்ள முடியவில்லை என்றால், என்னுடன் உறவு கொண்டாட வழியே இல்லை. உங்களின் அடிதாங்கிகளை உடைப்பதற்கு நான் பயன்படுத்தும் கருவிதான் குடும்பம்.

என்னை நேசிப்பது எளிது. ஆனால் லக்ஷ்மியை நேசிப்பது சுலபமல்ல. நீங்கள் லக்ஷ்மியை நேசித்தால் ஒழிய ஒன்றும் நடக்கப்போவதில்லை. என்னைச்சுற்றி நான் சேகரித்து வைத்திருக்கும் மனிதர்கள் ஒரு காரணத்திற்காக இங்கு

இருக்கின்றனர். என்னை நேசிப்பதில் ஒரு பிரச்சினையுமில்லை. அது இனிமையானதுதான். ஆனால் தீக்ஷாவை நேசியுங்கள்! அப்படியானால் கசப்பு என்னவென்று தெரியும். தீக்ஷாதான் என் வாயிற் கதவு; நீங்கள் தீக்ஷா மூலமாகத்தான் உள்ளே வரமுடியும். நீங்கள் தீக்ஷாவை நேசிக்கத் தொடங்கும் நாளன்று என்னிடம் நெருங்க முடியும், அல்லாமல் நடக்காது.

இங்கே சில சாமர்த்தியசாலிகள் இருக்கிறார்கள். — அதில் அனூப் ஒருவர், திறமைசாலி, கணக்காக இருப்பவர். அவர்கள் என்னிடம் நேரிடையாக உறவு வைத்துக் கொள்ளலாம் என்று நினைக்கின்றனர். அது சாத்தியமில்லை. நான் உருவாக்கும் சூழ்நிலைகளை நீங்கள் தவிர்க்க முடியாது. நீங்கள் அதை ஏற்றுக்கொள்ள வேண்டும். அதனால்தான் அது ஒரு சூழ்நிலையாக இருக்கிறது. அதனால்தான் அது ஒரு கருவி. அதை ஏற்றுக்கொள்வது கடினம். இதுதான் சுதீஷின் முதல் கேள்வி. அவரால் இந்த அமைப்பை ஏற்றுக்கொள்ள முடியவில்லை. அவரால் அமைப்பை ஏற்றுக்கொள்ள முடியாவிட்டாலும் என்னை நேசிப்பதாக நினைக்கிறார். இந்த நேசம் போதாது. என்னை தேவையான அளவிற்கு நீங்கள் நேசித்தால் தான் இங்கே உருவாக்கும் விஷயங்களுக்கும் உங்களால் 'ஆம்' என்று சொல்ல முடியும். அவற்றில் ஏதோ ஒன்று இருக்க வேண்டும்.

இப்போது உங்களால் அதைப் பார்க்க முடியாது. உங்களிடம் கண்கள் இல்லை.

சுதீஷ் சொல்கிறார்; ''உங்களைச் சுற்றியுள்ள விஷயங்கள் சரியாக இல்லை. எல்லாம் தலைகீழாக உள்ளன.'' அவை எல்லாம் அவ்வாறு என்னால் நிர்வகிக்கப்படுகின்றன. அவற்றின் ஊடே கடந்து வந்து, அவற்றை ஏற்றுக் கொள்ளுதலே என்னருகே வருவதாகும். இது உங்களை நம்பிக்கையில் வளர வைக்கும். உங்களால் வளர முடியவில்லை எனில் விட்டு விலகுவது நல்லது. வேறு யாருக்காவது உங்கள் இடத்தை விட்டுக் கொடுங்கள்.

அனூப், நான் ஏன் அவரை அடிப்பதில்லை என்று மீண்டும் மீண்டும் கேட்கிறார். அதற்கு நீங்கள் தகுதியுடையவராய்

இருக்க வேண்டும். இந்த அடி மலிவானது அல்ல, அது விலை அதிகமானது. நான் யாரையோ, அல்லது எல்லோரையும் அடிப்பது இல்லை. அடுக்கு மெலிதாக இருப்பதைக் கண்டால், ஒரு சிறிய அடி போதுமானது. மேகங்கள் எல்லாம் கரைந்துவிடும்.

ஞானம் எங்கு வேண்டுமானாலும், எந்த சமயத்திலும் ஏற்படலாம். அது நடந்தேற நீங்கள் அனுமதிக்க வேண்டும். இடம் மற்றும் காலம் என்ற கேள்வி இங்கே இல்லை, நீங்கள் அதை அனுமதிக்கின்றீர்களா என்பதே கேள்வி.

ஒரு நீதிக்கதை, நவீன ஜென் உவமைக் கதை, ஜென் புத்தகங்களில் நீங்கள் இதைக் காண முடியாது.

அறிவொளி நாடுபவர் ஒருவரின் ஞானம்:

தீவிர எண்ணங்கள் உடைய இளைஞன் ஒருவனுக்கு இருபதாம் நூற்றாண்டு அமெரிக்கா குழப்பத்தை அளித்தது. அவனுக்குத் தொல்லை கொடுக்கும் முரண்பாடுகளை களையும் பொருட்டு அவன் பலரிடம் வழிமுறைகள் கேட்டான். ஆனால் அவன் வருத்தம் நீங்கவில்லை.

ஒரு நாள் காஃபி கடை ஒன்றில் தன்னைத் தானே ஜென் குருவாக நியமித்துக் கொண்ட ஒருவர் அவனிடம், ''நான் தரும் முகவரியில் உள்ள சிதைவுற்ற மாளிகைக்குப் போ. அங்கு வாழும் எவருடனும் பேசாதே. நாளை இரவு சந்திரன் எழும் வரை யாருடனும் பேசாதே. வலது பக்கத்தில் இருக்கும் பெரிய அறைக்குச் சென்று வடகிழக்கு மூலையில் இருக்கும் கற்கூளத்தின் மீது மூலையைப் பார்த்து உட்கார்ந்து தியானம் செய்'' என்று சொன்னார்.

குரு சொன்னதுபோல் செய்தான். கவலைகள் அவன் தியானத்தை அடிக்கடி இடையூறு செய்தன. இரண்டாவது மாடியிலிருந்து கற்களோ, வேறு பொருட்களோ தான் உட்கார்ந்து இருக்கும் குவியலின் மீது விழுமோ என்று பயந்தான். அடுத்த நாள் இரவு சந்திரன் எப்போது வருமென்று தான் தெரிந்து

கொள்வது எப்படி என்று கவலைப்பட்டான். அறையைக் கடந்து செல்வோர் தன்னைப் பற்றி என்ன சொல்வார்கள் என்று கவலைப் பட்டான்.

அவனது கவலையும் தியானமும் இரண்டாவது மாடியிலிருந்து அவன்மீது விழுந்த துர்நாற்றக் கழிவுகளினால் இடையூறுக்கு உள்ளானது. அந்த சமயத்தில் இரண்டு பேர் அறைக்குள் வந்தனர். முதல் மனிதர் இரண்டாம் மனிதரைப் பார்த்து, மூலையில் உட்கார்ந்து இருப்பவர் யார் என்று கேட்டார். இரண்டாமவர் சொன்னது; ''சிலர் அவர் ஒரு புனித மனிதர் என்கின்றனர். பிறர் அவர் ஒரு ஷிட்ஹெட் (வெறுக்கத்தக்கவன்) என்று சொல் கின்றனர்''

இதைக் கேட்டதும் அவனுக்கு ஞானம் உண்டானது.

எந்தச் சூழ்நிலைக்கும் உகந்தவாறு இருப்பதுதான் தேவை. அவன் காதில் விழுந்தது வைர சூத்திரம் அல்ல. அவர்கள் சொன்னதை அவன் கேட்டு இருக்க வேண்டும். அந்தக் கணத்தில் முழுக் கவனத்தோடு அவன் இருந்திருக்கவேண்டும். யாரோ உங்களைப் பற்றி பேசிக் கொண்டு இருக்கையில், ஒருவர், சிலர் அவர் ஒரு புனிதமான மனிதர் என்று கூற, மற்றவர்கள் அவர் வெறுக்கத்தக்கவர் என்று சொல்கின்றனர். இதைக் கேட்டதும் அவனது சிந்தனை எல்லாம் நின்று போயிருக்க வேண்டும். அந்த மனிதன் ஞானம் பெற்று விட்டான்.

எப்போது வேண்டுமானாலும் எந்த இடத்திலும் இது உங்களுக்கு நடக்கலாம். ஞானம் கிடைக்கக்கூடியது. அது வெளியிலிருந்து வருவதில்லை. சிந்தனைகள் இல்லாமல் போகும்போது, அது உங்கள் அகத்திலிருந்து வருகிறது. சிந்தனைகள் உங்கள் கவனத்திற்காக ஆர்ப்பரிக்காதபோது, நீங்கள் திடீரென அமைதியாகி விடுகிறீர்கள். அதீத கவனம் கொள்கிறீர்கள். விழிப்புணர்வோடு இருக்கின்றீர்கள், அப்போது உங்கள் உயிருருவின் அடி ஆழத்திலிருந்து வருகிறது. ஒரு நறுமணம்போல் வெளி வருகிறது. நீங்கள் ஒருமுறை அது நடக்கக் கண்டீர்களானாலும் அது என்றென்றும் உங்களுடையதே!

# நீங்கள் நீங்களாகவே இருப்பதற்கு இங்கே உள்ளீர்கள்

மார்ச் 4, 1978

## முதல் கேள்வி

*பகவான், ஏன் இவ்வளவு மனிதர்கள் உங்களுக்கு எதிராக இருக்கிறார்கள்?*

இது இயற்கைதான். விசித்திரம் ஒன்றுமில்லை. எனக்கு எதிராக இல்லை என்றால்தான் அது விசித்திரமாகும். என்றென்றும் எனக்கு எதிரான மனிதர்களாகவே உள்ளனர். அப்படித்தான் இருக்க வேண்டும். அது தவிர்ப்பதற்கல்லாதது.

நான் இங்கே செய்து கொண்டிருப்பது எல்லாமே அவர்கள் மனம் நொறுங்கும் வகையானது. அவர்களது அடிவேரை அறுப்பது போன்றது. பல வகைகளில் அவர்களை அவமதிக்கின்றது. அதிர்ச்சி அளிக்கிறது. இது அவதூறானது. அவர்கள் தங்களைத் தற்காத்துக் கொள்ள எதிர்வினையாற்றுகிறார்கள். அவர்களை பெரிதும் அவமதிக்கும் ஒன்றைப் புரிந்து கொள்ளவேண்டும்.

தான் ஞானம் அடைந்துவிட்டதை புத்தர் பிரகடனப்படுத்திய போது மக்கள் பெரிதும் புண்பட்டனர். வருத்தம் அடைந்தனர். கடந்த காலத்தில் ஞானம் பெற்றவர்களை அவர்களால் நம்ப முடிந்தது. ஆனால் ஒரு சமகாலத்தவரை, தங்களைப் போன்ற ஒரு மனிதர் என்றபோது அவர்களால் நம்பமுடியவில்லை. வருங்காலத்தில் மனிதர்கள் ஞானம் பெறுவர் என்பதை அவர்களால் நம்ப முடிகிறது. ஆனால் நிகழ்காலத்தில்? சமகாலத்தில்? யாரோ ஒருவர் ஞானம் அடைந்துவிட்டார் என்பது அகங்காரத்தைக் காயப்படுத்துகிறது; ''அப்படியானால் நான் இங்கே என்ன செய்துகொண்டிருக்கிறேன்?'' இது ஏற்றுக்கொள்ள முடியாதது.

இதே மக்கள்தான் உபநிடதங்களைப் படித்துக் கொண்டிருந் தனர். *'அஹம்பிரம்மாஸ்மி!'* நானே கடவுள்'' என்று ஞானிகள்

உரைத்ததை மறுபடியும் மறுபடியும் படித்தவர்கள். புத்தர் வெறுமனே அதைப் பற்றி விமர்சித்து இருந்தால், அல்லது எல்லோருக்குள்ளும் கடவுள் இருக்கிறார், வெளிப்படாமல் எல்லோருக்குள்ளும் ஒளிந்து இருக்கிறார் என்று சொல்லி இருந்தால்கூட அவர்கள் புத்தரை விரும்பி இருப்பார்கள். ஆனால் அதைப்பற்றி விமர்சிப்பதற்கு பதிலாக அவர் சாட்சியாகிவிட்டார். ''நான் கடவுள், நான் அடைந்துவிட்டேன், வந்தடைந்துவிட்டேன். ஞானிகளின் வாக்கை நிறைவேற்றி விட்டேன்'' என்று புத்தர் பிரகடனம் செய்ததினால் அவர்கள் எல்லோரும் அவமதிப்பிற்கு உள்ளானார்கள்.

ஏசுவிடமும் இதேதான் நடந்தது. அவரது குற்றமென்ன? ஏன் சிலுவையில் அறையப்பட்டார்? ஒரு எளிய காரணத்திற்காகத் தான்; அவர் பிரகடனம் செய்தது, ''நான் வந்துவிட்டேன், நீங்கள் யாருக்காகக் காத்துக் கொண்டிருந்தீர்களோ அது நான்தான்'' காத்திருப்பதில் மக்களுக்கு மகிழ்ச்சிதான். ஆனால் நீங்கள் வரக்கூடாது, அவர்களைத் தொந்தரவு செய்யக்கூடாது. அவர்கள் காலங்காலமாய் காத்திருப்பர். ஆனால் நீங்கள் வந்துவிட்டால் பலவற்றை அழிக்கின்றீர்கள். முதலில் அவர்களது நம்பிக்கையை தகர்க்கின்றீர்கள். நீங்கள் வந்துவிட்டதினால் அவர்கள் நம்பிக்கை கொள்ள முடியாது. ஏதோ ஒன்றிற்காகக் காத்திருக்க முடியாது. நீங்கள் அவர்களின் வருங்காலத்தை எடுத்துக்கொண்டு விட்டீர்கள்.

அவர்கள் வாழ்க்கையின் ஒரே மகிழ்ச்சி அதுவே. அதாவது மீட்பாளர் வருவார், விரைவிலேயே வருவார். வருங்காலத்தைப் பற்றிக் கிளர்ச்சியில் இருந்தனர். இப்போது, திடீரென மீட்பாளர் வந்து நிற்கின்றார்! மேலும் அவர் சொன்னது, ''நான் வந்துவிட்டேன்.... நீங்கள் யாருக்காக காத்துக் கொண்டு இருந்தீர்களோ அது நான்தான்'' அவர்கள் அவமதிப்பிற்கு உள்ளானார்கள். இந்தக் கருத்து அவர்களுக்குப் பிடிக்கவில்லை. அவர்களது முழு வருஙகாலத்தையுமே நீங்கள் அழிக்கின்றீர்கள், அவர்களது நம்பிக்கையை மறுக்கின்றீர்கள். இந்த நம்பிக்கை ஒருமுறை போய்விட்டால் அவர்கள் வெறுமனே

துயரத்தில் விடப்படுவார்கள். இந்த நம்பிக்கையின் பின்னால்தான் அவர்கள் தங்கள் துயரத்தை மறைத்து வைத்திருந்தனர்.

சிலுவையில் அறையும் அளவிற்கு ஏசுவின் அறிவிப்புகளில் மட்டு மீறியது என்ன இருந்தது?

அன்று ஒரு நாள் நான் ஒரு விஷயத்தைப் படித்துக் கொண்டிருந்தேன். 'நற்செய்தி' இந்த நிகழ்வை விவரிக்கின்றது; அவர் நாசரேத்திற்கு வந்தார். இவ்விடத்தில்தான் அவர் வளர்ந்தார். அவர் யூத வழிபாட்டுத் தலமான சினகாகில் படித்துக் காட்டுவதற்காக எழுந்து நின்றார். இசையாவின் நூலைத் திறந்து படிக்கத் தொடங்கினார்.

''கடவுளின் ஆவியானது என் மீதுள்ளது. ஏனென்றால் நற்செய்தியைப் போதிப்பதற்காக அவர் என்னையே நியமித்துள்ளார். வசப்பட்டவர்களை மீட்கவும், பார்வையற்றோருக்கு பார்வை வழங்கவும் என்னை அனுப்பியுள்ளார்.''

ஏசு அவரது உரையில் தீவிரமான ஒரே ஒரு வாக்கியத்தைப் பேசியதால் கேட்டுக் கொண்டு இருந்தவர்கள் அவரை மேலும் பேச விடாமல் வெளியே துரத்திக் கொல்ல முற்பட்டனர். அப்படி என்ன சொல்லிவிட்டார் ஏசு? அவர் சொன்னது, ''இன்று இந்த மறைநூல் வாக்கு நிறைவேறியது.'' இதுவே அவர் சொன்னது.

காலங்காலமாய் ஆயிரமாயிரம் ராபிக்களால் இந்த ஏட்டுரைப் பத்தி விமர்சிக்கப்பட்டுள்ளது. யாரும் அவமதிப்பாய் எடுத்துக்கொள்ளவில்லை. அவர்கள் வெறுமனே இறைதூதர் இசையாவின் கருத்தை விமர்சித்துக் கொண்டிருந்தனர். ஏசு விமர்சனம் செய்யவில்லை. ''நான் இங்கே உள்ளேன்! நான் வந்துவிட்டேன்! கடவுளின் ஆவி என் மீதுள்ளது!'' என்று ஏசு பிரகடனம் செய்தார். அவர் ஒரு கருத்துரையாளர் அல்ல, கருத்துரையே அவர்தான், உயிருள்ள ஓர் அறிவிப்பு. அவர் சொன்னது ''இறைமொழி என்னுள் சதையாகிவிட்டது.'' கடவுளின் ஆவியானது என் மீதுள்ளது. ஏனென்றால் நற்செய்தியைப் போதிப்பதற்காக அவர் என்னையே நியமித்துள்ளார். ஏசு

அறிவித்தது மேற்கோள் குறியிட்டு இருக்கவில்லை. அவர் செய்த ஒரே மாற்றம் அதுதான் - அவர் மேற்கோள் குறியை விலக்கிவிட்டார். இதை அவர் செய்திருக்காவிட்டால் மக்கள் அவமதிக்கப்பட்டு இருக்கமாட்டார்கள். அவர் வெறுமனே இசையா சொன்னதை மேற்கோள் காட்டியிருந்தால் பிரச்சினை இருந்திருக்காது. ஆனால் ஏசுவோ, மேற்கோள் குறிகளின்றி ''கடவுளின் ஆவி என் மீதுள்ளது. ஏனென்றால் நற்செய்தியை போதிப்பதற்காக அவர் என்னை நியமித்துள்ளார், வசப்பட்டவர்களை மீட்கவும் பார்வையற்றோருக்கு பார்வை வழங்கவும் என்னை அனுப்பியுள்ளார்'' என்று அறிவித்துவிட்டார். இறுதியில் ஒரு சிறிய கருத்தையும் சொன்னார். ''இன்று இந்த மறைநூல் வாக்கு நிறைவேறியது.'' மக்கள் வெகுண்டு எழுந்துவிட்டனர். அவரை அப்படியே தூக்கிச் சென்றனர். மலை உச்சிக்குக் கொண்டு சென்றனர். மேலிருந்து வீசிக் கொன்றுவிட விரும்பினர். அதீதமாய் அவமதிக்கப்பட்டு விட்டனர்.

ஏசு அந்த இடத்திற்குரியவர். அவர் அங்கே பிறந்து வளர்ந்தவர். அதுதான் பிரச்சினை. மக்கள் அவரை நன்றாக அறிவர். ''அவர் அந்த தட்சர் ஜோசப் மற்றும் அவர் மனைவி மேரியின் மகன். இந்த தட்சரின் மகன்... படிக்காதவன், மறை நூல்கள் அறியாதவன், பண்டிதரே கிடையாது. ஒன்று பைத்தியமாகிவிட்டான். அல்லது வேடதாரியாகிவிட்டான். பித்துப்பிடித்துவிட்டது அல்லது அகங்காரம் தலைக்கேறிவிட்டது. ''இன்று இந்த மறைநூல் வாக்கு நிறைவேறியது. நான் வந்துவிட்டேன். இசையா என்னைப்பற்றிதான் பேசினார். உங்கள் கண்முன்னே இது நடக்கிறது. உங்கள் கேட்டலில் மறைநூல் வாக்கு நிறைவேறுகிறது'' என்று பிரகடனம் செய்கிறார்.

அந்த நாளில்தான் ஏசு அந்த பிரபலமான கூற்றை சொல்கிறார்: ''எந்த இறைதூதரும் அவருடைய சொந்த நாட்டில் ஏற்றுக்கொள்ளப்படுவதில்லை.''

மாறாக, அவரே, ''இவை நடக்கும் நாள் வரப்போகிறது'' என்று அவர் சொல்லியிருந்தால் விஷயங்கள் முற்றிலும் சரியாக

அமைந்து இருக்கும். ஆனால் அவர் அப்படிச் சொல்லவில்லை. அவர் சொன்னது, ''அந்த நாள் வந்துவிட்டது! நிறைவேறிய வகையில், நான் உங்கள்முன் நின்றுகொண்டிருக்கிறேன். எல்லா இறைத் தூதர்களும் என்னையே குறிப்பிட்டு வந்தனர்.'' இது ரொம்பவே தாங்கிக் கொள்ள முடியாதது.

இந்தியாவில் உபநிடதங்கள் அறிவிப்பது என்னவென்றால், ''*அகம் பிரம்மாஸ்மி* - நானே கடவுள். நான் முழுமையானவன். அதைப் பற்றி பேசுங்கள், விவாதம் செய்யுங்கள். அதை வேதாந்தமாக்குங்கள், அதைப் பற்றி ஊகம் செய்யுங்கள். அந்த வாக்கியத்தின் மெய்பொருளியலுக்குள் செல்லுங்கள், ஆனால் அதற்கு சாட்சியாகிவிடாதீர்கள்.

இதனால்தான் மக்கள் எனக்கு எதிராக உள்ளனர். நான்தான் கடவுள் என்று நான் பிரகடனம் செய்கிறேன். உபநிடதங்கள் என்னுள் நிறைவேறுகின்றது என்று சொல்கிறேன். அதுமட்டுமல்ல, நீங்களும் கடவுள்தான் என்று உரைக்கிறேன். எல்லா இறைதூதர்களும் மறைஞானிகளும் உங்களுக்குள்ளும் நிறைவேறக் காத்துக் கொண்டு இருக்கின்றனர் என்றும் கூறுகின்றேன். ஆனால் நீங்கள் உங்களையே கண்டனம் செய்துகொள்கிறீர்கள். அதி தீவிரமாய் உங்களுக்கு எதிராகவே இருக்கிறீர்கள். உங்களையே அவ்வளவு ஆழமாய் நிராகரித்துக் கொள்வதால் கடவுள் உங்களுக்குள்ளும் சாத்தியமாவார் என்பதை உங்களால் நம்பமுடியவில்லை. உங்களுக்குள் கடவுள் சாத்தியப்படாவிட்டால் எனக்குள் மட்டும் எப்படி முடியும்? ஒருக்கால் கிருஷ்ணருக்கு முடியும்போல - அவர் சொர்க்கத்தில் இருந்து வந்திருக்கிறார். புத்தருக்கு அது நடக்கும், ஏனென்றால் அவர் கடவுளின் அவதாரம். நான் உங்களைப் போன்று உடலால் ஆனவன். உங்களைப் போலவே அழியத்தக்கவன். நோய் நொடி, இறப்பு என்று எல்லாவற்றினாலும் பாதிக்கப்படக் கூடியவன். நான் மனிதன்.

நான் போனபிறகு என் காரணமாக மக்கள் அவமதிக்கப் படமாட்டார்கள். அதன்பிறகு என்னைச் சுற்றி நீங்கள்

பழங்கதைகளையும் புனைவுகளையும் உருவாக்கிக் கொள்ளலாம். அவமதிக்கப்பட்ட அதே மக்கள் என் வழிபாட்டாளர்களாகி விடுவர். எப்போதும் இப்படித்தான் இருந்திருக்கிறது. இப்போது புத்தர் கடவுளின் அவதாரம் என்கிறார்கள், ஆனால். அவர் காலத்தில் என்ன சொன்னார்கள்? இப்போது ஏசு ஒரு இறைதூதர் என்கிறார்கள், பூமியில் பாதிபேர் அவரை கடவுளாக வணங்குகின்றனர். அவர் உயிரோடு இருக்கும்போது என்ன சொன்னார்கள்?

இப்படித்தான் எப்போதும் இருந்தது. துரதிருஷ்டவசமாக, இப்படித்தான் எப்போதும் இருக்கும்போலத் தோன்றுகிறது.

மனிதன் தன்னையே நம்புவதில்லை. பூமியில் கடவுள் என்ற கருத்தை மனிதனால் நம்ப முடியவில்லை. ஒருக்கால், உயரே சொர்க்கத்தில், வெகுதூரத்தில் இருக்கலாம். கடவுள் உங்களுக்கு மேலும் அருகில் வருவாராயின், ஏற்றுக்கொள்ளுதல் கடினமாகிறது. மேலும் இயல்பாகவே அவர்களின் முற்சார்புகளுக்கு எதிராக நான் ஆயிரத்தோரு விஷயங்களைச் சொல்கிறேன். மற்றும் செய்கிறேன். இவையெல்லாம் அவர்கள் கருத்திற்கு எதிராகப் போகின்றது. பூசாரிகளிடம் எப்போதும் மகிழ்வாய் இருப்பார்கள். இறைதூதர்களிடம் மகிழ்ச்சிகொள்வதில்லை. ஏனென்றால் பூசாரிகள் அவர்களது முற்சார்புகளுக்கு உரமிட்டுக் கொண்டே இருப்பார்கள். பூசாரி அவர்களுக்கு உதவுவார். பூசாரி என்றும் ஆதரிப்பவரே; நீங்கள் எதை நம்புகிறீர்களோ அதற்கு அவர் நீர் பாய்ச்சுவார். அதைப் பலப்படுத்திக் கொண்டே இருப்பார். எப்போதெல்லாம் உங்கள் நம்பிக்கை பற்றி உங்களுக்கு சந்தேகம் வருகிறதோ, நீங்கள் பூசாரியிடம் சென்றால் அவர் உங்களுக்கு ஆதரவு தருவார்.

நான் இங்கே உங்களுடைய ஆதாரங்கள் அனைத்தையும் எடுத்து விடுகிறேன். நீங்கள் வசித்துக்கொண்டு இருக்கும் பழைய இத்துப்போன வீட்டை புனரமைப்பதற்கு நான் இங்கே இல்லை. அவற்றை அழிப்பதற்கு உறுதியாய் உள்ளேன். ஏனென்றால் பழையவற்றை முற்றிலும் அழித்தால்தான் புதியதை உருவாக்க

முடியும். நடந்தவற்றை, பழையவற்றை முடித்தால் மட்டுமே நீங்கள் புதியதாய் பிறக்க முடியும்.

இறைதூதர், ஏகநாதர், புத்தர் இவர்கள் உயிரோடு இருக்கும் போது மக்களால் ஏற்றுக்கொள்ளப்படவில்லை. அவர்கள் இறந்தபிறகே ஏற்றுக்கொள்ள முடியும். தங்களுக்கு இந்த இறைத் தூதர்களால் எந்த சேதமும் வராது என்றபோதே ஏற்றுக் கொள்ளப்படுவர். உங்களுக்குத் தீங்கு செய்ய புத்தர் இப்போது இல்லை. உங்களுக்கு அது தீங்கு போல் தோன்றுகிறது. காயம் ஏற்படுத்துகிறது, ஏனென்றால் அவர் அறுவை சிகிச்சை செய்ய வேண்டியுள்ளது.

என்னுடன் இருப்பது தொடர்ந்து அறுவை சிகிச்சை மேசை மீது இருப்பது போல. துணிவுள்ள சிலர் மட்டுமே என்னுடன் இருக்கமுடியும். கோழைகள் அவமதிக்கப்படுவர், ஆனால் கோழைகளால் தாங்கள் கோழைகள் என்று ஏற்றுக்கொள்ள முடிவதில்லை. அதனால் அவர்கள் எதிர்வினையாற்றுவார்கள். வாதம் செய்வார்கள். தங்களைத் தற்காத்துக்கொள்ளும் பொருட்டு ஆயிரத்தோரு கதைகளை உருவாக்குவார்கள். இதனால் நல்உணர்வு கொண்டு தாங்கள் தவறாக இல்லை என்று நினைத்துக்கொள்ள முடியும். நாம் தவறு செய்துள்ளோம் என்று ஏற்றுக்கொள்வதே மாபெரும் புரட்சியின் தொடக்கமாகும். நாங்கள் செய்வது தவறு என்று ஏற்றுக் கொள்ளும் துணிவே வெகு சிலருக்குத்தான் உள்ளது. மேலும் என்னுடைய அருகாமை அவர்களுக்கு தாங்கள் தவறாக இருக்கிறோம் என்ற உணர்வைத் தரும். ஒன்று நான் சரியாக இருக்கிறேன் அல்லது அவர்கள் தவறாக இருக்கின்றனர். சமரசத்திற்கே இடமில்லை. இது அல்லது அது என்பதே கேள்வி. நான் சரி என்றால், அவர்கள் தவறாக இருக்கின்றனர். அவர்கள் சரியாக இருக்கவேண்டும் என்றால், அதை நிரூபிக்கும்பொருட்டு எனக்கு எதிராக உள்ளனர். நான் தவறு என்று அவர்கள் நிரூபிக்கவேண்டும். அது எளிதான ஒன்று. நான் சொல்வதைக் கேட்பதில்லை, என் அருகில் வருவதில்லை. அவர்களிடம் பயம் இருக்கிறது. அருகில் வந்தால், சொல்வதைக்

கேட்டால், என்னால் மனவசியம் செய்யப்பட்டு விடுவோம் என்று அச்சப்படுகின்றனர். மெல்ல, மெல்ல, நம்பிக்கை ஏற்பட்டு மாறிவிடுவோம் என்று பயம், அதனால் வருவதில்லை.

எனக்கு எதிராக உள்ளவர் யாவரும் என்னுடன் பரிச்சயம் அற்றவர்கள். அவர்களது பரிச்சயமின்மை என்பது ஒரு பண்படுத்தப்பட்ட ஒரு இயல் நிகழ்வு. இங்கே வருவதற்குத் தங்களையே அனுமதிப்பதில்லை, வந்தால் மெய்மையைக் காணாமல் இருக்கமுடியாது. அது கிட்டத்தட்ட நடவாத காரியம். நீங்கள் எவ்வளவுதான் அறிவுக்குருடாக இருந்தாலும், உண்மையைக் காணாமல் இருப்பது நடவாத ஒன்று. உங்கள் இதயத்தை ஊடுருவ உண்மைக்கு வழிகள் தெரியும். வசீகரிக்கும் வழிகள் உண்மைக்குத் தெரியும். எதிர்பாராத வகையில் அது உங்களுக்குள் நுழையும், நீங்கள் திடீரென அதைக் காண்பீர்கள். அந்தப் பார்வையில் புரிதல் ஏற்படும்.

## இரண்டாவது கேள்வி.

*நான் ஒரு சூறாவளியில் சிக்கியிருக்கிறேன்.*

*முன் எப்போதும் என் வாழ்க்கையில் இதுபோல பிளவுபட்டதில்லை, அவ்வளவு திரவமயமாக, இந்தளவிற்கு அழகான பாதுகாப்பற்ற உணர்வோடு.*

*என் உயிருரு உங்களை நேசிக்கின்றது - என் உடல் தொடர்ந்து அதிர்வுறுகின்றது - வார்த்தைகள் மனதிற்கு வருகின்றன - பிரகாசமாய் உள்ளது, ...அலைபாய்கின்றது.*

*கணவாய்களுக்கும் காதல் உண்டு, அப்படியொரு தாகம், அன்பிற்குரிய பகவான்...*

அம்ரிதா, இதுவே பிரார்த்தனை நிலை...எப்போது உங்கள் உடல் பிரார்த்தனைகளை செய்கிறதோ... மனம் அல்ல உடல். உடல் தான் உங்கள் மெய்மை. காலங்காலமாய் சேர்த்து வைக்கப்பட்ட பொய்களே உங்கள் மனம். மனம் கடன் வாங்கப்பட்டது, உடல் மெய்யுறுதியாய் உங்களுடையதே. மனம் பிரார்த்தனை செய்யும்போது பிரார்த்தனை பொய்யானது. ஆனால் உடல் ஒரு

புதிய மகிழ்ச்சியில், ஒரு புதிய லயத்தில் அதிர்வுறும்போது, உடல் தெய்வீகத்தோடு இணைந்து துடிக்கும்போது அது உண்மையான பிரார்த்தனையாகிறது.

உண்மையான பிரார்த்தனை உங்கள் உடலிலிருந்து எழுகின்றது, மனதிலிருந்து அல்ல. இது என் அடிப்படையான அறிவுறுத்தல். உண்மையானவை அனைத்தும் உங்கள் உடலிலிருந்து எழவேண்டும். உடல் மீது நான் அதீத நேசம் கொண்டுள்ளேன், ஏனென்றால் உடல்தான், உங்கள் இயல்பான தன்மை. உடலில்தான் நீங்கள் நிலை கொண்டுள்ளீர்கள், வேரூன்றியிருக்கிறீர்கள். சமயங்கள், அதாவது ஒழுங்கமைக்கப்பட்ட சமயங்கள் என்று அழைக்கப்படுபவை எல்லாம் உங்களுக்கும் உங்கள் உடலுக்கும் இடையேயான பாலத்தை அழித்துக்கொண்டிருக்கின்றன. நீங்கள் இந்த உடல் அல்ல என்று சொல்லி வந்தன. மேலும், நீங்கள் இந்த உடல் அல்ல என்றதோடல்லாமல், இந்த உடல் உங்கள் எதிரி என்றும் சொல்லி வந்தன. இந்த உடல் அழிக்கப்பட வேண்டும். சமயத்தின்பேரில் இந்த உடலை பட்டினி போட வேண்டும், உடலை சித்திரவதை செய்தால்தான் கடவுள் அருகே செல்ல முடியும். நான் சொல்கிறேன். உங்கள் உடல்மூலம் வாழ்ந்தால் மட்டுமே நீங்கள் கடவுளை அணுகமுடியும். வேறு வழி இல்லை. உங்கள் உடலை சித்திரவதை செய்வதினால் கடவுளைச் சித்திரவதை செய்கிறீர்கள், ஏனென்றால் உங்களுக்குள் கடவுள்தான் உடலாகியிருக்கிறார். உடல் என்றுமே அழகானது, ஆனால் மனம் அரிதாகவே அப்படி. மனம் அழகாக இருக்கிறது என்றால் அது உடலைப் பின்பற்றும் போதுதான். உடலுக்கு என சொந்த அறிவு நுட்பம் உண்டு. அதற்கு எப்படி ஆட வேண்டும், பாட வேண்டும், எப்படி கடவுளுடன் சேர்ந்து துடிக்க வேண்டும் என்று அறியும். அறியாததோடு எப்படி நடனமாட வேண்டும் என்று பருப்பொருள் அறியும்.

அதிகாலையில் சூரியன் உதயமாகும்போது கோடிக்கணக்கான மரங்களும் எழுகின்றன. அவை அறியும்.... சூரியக்கதிர்களினால் பருப்பொருள் கிளர்ச்சியுறும். பட்சிகள் பாடத் துவங்குகின்றன, விடியல் வந்துவிட்டது, இரவு கழிந்துவிட்டது. மொட்டுகள்

திறந்து ஆதவனை உள்வாங்கிக் கொள்கின்றன, காற்றோடு நடனமாட திறவு நிலை கொள்கின்றன. அறியாததோடு ஒலிநயத்துடன் எவ்வாறு இசைந்து போக வேண்டும் என்று பருப்பொருள் அறியும். மனம் மட்டுமே மனிதனால் உருவாக்கப்பட்ட தோற்றப்பாடு. மனம் மட்டுமே கடவுளுக்கு வெளியே உள்ளது.

மனதிலிருந்து எழும் பிரார்த்தனை பொய்யானது. அது கிறிஸ்துவமாக இருக்கும், ஹிந்துவாக இருக்கும், இஸ்லாமியமாக இருக்கும். ஆனால் பிரார்த்தனையாக இருக்காது. அது குரானிலிருந்தோ, கீதையிலிருந்தோ பைபிளில் இருந்தோ வரும். ஆனால் அது பிரார்த்தனையாக இருக்காது. அது ஒரு மலட்டுச் சைகையாக இருக்கும். ஒரு ஆன்மாவற்ற செய்கையாக இருக்கும். கிராமஃபோன் ரெக்கார்ட் போல இயந்திரத்தனமாக இருக்கும். கோடிக்கணக்கான கிறிஸ்துவர்களும், இந்துக்களும், முகமதியர்களும் பிரார்த்தனை செய்துகொண்டேயிருக்கிறார்கள். ஆனால் நீங்கள் பூமியில் எங்கேயும் உயிரோட்டமான பிரார்த்தனையை காண முடிவதில்லை. என்ன நடந்தது? இவ்வளவு மக்கள் பிரார்த்தனை செய்கின்றனர். இவ்வளவு தேவாலயங்கள், கோயில்கள், மசூதிகள், யூத கோயில்கள், குருத்துவாராக்கள், ஏராளமான பிரார்த்தனைகள் நடந்துகொண்டிருந்தாலும், கடவுள் எங்கேயும் நிகழ்வதாகத் தெரியவில்லை. இவ்வளவு பிரார்த்தனையும் வீண். இது எந்த ஒரு புத்த களத்தையும் உருவாக்கவில்லை, எந்த ஒரு கிறிஸ்து உணர்வு நிலையையும் உருவாக்கவில்லை. இவ்வளவு பிரார்த்தனை நடக்கிறது என்றால், பூமி உருமாறி இருக்கவேண்டும். இந்தளவு பிரார்த்தனை உண்மையானது என்றால் பருப்பொருள் அனைத்தும் தெய்வீகமாகியிருக்க வேண்டும். பருப்பொருளானது தெய்வீகத்தன்மை அடையும் திறன் உடையது. தெய்வீகம் பொருளாக மாறுமெனில், இயல்பாகவே பொருளுக்கும் தெய்வீகமாக மாறும் திறன் இருக்கும். கடவுள் உலகமாக உருவாக முடியுமெனில் உலகமும் கடவுளாக மாற முடியும். அவை இரண்டுமே ஒரே சக்தியின்

இரு நிலைகளாகும். ஆனால் அந்த பிரார்த்தனைகள் எல்லாம் பொய்யானது, வெறும் நேரம் மற்றும் சக்தி விரயம். இவை அனைத்தும் மனப் பிரார்த்தனைகளாகும்.

நான் உங்களுக்கு உடலின் பிரார்த்தனையைக் கற்றுத் தருகிறேன். இந்த உடலின் பிரார்த்தனையை நீங்கள் கற்றுக் கொண்டீர்களானால், அதை அனுமதிக்கிறீர்களானால் ஆன்மாவின் பிரார்த்தனை தானாகவே எழும். உடல் தெய்வீகத்தோடு இணைந்து அதிர்வுறும்போது உங்கள் ஆன்மாவும் ஒத்ததிர்வு செய்வதைக் காண்பீர்கள். உங்கள் உடலும் ஆன்மாவும் ஒன்றாகிறது. மனம்தான் இரண்டையும் பிரித்து வைக்கிறது. மனதைக் கரைத்து விட்டீர்கள் என்றால் நீங்கள் ஒன்றாகி விடுவீர்கள், நீங்கள் முழுமையான ஒற்றுமை காண்பீர்கள், ஒருங்கிணைப்பு உண்டாகும். மனம்தான் கள்வன்.

ஆக, அம்ரிதா இதைத்தான் நான் பிரார்த்தனை என்று அழைப்பேன்.

> *''என் உடல் தொடர்ந்து அதிர்வுறுகின்றது. வார்த்தைகள் மனதிற்கு வருகின்றன. பிரகாசமாய் உள்ளது. அலை பாய்கின்றது. கணவாய்களுக்கும் காதல் உண்டு. அப்படியொரு தாகம், அன்புக்குரிய பகவான்.''*

பிரார்த்தனையே தாகம்தான். ஒரு அதீதமான தாகத்தின் மூலமாகத்தான் நீங்கள் ஒரு அம்பாக மாறி மெய்மையைத் துளைக்க முடியும். தாகத்தின் மூலமாகத்தான் நீங்கள் நெருப்பாக முடியும். கொழுந்துவிட்டு எரியமுடியும். அந்தத் தீயானது உங்களை எரித்துவிடும். உங்களை கடவுளாக வெளிப்படுத்திக் காட்டும். அந்தத் தாகம்தான், அத்தியாவசியமற்ற அனைத்தையும் பொசுக்கும், அத்தியாவசியமானது தெளிவாக, பிரகாசமாக வெளிவரும். அந்த அத்தியாவசியமானதுதான் கடவுள். எங்கோ சொர்க்கத்தில் அமர்ந்து இருக்கும் மனிதரல்ல கடவுள், அவர் உங்களின் இன்றியமையாத உயிருரு. ஆனால் நீங்கள் அவசியமற்றவையோடு, அதிகமாகவே ஒன்றிவிட்டீர்கள். பணம், அரசியல், மரியாதை, உங்களைப் பற்றி மற்றவர்களின்

அபிப்பிராயத்தின் மீது நீங்கள் அதிகம் கருத்தாக இருக்கிறீர்கள். மற்றவர்கள் கருத்தைக் கண்டு பயந்து, அவர்களின் கருத்திற்கேற்ப வாழ்கின்றீர்கள். இடைத்தரம், முட்டாள் மற்றும் கூட்டத்தின் வழிபின்பற்றி நடக்கின்றீர்கள்.

நினைவில் கொள்ளவும், கூட்டத்தைப் பின்பற்ற நீங்கள் இங்கே இருக்கவில்லை. யாரையும் பின்பற்றவும் இங்கே வரவில்லை. உண்மையில், நீங்கள் யாரென்பதை உணர்வதற்காகவே இருக்கிறீர்கள். நீங்கள் நீங்களாகவே இருக்க இங்கே உள்ளீர்கள்.

அத்தியாவசியமற்றவை கைவிடப்பட வேண்டும். எவ்வளவு அவசியமற்ற விஷயங்களை, தேவையற்ற பளுவை, கழிவுகளை நீங்கள் சுமந்து கொண்டு இருக்கிறீர்கள் என்று தொடர்ந்து கவனித்து வாருங்கள். அவற்றைக் கைவிடுங்கள். இந்த தாகம் அவற்றைக் கைவிட உதவி செய்யும், அதை ஒரு தீயாக மாற அனுமதியுங்கள்.

அச்சம் வரத்தான் செய்யும் - ஏனென்றால் உங்கள் வீடு தீ பிடித்து எரிந்துகொண்டிருக்கிறது என்றால் அச்சம் எழுவது இயற்கைதான். இந்தத் தீயிலிருந்து எதாவது காப்பாற்றப்படுமா என்பது உங்களுக்குத்தெரியாது. உண்மையில் உங்களைப்பற்றி நீங்கள் அறிந்தவை காணாமல் போய், உங்களைப்பற்றி நீங்கள் அறியாதது எழலாம். உங்களுடைய தற்போதைய அடையாளம் காணாமல் போய்விடும், ஆனால் ஒரு புதிய அடையாளம், வாழ்க்கையைப் பற்றிய ஒரு புதிய பார்வை எழும்.

ஒவ்வொரு மனிதனும் ஃபீனிக்ஸ் பறவையின் நீதிக் கதையாக உருவாக வேண்டும். ஒவ்வொரு மனிதனும் தனக்கான அகத்தீயை உருவாக்கிக் கொள்ளவேண்டும். இதுவே பிரார்த்தனை என்பதாகும்.

அம்ரிதா, *''நான் ஒரு சூறாவளியில் சிக்கியிருக்கிறேன்''* என்று சொல்கிறாய்.

அது ஒரு பெருங்குழப்பம். காரணம், பழையவை மறையத் தொடங்கி புதியவைத் தோன்ற நேரமாகும். ஒரு இடைவெளி

இருக்கும், இந்த இடைவெளியைச் சந்திக்கத் துணிவு வேண்டும். உண்மையில், இந்த இடைவெளியை எதிர்கொள்ள உங்களுக்கு உதவி செய்ய ஒரு குரு தேவை. உங்கள் முழுமனதும் ''திரும்பிப்போ, கடந்தகாலத்தைப் பிடித்துக்கொள்'' என்று செல்கிறது. குறைந்தபட்சம் யாரென்றாவது முன்னர் நீங்கள் அறிந்து இருந்தீர்கள். இப்போது எல்லா அடையாளங் களையும் தொலைத்துக்கொண்டிருக்கிறீர்கள். மேலும்மேலும் தெளிவற்றுப்போய் கொண்டிருக்கிறீர்கள். ஓர் பனிமூட்டமாக, மேகமாக மாறிக்கொண்டிருக்கிறீர்கள். எங்கே போய்க் கொண்டிருக்கிறீர்கள்? மெல்ல மெல்ல நீங்கள் முற்றிலுமாக காணாமல் போய்விடலாம். இது ஒரு ஆன்மிகப் பிறப்பாக அல்லாமல் ஓர் மரணமாக இருக்கலாம். திரும்பிப் போ, கடந்த காலத்தைப் பிடித்துக்கொள். அதாவது பரிச்சயமான ஒன்றாக இருந்தது. நீங்கள் அதை வாழ்ந்து பார்த்திருக்கிறீர்கள். அதில் திறமை கண்டு இருக்கிறீர்கள். ஆம், துன்பங்கள் இருந்தன, சறுக்கல்கள் இருந்தன, இருட்டும் இருந்தது. அதனால் என்ன? நீங்களாவது அங்கே இருந்தீர்கள். ஆனால் இப்போதோ வெளிச்சத்தைத் தேடுகையில் நீங்களே காணாமல் போய்க் கொண்டிருக்கிறீர்கள். ஒருக்கால் வெளிச்சம் வந்தும் கூட நீங்கள் போய்விட்டிருந்தால் அதில் அர்த்தம் என்ன இருக்கிறது?

தர்க்கரீதியாக அனைத்துமே திரும்பிப்போவதற்கு சாதகமாகவே இருக்கும். அந்தக் கணத்தில்தான் ஒரு குரு தேவைப்படுகிறார். உங்கள் தர்க்கத்தின்மீது அவநம்பிக்கை கொண்டு நீங்கள் அளப்பரிய நம்பிக்கை வைத்திருந்த குருவுடன் செல்ல முடியும். ஒரு சிறிய கால அவகாசம்தான், அந்த விஷயம் நடந்து முடிந்து விடும். உங்களின் உணர்வு நிலையில் புதிய நட்சத்திரங்கள் உதிக்கத் தொடங்கியவுடன் பிரச்சினை ஏதுமில்லை. அப்பொழுது திடமான நிலத்தில் காலூன்றி இருக்கிறீர்கள் என்பதைப் புரிந்து கொள்வீர்கள், மட்டற்ற மகிழ்ச்சி அத்துடன் எழும்.

என்னைச் சுற்றிக் கூடியிருக்கும் எல்லோருக்குமே அது ஒரு சூறாவளியாகத்தான் இருக்கப்போகிறது. முதலில்

நீங்கள் திடமற்ற ஆவிப்பொருள் போன்று ஆகிவிடுவீர்கள். முதலில் உள்ளது காணாமல் போய்விடும், அதற்குப் பின்னர்தான்.... இந்த உரை தொடங்கும்போது சொன்ன கதையை நினைவு கூறுங்கள். உன்னால் கடக்க முடியும்! ஆறு அச்சம் கொள்கிறது. எவ்வாறு பாலைவனத்தைக் கடப்பது? பாலைவனம் சொல்கிறது, பயப்படாதே, என்னைக் கடப்பதற்கான ஒரே வழி ஆவியாகிவிடுவது. காற்றின் இறக்கைகளில் ஏறி பயணம் செய். காற்று உன்னைப் பாலைவனத்தை கடந்து இட்டுச்செல்ல அனுமதி.'' ஆற்றின் பயம் இயற்கையானது. யாருக்குத் தெரியும்? ஆவியாகிப் போன பிறகு, நீங்கள் அதேபோன்று இருப்பீர்கள் என்று யாரால் உத்திரவாதம் அளிக்க முடியும்? ஆறு தர்க்கரீதியாக இருக்கிறது. அவன் வாதம் செய்கிறான். பாலைவனம் பதில் சொல்கிறது. வாதம் உனக்கு உதவப் போவதில்லை, என்றாலும் நிரூபிக்க முடியாது. எந்த உத்திரவாதமும் அளிக்க முடியாது, ஆனால் அது அப்படித்தான். என்னைப் பல ஆறுகள் கடந்து போவதைக் கண்டு இருக்கிறேன். இதுதான் ஒரே வழி. நீ துணிந்துதான் ஆகவேண்டும்.''

அந்த துணிவுதான் சன்னியாசம். என்னுடன், எனக்குள் ஆவியாய் போகிற ஆபத்தை நீங்கள் செய்தாக வேண்டும். அப்படியானால் மட்டுமே நீங்கள் பாலைவனத்தின் ஊடே செல்ல முடியும். அல்லாவிடில் நீங்கள் பாலைவனத்தின் சதுப்பு நிலமாகி விடுவீர்கள், தொலைந்து போய் விடுவீர்கள்.

> *''நான் ஒரு சூறாவளியில் சிக்கியிருக்கிறேன். முன் எப்போதும் என் வாழ்க்கையில் இதுபோல பிளவுபட்ட தில்லை...''*

உண்மைதான். காரணம் முழு வாழ்க்கையுமே உங்களை எவ்வாறு உள்ளீர்களோ, அப்படியே வைத்திருக்க முயற்சிக்கிறது. பெற்றோர்கள், பள்ளி, கல்லூரி, பல்கலைக் கழகம், சர்ச் எல்லாமே. சமுதாய அமைப்பே நீங்கள் உள்ள படியே இருக்கவைக்க முயற்சிக்கிறது. முழு அமைப்புமே நீங்கள் தேங்கிக்கிடக்க கங்கணம் கட்டி நிற்கிறது. நீங்கள்

செயல்திறனோடு இருக்கக்கூடாது, ஏனென்றால் செயல்திறன் மிக்கவர்கள் வெடிபொருள் போல் ஆகிவிடுவர். அவர்கள் ஆபத்தான மனிதர்கள். வளர்ந்துகொண்டு இருக்கும் மனிதர்கள், உருவாகி வரும் மனிதர்கள். யாவரும் இதுகாறும் உள்ள நிலைக்கு, சமுதாயத்திற்கு, சர்ச்சிற்கு ஆபத்தாகிவிடுவர். ஏனென்றால் வளர்ந்து உருவாகிவரும் மனிதர்களால் பழைய சித்தாந்தங்களுடன் இருக்க முடியாது. அவர்களின் வளர்ச்சிக்கு புதிய கடவுள்கள், புதிய பைபிள்கள், புதிய குரான்கள் தேவைப்படும். அவர்களின் வளர்ச்சிக்கு மெய்ம்மையின் புதிய பார்வைகள் தேவை.

ஒரு குழந்தை வளர்ந்துவிட்டபோது எவ்வளவு காலம் அதை பொம்மைகள் வைத்து திருப்தி செய்ய முடியும்? அது திருப்தி கொள்ள ஒரே வழி, குழந்தையை வளர அனுமதிக்காமல் இருப்பதுதான். மந்தமாக இருக்க குழந்தையை நிர்பந்திப்பது, அப்படியானால் குழந்தை தொடர்ந்து பொம்மைகளோடு விளையாடிக் கொண்டிருக்கும், ஆனால் நீங்கள் அதை அறிவு மூடமுடைய தாக்குகிறீர்கள். இதைத்தான் சமுதாயம் கோடிக்கணக்கான மக்களுக்கு செய்து கொண்டே இருக்கிறது. அவர்களை தன் நிலையற்றவர்களாக வைத்திருக்கிறது, சமுதாயம் அவர்களை வளர விடுவதில்லை, ஏனென்றால் அவர்கள் வளரத் தொடங்கிவிட்டால் யாராலும் அவர்களைக் கட்டுப் படுத்த முடியாது. ஒருமுறை அவர்கள் வளர்ச்சியை ருசித்துப் பார்த்துவிட்டால், அவர்கள் எந்தவிதமான எல்லைகளையும் நம்பமாட்டார்கள், அவர்கள் கடவுள் ஆகும்வரை வளர்ந்து கொண்டே இருப்பார்கள்.

மனிதன் ஒரு அடிமையாக இருக்கமுடியும்; கடவுள் அடிமையாக இருக்கமுடியாது. மேலும் முட்டாள்தனமான விஷயங்களைச் செய்ய மனிதனை நிர்ப்பந்திக்க முடியும். போர் செய்ய மனிதனைக் கட்டாயப்படுத்த முடியும். சண்டையிடவும், கொல்லவும் மனிதனை நிர்ப்பந்திக்க முடியும். நீங்கள் கடவுளைக் கட்டாயப்படுத்த முடியாது. மக்கள் வளர்ந்து கொண்டே போனால் ஆங்கிலேயர்கள், ஜெர்மானியர்கள், ஜப்பானியர்கள் அல்லது

இந்தியர்களை இந்த உலகில் நீங்கள் காணமுடியாது. வளர்ந்து வரும் ஒரு மனிதன் விரைவிலேயே தான் ஒரு ஜெர்மானியன் அல்லது அமெரிக்கன் என்பதைக் கடந்துபோவான். விரைவில் இதன் முட்டாள்தனத்தை உணர்ந்துவிடுவான். கூடிய சீக்கிரத்தில் அவன் ஒரு உலகக் குடிமகனாகி விடுவான். அதன்பிறகு உங்கள் அரசியல்வாதிகள் என்ன ஆவார்கள்? உங்கள் நாடுகள் மற்றும் அசட்டுக் கொடிகளும் என்னவாகும்? தொடர்ந்து நடந்துகொண்டும் முக்கியமாகிக் கொண்டே போகும் அனைத்துவிதமான முட்டாள்தனங்களும் என்னவாகும்? இந்த முட்டாள்தனம் முக்கியமானதாகத் தொடரவும், உங்கள் தலைநகரங்கள் தலைநகரங்களாகவும், அரசியல்வாதிகள் பெரும் தலைவர்களாக தொடரவும் மனிதன் மந்தமாக முடக்கப்பட்டு இருந்தால்தான் முடியும். மனிதன் வளர்ந்து விட்டால் யாருக்கு தலைவன் தேவைப்படும்? ஒவ்வொருவரும் ஒரு அகவழிகாட்டி கொண்டு இருப்பார். அரசியல்வாதிகள் சொல்வதை யாரும் அக்கறை கொள்ளமாட்டார். மனிதன் வளர்ந்துவிட்டால் அரசியல் இருக்க முடியாது; அரசியல் முதிர்ச்சியற்றது. மனிதன் வளர்ந்துவிட்டால் ஏழ்மையோ, செழிப்போ இருக்க முடியாது. மனிதன் வளர்ந்தால், அவனால் பார்க்க முடியும். கம்யூனிசம் வரும் என்றில்லை. ஏனென்றால் அது மறுபடியும் வேறு ஒரு வகை அரசியல். அவன் வளர்ந்தால் ஒரு புதிய பார்வை வரும். அது, நாம் அனைவரும் - இந்தப் பூமியைச் சேர்ந்தவர்கள், நம் இன்பமும் துன்பமும் இணைந்து அனுபவிக்க வேண்டியது என்ற புரிதல். ஒரே ஒரு மனிதன் மகிழ்ச்சியற்று இருந்தால் மனித குலமே அதை உணரவேண்டும். அந்த ஒரே மகிழ்ச்சியற்ற மனிதன் மனிதகுலத்தின் உடலில் ஒரே காயம்போல் செயல்படுவான்.

நாம் ஒன்றாய் இருக்கிறோம்! நமக்கு உண்மையிலேயே மகிழ்ச்சியாய் இருக்கவேண்டுமென்றால், எல்லோரும் மகிழ்ச்சியாய் இருக்கவேண்டும். ஒரு மகிழ்ச்சியான சூழலில்தான் நீங்கள் மகிழ்ச்சியாக இருக்க முடியும். அதற்காக பாட்டாளி வர்க்கத்தினர் வந்து சமுதாயத்தை ஆதிக்கம் செலுத்த வேண்டும் என்பதில்லை. அது ஒரு துருவ முனைப்பிலிருந்து

மற்றொன்றிற்குப் போவது போலாகிவிடும். இது எதையும் மாற்றாது. அதனால்தான் எல்லா புரட்சிகளும் தோற்றுப் போயின - பிரெஞ்சு, ரஷ்ய, சீன மற்றும் இந்தியா என யாவையும். அனைத்துப் புரட்சிகளும் தோற்றதிற்கு காரணம், பெண்டுலம் வெறுமனே எதிர் துருவத்திற்கு நகர்கிறது. பணக்காரர்கள் ஆதிக்கம் செலுத்தினார்கள் - பேரரசர், சர்வாதிகாரியாக இருந்தார் - அவர்கள் தூக்கி எறியப்பட்டு, இப்போது கடை வகுப்பினர் ஆதிக்கத்திற்கு வந்துள்ளது. உண்மையில் பாட்டாளி வர்க்கம் என்ற பெயரில் அதே போர்ஷ்வாதான் ஆளத் தொடங்குகிறது. நடைமுறையில் பேரரசர் ஸ்டாலின் மெய்ப்பித்ததுபோல ஒரு பேரரசராக இருக்கவில்லை. ஸ்டாலின் பீட்டரின் மறு அவதாரமாக அல்லது கொடுங்கோலன் இவான் போன்று நடந்து கொண்டார்.

அடக்கி வைக்கப்பட்டவர்கள், அடக்கி ஆள்வோராகினர். முன்னர் அடக்கியவர்கள் இப்போது அடக்கப்பட்டனர். ஆனால் கதை மட்டும் தொடர்கிறது. அது இதுவாகிறது. இது அதுவாகிறது, பிரச்சினை மட்டும் அப்படியே நிலையாய் இருக்கிறது.

மக்கள் வளர்ந்தால், மக்கள் அதிக உணர்நிலை எய்தினால், மக்கள் மேலும் அதிகமாக மையமானால், எல்லோரும் பொதுச் சேவகர்களாகிவிட மாட்டார்கள், ஆனால் அவர்கள் என்ன செய்தாலும் அது மனித குலத்தை மேலும் மகிழ்ச்சிக்கு உள்ளாக்கும் வகையில் செயல்படுவார்கள். அவர்கள் என்ன செய்தாலும் உலகில் மேலும் அதிகம் துன்பம் நேராமல் பார்த்துக் கொள்ள வேண்டும். அது தானாகவே நடக்கும். நாடுகள் மறைந்துபோகும், மதங்கள் மாயமாகிப் போகும். ஒரு வகையான சமயத்தன்மை நிலவும், பூமியைச் சுற்றி ஒரு ஆன்மிகச் சூழல் உருவாகும். அது முற்றிலும் வேறுபட்டு இருக்கும். ஆனால் நீங்கள் மாறுவதில் யாருக்கும் விருப்பமில்லை. ஏனென்றால் உங்கள் மாற்றத்துடன் பல பேருடைய முதலீடுகளும் இடர்நிலைக்கு உள்ளாக்கப்படும். '

*"நான் ஒரு சூறாவளியில் சிக்கியிருக்கிறேன். முன் எப்போதும் என் வாழ்க்கையில் இதுபோல பிளவு ஏற்பட்டதில்லை"* என்று சொல்கிறீர்கள்.

நீங்கள் ஒரு குருவுடன் இருந்ததே இல்லை. ஒரு குருவுடன் இருப்பதென்றால் எப்படி மரணிப்பது என்று கற்றுக் கொள்வதாகும். ஆம். நீங்கள் பிளவுபட்டு போவீர்கள். மேலும் இதில் முரண்பாடு என்னவென்றால், இந்த மரணத்தில்தான் நீங்கள் பிறப்பீர்கள். இந்தச் சிலுவைதான் நீங்கள் மீட்டெழ உதவி செய்யும்.

நீங்கள் சொல்வது, *"அவ்வளவு திரவமயமாக இந்த அளவிற்கு பாதுகாப்பற்ற உணர்வோடு"*

அம்ரிதா, பாதுகாப்பின்மையின் அழகை நீங்கள் உணர்வதில் எனக்கு மகிழ்ச்சி. ஏனென்றால் ஒரே ஒரு பாதுகாப்புதான் இருக்கிறது. அது பாதுகாப்பின்மை. மற்ற எல்லா பாதுகாப்புணர்வும் பொய்யானது, பாசாங்குகள். ஒரே ஒரு பாதுகாப்புதான் உள்ளது. அது பாசாங்கு செய்யாதது, மற்றும் பாதுகாப்பின்மையில் வாழ்ந்து அதை நேசிப்பது, கணத்துக்கு கணம் வாழ்வது, அறியாததற்கு கிடைக்கப்பெறும் வகையில் தொடர்ந்து வாழ்வதாகும். கடந்தகாலமின்றி வாழ்வதே பாதுகாப்பின்றி வாழ்வதாகும். பாதுகாப்பு கடந்த காலத்திலிருந்து வருவதாகும். பாதுகாப்பின்மையைக் கண்டு அஞ்சி வாழ்பவர்கள், கடந்தகாலத்துடன் சிறைப்படுத்திக் கொண்டவராவர். அவர்கள் உயிரற்ற வாழ்க்கை வாழ்கின்றனர். அவர்கள் தங்களின் கல்லறைகளில் வாழ்கின்றனர். அவர்கள் வாழ்வதில்லை. வாழ்வதாகப் பாசாங்கு செய்கின்றனர். உண்மையிலேயே வாழவிரும்புபவர்கள் நிகழ்காலத்தில் வாழ்வார்கள். நிகழ்காலம் என்பது பாதுகாப்பற்றது. பாதுகாப்பின்மை என்பது வாழ்க்கையோடு உருவானது. அது வாழ்க்கையின் உயிர்க்குருதியாகும். பாதுகாப்பின்மை எனில் விஷயங்கள் மாறிக்கொண்டிருக்கின்றன. நகர்ந்து கொண்டு இருக்கின்றன. வாழ்க்கை என்பது ஒரு புனித யாத்திரை. அதனுடன் நாம் கூடவே

பயணம்செய்து சமுத்திரத்தை அடைந்து அதில் மறையவேண்டும் என்று பொருளாகும். அந்த சமுத்திரம்தான் கடவுள்.

*''என் உயிருரு உங்களை நேசிக்கின்றது - என் உடல் தொடர்ந்து அதிர்வுறுகின்றது...''*

உடலை அனுமதியுங்கள். அது அதிர்வுறட்டும், நடனமாடட்டும், அது பிரார்த்தனை செய்யட்டும். உடல் சொல்வதைக் கேளுங்கள், அதை பின்தொடருங்கள். எந்த வகையிலும் அதன்மீது ஆதிக்கம் செலுத்தவேண்டாம். உடல் உங்கள் அடித்தளம். உங்கள் உடலை நீங்கள் புரிந்துகொள்ளத் தொடங்கினால், உங்களின் 99% துன்பங்கள் மறைந்துவிடும். ஆனால் நீங்கள்தான் கேட்பதில்லை.

உடல் சொல்கிறது, ''நிறுத்து! சாப்பிடாதே!'' நீங்கள் தொடர்ந்து சாப்பிட்டுக்கொண்டே இருக்கிறீர்கள். மனம் சொல்வதைக் கேட்கிறீர்கள். அது சுவையாக இருக்கிறது. அற்புதமாக இருக்கிறது. இன்னும் கொஞ்சம். ''நீங்கள் உடல் சொல்வதைக் கேட்பதில்லை. குமட்டல் எடுக்கிறது; வயிறும் நிறுத்து, இவ்வளவு போதும்! நான் ஆயாசமடைந்துவிட்டேன்!'' என்று சொல்கிறது. ஆனால் மனமோ, ''பார், எவ்வளவு சுவை இன்னும் கொஞ்சம் சாப்பிடேன்'' என்கிறது. நீங்கள் தொடர்ந்து மனம் சொல்வதையே கேட்டுக் கொண்டிருக்கிறீர்கள். உடல் சொல்வதை நீங்கள் கேட்டீர்களானால் தொண்ணூற்றி ஒன்பது சதவீதம் பிரச்சினை பறந்துபோய் விடும். மீதமிருக்கும் ஒன்று, வெறும் விபத்துதான், உண்மையான பிரச்சினைகள் அல்ல.

ஆனால் நாம் குழந்தைப் பருவத்திலிருந்து உடலிலிருந்து கவனம் மாற்றப்பட்டு இருக்கிறோம். உடலிலிருந்து தள்ளி வைக்கப்பட்டு இருக்கிறோம். குழந்தை அழுகின்றது. அதற்குப் பசிக்கிறது. ஆனால் அம்மாவோ கடிகாரத்தைப் பார்க்கிறாள். ஏனென்றால் மூன்று மணிநேரம் கழித்துதான் பால் தரலாம் என்று டாக்டர் சொல்கிறார். அவர் குழந்தையைப் பார்க்கவில்லை. குழந்தைதான் பார்க்கவேண்டிய உண்மையான கடிகாரம்,

ஆனால் அவளோ கடிகாரத்தை மட்டுமே தொடர்ந்து பார்த்துக் கொண்டிருக்கிறாள். அவள் டாக்டரின் சொல் கேட்கிறாள். குழந்தை அழுது கொண்டிருக்கிறது. உணவு வேண்டும் என்கிறது. அதற்கு உணவு இப்பொழுதே வேண்டும். குழந்தைக்கு உடனே உணவளிக்காவிட்டால் நீங்கள் அதன் உடலிலிருந்து கவனத்தை திசை திருப்புகிறீர்கள். உணவுக்குப் பதிலாக சாந்தி அளிக்கிறீர்கள். இப்போது நீங்கள் அதை ஏமாற்றுகிறீர்கள். பொய்யானதை வழங்குகிறீர்கள். உடலின் உணர்ச்சியை அழிக்கப் பார்க்கின்றீர்கள். உடலின் அறிவை அதன்போக்கில் செயல்படவிடாமல் மனம் ஊடுருவுகிறது. குழந்தை சாந்தமாகி தூங்கிப் போகிறது. கடிகாரம் மூன்று மணிநேரம் ஆகிவிட்டது என்பதை குறிக்கிறது. குழந்தை அசந்து தூங்கிக்கொண்டு இருக்கிறது. அதன் உடல் தூங்கிக்கொண்டிருக்கிறது. நீங்கள் எழுப்புகிறீர்கள், ஏனென்றால் டாக்டர் சொல்லியிருக்கின்றார். நீங்கள் மறுபடியும் அதன் லயத்தை மாற்றுகிறீர்கள். மெதுவாக, நீங்கள் குழந்தையின் உயிருருவை குலைக்கின்றீர்கள். ஒரு குறிப்பிட்ட கணத்தில் அது தன் உடலைப் பற்றிய சுவட்டையே மறந்துவிடுகிறது. தன் உடலுக்கு என்னவேண்டும் என்று அதற்கு தெரிவதில்லை. உடலுக்கு உண்ண வேண்டுமா, வேண்டாமா? அதற்கு உடலுறவு தேவையா? இல்லையா? என உடல் அறியாமல் போகிறது. எல்லாவற்றையும் வேறு எவரோ வெளியிலிருந்து கையாளுகின்றார். அவன் ஒரு 'பிளேபாய்' பத்திரிகையை பார்த்து பின்பு உடலுறவு கொள்ள வேண்டும் என்று நினைக்கிறான். இது முட்டாள்தனம். இதுதான் மனம். இந்தப் புணர்ச்சி பெரிதான ஒன்றல்ல; அது வெறும் தும்மல் போன்றது. வேறு ஒன்றுமில்லை. இது உடலுறவு அல்ல. உடலுறவு எவ்வாறு மனம் மூலமாக ஏற்பட முடியும்? மனதிற்கு இதைப் பற்றி ஒன்றும் தெரியாது. அது வெறும் கடமையாகிறது. உங்களுக்கு ஓர் மனைவி அல்லது கணவர் இருக்கிறார். உடலுறவு கொள்ள வேண்டும். அது கடமையாகி விடுகிறது. கடமை தவறாமல் இதை செய்கின்றீர்கள். தன்னிச்சை இதில் இல்லை. இது உங்களுக்கு நிறைவு தரவில்லை என்று கவலைப்படத் தொடங்குகிறீர்கள்.

அடுத்து வேறு ஒரு பெண்ணைப் பார்க்கத் தொடங்குகிறீர்கள். தர்க்க ரீதியாக சிந்திக்கத் தொடங்குகிறீர்கள். ''ஒருக்கால் என் மனைவி எனக்கு ஏற்றவள் இல்லை போல. எனக்காகவே வந்தவள் அல்ல. நான் அவளுக்குப் பொருத்தமானவன் அல்ல. ஏனென்றால் அவள் என்னை கிளர்ச்சியுறச் செய்யவில்லை.''

பெண் ஒரு பிரச்சினையே இல்லை, ஆண் ஒரு பிரச்சினையே அல்ல: நீங்கள் உடலில் இல்லை, அவளும் உடலில் இல்லை. மக்கள் தங்கள் உடல்களில் இருந்தால் புணர்ச்சிப் பரவச நிலையைத் தவறவிட மாட்டார்கள். மக்கள் தங்கள் உடலில் இருந்தீர்கள் என்றால் புணர்ச்சிப் பரவச நிலை அனுபவத்தின் மூலமாக இறைவனின் முதல் ஷண நேரத் தோற்றத்தை அவர்களால் அறியமுடியும். சர்ச் மூலமாக கடவுளை அறிந்து கொள்ள முடியாது. புணர்வின் மூலமாகப் புரிந்து கொள்ள முடியும். ஏனென்றால் நேசத்துடனான புணர்வின் அனுபவத்தில் நீங்கள் கரைந்து போகின்றீர்கள். பறந்து விசாலமாகிறீர்கள். அந்த அகன்ற பரப்பில் கடவுளின் சுவை அறிவீர்கள். தாவோவை சுவைத்துப் பார்க்க முடியும். இதுவே உண்மையான சமயப்பற்றுள்ள வாழ்க்கையின் அடித்தளமாகும்.

இந்நாட்டில் மக்கள் ஏன் இவ்வளவு சமயப்பற்றின்றி இருக்கின்றனர்? சர்ச்கள் இல்லாததாலோ, மிஷனரிகளின் பஞ்சமோ அல்லது தொடர்ந்து யாராவது உபதேசிக்கவில்லை என்பதாலோ கிடையாது. லட்சக்கணக்கான நூல்கள் இயற்றப்பட்டு விட்டன. லட்சக்கணக்கான உபதேசங்கள் கூறப்பட்டு விட்டன. ஆனால் எல்லாமே தோற்றுப் போயுள்ளன. ஏனென்றால், உண்மையான சாட்சி கிடையாது. யாருமே கடவுளை தன் வாழ்க்கையில் எந்த வகையிலும் கண்டதில்லை, பின்பு கடவுள் உள்ளார் என்று எப்படி மக்களை நம்பவைக்க முடியும்? எல்லாமே வெறும் வாதமாகமட்டுமே நிலைக்கின்றது. அது யாரையும் மாற்றுவதில்லை. யாரையும் நம்பிக்கை கொள்ள வைப்பதில்லை. மக்கள் உடலில் நிலைகொண்டு இருந்தால் புணர்ச்சியின் போது கடவுளைத் தேடத் தொடங்குவர். அந்த அகன்ற பரப்பைத்

தேடுவார்கள். தங்களுக்குள் ஏற்பட்ட பிரம்மாண்டத்தைத் தேடுவர். தங்கள் சொந்த அனுபவத்தினால் உணர்ந்து கொள்வர். கடவுள் வெறுமனே வேதாந்தம் அல்லது இறையியல் சார்ந்தவரல்ல. அவர் இருக்கிறார். கடவுள் உளதாம்தன்மை சார்ந்த உண்மை என்பதை புரிந்துகொள்வார்கள்.

இப்போது கடவுள் தேடப்பட வேண்டும். இப்போது ஒரு பெரிய தேடலில் ஒருவர் இறங்கவேண்டும்.

உடல் சொல்வதைக் கேளுங்கள். அதைப் பின்பற்றுங்கள். மனம் முட்டாள்தனமானது. உடல் புத்திசாலி. நீங்கள் உடலுக்குள் ஆழமாகப் போயிருந்தால் அந்த அடியாழத்தில் உங்கள் ஆன்மாவைக் கண்டுபிடித்து இருக்கலாம். உடலின் மையமே ஆன்மாவாகும். உடல் ஆன்மாவின் வெளிப்புற சுற்றளவாகும். மனம் ஒரு சமுதாய துணைப்பொருள். மனம் குறையுமானால் மேலும் சிறப்பானது. உங்கள் முயற்சி எல்லாம் மனதைக் குறைப்பதில் இருக்கவேண்டும், எப்படி சுமையை இறக்க வேண்டும் என்றிருக்கவேண்டும்.

அதனால்தான் சூஃபிக்கள் அந்த தியான நிலையை ஃபானா என்று அழைக்கின்றனர். மனம் இல்லாத ஒரு நிலை.

## மூன்றாவது கேள்வி:

*சில சமயங்களில் என் உள் பயணம் எல்லாமே கற்பனையோ என்று தோன்றுகிறது. சில சமயங்களில் அது உண்மை என்றும் நான் அறிவேன். உள்ளே நகர்வதென்பது வெளிப்புற வேலைகளில் இருந்து வெறுமனே பின்னோக்கி போவது மட்டும்தானா, அது உடலின் அடிநிலைப் பகுதிகளுக்குள் ஆழமாகச் சென்று இதயத்துடிப்பிற்குள் செல்வதால் உடலைத் தாண்டியும், உணர்வுகளுக்கு அப்பாற்பட்டும், என்னையே பின்னிற்குத் தள்ளி, என்னுள் வாழும் 'அதனால்' கவனிக்கப்படுகிறேன், உணரப்படுகிறேன் என்ற மகிழ்ச்சியில் இருத்தல் என்பதுதான் உள்ளே நோக்கிச் செல்வதென்பதா?*

*கற்பனா சக்தி என்பது மயக்கம்தரும் ஒன்று என்று சொல்கிறீர்கள். உங்கள் முன்னே 'நான் கடவுள்' என்று உணராதபோது நான் ஒரு முட்டாள்போல உணர்கிறேன்.*

பத்ம சாம்பவா, இந்த இரண்டும்தான் சாத்தியமாகும்: ஒன்று நீங்கள் ஒரு முட்டாள் அல்லது நீங்கள் ஒரு புத்தர். இடையில் எந்த நிலையும் இல்லை. உங்களுக்குத் தெரியும் அல்லது தெரியாது. இதைக் கேட்டால் ஆச்சரியப்படுவீர்கள். இந்தியாவில் முட்டாளை 'புத்து' என்று அழைப்பார்கள். இது 'புத்தா'விலிருந்து வந்த வார்த்தை. ஆக, முட்டாள் அல்லது புத்தா, விழிப்புணர்வு அடைந்தவர்.

இரண்டுமே ஒரே வேரிலிருந்து வருபவை. 'புத்த' எனில் முட்டாள், அறிவில்லாதவன், அசந்து தூங்குவது. 'புத்தா' என்றால், விழிப்புணர்வு கொண்டவர். கனவிலிருந்து விடுபட்டவன், ஆசைகளிலிருந்தும், அறியாமையிலிருந்தும் விடுபட்டவன், அகத்தினுள் வெளிச்சம் கொண்டு இருப்பவன். இருட்டு விலகிவிட்டது, இரவு முடிந்துவிட்டது. சூரியன் எழுந்துவிட்டது. இடையில் எந்த நிலைகளும் கிடையாது. ஆகவே எந்த இடைநிலை கண்டும் ஏமாந்துவிடாதீர்கள்.

மக்கள் பல நிலைகளை உருவாக்கி உள்ளார்கள். ''நான் இன்னும் புத்தராகவில்லை. ஆனால், அந்தப் பாதையில் உள்ளேன். நான் அதிக சமயப்பற்றுள்ளவன். ஆன்மிகவாதி'' என்று சொல்வார்கள். ஆனால் உங்கள் ஆன்மிகம், புனிதத்தன்மை எல்லாமே வெறும் கனவு - நீங்கள் ஓர் புத்தர். ஆனால் ஒழிய, ஒரு துறவியாக இருப்பதுபோல் கனவு காணலாம். அதில் பிரச்சினை ஒன்றும் இல்லை. உங்கள் புலமை அனைத்தும் ஒரு கனவுதான். ஒருவர் கற்றறிந்தவர் போலக் கனவு காணலாம். ஆனால் முட்டாளாகவே இருப்பீர்கள். நீங்கள் மாறுவதில்லை.

உங்களுடைய பண்டிதர்கள், பாதிரிகள், பேராசிரியர்கள், அறிவார்ந்த மக்கள் எல்லோரும் முதல் வகையிலேயே இருக்கிறார்கள். இந்த இரண்டு சாத்தியக் கூறுகள் மட்டுமே

இருக்கின்றன என்று அறிந்து இருப்பது நல்லது. ஒன்று நீங்கள் விழித்து இருக்கிறீர்கள் அல்லது தூங்கிக் கொண்டு இருக்கிறீர்கள். இதுபோல விரல்களைக் காண்பது பெரிய உதவியாக இருக்கும்.

*நீங்கள் கேட்கிறீர்கள்: ''சில சமயங்களில் என் உள் பயணம் எல்லாம் கற்பனையே என்று தோன்றுகிறது.''*

ஆம், அப்படித்தான்.... ஏனென்றால் அகம் மற்றும் புறம் இரண்டுமே கற்பனையில் உருவானவை. மெய்நிலையில் அகமென்றம், புறமென்றும் எதுவும் கிடையாது. இது அகம், அது புறம் என்று நீங்கள் சொல்லமுடியாது. அகம், புறம் என்ற வேறுபாடெல்லாம் மனதால் உருவாக்கப்பட்டது. அது உண்மையல்ல. அது மெய்மைக்குப் பொருந்துவதில்லை.

அகம் என்றால் என்ன, புறம் என்றால் என்ன?

நீங்கள் மூச்சை உள்வாங்குகிறீர்கள். ஒரு கணத்திற்கு முன் அது புறமாய் இருந்தது, அடுத்து, அது அகமாகிவிட்டது. மறுபடியும் அது புறமாகிறது. ஆக உள் எது, வெளி எது? உணவு உட்கொள்கிறீர்கள். அது வெளிப்புறத்தைச் சார்ந்தது. ஜீரணிக்கப் பட்டவுடன் அது உங்கள் ரத்தமாகிறது, உங்கள் எலும்பு ஆகிறது. மஜ்ஜையாகிறது. ஆக எது அகம், எது புறம்? முடிவெட்டச் செல்கிறீர்கள். அவர் உங்கள் முடியை வெட்டுகிறார். உள்ளே இருந்தது. இப்போது இல்லை.

அகம் தொடர்ந்து புறமாகவும், புறம் தொடர்ந்து அகமாகவும் மாறி வருகிறது. அதுவே வாழ்க்கை. அதுவே வாழ்க்கையின் இயக்கவியல். 'யின்' தொடர்ந்து, 'யாங்'காகும். 'யாங்' தொடர்ந்து, 'யின்' ஆக உருவாகும்.

ஆண் தொடர்ந்து பெண்ணாகிக் கொண்டிருக்கிறான். பெண் தொடர்ந்து ஆணாகிக் கொண்டிருக்கிறாள்.

மரத்திலிருந்து ஒரு ஆப்பிளை சாப்பிடுகிறீர்கள். அது அகமாகிவிடுகிறது. பிறகு ஒரு நாள் நீங்கள் இறந்து போகிறீர்கள்.

நிலத்தில் வீழ்கிறீர்கள். உங்கள் மீது ஒரு ஆப்பிள் மரம் வளரும். உங்களின் ஒரு பகுதி ஆப்பிளாகும். உங்கள் பேரக் குழந்தைகள் அதை உண்ணலாம். நாம் எல்லோருமே தன் இன உண்ணிகள், நரமாம்சபட்சணி. நாம் ஒருவரை ஒருவர் உண்கிறோம். இங்கே இருப்பதற்கு வேறு வழியில்லை. அடுத்த முறை நீங்கள் ஒரு ஆப்பிளை சாப்பிடும்போது மரியாதை நிறைந்து இருங்கள்.... ஒருக்கால் உங்கள் தாத்தா அல்லது பாட்டியை சாப்பிட்டுக் கொண்டிருக்கலாம்.

உள்ளென்றும் புறமென்றும் ஏதுமில்லை. உள்ளும் புறமும் ஒரு பொருளை விளக்கப் பயன்படும் வழிகள் அவ்வளவே. இதை உணர்ந்து கொள்ள கற்பனையை தாண்டிப்போக வேண்டும்.

> *''சில சமயங்களில் என் உள்பயணம் எல்லாமே கற்பனையோ என்று தோன்றுகிறது.''*

ஆம். அப்படித்தான். இப்பொழுது எல்லாமே கற்பனை தான். உண்மையில் உள்ளபடியே பயணம் எப்போதும் வெளிப்புற மாகத்தான் இருக்கும். உட்புறப்பயணம் என்று எதுவும் இருக்க முடியாது. உள் பயணம் ஒன்று எப்படி இருக்க முடியும்?

எங்கே செல்வது என்றாலும் அது எப்போதும் வெளிப்புறமாகத் தான் இருக்க முடியும். அந்தப் பயணம் முடிந்த பின்புதான் அகம் என்பது தொடங்குகிறது. நீங்கள் அகத்திற்கு மிக அருகே வந்து கொண்டு இருக்கலாம். ஆனால், பயணம் வெளிப்புறத்தில்தான் இருக்கிறது. 'பயணம்' என்றாலே தொலைவில் உள்ள ஒன்றோடு நீங்கள் இணைந்து கொள்ள முயற்சிக்கிறீர்கள். அகம் தொலைவானது அல்ல. அது மிகச் சரியாக எப்படி இருக்கின்றீர்களோ, அதுவேதான். நீங்கள் ஏற்கெனவே அதோடு இணைந்துள்ளீர்கள், இணையவேண்டிய அவசியமில்லை. உங்களை அதோடு இணைக்க பாதை ஏதுமில்லை. அதனால் தான் ஜென் அறிஞர்கள் கூறுவது என்னவென்றால், உண்மை ஓர் பாதையில்லா மெய்மை: நீங்கள் எங்கேயும் செல்ல வேண்டாம். அப்படியானால் நீங்கள் உள்ளே இருப்பீர்கள். நீங்கள் எங்கேயும் செல்லாதபோது, அகம் ஈடேறிவிடும்.

ஆனால், பத்ம சாம்பாவின் இக்கட்டையும் என்னால் புரிந்து கொள்ள முடிகிறது. நானே சொல்வது என்னவென்றால், ''உன் பயணத்தைத் தொடங்கு'' என்றுதான் நான் வார்த்தைகளைப் பயன்படுத்தி ஆக வேண்டும். நீங்களும் பயன்படுத்தி ஆகவேண்டும். ஆனால், எல்லா வார்த்தைகளும் போதுமானவை அல்ல. நீங்கள் ஒரு வார்த்தையை அதன் உச்ச அளவிற்கு, அதன் தர்க்கரீதியான முடிவிற்கு எடுத்துச் சென்றீர்கள் என்றால் அது அனர்த்தமாக, அபத்தமாக முடியும். அவற்றை ஒரு அனுமான முறையில்தான் பயன்படுத்த வேண்டும். ஒரு பயன்பாட்டு நோக்கில் எடுத்துக் கொள்ள வேண்டும்.

'உள் பயணம்' என்ற வார்த்தைகளைப் பயன்படுத்தும் போது, நான் சொல்வது என்னவென்றால், நீங்கள் உங்கள் வாழ்க்கைப் பயணத்தின் ஒரு அம்சமான 'வெளிப்புறத்தைப்' பார்த்து இருக்கிறீர்கள். இப்போது பயணத்தின் மற்றொரு தோற்றமான 'அகத்தை' பாருங்கள் என்கிறேன். இதுவரை பயணத்தின் பின்னே ஓடினீர்கள். இப்போது தியானத்தின் பின்னே ஓடுங்கள். அதிகாரத்தைத் தேடினீர்கள். இப்போது கடவுளை நாடுங்கள். இரண்டுமே ஓட்டம்தான். நீங்கள் தியானத்தின் பின்னே ஓடத் தொடங்கிவுடன், ஒரு நாள் நான் உங்களுக்கு சொல்லக்கூடியது, ''இப்போது தியானத்தையும் விட்டுவிடுங்கள். ஓடுவதை நிறுத்துங்கள்'' ஓட்டம் நின்றவுடன் உண்மையான தியானம் நடக்கும்.

*அமைதியாக அமர்ந்திருக்க*
*செய்வதற்கு ஒன்றுமில்லாமல்,*
*வசந்தம் வருகை தர*
*புல் தானாகவே வளர்கிறது.*

ஆக, தியானத்திற்கு இரண்டு அர்த்தங்கள் உண்டு. அதனால் தான் இந்தியாவில் அதற்கு இரண்டு சொற்கள் இருக்கின்றன. *தியானம் மற்றும் சமாதி.*

தியானம் என்றால் தற்காலிகமாக ஒரு தியான நிலையை குறிப்பிடுகிறது. சமாதி என்றால் நீங்கள் வந்தடைந்து விட்டீர்கள்

என்று பொருள். இனி தியானம் தேவையில்லை. எப்போது தியானம் கூடத் தேவைப்படவில்லையோ, ஒருவர் தியானத்தில் உள்ளார் என்றாகும் - எப்போதும் அதற்கு முன்னர் இல்லை. எப்போது ஒருவர் வெறுமனே தியானத்தில் நடக்கிறாரோ, அதில் உறங்குகின்றாரோ, அதில் வாழ்ந்து கொண்டிருக்கிறாரோ, எப்போது தியானம் வாழும் முறையாகிறதோ, அவர் வந்தடைந்து விட்டார் எனலாம்.

ஆனால் நீங்கள் அதிகமாக பணத்தைத் தேடி, அதிகாரத்தை நாடி ஓடிக்கொண்டு இருந்தீர்கள். ஓட்டத்திற்கு அதிகமாகப் பழக்கப்பட்டு விட்டீர்கள். திடீரென 'நில்' என்று சொல்வது பெரிய நிபந்தனையாகிவிடும். அதனால் என்ன சொல்கிறோம். ''கடவுளின் பின்னால் ஓடு.'' இது உங்களை சற்றே மந்தமாக்கும். ''எப்படி கடவுளின் பின்னே ஓடுவது'' என்று நீங்கள் கேட்கும்போது, ''அமைதியாய் உட்காருங்கள். கண்களை மூடி, சுவாசத்தை கவனியுங்கள்'' என்று சொல்கிறோம். இது என்ன மாதிரியான ஓட்டம்? ஓட்டம் என்ற பெயரில் நீங்கள் ஓடாமலிருக்க அறிவுறுத்தப்படுகிறீர்கள்.

உங்கள் சுவாசத்தைக் கவனித்துக்கொண்டிருப்பது, போகப் போக சுவாசம் மெதுவாகிக்கொண்டே போகிறது. அமைதியாக அமர்ந்துகொண்டு எங்கேயும் நகராமல், ஒருநாள் திடீரென எல்லா பயணமும் முடிந்துவிட்டதென உணர்வீர்கள். நீங்கள் எங்கேயும் செல்லவில்லை. 'நீங்கள் இருக்கின்றீர்கள்'. அந்தக் கணத்தில் நீங்கள் இருப்பதைக் காணும்போது, நீங்கள் வெறுமனே இருக்கின்றீர்கள். அது நடந்துவிட்டது. அது உள்ளும் அல்ல; வெளியும் அல்ல.

இதை ஓர் முரண்பாடான முறையில் சொல்கிறேன்: அகம் எப்போது உணரப்படுகிறதென்றால், அகமும் புறமும் காணாமல் போகும்போதுதான். புறத்தை சமன் செய்வதற்கான தொடக்கமே அகம். இரண்டும் ஒரு முழுமையான சமச்சீர் நிலைக்கு வரும்போது அவை ஒன்றைஒன்று இல்லாததாக்கும்போது,

வெறுமை உங்கள் கைகளில் மிஞ்சியிருக்கும் - அகமும் இல்லை, புறமும் இல்லை. இது கற்பனை இல்லை.

இப்போது, பத்ம சாம்பவா, இது கற்பனைதான். நீங்கள் மிககக் கவனமாக இருக்கவேண்டும். ஏனென்றால் புதிய ஆசைகள், கற்பனா இன்பங்கள், மற்றும் புதிய உலகங்களை உருவாக்கித் தரும். மூலங்களில் கற்பனையும் ஒன்று. அது பொய்த்தோற்றம் ஒரு *மாயை.*

## நான்காவது கேள்வி:

*நீங்கள் யார்?*

உங்களுக்கு ஒரு கதை சொல்ல விரும்புகிறேன். பல நூற்றாண்டுகள் ஆகிவிட்டன. இருந்தாலும் தியானம் செய்ய விரும்புவோருக்கு இந்தக் கதை அதிகளவு பொருள் உடையதாக உள்ளது.

போதிதர்மர் சீனாவிற்குச் சென்றார். மிகவும் தனித்தன்மை உடையவர். முழு சீன தேசமும் போதிதர்மருக்காக காத்துக் கொண்டு இருந்தது.

இமாலயத்தைக் கடந்துசெல்ல பல வருடங்கள் ஆயிற்று. அவர் நடந்து பயணம் செய்துகொண்டிருந்தார். கடினமாக இருந்தது.

எல்லை அருகே பேரரசர் அவரை வரவேற்கக் காத்திருந்தார். பேரரசரின் பெயர் 'வு'. அவர் பௌத்தராக மாறியிருந்தார். அதுமட்டுமல்ல, தன் செல்வம் அனைத்தையும் பௌத்தத்தின் சேவைக்காக அர்ப்பணித்துவிட்டார். பல லட்சக்கணக்கான மனிதர்களை பௌத்தத்திற்கு மாற்றியிருந்தார். ஆயிரக்கணக்கான பௌத்த கோயில்களையும், புத்தர் சிலைகளையும் எழுப்பி இருந்தார். புத்தருடைய மறை நூல்கள் எல்லாவற்றையும் சீன மொழியில் மொழி பெயர்க்க உதவி செய்தார். ஆயிரக்கணக்கான புத்த பிட்சுக்கள் அவர் மாளிகையில் தினமும் அன்னதானம் பெறுவார்கள்.

இப்போது போதிதர்மர் வருகிறார். மற்றொரு புத்தர் வருகிறார். அவரை வரவேற்க 'வு' வந்துள்ளார். இயல்பாகவே இந்த 'உரையாடல்' நடந்தது. சிறியதுதான். ஆனால் மிக முக்கியத்துவம் வாய்ந்தது. மகத்தான ஒன்று.

'வு' கேட்டார். ''பௌத்த சேவையின் பொருட்டு நான் செய்து கொண்டிருந்த நல்ல காரியங்களின் நன்மை என்ன?'' தலையில் ஒரு செல்லத் தட்டு எதிர்பார்த்திருப்பார் போல. இயற்கையாக இந்த நம்பிக்கைக்குக் காரணம், மற்ற எல்லா பௌத்த ஆசான்களும் துறவிகளும், ''நீ மகத்தானவன், வரலாற்றிலேயே நீ தான் மிகப்பெரிய சக்கரவர்த்தி; இவ்வளவு புனிதமான செயல்கள் செய்திருக்கிறாய், உன் வாழ்க்கையே உண்மையான சேவை மற்றும் பரிவிற்கான அடையாளம்'' என்று பாராட்டு கூறினர்கள்.

இதனாலேயே ஆசானுக்கு ஆசானான போதிதர்மரிடமிருந்தும் ஏதாவது ஒப்புதல் கிடைக்கும் என்று 'வு' எதிர்பார்த்தார். போதிதர்மர் என்ன சொன்னார் தெரியுமா?

''எந்த நன்மையும் கிடையாது. எந்தச் சிறப்பும் இல்லை. முற்றிலும் ஒன்றும் இல்லை'' என்றார் போதிதர்மர். பாமரனின் சொற்களில் சொல்வதென்றால், ''ஒரு பிரயோஜனமும் இல்லை - தண்டம்''

'வு' அதிர்ச்சிக்கு உள்ளாகி அவமானப்பட்டார். தன் காது களையே நம்ப முடியவில்லை. ஆயிரக்கணக்கான துறவிகள் கூடியிருந்தனர். அவர்களும் அதிர்ச்சிக்குள்ளானார்கள். இதுபோல ஏதாவது ஆகும் என்று அவர்களும் பயத்தில் இருந்தனர். ஏனென்றால் போதிதர்மர் பற்றிய விசித்திரமான கதைகளை அவர்களும் கேட்டு இருக்கின்றனர். போதி தர்மர் வந்தவுடன் அவர் விசித்திரமானவர் என்பது உறுதியாயிற்று. போதிதர்மர் தன் காலணி ஒன்றை தன் தலை மீது சுமந்து கொண்டிருந்தார். பார்ப்பதற்கும் ஆபத்தானவராய் தெரிந்தார். தீ உமிழும் கண்களாய் தெரித்தார். மேலே பாய்ந்து கொன்றுவிடுவார் போலத் தோன்றியது. ஒரு குரு உண்மையில் இதைச் செய்தாக

வேண்டும். நீண்ட தலைமுடியும் தாடியும் வைத்திருந்தார். முகமே முடியால் மறைந்து போயிருந்தது.

பின் நாட்களில் அவர் 'காட்டுமிராண்டி புத்தர்' என்றும் இந்தியாவிலிருந்து வந்த 'காட்டுமிராண்டி பிராமணர்'' என்றும் சீனாவில் அறியப்பட்டார். கட்டுக்கடங்காத மனிதராய் இருந்தார். சக்கரவர்த்தி வுவின் குலை நடுங்கியிருக்கும்.

''எல்லாம் தண்டம்'' என்று போதிதர்மர் சொன்னபிறகு உரையாடலைத் தொடர்வதில் அர்த்தமில்லை. ஆனால், இது எதிர்பாராமல் திடீரென நடந்தது. மேலும் 'வு' நவீனமானவர். பண்பட்டவர். ஒரு சீன சக்கரவரத்தி - சீனர்கள் அதிக பண்புடையவர்கள். பண்பானவர்கள். இவ்வளவு எளிதாக சட்டென முடிந்துவிட்டதென்றால், நன்றாக இராதே என்று நினைத்த 'வு' மறுபடியும், ''இவையெல்லாம் புனிதமானது இல்லையா? நீங்கள் வேடிக்கையாக சொல்கிறீர்கள்'' என்று சொன்னார்.

போதிதர்மர் தெளிவாக, ''இல்லை. எந்தப் புனிதத் தன்மையும் இல்லை. எல்லாம் வெற்று'' என்றார். உரையாடலை சட்டென முடிப்பதிலேயே குறியாக இருந்தார்.

இப்போது 'வு'விற்கும் 'பண்பாடு' நயம் எல்லாம் மறந்துவிட்டார். இந்த மனிதன் ரொம்பத்தான் பேசுகிறார் என நினைத்தவாறே, ''சரி, அப்படியானால் என் முன்னே நிற்கும் நீங்கள் யார்?'' என்று கேட்டார் 'வு'.

அழகாக சிரித்த போதிதர்மர், சொன்னார். ''எனக்குத் தெரியாது.

*உங்கள் கேள்வி ''நீங்கள் யார்?''*

நான் சொல்கிறேன், ''எனக்குத் தெரியாது.''

''எனக்குத் தெரியாது'' என்று போதிதர்மர் சொன்னபோது என்ன குறிப்பிடுகிறார்? அவருக்குத் தெரியவேண்டும். ஆனால் ''எனக்குத் தெரியாது?'' என்று சொல்வதில் என்ன பொருள்? அந்த எளிய அறிவிப்பில் அவர் ஆயிரத்தோரு

விஷயங்களைச் சொல்கிறார். அதன் பொருள் உணர மக்களுக்கு பல நூற்றாண்டுகளாகியது. இன்னும் பல அர்த்தங்களுக்கு மேல் அர்த்தங்கள் கூறப்படுகின்றன.

முதலாவதாக, நீங்கள் அறிந்து கொள்ளும்போது, நீங்கள் காணாமல் போய் விடுகின்றீர்கள். 'நான்' என்பது இல்லை. 'நான்' இருக்கும்போது, அறிதல் இருப்பதில்லை. 'நான்' இல்லாமல் போகும்போது, உங்களுக்கு தெரிய வரும். ஆனால் நீங்கள் அங்கே இருக்க மாட்டீர்கள்.

ஆக, இரண்டு விதமான அறியாமைகள் உள்ளன. முதலில், நீங்கள் இருக்கும்போது அறியாமல் இருப்பது; இரண்டாவது ஒளிவீசும் அறியாமை, பிரகாசமானது, ஆனால் நீங்கள் அங்கே இருப்பதில்லை. அப்படியானால், ''எனக்குத் தெரியும்'' என்று சொல்ல அங்கே யார் இருக்கிறார்கள்? 'நான்' என்பது அங்கே இல்லை.

இரண்டாவது விஷயம். எப்போதெல்லாம் உங்களுக்கு ஒரு விஷயம் தெரிந்து இருக்கிறதோ அது உங்களிடமிருந்து தனித்து இருக்க வேண்டும், அது ஒரு 'அறிவுப் பொருளாக' இருக்க வேண்டும். அறிந்து இருப்பவரை உங்களால் எப்படி தெரிந்து கொள்ள முடியும்? அறிந்து இருப்பவரை ஒரு அறிவுப்பொருளாக உங்களால் சுருக்க முடியாது. அது 'அறிந்து இருக்கும் ஒன்றாக' இருக்கும் என்றும் 'அறிந்ததாக' இருக்காது. உங்களுக்குத் தெரிந்து இருப்பது எதுவாகினும் வெறுமனே நிரூபிப்பது என்னவென்றால், 'அது' நீங்கள் இல்லை என்பதையே. இதுதான் கிழக்கத்திய நாடுகளில் இருக்கும் அடிப்படை தியானங்களில் ஒன்று.

பொருட்களைப் பாருங்கள். விஷயங்களை கவனியுங்கள். நீங்கள் அறிந்து கொள்ளும் எதுவாகிலும் அது உறுதியாக நீங்கள் இல்லை என்று சொல்லலாம். ஆக, அது நீக்கப்பட்டது. இதை 'நீக்கல் வழிமுறை' என்பார்கள். அமைதியாக அமர்ந்து கவனியுங்கள் - உங்கள் உடலைப் பார்க்க முடியும், உங்கள் கால்கள் தூங்கப் போவதை உணர முடியும். கைகள் ஆயாசமடைவதை

உணர முடியும். தலைவலியை உணர முடியும். அப்படியானால் ஒரு விஷயம் ஊர்ஜிதமாகிறது; நீங்கள் உங்கள் தலை அல்ல. கால்கள் அல்ல, கைகள் அல்ல. தலை மற்றும் தலைவலியை அறிந்தவர் நீங்கள். ஆக, உடல் தவிர்க்கப்பட்டது.

அடுத்து மனதை கவனிக்கத் தொடங்குங்கள். ஒரு எண்ணம் உருவாகிறது. கோபமான, காமமான, நேசமான அல்லது ஏதோ ஒரு எண்ணம். அது உங்களுக்குள் எழுவதை உங்களால் காணமுடிகிறது. ஒரு கோப மூட்டம் வந்து உங்களைச் சூழ்ந்து கொள்கிறது. அதை நீங்கள் கவனிக்க முடியும் அல்லது நீங்கள் அடங்கா காம விழைவினால் ஆட்கொள்ளப்பட்டாலும் உங்களால் அந்த உணர்ச்சியைக் கவனிக்க முடியும். அந்தக் கோபம், தாபம், பேராசை இருப்பது உங்களுக்கு தெரிகிறது அல்லவா? பேராசை அங்கே இருப்பதை உங்களால் காண முடிகிறது எனில் ஒன்று நிச்சயமாகிறது. நீங்கள் அது இல்லை. நீங்கள் அதைப் பற்றி அறிந்தவர் அவ்வளவே. ஆக, மனமும் நீக்கப்படுகிறது.

உடலும் மனமும் நீக்கப்பட்ட பிறகு எஞ்சியிருப்பது யார்? - வெறுமனே பரிசுத்தமான சாட்சி மட்டுமே. உங்களால் இந்த பரிசுத்த சாட்சியைத் தெரிந்து கொள்ள முடியாது. ஏனென்றால் அதை ஒரு பொருளாக உங்களால் சுருக்க முடியாது. கண்ணாடியால் அதைப் பிரதிபலிக்க முடியாது. வேறு ஒன்றைதான் பிரதிபலிக்க முடியும். கண்களால் மாற்றத்தைத்தான் பார்க்க முடியும், சாட்சியைக் காண முடியாது. உங்கள் சாட்சியால் தன்னைத்தானே பார்த்துக் கொள்ள முடியாது. எனக்குத் தெரியாது'' என்று போதி தர்மர் சொன்னதன் இரண்டாவது அர்த்தம் இதுதான்.

மூன்றாவதாக, போதிதர்மர் ''எனக்குத் தெரியாது என்கிறபோது அவர் கூறும் பொருள் என்னவென்றால், இறுதியானது ஒரு மர்மம். அது மர்மமாகவே தொடரும். இந்த மர்ம முடிச்சை அவிழ்க்க வழியே இல்லை.''

*''நீங்கள் யார்?''* என்று கேட்கிறீர்கள்.

வழிமுறையான பதில் ஒன்றை நீங்கள் எதிர்பார்க்கின்றீர்கள். ஏதாவது, நான் புத்தரின் மறு அவதாரம் போன்ற ஒன்று. குப்பை! நான் இல்லை. நான் ஒரு இறை தூதர் என்று சொல்ல வேண்டும் என்பது உங்கள் விருப்பமாக இருக்கலாம். நான் அவ்வாறு இல்லை. நான் தியாகியாக விருப்பமில்லை. ஒரு முடிவான அறிவிப்பை விரும்புகிறீர்கள். இயல் உலகின் இயற்கையான அமைப்பில் அப்படியொன்று சாத்தியமில்லை.

நான் வேறு ஒரு கதை சொல்கிறேன்:

மோசஸ் மலைமீது ஏறினார். அவருக்கு கடவுள் ஒரு புதரில் நெருப்பு போல காட்சி அளித்தார். ஆனால் புதர் பசுமையாகவே இருந்தது. எரியவில்லை.

இது ஒரு குறியீடு. கடவுள் எனும் முரண்பாட்டின் உருவகமான குறியீடு. அதாவது கடவுள் ஒரு முரண்பாடு. கடவுள் ஒரு அபத்தம். *'கிரேதா குய்யா அப்சுர்டம்'* என்று லத்தின் மொழியில் ஒரு சொல் வழக்கு உண்டு. அதன் பொருள், அது அபத்தம் என்பதால் நம்புகிறேன். கிறிஸ்துவ எழுத்தாளர் டெர்டுலியனின் பிரபலமான அறிக்கை 'அவர் அபத்தம் என்பதால் நான் கடவுளை நம்புகிறேன். அவரை நம்ப முடியாது என்பதால் நான் நம்புகிறேன்.''

உருவகமாகச் சொல்லும்போது, மோசஸ் புதரில் தீயைக் கண்டார். ஆனால் புதர் எரியவில்லை. அவருக்குக் குழப்பமாகவும், புதிராகவும் இருந்திருக்கும். கடவுள் அவருக்கு பத்துக் கட்டளைகள் தந்து அவற்றை மக்களிடம் எடுத்துச் சொல்ல உத்தரவிட்டார். மோசஸிற்கு ஒரு சந்தேகம், 'யார் இதை உனக்குக் கொடுத்தார்?' என்று அவர்கள் கேட்பார்கள். நான் என்ன சொல்லட்டும்? கடவுள் சொன்னார். ''அவர்களிடம் சொல்; ''நான் எதுவோ அதுவே நான்.''

யூத மரபுவழியில் இந்த 'நான் எதுவோ அதுவே நான்' என்ற அறிவிப்பை விட குறிப்பிடத்தக்கது வேறு ஒன்றுமில்லை.

கடவுள் கூட 'நான் யார்' என்று சொல்ல முடியாது.

உங்களைப் பற்றிய வெளிஅடையாளங்களை உங்களால் கூறமுடியும். ஆனால் அந்த 'நான்' என்பதற்கு அடையாளங்கள் கிடையாது. உங்கள் பெயர் தான் நீங்கள் என்று நினைத்தீர்களானால் யாராவது நீங்கள் தான் என்று கேட்டால், 'என் பெயர் சுவாமி' அல்லது ஏதோ ஒன்று சொல்வீர்கள். அல்லது நான் ஒரு கிறிஸ்துவன், இந்து அல்லது முகமதியன் என்று சொல்லலாம். மேலும் நான் ஒரு டாக்டர், இன்ஜினியர் அல்லது பேராசிரியர் எனலாம். இவையெல்லாம் மேற்பூச்சான வெளி அடையாளங்கள். அடி ஆழத்தில் நீங்கள் ஜெர்மானியரா, ஆங்கிலேயரா, சீனரா, இந்துவா, பௌத்தரா? உங்கள் அறிவு நிலையில், ஆழமான மையத்தில். நீங்கள் டாக்டர் அல்லது இன்ஜினியரா? இல்லை. இந்த அடையாளங்கள் எல்லாம் மறைந்துவிடும். நீங்கள் யார்? நீங்கள் அங்கே இருக்கிறீர்கள். நான் எதுவோ அதுவே நான் - இதற்கு மேல் அதைப் பற்றி ஒன்றும் கூறமுடியாது.

## கடைசி கேள்வி:

*சமயம் சாஸ்வதமானது என்று சொல்கிறீர்கள், ஆனால் அது ஏன் மாறிக் கொண்டே வருகிறது?*

சமயம் சாஸ்வதமானதுதான். வாழ்க்கை மற்றும் இருப்பின் இறுதி நியதியான சமயம், ஒரு தாவோவைப் போல சாஸ்வத மானது. கிறிஸ்துவமாக அல்ல; கிறிஸ்துவம் சாஸ்வதமாக இருக்க முடியாது. ஒரு நாள் பிறந்தது என்றாவது ஒரு நாள் இறக்க வேண்டும்.

பல சமயங்கள் தோன்றி மறைந்துவிட்டன. அதுபோல மேலும் பல தோன்றி மறையும். சாஸ்வதமான சமயம் என்பதை இந்தியாவில் சனாதன தர்மம் என்று அழைக்கின்றோம். இந்த சாஸ்வதமான சமயமானது அறிவெல்லை கடந்த ஓர் தத்துவம். அந்த சாஸ்வதமான சமயத்தை ஒரு புத்தர் மாற்றி அழைப்பதுண்டு - அது பௌத்தமாகிறது. சாஸ்வதமானது காலக்கிரமமாக மாற்றப்படுகிறது. அது அப்பால் உள்ள ஏதோ ஒன்றைப் பூமிக்குக் கொண்டு வருவதாகும். ஆனால் அது

காலக்கிரமமாக மாற்றப்பட்ட கணத்தில் அது சாஸ்வதமான சமயம் அல்ல. அது உடலெடுக்கிறது. ஒரு வடிவு எடுக்கிறது. எந்த உருவமோ, வடிவோ சாஸ்வதம் இல்லை; அது இறந்து போக வேண்டும்.

உங்களுக்கு ஒரு குழந்தை பிறந்தார்போல ஆன்மா முடிவில்லாதது. ஆனால் குழந்தை இறந்துதான் ஆகவேண்டும். குழந்தையிடம் இரண்டு விஷயங்கள் உள்ளன - ஆன்மா, முடிவுற்றது; மற்றது நிலையில்லாதது - கட்டமைப்பு, இயங்கமைப்பு சார்ந்தது. உடல் எப்போதும் நிலைத்து இருக்க முடியாது. அது பூமியிலிருந்து எழுந்த ஒன்று, பூமியில் வீழ்ந்தாக வேண்டும். மண்ணோடு மண்ணாக வேண்டும்.

சமயத்தைப் பொறுத்தவரையிலும் இதேதான். சமயத்தைப் புரிந்து கொண்ட ஒரு ஞானி உங்கள் மொழியில், நீங்கள் புரிந்து கொள்ளும் வகையில் சொல்கிறார். அதனால்தான் அவ்வளவு வேறுபாடுகள், இவ்வளவு சமயங்கள். மோசஸ் தன் மக்கள் புரிந்து கொள்ளக்கூடிய மொழியில் பேசவேண்டியிருந்தது. அதேபோல புத்தரும் தன் மக்கள் புரிந்துகொள்ள வேண்டிய மொழியில் பேச வேண்டியிருந்தது. அவர்கள் வெவ்வேறான மனிதர்கள்.

யூதர்கள் ரொம்பவே நடைமுறைக்குரியவர்கள். ஹிந்துக்கள் இவர்களுக்கு நேர் எதிர். மோசஸ் நடைமுறைக்கேற்ற மொழியில் பேச வேண்டியிருந்தது. சமயம் நெறிமுறைகளாகவும், ஒழுக்கம் எனவும் மாறிவிட்டது. எனவேதான் 'பத்து கட்டளைகள்' தேவைப்பட்டன. எந்த ஹிந்து சமய நூலிலும் இதுபோன்ற கட்டளைகளை நீங்கள் காணமுடியாது. முதல் முறையாக உபநிடதங்கள் மேற்கத்திய மொழிகளில் மொழி பெயர்க்கப்பட்ட போது, மக்கள் ஆச்சர்யப்பட்டனர். பத்து கட்டளைகள் போன்று இதில் ஏதுமில்லையே, பத்து கட்டளைகள் இல்லாமல் எப்படி ஒரு சமயம் இருக்கமுடியும்? நன்னெறி பற்றி உபநிடதங்கள் எதுவும் கூறுவதில்லை. திருடாதே, பொய் சொல்லாதே, இதைச் செய், அதைச் செய் என்று சொல்வதில்லை.

ஹிந்துக்கள் எப்போதும் ஊகம் சார்ந்தும், வேதாந்தமாகவும் இருந்திருக்கின்றனர். அவர்கள் நுண்மயமாக்கத்தை விரும்பினர். ஆகாயத்தில் பறப்பதை நேசித்தனர்.

யூதர்கள் எப்போதும் நடைமுறைக்கு உரியவர்கள். இந்த வித்தியாசம்தான் வித்தியாசத்தை ஏற்படுத்துகிறது. மோசஸ் யூதர்களிடம் பேச வேண்டும், அவர் மிகக் குறிப்பாகவும் இருக்க வேண்டும் - ''இதைச் செய், அதைச் செய்யாதே'' போன்றவை. எவராவது ஹிந்துக்களிடம் 'இதைச் செய், அதைச் செய்யாதே' என்றால் பெரிதாக ஏற்றுக்கொள்ளப்படாது. அது போன்றோர் இருக்கவில்லை என்று அர்த்தம் ஆகாது. மனு இருந்தார் அப்படியே மோசஸ்போல. ஆனால் ஹிந்து உணர்வு நிலையின் மூலப்போக்கு சார்ந்து அல்ல.

முகமது வேறு ஓர் மொழி பேசுகிறார். அப்படியே காலம் மாறிக் கொண்டே வருகிறது. கிருஷ்ணர் ஐயாயிரம் வருடங்களுக்கு முன், ஓர் இருபத்து ஐந்து நூற்றாண்டுகளுக்கு முன் புத்தர். கிருஷ்ணருக்கும் புத்தருக்கும் இடையே இரண்டாயிரத்து ஐநூறு வருடகால இடைவெளி. மக்கள் மாறிவிட்டனர். நிறையக் கற்றுக் கொண்டுள்ளனர். மேலும் கற்ற பலவற்றை அகற்றியும் உள்ளனர். உடல் அமைவு, சமூகக் கட்டமைப்பு, மனதின் அமைவு எல்லாமே ஒரு மாற்ற இயல்பில் உள்ளன. புத்தர் முற்றிலும் வேறுவிதமாகப் பேச, மறுபடியும் கபீரின் பேச்சு வேறுபடுகிறது.

நானும் முற்றிலுமாக வேறுபட்ட மொழியைப் பயன்படுத்துகிறேன். நான் இன்று இருக்கும் மக்களுக்காகப் பேசுகிறேன். மீண்டும் மீண்டும் சமயம் மாறித்தான் ஆக வேண்டும். ஆனால் அடிப்படையான மையம் மாறாமல் இருக்கும். வடிவம் மாறுகிறது. உருமாறுகிறது. பெயர் மாறுகிறது. ஆனால் இன்றியமையாத மையம் அப்படியே உள்ளது.

ஞாபகம் வைத்துக்கொள்ள வேண்டிய இரண்டாவது விஷயம். இது ஞானம் அடைந்தவர்கள் கொண்டுவந்த மாற்றமாகும். ஆனால் இதற்கு இணையான மற்ற மாற்றங்களும் இருக்கின்றன.

பல மாற்றங்கள் மத குருக்களால் கொண்டு வரப்படுகின்றன. அவர்களுக்கு உண்மை தெரியும் என்பதால் அல்ல. மக்களின் தேவைகளுக்கு ஏற்ப அனுசரித்துப் போக வேண்டும் என்பதற்காகத்தான். புத்தர், ஏசு போன்ற ஞானிகள் மாற்றம் செய்யும்போது இரண்டு விஷயங்கள் கவனிக்கப்பட வேண்டும். உண்மையைப் பார்க்கவேண்டும், மக்களின் மனதைப் பார்க்க வேண்டும். அவர் ஒரு பாலம் அமைக்க வேண்டும். ஆனால் ஒரு மதகுரு மக்களைப் பார்க்கும்போது, அவர் மக்களை மட்டுமே பார்க்கிறார் - நிலவும் அரசியல், சமூகம், பொருளாதாரம் போன்றவை. அவருக்கு உண்மை பற்றிய கருத்து இல்லை. அவர் சமரசம் செய்து கொண்டே போகிறார். சமயத்தை மாற்றிக்கொண்டே இருக்கிறார். அவர் மாற்றவேண்டும். ஏனென்றால் சமரசம் செய்தாக வேண்டும். மத குருமார்களால் ஆயிரத்தோரு மாற்றங்கள் கொண்டுவரப்படுகின்றன. ஆனால் இவர்கள் கொண்டுவந்த மாற்றங்களினால் சமயம் அழிந்து போகிறது. ஆனால் தீர்க்கதரிசிகளினால் கொண்டுவரப்படும் மாற்றங்களினால் சமயம் மீண்டும் மீண்டும் உயிர்த்தெழுகிறது. இவை இரண்டு வழிமுறைகளாகும். நினைவிற் கொள்ளவும்.

ஒரு புத்தர் அல்லது கபீர் அல்லது குருநானக் போன்றவர்களின் அருகாமையில் இருந்தீர்களானால் அது முற்றிலும் வேறானது. அவர்கள் இறைவனிடமிருந்து, அதாவது மூலத்திலிருந்து புத்தம் புதிய செய்தி கொண்டுவருவார்கள். உங்கள் மொழியைப் பேசுவார்கள். ஆனால் உங்களுடன் சமரசம் செய்து கொள்ளமாட்டார்கள். அதனால்தான் அவர்கள் கடினமாகத் தெரிகிறார்கள்.

இப்போது யாரோ கேட்டார்கள், ''பகவான், சில சமயங்களில் நீங்கள் அதிக கடினமாக இருக்கிறீர்கள்.'' நான் அப்படி இருக்க வேண்டும். உங்களுடன் சமரசம் செய்ய முடியாது. நீங்கள் புரிந்துகொள்ளும் மொழியில் பேசுகிறேன். ஆனால் சமரசம் செய்யலாகாது. இல்லையென்றால், அதற்குத் தேவையே இல்லை. உங்களுடன் சமரசம் செய்து கொண்டால், நான் உங்கள் குருவே இல்லை.

ஆனால் மதகுரு சமரசம் செய்துகொண்டே போவார். அவருக்கு சாஸ்வதம்பற்றி அக்கறை கிடையாது. அவருக்கு ஆர்வம் வேறோர் விஷயத்தில் இருக்கிறது. உங்களுடன் சமரசம் செய்யத் தயார். இவ்வகை மக்கள் தொடர்ந்து சமயத்தை அழித்துக் கொண்டே இருக்கிறார்கள்.

ஆனால், இயற்கையின் போக்கிலே ஒவ்வொரு சமயமும் போக வேண்டும். யூத, கிறிஸ்தவ மற்றும் பிற குருமார்களும் கொண்டு வரும் மாற்றங்கள் எல்லாம், அரசியல் மாற்றங்கள், சமூக மாற்றங்கள் ஆகும். அவை சமயம் சார்ந்தவை அல்ல. தங்கள் மக்கள் கூட்டத்தை எவ்வாறு தக்கவைத்துக் கொள்வது என்பதை மட்டுமே பார்ப்பார்கள். எண்ணிக்கை குறைவதில் அவர்களுக்கு அச்சமுண்டு. அவர்கள் கூட்டத்தினரோடு சமரசம் செய்வர். ஆக, அடால்ப் ஹிட்லர் ஆட்சியில் இருந்தாலும் மதகுரு அவரை ஆசீர்வதிப்பார்.

இது விநோதமானது, கிறிஸ்துவை நம்பும் ஒருவர் ஹிட்லருக்கு ஆசி வழங்குகிறார். சமயத்தோடு தொடர்பில்லாத வேறு விஷயங்களை அவர் பார்க்க வேண்டியுள்ளது. இந்த மனிதர்கள் பல மாற்றங்களைக் கொண்டு வருகின்றனர்; இந்த மாற்றங்கள் தொடர்ந்து சமயத்திற்கு நஞ்சேற்றி அதை கொல்கின்றன.

ஆனால் உண்மையான மாற்றங்களும் தேவைதான். எப்போதெல்லாம் உண்மையான மாற்றம் ஏற்படுகிறதோ ஓர் புதிய சமயம் பிறக்கின்றது. எப்போதெல்லாம் இந்த போலி சமரசங்கள் தொடர்கின்றதோ பழைய சமயமும் தொடரும். ஒரு இறந்துபோன சவம் போன்ற இயல் நிகழ்வாக இருக்கும். ஆனால் தொடரும், நாற்றமெடுத்துக் கொண்டு இருக்கும். ஆனால் ஒட்டுப்போட்டுக் கொண்டே இருப்பார்கள். சவ உடலானாலும் அவர்கள் வர்ணம் பூசிக் கொண்டு இருப்பார்கள். எல்லாம் உயிரோட்டத்துடன் இருக்கிறார் போல பாசாங்கு செய்வார்கள். எப்போது புதிய மாற்றம் ஏற்படுகிறதோ, மூல முதலில் இருந்து மற்றொரு செய்தி வருகிறதோ ஒரு புதிய சமயம் பிறக்கும்.

ஏசு ஒரு புதிய செய்தி கொண்டு வருகிறார்; கிறிஸ்தவம் பிறக்கிறது. வாடிகன் தொடர்ந்து சமரசத்தில் ஈடுபட்டுக் கொண்டேயிருக்கிறது. இப்போது அது உயிரற்ற கிறிஸ்துவம். அது போவது நல்லதுதான். பூமியில் உள்ள உயிரற்ற சமயங்களோடு நாம் தொடர்பறுத்துக் கொண்டோமானால் அது மனிதகுலத்திற்கான ஆசீர்வாதமாகும். ஏனென்றால் இறந்துபோன சமயங்களை நாம் துண்டித்துவிட்டால் மக்கள் புதிய மூலங்களைத் தேடத்தொடங்குவர்.

உலகம் முழுவதிலும் உள்ள புதிய தலைமுறை இந்த நாற்றமெடுக்கும் சவங்களிடமிருந்து தொடர்பறுத்துக் கொண்டு, புதிய மூலங்களை, உயிரோட்டமுள்ள மூலங்களைத் தேடுவதில் எனக்கு மகிழ்ச்சி. இந்தத் தேடலே இந்த நூற்றாண்டின் மிகப்பெரிய இயல் நிகழ்வாகும். மேலும் இந்தத் தேடல் நாளுக்குநாள் வலுத்துக்கொண்டே வருகிறது.

ஏதோ பெரிய விஷயம் நடக்கப்போகிறது. தேடல் ஒரு பெரிய வருங்காலத்தை முன் அறிவிக்கிறது. மனித குலத்திற்கு சமயம் மறுபடியும் ஏற்படப் போகிறது. ஏசுவிற்கும் புத்தருக்கும் அவர்களின் காலகட்டத்தில் ஏற்பட்டாற்போல ஏற்படப்போகிறது. புதியதோர் சமய அறிவுநிலைக்காகவும் ஒரு மிகப் பெரிய தாவலுக்கு மனிதன் தயாராகிக் கொண்டிருக்கிறான்.

ஒரு காலத்தில் பணக்காரன் ஒருவன் வாழ்ந்தான். அவனுக்கு ஒரு மகன். மகனிடம் அவன் சொன்னான், ''மகனே! இதோ அணிமணிகள் உடைய மோதிரம். நீ என் வம்சாவளி என்ற அடையாளத்திற்காக இதை வைத்துக் கொள். பின் உன் வழிவருவோருக்கு நீ அதை வழங்கிடு. இது மதிப்புடையது. அழகான தோற்றமுடையது. மேலும் வளம் பெறுவதற்காக குறிப்பிட்ட வாயிலைத் திறந்து விடும் திறனும் உடையது.''

சில வருடங்கள் கழித்து அவனுக்கு மற்றொரு மகன் பிறந்தான். அவன் வயதுக்கு வந்தவுடன் அவனுக்கும் ஒரு மோதிரத்தைக் கொடுத்து அதே அறிவுரையை கூறினான்.

அவனுடைய மூன்றாவது மகனுக்கும் இதேதான் நடந்தது.

பெரியவர் இறந்து மகன்கள் அடுத்தடுத்து வளர்ந்தபோது ஒவ்வொருவரும், மோதிரத்தை உடைமையாக்கிக் கொண்டதினால் தங்களுக்கு முதன்மை கோரினர்.

யாராலும் எது அதிக மதிப்புடையது என்று உறுதியாகக் கூற முடியவில்லை.

ஒவ்வொரு மகனுக்கும் ஆதரவாளர்கள் கூடினர். மூவரும் தன் மோதிரமே அதிக மதிப்பு அல்லது அழகுடையது என்று கோரினர்.

ஆனால் வினோதமாக, வளத்திற்கான வாயிற் கதவின் சாவி உரிமையாளர்களுக்கும் அவர்களின் நெருங்கிய ஆதரவாளர்களுக்கும் கதவு மூடியே கிடந்தது.

அவர்கள் எல்லோருமே முன்னுரிமை மோதிரத்தின் உடைமை, அதன் மதிப்பு மற்றும் தோற்றத்தின்

ஆகிய பிரச்சினைகளிலேயே முன்னீடுபாடு கொண்டு இருந்தனர்.

ஒருசிலரே பொக்கிஷத்திற்கான கதவைத் தேடினர்.

ஆனால் மோதிரங்களுக்கும் ஒரு மாயத்தன்மை இருந்தது.

அவை சாவிகளாக இருந்தாலும், பொக்கிஷத்தின் கதவுகளைத் திறக்க நேரடியாக பயன்படுத்தக் கூடியவை அல்ல.

அதீதப் பற்றோ அல்லது வாதமோ இன்றி அவற்றின் ஏதோ ஒரு பண்பை பார்த்தாலே போதுமானது.

இதைச் செய்தவுடன் அப்படிச் செய்த மக்களால் பொக்கிஷம் எங்கு உள்ளது என்று சொல்ல முடிந்தது.

வெறுமனே மோதிரத்தின் உருவரையை படி எடுத்தலின் மூலமாகவே அவர்களால் கதவுகளைத் திறக்க முடிந்தது. பொக்கிஷங்களுக்கு மற்றொரு குணமும் இருந்தது.

அவை வற்றா நிறைவளமுடையவை.

இதற்கிடையில் மோதிரங்களுக்குரிய கட்சிக்காரர்கள் மோதிரங்களின் சிறப்புக்களை பற்றி தங்கள் முன்னோர்கள் கூறிய கதையை சற்றே வெவ்வேறு விதமாக ஒப்பித்துக் கொண்டு இருந்தனர்.

முதல் குழுவினர் தாங்கள் பொக்கிஷத்தை ஏற்கெனவே கண்டுபிடித்து விட்டதாக நினைத்தனர்.

இரண்டாவது குழுவினர் அது உருவகப் படைப்பு என்று நினைத்தனர்.

மூன்றாவது குழுவினர் கதவுகளைத் திறக்கும் சாத்தியக் கூறுகளை ஒரு கற்பனையான வருங்காலத்திற்கு மாற்றீடு செய்தனர்.

மற்றொரு நாள் உங்களிடம் நான் சொன்னேன், எல்லா புரட்சிகளும் தோற்றுவிட்டன. ஒன்றைத்தவிர. ஆனால் அது இன்னும் முயற்சிக்கப்படவில்லை. அந்தப் புரட்சிதான் சமயம், முயற்சிக்கப்படாத புரட்சி.

ஏன் இதுவரையிலும் சோதிக்கப்படவில்லை? அது ஒன்றே சாத்தியமாகக் கூடிய உண்மையான புரட்சி. உலகை உண்மையிலேயே மாற்றக் கூடியது. மக்கள் மாற்றத்தைப் பற்றியும் புரட்சியைப் பற்றியும் பேச விரும்புகிறார்கள். இதைவைத்து வார்த்தை விளையாட்டில் ஈடுபடுகின்றனர். வேதாந்தப்படுத்த விரும்புகின்றனர். ஆனால் புரட்சிக்குள் போக விரும்புவதில்லை. அதற்கான துணிவு இல்லை. பேசுவது சுலபம், புரட்சியில் இறங்குவது பாதுகாப்பற்றது.

அதனால்தான் உண்மையானது இதுவரையிலும் தவிர்க்கப் பட்டு போலியானது முயற்சிக்கப்பட்டது. அரசியல், சமுதாய மற்றும் பொருளாதார புரட்சிகள் முயற்சி செய்யப்பட்டுள்ளன. ஏனென்றால், அவை நிச்சயமாக தோற்கும் என்று மனிதன் தன் அடி ஆழத்தில் அறிவான். ஒரு புரட்சியாளனாக மகிழ்ச்சி கொள்ளும் அதேநேரத்தில் கடந்தகாலத்தைப் பிடித்துத் தொங்கிக்கொண்டிருக்கலாம். இதில் இடர்நேர்விற்கு வாய்ப்பில்லை. முயன்றுபார்த்துத் தோற்ற இந்தப் புரட்சி என்று அழைக்கப்படுபவை அனைத்தும் உண்மையான புரட்சியிலிருந்து தப்பிப்பதற்கானவை. இது உங்களுக்கு விசித்திரமாகத் தோன்றலாம். உண்மையானதைத் தவிர்க்க அவர்கள் போலியானதை உருவாக்கிக் கொண்டு இருந்தார்கள்.

மனிதன் மாறாமல் சமுதாயம் மாறாது - இது அடிப்படை உண்மை. இதை தவிர்க்க வழியில்லை. தட்டிக்கழிக்க முடியாது. தப்பி ஓட முடியாது. சமுதாயம் அருவமானது; அது

உளதாயில்லை. உளதாயிருப்பது தனி மனிதன், சமுதாயம் அல்ல. மனிதன் உள்ளான். ஆனால் சமுதாயம் அருவமானது. அது ஓர் கருத்தியல். எப்போதாவது சமுதாயத்தை சந்தித்து இருக்கிறீர்களா? தேசத்தை சந்தித்தது உண்டா? ஏதோ ஒன்றை எதிர்கொள்ளும் போது, நீங்கள் ஒரு மனிதனைச் சந்திக்கின்றீர்கள். உயிருடன், சுவாசித்துக்கொண்டிருக்கும் மனிதனை சந்திக்கிறீர்கள். சமுதாயம் ஓர் இறந்துபோன உலகம். அதற்கென பயன் உண்டு; அது வெறும் அடையாளம் மட்டுமே. வெறுமனே அடையாளத்தை மாற்றுவதால் மட்டும் நீங்கள் எதையும் மாற்ற முடியாது. மெய்யான வஸ்துவை மாற்ற வேண்டும். சமுதாயம் மனிதன் என்ற வஸ்துவால் உருவாக்கப்பட்டது. மனிதன் தான் சமுதாயத்தை உருவாக்கும் கல். மனிதன் மாறாமல் எதுவும் மாறாது. நீங்கள் பாசாங்கு வேண்டுமானால் செய்யலாம். நம்பிக்கை வைக்கலாம். கற்பனை செய்யலாம். தொடர்ந்து துன்பத்தில் வாழ்ந்து கொண்டு இருக்கலாம். கனவு காணலாம். கனவுகள் சுகமளிக்கும். ஆறுதலாய் இருக்கும், உங்களை நித்திரையில் ஆழ்த்தி வைத்திருக்கும். உண்மையில் நவீன ஆய்வுகள் சொல்வது என்னவென்றால், கனவுகளின் வேலை அதுவேதான். உங்களை தூக்கத்தில் வைத்திருப்பது.

இரவு தூங்கும்போது உங்களுக்கும் பசிக்கின்றது. நீங்கள் ஃபிரிஜ்ஜைத் திறந்து எதையோ சாப்பிடுவது போல கனவு காண்கிறீர்கள். தூக்கம் கெடுவதில்லை. கனவு வராவிட்டால், பசி அதிகமாகி, உங்களைத் தூங்க விடாது. பசியே உங்களை எழுப்பி விடும்.

உங்கள் சிறுநீர்ப்பை நிரம்பி அழுத்தம் தருகிறது. கழிவறைக்குச் சென்றதுபோல கனவு காண்கிறீர்கள். கழிவறை பற்றி நீங்கள் கனவு காணவில்லை என்றால், அழுத்தம் தாங்க முடியாமல், எழுந்து கொள்வீர்கள். கனவின் செயல் உங்களை தூக்கத்தில் வைத்திருப்பதாகும்.

எல்லா கனவுகளின் செயல் நோக்கமும் அதுவேதான். என்றோ ஒரு நாள் சமுதாயம் வர்க்கபேதமின்றி இருக்கும். கற்பனையான

நல் உலகம், 'உடோப்பியா' ஒரு நாள் உருவாகும். அதில் துன்பங்களே இராது, அந்த நாள் பூமி சொர்க்கலோகமாகும். இவை வெறும் கனவுகள். அவை ஆறுதல் அளிப்பவை. சுகமளிப்பவை அவ்வளவே. காயத்திற்கு களிம்பு போன்றவை. ஆனால் களிம்பே இங்கே போலியானது.

ஐந்தாயிரம் வருடங்களாக மனிதன் அவ்வாறு கனவு கண்டு கொண்டிருக்கிறான். அதாவது, சமுதாயம் மாறும். கூடிய விரைவில் விஷயங்கள் நலமாகும். இரவு போய் விடியல் தோன்றும். ஆனால் இரவுதான் நீடிக்கின்றது, தூக்கம் தொடர்கிறது. சமுதாயம் மாறிக் கொண்டேயிருக்கிறது. ஆனால் உண்மையில் எதுவும் மாறவில்லை. வடிவுகள்மட்டுமே மாறுகின்றன. ஓர் அடிமைத்தனத்திலிருந்து மற்றொன்றிற்கு ஒரு வகையான ஒடுக்குமுறையிலிருந்து மற்றொரு வகைக்கு மாறுவது. ஒரு வகையான ஆட்சியாளர்கள் மற்ற வகையினரால் மாற்றியமைக்கப் படுகின்றனர். ஆனால் ஒடுக்குமுறை தொடர்கிறது. சுரண்டல் தொடர்கிறது. துன்பம் தொடர்ந்து நிலவுகிறது.

சமயம் மட்டுமே புரட்சி என்று நான் சொல்கிறேன். ஏனென்றால் அது மட்டுமே மனிதனை மாற்றுகிறது. அது மனிதனின் அறிவுநிலையை மாற்றுகிறது. இருதயத்தை மாற்றுகிறது. அது அந்த தனிமனிதனைப் பொறுத்தது. ஏனென்றால், தனி மனிதன்தான் மெய்யானவன். சமயம் சமுதாயத்தைப் பற்றி கவலைப்படுவதில்லை. தனிமனிதன் வித்தியாசமாக இருந்தால், உங்களுக்கு ஒரு வித்தியாசமான சமுதாயம் அமையும். அதன் விளைவாக உலகமும் வித்தியாசமாக இருக்கும். வெளிப்புறத்தை மாற்றுவதின் மூலம் உங்களால் உட்புறத்தை மாற்ற முடியாது. புறம் விளிம்பில் உள்ளது. ஆனால் உட்புறத்தை, மையத்தை மாற்றுவதின் மூலம் நீங்கள் வெளிப்புறத்தை மாற்றலாம். அறிகுறிகள் மாற்றுவதின் மூலம் நோயை குணப்படுத்த முடியாது. மனிதனுக்குள் ஆழமாகச் செல்ல வேண்டும். எங்கேயிருந்து இந்த வன்முறை, ஒடுக்குமுறை வருகிறது? எங்கேயிருந்து வருகின்றது இந்த அகங்காரப் பயணம். எல்லாமே உணர்வு

நிலையற்ற மனதிலிருந்து வருகிறது. தூங்கியவாறே மனிதன் வாழ்கின்றான். இயந்திரத்தனமாய் அவன் வாழ்கிறான். இந்த இயந்திரத்தனம் உடைக்கப்பட வேண்டும். அவனை மறு ஆக்கம் செய்தாக வேண்டும். இதுதான் முயற்சிசெய்யப்படாத சமயப் புரட்சியாகும்.

''இந்த கிறிஸ்துவம், இந்து, இஸ்லாமிய மதங்கள் எல்லாம் என்ன?'' என்று நீங்கள் கேட்பீர்கள். அவை எல்லாம் உண்மையிலிருந்து தப்பித்துக்கொள்வதற்கானவை.

ஏசு உலகத்திற்கு வரும்போது அவர் மெய்யானதைக் கொண்டு வருகிறார். அவர் தனிமனிதனை மாற்ற விரும்புகிறார். ஏசு தொடர்ந்து வலியுறுத்துவது, 'இறைவனின் ராஜ்ஜியம் உன்னுள் இருக்கிறது' என்ற உண்மையை. ''நான் இந்த உலகின் ராஜ்ஜியத்தைப் பற்றி பேசவில்லை. அதற்கு அப்பால் உள்ளதைச் சொல்கிறேன். நீங்கள் மறுபடியும் பிறந்தாலன்றி எதுவும் நடக்கப்போவதில்லை.'' உங்கள் இருப்பின் உள்ளே உள்ளதை மாற்றியமைக்க வேண்டும் என்று மக்களிடம் தொடர்ந்து சொல்லிக்கொண்டிருந்தார். நீங்கள் அதிக விழிப்புடன், நேசத்துடன் இருந்தால் அதை மாற்றமுடியும் என்கிறார் அவர். நேசமும் விழிப்பும் உங்கள் அக ரசவாதத்தை முற்றிலுமாக மாற்றியமைக்கமுடியும்.

இவர்போன்ற ஆபத்தான மனிதர்களை நாம் பூமியில் அனுமதிக்க இயலாது. அதனால்தான் ஏசு சிலுவையில் அறையப்பட்டார். இவர்கள் நம்மை தூங்கவிட மாட்டார்கள். நம்மை உலுக்கி, அதிர்ச்சிக்கு உள்ளாக்கி, நம்மை விழிக்கச் செய்ய முயற்சி செய்வார்கள். நாம் பல கனவுகள், அழகான கனவுகளைக் கண்டுகொண்டு இருக்க, அவர்கள் தொடர்ந்து சப்தமிட்டுக்கொண்டே இருக்கிறார்கள். அவர்கள் இருப்பே நமக்குத் தொந்தரவாக உள்ளது. ஏசு, சாக்ரடீஸ் போன்றோர் தொல்லை மனிதர்களாக இருந்திருப்பார்கள் போல. சாக்ரடீஸ் தொடர்ந்து மற்றவர் விஷயத்தில் மூக்கை நுழைத்துக் கொண்டு இருந்தார். தொடர்ந்து மற்றவரைத் தூண்டி வசீகரிக்க முயற்சி

செய்தார். உங்களை ஒரு வகையான விழிப்புநிலைக்கு உலுக்கிக் கொண்டு வர தொடர்ந்து சந்தர்ப்பங்களைத் தேடிக் கொண்டிருந்தார். இவருக்கு நஞ்சூட்டப்பட வேண்டும்.

நீங்கள் ஏசுவை சிலுவையில் இட்டாலும், சாக்ரடீசிற்கு நஞ்சு புகட்டினாலும், புத்தரை வணங்கினாலும் அது எல்லாமே ஒன்றுதான். வழிபடுதலும் ஒரு வகையான தப்பித்தல்தான். இது அதிக நாகரீகமுடையது அவ்வளவே.

ஏசு வெகு பழமையான இந்தியாவில் பிறந்து இருந்தால் அவர் சிலுவையில் இடப்பட்டு இருக்கமாட்டார். இந்தியர்களுக்கு அழிப்பதற்கு சிறந்த வழிகள் தெரியும். அவரை வழிபட்டு இருப்பார்கள். ''நீங்கள் ஒரு அவதாரம் என்று சொல்லியிருப்பார்கள். பூமிக்கு வந்த கடவுள். உங்களை நாங்கள் என்றென்றும் தொழுவோம். ஆனால் பின்பற்ற மாட்டோம். நாங்கள் எப்படி பின்பற்றுவது? நாங்கள் சாதாரண மனிதர்கள், நீங்கள் அப்பாலிருந்து வருகிறீர்கள். அதிகபட்சம் நாங்கள் உங்கள் கால்களைத் தொட்டு வணங்குவோம். எப்போதும் வணங்குவோம். இது உறுதிமொழி! ஆனால் எங்களை மாறச் சொல்லாதீர்கள். அது சாத்தியமில்லை. நாங்கள் சாதாரணமானவர்கள். நீங்களோ தெய்வத்தன்மையுள்ளவர்.''

அவதாரம் என்பதின் பொருள் அதுதான். எப்போது நீங்கள் ஒரு மனிதரை, ஒரு கிருஷ்ணரை, புத்தரை அவதாரம் என்று அழைக்கின்றீர்களோ. அதன் பொருள் என்னவென்றால், ''புரட்சி அதிரடி மாற்றங்கள், எல்லாம் பற்றி பேசுவது உங்களுக்கு சரியாக இருக்கும். அன்பிலும் விழிப்புணர்விலும் வாழ்வது உங்களுக்குப் பொருந்தும். ஆனால் நாங்கள் சாதாரண மனிதர்கள். நீங்கள் எங்களைச் சேர்ந்தவர்கள் அல்ல. நீங்கள் கடவுளிடமிருந்து வருகிறீர்கள். நாங்கள் பூமியிலிருந்து எழுகின்றோம். நீங்களோ வானத்திலிருந்து தரையிறங்குகிறீர்கள்.

உங்களை வழிபட மட்டுமே எங்களால் முடியும். நாங்கள் உங்களைப் போற்றுவோம். புகழ்வோம், காலங்காலமாய்

உங்களைப் பற்றிப் பாட்டுகள் பாடுவோம். ஆனால் எங்களை மாறச் சொல்லிவிடாதீர்கள். அதுமட்டும் சாத்தியமில்லை.''

ஒருவரை 'அவதாரம்' என்று அழைத்தால் இப்படித்தான் அர்த்தமாகும். ''கடவுளிடமிருந்து நீங்கள் வந்ததால் நல்லவராய் இருக்க முடியும். நாங்கள் எப்படி நல்லவராய் இருக்க முடியும்? நாங்கள் கடவுளிடமிருந்து வரவில்லையே. நாங்கள் பாபிகள். உங்களிடம் உள்ளார்ந்த நற்குணம் இருக்கிறது. ஆனால் எங்களிடம் கிடையாது. ஆனால் முயற்சி செய்து பார்க்கிறோம்''. இப்படியாகத் தள்ளிப்போட்டுக் கொண்டே முயற்சி செய்வதில்லை.

இது ஒரு வகையில் சிலுவையில் அறைவது போலத்தான். சாதுர்யமானது, நவீனமானது. ஆனால் இதன் பலன் கிறிஸ்து விரும்பியதுபோல் கிறிஸ்துவர்கள் இல்லை. கிருஷ்ணர் நினைத்ததுபோல் ஹிந்துக்கள் இல்லை. புத்தருக்கேற்றபடி பௌத்தர்களும் இல்லை. அவர்கள் எல்லோரும் நேர் எதிரிடையாக இருக்கின்றனர்.

சமயம் இதுவரையிலும் முயற்சிக்கு உட்படவேயில்லை. சமயம் சார்ந்த மனிதர்கள் இருந்திருக்கின்றனர். ஆனால் சமயம் முயற்சி செய்யப்பட்டதில்லை. எல்லாவிதமான பிரச்சி னைகளையும் உருவாக்கும் மனதை உருமாற்ற சமயத்திற்கு வாய்ப்பு அளிக்கப்படவேயில்லை.

அரசியல், பொருளாதாரம் மற்றும் சமயம் என்று அழைக்கப் படுபவை அனைத்துமே உண்மையான புரட்சியிலிருந்து தப்பித்தலாகும்.

உண்மையான புரட்சி பற்றி பேசப்பட்டுள்ளது. 'ஆம்' பேச மட்டுமே பட்டுள்ளது. ஏசு சொல்கிறார். ''கேளுங்கள் கொடுக்கப்படும், தேடுங்கள் கண்டுபிடிக்கப்படும். தட்டுங்கள் கதவுகள் உங்களுக்காகத் திறக்கப்படும்''.

அதீத சமயப்பற்றுள்ள கிறிஸ்துவ மத போதகர் மெயிஸ்டர் எக்கார்டிடம் யாரோ கேட்டார்கள் - ''கேளுங்கள் கொடுக்கப்படும்

என்று ஏசு சொல்லியுள்ளபோது, மக்கள் ஏன் கேட்பதில்லை? கேட்க வேண்டுமே என்பதற்காக கேட்பதென்றால், ஏன் எவரும் கேட்பதில்லை? தட்டுங்கள் திறக்கப்படுமெனில் ஏன் யாரும் தட்டுவதில்லை?'' எக்கார்ட் சிரித்தவாறு சொன்னது, 'இரண்டு காரணங்களுக்காக. முதலில் நீங்கள் கேட்டுப் பார்க்கலாம். உங்களுக்கு கொடுக்கப்படாமல் போகலாம். மக்களுக்கு ஏமாந்துபோக விருப்பமில்லை. இரண்டாவது, மற்றும் ஆழமான காரணம், நீங்கள் கேட்டு, அது உங்களுக்கு கொடுக்கப்படலாம். இது அதிக அச்சமூட்டும் ஒன்று'' இதனால்தான் மக்கள் முயற்சி செய்வதில்லை. வெறும் வாய்ப்பேச்சு மட்டுமே. உலகமே ஒரு வகையில் சமயப்பற்றுள்ளதுபோலத் தோன்றும். மக்கள் கோயில்களுக்கும், மசூதிகளுக்கும், தேவாலயங்களுக்கும் செல்கிறார்கள். பைபிள், குரான், கீதை எனப் படிக்கிறார்கள். வேதம் ஓதுகின்றனர். மந்திரம் ஜபிக்கின்றனர். ஆனாலும் சமய உணர்வு என்று ஏதுமில்லை. மிக இருண்ட உணர்வுநிலையற்ற மேகங்களால் உலகம் சூழப்பட்டுள்ளது. வெளிச்சமே இல்லை போல் உள்ளது. காரிருள் மூடிய இரவு, ஒரு நட்சத்திரம் கூட தெரியவில்லை.

இதைப் பற்றி நீங்கள் மிக மிக விழிப்புடன் இருக்க வேண்டும். ஏனென்றால், காலங்காலமாய் மக்கள் செய்து கொண்டிருந்ததையே நீங்களும் செய்யக் கூடும்.

கிறிஸ்துவம், இந்து மதம், இஸ்லாம், பௌத்தம், ஜைனம் - இவையெல்லாம் உண்மையான மதங்கள் அல்ல. அவை எல்லாம் போலிகள். கிறிஸ்து என்பது உண்மை. கிறிஸ்துவம் பொய். புத்தர் உண்மை. பௌத்தம் பொய். பௌத்தம் நம்மால் உருவாக்கப்பட்டது. புத்தரை நாம் உருவாக்கவில்லை. நம் தேவைகளுக்கு ஏற்ப, கருத்துக்களுக்கு ஏற்ப நம் முற்சாய்வுகளுக்கு ஏற்ப நாம் பௌத்தத்தை உருவாக்குகிறோம். புத்தர் எனும் தொன்மத்தை உருவாக்குகிறோம். உண்மையான புத்தர் நாம் உருவாக்கியவர் அல்ல. உண்மையான புத்தர் நம்மையும் மீறி நம் இருப்பிற்குள் வருகிறார். அதற்கு போராட வேண்டியுள்ளது. உளதாய் இருக்க அவர் வழிவகைகள்

கண்டுபிடிக்க வேண்டும். நாம் சமூகம் என்றழைக்கும் சிறையிலிருந்து மீள அவர் வழி தேட வேண்டும். ஆனால் யாரேனும் அறிவுநிலை எய்துவிட்டால், நாம் அவரைச் சுற்றி கூடி ஒரு கட்டமைப்பை நெய்திடுவோம். இவையெல்லாம் நம் உருவாக்கமே. புத்தர் பற்றிய கதைகள் எல்லாமே புனைவுகளே. அதேபோலத்தான் கிறிஸ்துவைப் பற்றியதும். உண்மையான மனிதர் தொலைந்து போகிறார். நாம் அந்த அளவு தூசியை உருவாக்குவதாலும் பனிமூட்டத்தை உண்டுபண்ணுவதாலும் உண்மையான மனிதனை யாரும் பார்க்க முடிவதில்லை. இதுதான் இறைமை நூலோர்களின் வேலையாகும்.

கடந்த இரண்டாயிரம் வருடங்களாக கிறிஸ்துவ இறை யியலாளர்கள், ஏசுவைக் காண முடியாத அளவிற்கு தூசியை கிளப்பிக்கொண்டிருக்கிறார்கள். இவர்களின் வேதாந்தத்தில் கருத்தியலாக்கத்தில் ஊக அனுமானங்களில் மற்றும் அற்ப தர்க்க வாதங்களில் ஏசு முற்றிலுமாக காணக்கிடைக்காமல் போகிறார். வார்த்தைகள், வார்த்தைகள், மேலும் வார்த்தைகள். வார்த்தைகளினால் ஓர் இமய மலையை உருவாக்கிவிட்டனர். யாருக்கும் இந்த மனிதர் யார், அவர் கூறும் செய்தி என்ன என்பதைப் பற்றி அக்கறை கிடையாது.

செய்தி வெகு எளிமையானது. சிக்கலே இதில் இல்லை. ஏசுவையோ அல்லது புத்தரையோ நீங்கள் வழிபட வேண்டும் என்பதில்லை செய்தி... நீங்களே ஒரு ஏசு அல்லது புத்தராக வேண்டும் என்பது தான் செய்தி - அதற்குக் குறைவாக எதுவும் ஏற்பதற்கும் இல்லை. கிறிஸ்துவனாகாதே. ஒரு கிறிஸ்துவாக பௌத்தனாகாதே, புத்தனாகிவிடு. எந்த 'இசமும்' (புத்திசமும்) புத்தரை உள்ளடக்க முடியாது. எந்த சர்ச்சும் ஏசு கிறிஸ்துவை உள்ளடக்க முடியாது. ஆனால் மனித இதயத்தினால் ஒரு புத்தரை கொண்டு இருக்க முடியும். மனித இதயத்தினால் மட்டுமே இது சாத்தியம். ஏனென்றால் மனித இதயமானது இயலுலகின் அன்பிற்கு எல்லையற்றது. அவரை வெளியில் வழிபடாதீர்கள். நீங்கள் புத்தரைப் புரிந்து கொண்டால் உங்களையே மதிக்கப் பழகுங்கள்! உங்கள் இருப்பின் மீது மரியாதை கொள்ளுங்கள்.

அதுவே புத்தருக்குக் காட்டும் பக்தியாகும். கிறிஸ்துவைப் புரிந்து கொண்டால், உள்நோக்கிப் பாருங்கள், அங்கே அவரைக் காண்பீர்கள். அவர் வெளியில் அல்லது சர்ச்சுகளில் இல்லை. உங்கள் உயிருருவின் அடிஆழத்தில் குடியிருக்கிறார்.

உலகில் உண்மையிலேயே சமயம் ஏற்படுமானால் சமயங்கள் இருக்காது. ஆனால் ஒரு வகையான சமயத்துவம் அல்லது சமயநிலை, ஒரு நிறை வெளிச்சம் நிலவும். ஒரு வகையான பண்பு, நேசம் எப்படியோ, அறிவுநிலை எப்படியோ அதுபோன்று, விவரிக்க இயலாதது இருக்கும். அதற்கான காலம் வந்துவிட்டது. ஒரு குறிப்பிட்ட கருத்திற்கான நேரம் வந்துவிட்டால் உலகின் எந்த சக்தியாலும் அதை தடுக்க முடியாது.

மனிதன் வளர்ந்துவிட்டான்; கிறிஸ்தவம், பௌத்தம், ஹிந்து மதம் எல்லாமே முதல் நிலைக்குரிய முயற்சிகள், வெறும் கரடுமுரடான உருவரைகள். அவை ஜோதிடம் போன்றவை, ஆனால் ஜோதிடம் வானியலாக மாறும் காலம் வந்துவிட்டது. அவை இரசவாதம் போன்றவை. ஆனால் இரசவாதம் வேதியியலாக மாற வேண்டிய நேரம் வந்துவிட்டது. அவையெல்லாம் மாயாஜாலம் போன்றவை. ஆனால் மாயாஜாலம் கைவிடப்பட வேண்டும். ஏனென்றால், மனிதன் அறிவியல் பூர்வமாவதற்குத் திறன் உண்டு. அறிவியலுக்கான நாள் வந்துவிட்டது. மனிதன் முதிர்ச்சி பெற்றுவிட்டான்.

இதனால்தான் இவ்வளவு போராட்டம், ஏனென்றால், அந்த பழைய சமயமும், பொருத்தமாக இல்லை. மக்கள் சமயத்திற்கு எதிராக மாறுவதற்கு காரணம் சமய எதிர்ப்பு அல்ல. ஆனால் பழைய சமயங்கள் பொருத்தமாயில்லை. மக்கள் நாத்திகவாதிகளாகக் காரணம், கடவுள் இறந்துவிட்டார் என்பதற்காக அல்ல. பழைய கடவுள்கள் அழுகிப் போய்விட்ட படியால், புதிய உலகிற்கு கடவுள் பற்றிய புதிய நோக்கு வேண்டும்; புதிய மனிதனுக்கு கடவுள் பற்றிய புதிய கருத்து, ஒரு புதிய அணுகுமுறை தேவைப்படுகிறது. ஒரு புதிய கோவில் தேவைப்படுகிறது.

ஏசு சிலுவையில் அறையப்படும் வேளையில் ஜெருசலேத்தின் பழைய கோவில் இடிந்து விழத் தொடங்கியதாகச் சொல்லப் படுகிறது.

இது மீண்டும் மீண்டும் நடக்கிறது; மனிதன் தொடர்ந்து வளர்ந்துகொண்டே போகிறான்; ஒரு குறிப்பிட்டத் தருணம் வரும்போது பழைய சமயம் அதீதமாய் வரையறைப்படுத்துகிறது. மனிதன் இனி இதில் வாழமுடியாது என்று தனக்கென பெரிய இடப்பரப்பு ஏற்படுத்திக்கொள்ள வேண்டும் அல்லது நாத்திகனாக வேண்டும். உலகிற்கு புதியதொரு சமயத்தன்மையை வழங்கவேண்டும் அல்லது மனிதன் நாத்திகனாகப் போகிறான். இந்து மதம், இஸ்லாம், கிறிஸ்தவம் எல்லாம் ஆற்றலற்றுப் போய்விட்டன. அவை புதிய பார்வை தரவில்லை. பழையவற்றையே திருப்பித்திருப்பிச் சொல்லிக் கொண்டிருக்கின்றன. பழையது எல்லாம் பொன்னானது என்று எப்படியாவது மனிதனுக்கு தெளிவுபடுத்தி விடலாம் என்று நம்புகின்றான். அப்படியல்ல. பழமைப்பட்டுவிட்டால் அது பொன் ஆகாது. பழையது என்றாகிவிட்டால் அது சவம், ஆன்மா, அதை விட்டு அகன்று விட்டது.

மனிதனுக்கு புதிய வகைமை தேவை. ஒரு புதிய பைபிள் தேவைப்படுகிறது. அந்த பைபிளின் புதுமை இதுவாக இருக்கும்; அது ஒரு நூலாக இருக்காது, அது ஒரு சமய உட்பிரிவாக இருக்காது. ஒரு சர்ச்சாக இருக்காது. அது ஒரு பண்பாக இருக்கும். மக்கள் இங்கே சமயசார்புடன் இருக்க முடியும். அவர்கள், இந்துக்களாகவோ, கிறிஸ்தவர்களாகவோ, மொகமதியர்களாகவோ இருக்க வேண்டிய அவசியம் இல்லை; அவர்கள் வெறுமனே சமயப்பற்றுடன் இருக்கலாம். சமய சார்பு ஒரு வாழ்க்கை முறையாகலாம். ஒரு சமயசார்பற்ற மனிதனின் நடையிலிருந்து ஒரு சமயப்பற்றுள்ள மனிதனின் நடை வேறுபட்டு இருக்கும். வேறுபாடு எப்படிப்பட்டதாக இருக்கும்? விழிப்புணர்வே அந்த வேறுபாடாக இருக்கும். சமயப்பற்றுள்ள ஓர் மனிதன் அவ்வாறு இல்லாதவரிடமிருந்து நடத்தையில் வேறுபடுவார்.

சமயப்பற்றுள்ள மனிதர் தன்னைச் சுற்றி ஒரு வித்தியாசமான சுகந்தத்தை உருவாக்குவார். இது இயற்கைதான். ஏனென்றால் அங்கே அகங்காரம் இல்லை. அதனால் அவரைச் சுற்றி ஒளிவுமறைவு இருக்காது. ஒரு சமயப்பற்றுள்ள மனிதர் ஒளிரும் வாழ்க்கை வாழ்வார்; அவருடைய அடி ஆழத்திலிருந்து ஒரு ஒளி வடிந்து கொண்டேயிருக்கும். சமயப்பற்றுள்ள ஒரு மனிதர் உணர்வுநிலையில் இருக்கும் மனிதராக இருப்பார் - ஒரு கிறிஸ்துவராக, இந்துவாக மொகமதியராக இருக்கமாட்டார்.

நான் சொல்கிறேன், அதற்கான நாள் வந்துவிட்டது. மனித வரலாற்றில் இதுபோன்ற மாறுநிலையான தருணம் இருந்ததில்லை. கடந்தகாலத்திலிருந்து மனிதன் இதுபோல் எப்போதும் களைந்தெறியப்பட்டதில்லை. இதற்குமுன் பழைய கருத்துக்கள், உருவச்சிலைகள், பழைய கருத்தியல்கள் போன்றவற்றின் மீது மனிதன் இப்படி அலுத்துப் போனதில்லை. முதன்முறையாக மனிதன் முழுமையாக வெறுத்துப் போய்விட்டான், இது ஒரு நல்ல அறிகுறி. அதீத மதிப்புடையது. பெரும்தாவல் இப்பொழுது சாத்தியமாகிறது. முயற்சி செய்து பார்க்கலாம்.

காலமனோநிலை சமய நம்பிக்கையை ஏற்றுக்கொள்ள தயாராகிக் கொண்டு இருக்கிறது. அது எப்போது நடக்கும் என்றால், காலமும் மனோநிலையும் தயாராக இருக்க வேண்டும்.

இதுநாள் வரை மனிதன் ஒரு வகையான குழந்தைத்தனத்தில் வாழ்ந்தான். கடவுளுக்கு ஒரு தந்தை போல அல்லது தாயார் போலவே கருத்துருவம் தரப்பட்டது.

அது ஒரு புறத்தெறிவு. ஒரு குழந்தையின் புறத்தெறிவு. தந்தை இல்லாமல் குழந்தையால் வாழ முடியாது. பாதுகாப்பு இல்லாமல், அரவணைக்கும் கைகள் இல்லாமல் குழந்தையால் வாழமுடியாது. இரண்டு கைகள் கூட போறாது, அதனால்தான் இந்துக்கள் கடவுளுக்கு ஆயிரம் கைகள் என்கின்றனர். - இது உங்களைப் பாதுகாப்பதற்கு. இது அச்சத்தைதான் காட்டுகிறது.

மனிதனுக்கு இனி அச்சமில்லை. எந்தப் பாதுகாப்பும் தேவையில்லை. மாறாக அவன் அறியாத பிரதேசத்திற்குள் செல்ல விரும்புகிறான். துணிகரமாகச் செயல்பட விரும்புகிறான்.

நிலவிற்குச் செல்வதென்பது துணிகரமான செயல் பற்றிய ஒரு குறியீடுதான். பலன் ஒன்றும் இல்லை. எவரெஸ்டிற்குப் போவதில் பயன் ஒன்றும் கிடையாது. அங்கே வாழ முடியாது. ஏதும் கண்டுபிடிக்கப்படவில்லை. ஆனால் எல்லா திசைகளிலும், எல்லாப் பரிமாணங்களிலும் மனிதனின் மனோநிலையை சாகசத்தன்மை ஆட்கொண்டுள்ளது. அதனால்தான் சொல்கிறேன். கால மனோநிலை தயாராக உள்ளது. இப்போது சொரூபம் கருத்துருவம் இல்லாத கடவுளை நாம் தேடலாம். ஒரு மனிதனல்லாத, தந்தை போன்றவரல்லாத ஒரு கடவுளைத் தேடலாம். கடவுளின் உண்மையை நாம் தேடத் தயார். கடவுளின் உண்மையை உணர்வுநிலையின் உண்மை மூலமாக மட்டுமே கண்டுபிடிக்க முடியும். வேறு வழியில்லை. அதிக விழிப்பணர்வு இருந்தால் மேலும் உயரிய மெய்மைகள் உங்களுக்கு கிடைக்கும். நீங்கள் மேலும் உயர்ந்த சமாதி நிலையை எட்டினால் எல்லாமே உங்களுக்கு கிடைக்கும். மிக உயர்ந்த, உச்சி முகட்டில் நிற்கின்றீர்கள், அங்கிருந்து அனைத்தும் கிடைக்கும். கடவுள் முழுமையாக தோற்றம் தருகிறார்.

இதுவரை இருந்ததில் சூஃபிசம், ஜென், ஹசிடிசம் ஆகியவை மிக உயர்ந்த வகையான சமயங்கள். இஸ்லாம் அர்த்தமற்றது. ஆனால் சூஃபிசம் அப்படியல்ல. இஸ்லாம் ஓர் மக்கள் இயக்கம். சூஃபிசம் வெகு சிலரின் தேடல், துணிவுள்ள சிலர். பௌத்தமும் மக்கள் திரள் சமயம்.ஆனால் ஜென் துணிகர செயல் புரிவோர்க்கானது. ஜென் உறுதியானதை எப்போதும் இழக்கத் தயாரானவர்களுக்கு, சூதாடுபவர்களுக்குமானது. அதேபோலத்தான் ஹசிடிசமும், சூஃபிசம், ஜென், ஹசிடிசம் ஆகியவைதான் கடந்த காலத்தில் உண்மையான சாகசங்களாக இருந்தன. ஆனால் வெகு சிலரே முயற்சித்ததால் தாக்கம் பெரிதாக இல்லை. அகண்ட இருட்டில் ஒரே ஒரு மெழுகுவர்த்திதான் எரிகிறது. இது பெரிதாகப் பயன்தரப் போவதில்லை.

சூஃபிசம், ஜென், ஹசிடிசம், தந்திரா, யோகா ஆகியவற்றின் சிறப்பான பகுதிகளை ஒன்று சேர்ப்பதுதான் சன்னியாசம் எனும் முயற்சி. அழகான துணிச்சலானவை அனைத்தும் சன்னியாசத்திற்கான அடித்தளமாக வேண்டும். இது உலகத்திற்குள் சமயத்தன்மையை வெளியிட முடியும். சமயத்திற்கு ஒரு சந்தர்ப்பம் அளித்து புரட்சி நடக்கக் கூடும் காலம் வந்துவிட்டது. நடக்கத்தான் வேண்டும். மனிதன் அதிகமாகத் துன்பப்பட்டு விட்டான். ஆனால் நினைவிற்கொள்ளவும், துன்பம் முதலாளித்துவத்திலிருந்து வரவில்லை. இல்லையென்றால் கம்யூனிசம் உதவியிருக்கக் கூடும். துன்பம் வெளியிலிருந்து வரவில்லை. அது மனிதன் தானாகவே உருவாக்கிக் கொண்டது. ஆக மனிதனின் வேர்கள் மாற்றப்பட வேண்டும். அதற்கான சாவியும் இருக்கிறது. எப்போதும் இருந்தது. பயன்படுத்தத்தான் இல்லை.

இன்று நாம் விவாதிக்கப் போகும் கதையின் பொருள் இதுதான்.

> *ஒரு காலத்தில் பணக்காரன் ஒருவன் வாழ்ந்தான். அவனுக்கு ஒரு மகன். மகனிடம் அவன் சொன்னான், ‘மகனே இதோ அணிமணிகள் உடைய மோதிரம். நீ என் வம்சாவளி என்ற அடையாளத்திற்காக இதை வைத்துக் கொள். பின் உன் வழிவருவோருக்கு நீ அதை வழங்கிடு. இது மதிப்புடையது. அழகான தோற்றமுடையது. மேலும் வளம் பெறுவதற்காக குறிப்பிட்ட வாயிலைத் திறந்து விடும் திறனும் உடையது''*

ஒவ்வொரு வார்த்தையும் புரிந்து கொள்ளப்பட வேண்டும். ஏனென்றால் இந்தக் கதைகள் சாதாரணமான கதைகள் அல்ல. இவை உங்களுடைய பொழுதுபோக்குக்காக அல்ல. நீங்கள் ஞானம் அடைவதற்காக.

> *ஒரு காலத்தில் அறிவார்ந்த பணக்காரன் ஒருவன் இருந்தான்...*

'மெய்யறிவே வளமை' என்கின்றனர் சூஃபிக்கள். மற்ற வளமை எல்லாம் பொய்யானவை. அறிவே வளமை, மற்ற எல்லா வகையான வளமையும் உண்மையில் ஏழ்மை, அது உங்களை ஏமாற்றுகிறது; உங்களை முட்டாள்தனங்களில் ஈடுபடுத்த வைக்கின்றது. அவசியமற்ற விஷயங்களில் உங்களை ஈடுபடுத்தி வைப்பதினால் அவசியமான ஒன்றை தேடுவதை நீங்கள் முற்றிலும் மறந்துவிடுகிறீர்கள். மேலும் அது உங்களிடமிருந்து தூர விலகி இருக்கவில்லை, அது உங்களுக்குள்ளேயே இருப்பது; ஆனால் புறத்தின் மீது நீங்கள் அதீத ஈடுபாடு கொண்டதினால் அகம் என்பது கிட்டத்தட்ட இல்லாததுபோல் ஆகிவிட்டது. உங்கள் பார்வை மட்டுமே அதை உண்மையாக்க முடியும்.

ஞானம், அறிவு, மட்டுமே வளம். அறிவார்ந்த மனிதன் ஒரு அரசனாகவோ அல்லது பிச்சைக்காரனாகவோ இருக்கலாம். அது இச்செய்திக்கு ஒவ்வாதது - ஆனால் அறிவார்ந்த மனிதன் என்றும் வளம் மிக்கவன். பிச்சைக்காரன் அல்லது அரசன் என்பதில் பெரிய வித்தியாசம் இல்லை.

> *ஒரு காலத்தில் அறிவார்ந்த பணக்காரன் ஒருவன் இருந்தான்... அவனுக்கு ஒரு மகன். மகனிடம் அவன் சொன்னான், 'மகனே இதோ அணிமணிகள் உடைய மோதிரம். நீ என் வம்சாவளி என்ற அடையாளத்திற்காக இதை வைத்துக் கொள்.'*

அது வெறும் குறியீடுதான். உண்மையான செல்வம் அல்ல. ஒரு குறியீடு, ஒரு உவமை, ஒரு சாவி மட்டுமே. ''சரியாகப் பயன்படுத்தினால் நீ அறிவுடனும் செல்வத்துடனும் இருப்பாய். ஒருக்கால் பயன்படுத்தினால், நான் உனக்கு தரும் பொக்கிஷங்கள் என்னவென்று அறிந்து கொள்வாய்'' என்று சொன்னார் தந்தை.

> *மேலும் அவர் சொன்னது... ''உன் வருங்கால சந்ததியருக்கு கொடு''*

ஒரு மரபு வழியை வேண்டுமென்றே உருவாக்குவது என்பதின் அர்த்தம் இதுதான். இரண்டு விதமான மரபுகள் உலகில் உள்ளன.

ஒன்று, உணர்வு நிலையற்ற மனிதர்களால் உருவாக்கப்படுவது, மற்றொன்று உணர்வு நிலையுடைய மனிதர்கள் உருவாக்குவது.

சூஃபிசம் உணர்வுநிலை உடைய ஓர் மரபுவழி. ஒரு குருவிடமிருந்து மற்றொருவருக்கு, தொடர்ச்சியாய், ஒரு சிறிய சங்கிலித் தொடர். உயிரோட்டத்தோடு இருக்கிறது. அது மனோநிலை ஆயத்தமாகும் நாட்களுக்காக உயிரோட்டத்தோடு வைக்கப்பட்டு இருக்கிறது.

ஜென் உணர்வு நிலையையுடைய மரபுவழியாகும். போதிதர்மர் இந்தியாவில் ஞானம் பெற்றார். அவர் ஒரு சீடரை இந்தியாவில் தேடி கிடைக்காததால் சீனாவிற்குச் சென்றார். அது உணர்வு நிலையான மரபுவழி. அவரிடம் சாவி இருந்தது. அவரும் வயதாகிக் கொண்டு வந்தார்.

தனக்குப் பின் சாவியைக் கையாளக்கூடிய ஒரு மரபு உரிமையாளர் கிடைக்கவில்லை. நெடுந்தூரம் பயணம் செய்தார். அந்தக் காலத்தில் சீனா வேறு ஒரு கிரகம் போல. இமய மலையைக் கடந்துபோவது ஆபத்தானது. ஆனாலும் அவர் துணிந்தார். ஆனால் அது பயன்தரும் முயற்சிதான். ஒருக்கால் யாராவது கிடைத்து, சாவியை போதிதர்மர் அவரிடம் கொடுக்க முடியும்.

ஒன்பது வருடங்கள் ஒரு குகையில் தங்கியிருந்தார். வெறுமனே காத்திருந்தார். அங்கே என்ன செய்து கொண்டிருந்தார். சுவரைப் பார்த்துக் கொண்டிருந்தார். அவர் என்ன செய்து கொண்டு இருந்தார் என்று மிகச் சரியாக எவரும் சொன்னதில்லை.

அவர் ஒரு பெரிய காந்த சக்தியை உருவாக்கிக் கொண்டிருந்தார். இந்த பாரம்பர்யத்தை முன்னெடுத்துச் செல்லும் ஒருவரை அழைக்க முற்பட்டு இருந்தார். மேலும் அவர் சொன்னது. ''சரியான நபர் வந்தால்தான் அவரைப் பார்ப்பேன். அல்லது தொடர்ந்து சுவரை நோக்கியே இருப்பேன்.''

ஒன்பது வருடங்கள் கழித்து ஒரு நாள் அந்த சரியான நபர் வந்தார். ஒன்பது வருட முயற்சி நிறைவேறியது. அளவற்ற

அமைதியில் அவர் காத்திருந்தார். அவர் ஒரு களத்தை உருவாக்கி யிருந்தார். அந்தக் களம் மக்களைத் தேடிக் கொண்டும் ஈர்த்துக் கொண்டும் இருந்தது. அந்தக் காலகட்டத்தில் பலர் வந்தனர். ஆனால் சரியான நபர் வந்ததாக போதிதர்மருக்கு தோன்றவில்லை.

பிறகு ஒரு நாள் அந்த சரியான நபர் வந்தார். போதிதர்மருக்குப் பின்னே நின்றார். பனி விழுந்து கொண்டு இருந்தது. இருபத்து நான்கு மணிநேரம் நின்றுகொண்டேயிருந்தார். பனியால் மூடப்பட்டு இருந்தார். வந்தவர் ஏதும் சொல்லவில்லை. பொறுமையாக காத்துக் கொண்டிருந்தார். இருவருக்கும் இடையே ஏதோ ஒன்று பற்றிக் கொண்டு இருக்க வேண்டும்... இரண்டு மௌனங்களும் சந்தித்தன. அடுத்த நாள் அதிகாலையில் புதிதாய் வந்தவர் தன் கை ஒன்றை வெட்டி போதிதர்மரிடம் கொடுத்துவிட்டு சொன்னார். ''என்னை நோக்கித் திரும்புங்கள். இல்லாவிட்டால் அடுத்தது நான் வெட்டப்போவது என் தலையை'' போதிதர்மர் உடனே திரும்பினார். அவர் திரும்பியாக வேண்டும். ஒன்பது வருடங்களாக அவர் யாரையும் பார்க்க வில்லை. போதிதர்மர் சொன்னார். ''வந்துவிட்டாயா?' இது ஏனென்றால் சீடன் என்பவன் தன் தலையைக் கூட கொடுக்கத் தயாராய் உள்ளவன்.

இவையெல்லாம் குறியீடான கதைகள். 'கை' என்று சொல்லும்போது என் செயலை உங்களுக்கு தருகிறேன். என்னைப் பயன்படுத்திக் கொள்ளவும். நான் உங்கள் தூதுவர். நீங்கள் எதை சுமந்து கொண்டு போகச் சொன்னாலும் செய்கிறேன். நீங்கள் கொடுக்க வந்தது எதுவானாலும் கொடுங்கள்''. ''கை'' என்பதின் பொருள் என்னவென்றால், ''இந்தக் கணத்திலிருந்து என் செயல் எல்லாம் உங்களுக்குரியது. நானாக எதையும் செய்யப்போவதில்லை. இனி நீங்கள் சொல்வதைத்தான் செய்வேன். இதுதான் என் கை'' - இதுவே அதன் பொருளாகும். உண்மையில் அவர் தன் கையை வெட்டிக் கொண்டார் என்று அர்த்தமில்லை. அது முட்டாள்தனமாக இருந்திருக்கும். அடுத்து அவர் சொன்னது, ''என்னை நோக்கித் திரும்புங்கள்.

இல்லாவிட்டால் என் தலையை வெட்டிக் கொள்வேன். அடுத்து கொடுக்கக் கூடியது என் தலை'' சீடன் என்பவன் உயிரையும் தரக்கூடியவன். இதுவே சரணாகதி.

போதிதர்மர் திரும்பி வந்தவர் கண்களை நோக்கினார். சாவி இடம் மாறியது. ஒற்றை வார்த்தை கூடப் பேசப்படவில்லை; அதற்குத் தேவை இருக்கவில்லை. இந்த மனிதர் அவ்வளவு ஆழமான அமைதியில் இருந்ததினால் அந்த அமைதியே போதுமானதாகி விட்டது. அவர் போதிதர்மரின் வழியுரிமையாளர் ஆனார். ஜென் ஓர் உயிருள்ள மரபு வழியாகத் தொடர்கிறது.

ஆக, நினைவில் கொள்ளுங்கள். எல்லா மரபுவழிகளும் மோசமல்ல. உணர்வு நிலையற்ற மனிதர்கள் உருவாக்கும் மரபு வழிகளே மோசமானவை. இவை மோசமாவது மற்றும் கேடாக கடவதும் உறுதி - ஏனென்றால் உணர்வு நிலையற்ற மனதிலும் நன்மை ஏதும் செய்ய முடியாது. ஆனால் உணர்வு நிலை கொண்டோருடைய மரபு வழிகள் இருக்கின்றன. அவை சரியான தருணத்திற்காக காத்துக்கொண்டிருக்கின்றன. அந்தத் தருணமும் அருகில் வந்துகொண்டிருக்கிறது.

அந்த வயதானவர் சொன்னார்,

> ''நீ என் மரபு வழியாளன் என்பதற்கான அடையாளமாக இதை வைத்துக் கொள். உன் வம்சாவளியினருக்கு கொடு. இது மதிப்புமிக்கது. அழகான தோற்றமுடையது. மேலும் இது வளத்திற்கான கதவுகளைத் திறக்கும் கூடுதல் திறன் கொண்டது.''

வயதானவர் சில விஷயங்களைச் சொல்கிறார். முதலில், ''இது மதிப்புடையது'' என்கிறார். துல்லியமான மதிப்பை அவர் சொல்லவில்லை. ஏனென்றால் அது சொல்வதற்கில்லை. மதிப்பு மிக அதிகம். அளவிட முடியாதது. அதை அறிய ஒருவர் அதை அனுபவித்தாக வேண்டும். விளக்கம் தர இயலாது. அவர் வெறுமனே சொல்வது. *''இது மதிப்புமிக்கது. அழகான தோற்றமுடையது...''*

எப்பொழுதெல்லாம் உண்மை உலகிற்கு வருகின்றதோ அதற்கு அளவற்ற மதிப்பு இருக்கிறது. ஆனால் யார் அதற்குள் வருகின்றாரோ, யாருக்கு அதற்குள் நுழையும் துணிவிருக்கிறதோ அவர்கள்தாம் அதன் மதிப்பை உணர்வார்கள். ஆனால் அப்படிச் செய்யாதவர்களுக்கும், அதில் அழகு உள்ளது. சீரியத் தோற்றம் உள்ளது. நீங்கள் ஓர் புத்தருக்குள் ஆழமாகப் போகாவிட்டாலும் கூட நீங்கள் அவருடைய அழகைக் காண முடியும். அருளை உணர முடியும். அதுவே அழகான தோற்றத்தின் பொருள். நீங்கள் ஏசுவுடன் செல்லாவிட்டால்கூட உங்களுக்கு ஓர் ஈர்ப்பு இருக்கும். இது இயற்கையானது.

உங்களுக்குள் உண்மை இருக்கும்போது, உங்கள் முழு உடலும் ஒளிவீசும். மேலும் இது வளத்திற்கான கதவுகளைத் திறக்கும் கூடுதல் திறன் கொண்டது.

அவர் குறிப்பிட்டு எதையும் சொல்லவில்லை. எதையும் குறிப்பாக்கவில்லை. அவர் எந்த வளத்திற்கு எந்தக் கதவு என்று சொல்லவில்லை. அதைச் சொல்லவும் முடியாது.

இதைத்தான் நானும் உங்களுக்குச் செய்கிறேன். அவசியமானதிற்கு தொடர்பு இல்லாத வெறுமனே வெளி சுற்றளவைப் பற்றிய விஷயங்களைப் பற்றி நான் உங்களுடன் பேசுகிறேன். அதன் அழகான தோற்றத்தைப் பற்றி பேசுகிறேன். விவரிக்கமுடியாத அதன் மதிப்பைப்பற்றி சொல்கிறேன். இந்தச் சாவியைக் கொண்டு திறக்கக்கூடிய ஒரு குறிப்பிட்ட கதவைப் பற்றி சொல்கிறேன். ஆனால் எந்தக் கதவு, அதைச் சுட்டிக்காட்ட வழி இல்லை. கதவு, சாவி எல்லாம் உருவகமாகப் பயன்படுத்தப்படுகின்றன. சமயம்சார்ந்த மொழியனைத்தும் உருவகமானவைதான். அது கவித்துவம் வாய்ந்தது. அதை சப்தார்த்தமாக எடுத்துக் கொள்ளக்கூடாது.

மிகப் பெரிய மெய்ஞ்ஞானிகள் அனைவரும் கவிஞர்களே. அவர்கள் கவிதைகளை எழுதினார்களா இல்லையா என்பது பொருட்டல்ல. விஷம் கொடுத்து கொல்லப்படுவதற்கு முன் சாக்ரடீஸ் என்ன செய்து கொண்டிருந்தார் ஏன்று கேள்விப்பட்டு

இருக்கிறீர்களா? அவருடைய சீடர்கள் குழம்பிப் போயிருந்தனர். ஏனென்றால் அவர் கவிதை எழுதிக் கொண்டு இருந்தார். ஒரு சீடர் கேட்டார், ''என்ன செய்துகொண்டு இருக்கிறீர்கள்?'' ''கவிதை எழுதிக்கொண்டிருக்கிறேன்!'' என்றார் சாக்ரடீஸ். ''சில மணி நேரங்களில் நீங்கள் இறந்து போய்விடுவீர்கள்!''.

''நான் வேறு என்ன செய்ய முடியும், எப்படி நான் சாவை வரவேற்க முடியும்? நான் என் வாழ்நாள் முழுவதும் கவிதைதான் எழுதிக் கொண்டிருந்தேன்'' என்று சொன்னார் சாக்ரடீஸ்.

உபநிடதங்கள் எல்லாம் கவிதைகள். குரானும் அப்படித்தான். கீதையும் பைபிளும் அதுபோன்றதே. அவை எல்லாம் கவிதையால் கூறப்பட்டவை. அவை உருவகமானவை. சொல்லுக்குச் சொல் புரிந்துகொள்ளாதீர்கள். அந்த வார்த்தைகள் வெறுமனே குறிக்கின்றன. அகராதியில் அவற்றிற்கு பொருள் தேடாதீர்கள். உங்களுக்குள் தேடுங்கள். அர்த்தம் அங்கேதான் கிடைக்கும்.

.... *''வளத்திற்கான ஒரு குறிப்பிட்ட வாயிற்கதவு''*

வெறுமனே ஒரு சிறுகுறிப்பு....

*சில வருடங்கள் கழித்து அவருக்கு மற்றொரு மகன் பிறந்தான். அவன் வயதிற்கு வந்தவுடன் அவனுக்கும் ஒரு மோதிரத்தைக் கொடுத்து அதே அறிவுரையை கூறினான். அவனுடைய மூன்றாவது மகனுக்கும் இதேதான் நடந்தது.*

உலகில் மூன்று சமயங்கள்தான் உள்ளன. யூதம், இந்து மதம், தாவோயிசம். மற்றவையெல்லாம் இவற்றின் கிளை விளைவுகள், அல்லது கூட்டுச் சேர்க்கைகள். உதாரணமாக இஸ்லாமும் கிறிஸ்தவமும் யூதத்திலிருந்து வந்தவை. சமணம், பௌத்தம் ஆகியவை இந்து சமயத்திலிருந்து தோன்றியவை. சில சமயங்கள் சேர்க்கைகளிலிருந்து பிறந்து இருக்கின்றன. உதாரணமாக இந்து மற்றும் இஸ்லாத்தின் சந்திப்பே சூஃபிசத்தை உருவாக்கிற்று. பௌத்தம் மற்றும் தாவோயிசத்தின் சேர்மானம் ஜென் உருவாகக் காரணமாயிற்று. ஆனால் அடிப்படையான

சமயங்கள் மூன்றுதான். இங்கே மூன்று இருக்க வேண்டும். காரணம் கடவுளின் தன்மை மூன்றாகும். அதாவது, மும்மை, ஹிந்து தத்துவார்த்தத்தின்படி சொல்வதானால் மும்மூர்த்திகள். எப்போதும் நினைவிற் கொள்ளுங்கள். மூன்று என்ற எண் முக்கியமானது. இருத்தலியல் ரீதியாக முக்கியமானது. நீங்கள் மெய்மைக்குள் ஆழமாகச் செல்லச் செல்ல நீங்கள் மும்மைக்குள் வருவீர்கள். எலக்ட்ரான், நியூட்ரான் மற்றும் பாசிட்ரான் என்று இயற்பியல் கூட சொல்கிறது. இயற்பியல் இவ்வாறு இதை விளக்குகிறது. அதேதான். ஆனால் உருவகம் மாறுகிறது.

மூன்று மகன்கள் வெறுமனே கடவுளின் மூன்று பண்புகளை அடையாளப்படுத்துகின்றனர். மூன்று சமயங்கள் சாத்தியம். ஏனென்றால் ஒவ்வொரு சமயமும் ஒவ்வொரு பண்பினை வலியுறுத்திக் கூறமுடியும். மூன்று மகன்களுக்கும் அணிகலன் உடைய மோதிரங்கள் வழங்கப்படுகிறது. ஒரே அறிவுரைதான் சொல்லப்படுகிறது.''நீ என் பின்வருபவன், பின் உரிமையாளன். அளவற்ற செல்வத்திற்கான வாயிற் கதவினை இது திறக்கவல்லது.''

> *பெரியவர் இறந்து, மகன்கள் அடுத்தடுத்து வளர்ந்தபோது ஒவ்வொருவரும் மோதிரத்தை உடைமையாக்கிக் கொண்டதினால் தங்களுக்கு முதன்மை கோரினர்.*

இப்படித்தான் முட்டாள்தனங்கள் தொடங்குகின்றன. இவ்வாறே கிறிஸ்தவத்தில் ஏசு தொலைந்து போகிறார். இந்து மதத்தில் கிருஷ்ணர் கிடைக்காமல் போகிறார். இப்படித்தான் பௌத்தர்களால் புத்தர் கொல்லப்படுகிறார்.

இப்போது இந்த விஷயத்திற்குள் அகங்காரப் பயணம் நுழைகிறது.

*... யாராலும் எது அதிக மதிப்புடையது என்று உறுதியாகக் கூற முடியவில்லை.*

யாரும் கதவைத் திறக்க முயற்சிக்கவில்லை. யாரும் செல்வத்தை எதிர்கொள்ளவில்லை. அவர்கள் சாவியைப்

பற்றியே நினைத்துக்கொண்டும், விவாதித்துக்கொண்டும் உரிமை கோரிக் கொண்டும் இருந்தனர். ''என் சாவி உன்னுடையதைவிட மதிப்புமிக்கது.'' இதைத்தான் மக்கள் தொடர்ந்து செய்து வருகின்றனர். கிறிஸ்தவர்கள் ஏசுவே கிருஷ்ணரை விட மதிப்புமிக்கவர் என்று கூறிக்கொண்டே வருகின்றனர்.

நான் கேட்டது:

நான் பஸ்தார் என்ற ஊரில் பழங்குடியினரிடையே தங்கியிருந்தேன். ஊரில் நடந்த ஒரு விஷயத்தைப் பற்றி மக்கள் என்னிடம் சொன்னார்கள். இந்த மக்கள் எல்லோரும் பழமையானவர்கள். முற்றிலும் கல்வி அறிவில்லாதவர்கள். அவர்கள் இன்னமும் அம்மணமாய் மனிதனுக்கு என்ன நடந்துள்ளது... என்று அறியாமல் இருந்தனர். அவர்களை நாகரிகம் இதுவரை மாசுபடுத்தவில்லை.

இந்த ஊருக்கு ஒரு கிறிஸ்தவ மதபிரசாரகர் வந்தார். ''அவர் எங்களைக் கிட்டத்தட்ட ஏசுதான் உண்மையான இரட்சகர் என்று நம்ப வைத்துவிட்டார்'' என்றனர் அந்த மக்கள்.

''என்ன நடந்தது? ஏன் கிட்டத்தட்ட என்று சொல்கிறீர்கள்? என்று அவர்களைக் கேட்டேன். ''ஏனென்றால் ஒரு இந்து சன்னியாசி வந்து முழுவதையும் கலைத்துவிட்டார்'' என்றனர்.

முழுக்கதையையும் சொல்லுங்கள் என்றேன்; கதை அருமையான ஒன்று.

அந்த ஊருக்கு ஒரு கிறிஸ்தவ மதப்பிரசாரகர் வந்தார். இந்த ஏழைப் படிப்பறிவில்லாத மக்களை நீங்கள் நம்ப வைக்கவேண்டும் என்றால், வேதாந்தம், இறையியல் எல்லாம் பேசக்கூடாது. நடைமுறை தெரிந்து பழக வேண்டும். மத பிரசாரகர் நடைமுறை தெரிந்தவர். அவர் இரண்டு சிலைகளைக் கொண்டு வந்திருந்தார், ஒன்று ஏசுவுடையது. அது மரத்தால் செய்யப் பட்டது. மற்றொன்று கிருஷ்ணருடையது. அது இரும்பால் செய்யப்பட்டது. இரண்டுமே ஒரே மாதிரி வர்ணம் பூசப்பட்டு இருந்தன. அதனால் பார்ப்பவருக்கு மரம் எது, இரும்பு எது என்று தெரிந்துகொள்ள முடியாது. அவர் இரண்டைப்

பற்றியும் பேசிவிட்டு ஒரு தண்ணீர் வாளியில் இரண்டு சிலைகளையும் போட்டார். இயற்கையாகவே கிருஷ்ணர் உள்ளே போனார். ஏசு மிதந்தார்.

பிரசாரகர் சொன்னார். ''பாருங்கள். உங்கள் கடவுளால், தன்னையே காப்பாற்றிக் கொள்ள முடியவில்லை. உங்களையா காப்பாற்றப் போகிறார்? ''மக்களும் உண்மையிலேயே நம்பினர். அவர்கள் பார்த்துவிட்டனர். மாயாஜாலம் கண்முன் நடக்கிறது. அப்படியானால் உண்மைதான். எளிய மக்கள்...

ஆனால் அடுத்த நாள் ஒரு இந்து சன்னியாசி ஊருக்குள் வருகிறார். அவரும் விஷயத்தைக் கேள்விப்படுகிறார். ''சரி மறுபடியும் பார்ப்போம்'' என்று சொன்னார் சன்னியாசி. கிறிஸ்தவ பிரசாரகர் மறுபடியும் அழைக்கப்படுகிறார். அவர் மறுபடியும் வேடிக்கைக் காட்சி நடத்திக் காட்டுகிறார். சன்யாசிக்கு விஷயம் என்னவென்று புரிந்துவிட்டது.

இந்து சன்யாசி இரு சிலைகளையும் நெருப்பில் போட வேண்டும் என்றார். மதப்பிரசாரகர் தயக்கம் காட்டினார். ஆனால் இப்போது என்ன செய்வது? அவர் ஒத்துக் கொண்டுதான் ஆகவேண்டும். இரண்டு சிலைகளும் நெருப்பில் இடப்பட்டன. பாவம் ஏசு உடனே எரிந்து சாம்பலானார். கிருஷ்ணர் ஜம்மென்று வெளியே வந்தார். பழங்குடியினருக்கு மீண்டும் நம்பிக்கை வந்தது. கிருஷ்ணர் தான் உண்மையான கடவுள்.

இது ரொம்ப அடிப்படையான அளவிலும் மிக நவீனமான அளவிலும் தொடர்ந்து நடந்து கொண்டேயிருக்கிறது. இதுதான் கிறிஸ்தவ பாதிரிகள், இந்து சன்னியாசிகள், ஜைன மத்குருக்கள் மற்றும் பௌத்த வேதாந்திகள் ஆகியோரின் முழு முயற்சியாக இருக்கிறது. அவர்கள் தொடர்ந்து ஒருவரோடு ஒருவர் சண்டையிட்டுக் கொண்டே இருக்கின்றனர். யாரும் வாயிற்கதவைத் திறப்பதுபற்றி கருதவில்லை! எல்லோரும் தங்களிடம் உள்ள சாவியே சரியானது என்று கோரிக் கொண்டு இருக்கின்றனர். நீங்கள் கதவைத் திறந்தால் அன்றி எந்தச் சாவி பொருத்தமானது என்று தெரிந்துகொள்வதற்கு வழியே

இல்லை. ஆனால் விவாதம் மட்டும் தொடர்கிறது! பைபிள்தான் உண்மையான நூல், அல்லது வேதம் அல்லது குரான் என்று. அவர்கள் தொடர்ந்து சாதுர்யமான, தந்திரமான வாதங்களை உருவாக்கிக் கொண்டேயிருக்கின்றனர். இந்த நியாயவாதங்கள் பற்றி எச்சரிக்கையாக இருங்கள். ஏனென்றால் உங்கள் மனதிலும் அவை நிறைந்து உள்ளன.

வேதங்களே மிகத் தொன்மையான சமய நூல்கள் என்று இந்துக்கள் கோரி வருகின்றனர். அவர்கள் சொல்வதும் சரியாக இருக்கலாம். ஆனால் அது எதையும் நிரூபிக்கவில்லை. ஆனால் அவர்கள் முயற்சி சொல்லத்தக்கது. காரணம் உலகில் வந்த முதல் நூல் இதுதான். ஆக, இது கடவுளிடமிருந்து வந்தது. குரானும், பைபிளும் மற்ற நூல்களும் அடிப்படையானவை அல்ல. ''எங்கள் சமயம்தான் மிகப் பழமையானது'' என்கின்றார் இந்து. கிறிஸ்தவர் என்ன சொல்கிறார். முகமதியர் என்ன சொல்கிறார்? இதைக்கேட்ட முகமதியர் சொல்கிறார். ''உங்களுடையது மிகப் பழைமை வாய்ந்ததாக இருக்கலாம். அதனால்தான் அது அழுகலாக இருக்கிறது. குரான் சமீபத்தியது. கடவுளிடமிருந்து வந்த கடைசி செய்தி. எங்களுடையது மேம்படுத்தப்பட்ட ஒன்று, அதிக தொடர்புடையது. கடைசி நூல் வந்தவுடன் முதலாவது ரத்தாகிவிட்டது''. இப்படியாக விவாதம் செய்து கொண்டே இருக்கின்றனர். இந்த விவாதம் அவ்வளவு நேரம் மற்றும் காலம் எடுத்துக் கொள்வதால், நூலை பிரித்துப் பார்க்க சாவியைத் தேட கதவை திறக்க உண்மையிலேயே வளம்பெற யாருக்கும் அவகாசம் கிடைப்பதில்லை.

அவர்கள் ஆதரவாளர்களைத் தேடத் தொடங்கினர். விரைவில் அவை சர்ச்சுகளாகிவிட்டன.

> *ஆனால் வினோதமாக வளத்திற்கான வாயிற்கதவின் சாவி உரிமையாளர்களுக்கும் அவர்களுடைய நெருங்கிய ஆதரவாளர்களுக்கும் கதவு மூடியே கிடந்தது.*

எவரும் கதவைப் பற்றிக் கவலைப்படவில்லை. கதவின் மீது யாருக்கும் அக்கறையில்லை. யாருடைய சாவி அதிக மதிப்புடையது. யாருடைய குரு 'அதிக' ஞானம் அடைந்தவர்

என்பதையெல்லாம் நிரூபிப்பதே அடிப்படையான விஷயமாக இருந்தது. மக்களுக்கு இதுவே அதிக முக்கியமாகப் பட்டது. அது வடிகட்டிய முட்டாள்தனம். அதைப்பற்றி எச்சரிக்கையோடு இருங்கள்; மேலும் மனித மனமானது இந்த முட்டாள்தனத்தை நோக்கி நகர முனையும்.

*அவர்கள் எல்லோருமே முன்னுரிமை, மோதிரத்தின் உடைமை, அதன் மதிப்பு மற்றும் தோற்றம் ஆகிய பிரச்சினையிலேயே முன்னீடுபாடு கொண்டு இருந்தனர்.*

அவசியமற்றவை எல்லாம் அவசியமானதாயிற்று. மக்கள் உபநிடதங்களின் அழகைப் பற்றி பேசுகின்றனர். இது வெளித் தோற்றத்தைப் பற்றிய பேச்சு. கீதையின் கவித்துவம்பற்றிப் பேசுகின்றனர். இதுவும் தோற்றம் பற்றிய பேச்சுதான். சில சமயங்களில் ஒரு அழகற்ற சாவிகூட கதவைத் திறக்கலாம். அப்போது ஒரு அழகான சாவி வெறுமனே ஆதரவற்றுப் போய் விடுகிறது. அழகோ, அருவருப்போ கதவைத் திறப்பதற்கு தொடர்புடையது அல்ல. சாவி பொருந்துகிறதா, சாவி உண்மையானதா இல்லையா என்பதே கேள்வி. மக்கள் அவசியமற்றதைப் பற்றியே பேசிக் கொண்டு இருக்கின்றனர்; முன்னுரிமை, தோற்றம், உடைமை, மதிப்பு போன்றவை, எல்லாமே இச்செய்திக்கு ஒவ்வாதவை.

*ஒரு சிலரே பொக்கிஷத்தின் கதவைத் தேடினர்.*

அவர்கள் வெளியிலும் தேடினர். இந்த சாவிகள் உண்மையானவை என்று நினைத்தனர். சாவி என்ற சொல்லுக்கு நேர்பொருள் கொண்டனர். இந்த சாவிகள் உருவகச் சார்புடையவை, வெறும் அடையாளக் குறியீடுகளே!

*ஆனால் அந்த மோதிரங்களுக்கு ஒரு மந்திரத்தன்மையும் இருந்தது.*

ஆம். அவை மந்திர சக்தியுடைய சாவிகள்தாம்.

*அவை சாவிகளாக இருந்தாலும், பொக்கிஷத்தின் கதவுகளை திறக்க நேரடியாக பயன்படுத்தக்கூடியவை அல்ல.*

ஏனென்றால், அங்கே கதவும் இல்லை. கருவூலமும் இல்லை!

இந்த வாக்கியங்களை கவனமாகக் கேளுங்கள். இவைதான் தியானத்திற்கான விளக்கவுரையாகும்.

*அதீத பற்றோ அல்லது வாதமோ இன்றி அவற்றின் ஏதோ ஒரு பண்பை பார்த்தாலே போதுமானது. இதைச் செய்தவுடன், அப்படிச் செய்த மக்களால் பொக்கிஷம் எங்கு உள்ளது என்று சொல்லமுடிந்தது. வெறுமனே மோதிரத்தின் உருவரையை படி எடுத்தலின் மூலமாகவே அவர்களால் கதவைத் திறக்க முடிந்தது.*

*பொக்கிஷங்களுக்கு மற்றொரு குணமும் இருந்தது; அவை வற்றா நிறைவளமுடையவை.*

அந்த சாவிகள் தியானத்திற்கான கருத்து நோக்கம். அதற்காகத்தான் பைபிள், குரான் மற்றும் உபநிடதங்கள் எல்லாம் உள்ளன. அவை தியானம் செய்வதற்கான கருத்துக்கள். ஆனால் நீங்கள் சிந்திக்கக் கூடாது. சிந்தனை செய்தால், தவறவிட்டு விடுவீர்கள். தியானம் என்றால் ''சிந்தனையில்லா ஓர் நிலை' வெறும் கவனித்தல். ஆகவே இந்தக் கட்டளைகள் நிறைவேற்றப்பட வேண்டும்.

நீங்கள் இதுதான் உண்மை என்று அறியாமலேயே, அனுபவம் இல்லாமலும் கூறினால் அது வெறும் வாதம். அனுபவம் இன்றி ஒரு நம்பிக்கையாளர் என்றால் கருத்தைப் புரிந்துகொள்ளாதவராவீர்கள். நம்பிக்கையானவர் வரமாட்டார். ஏனென்றால் அவருக்கு உண்மையைப் பற்றி முற்சாய்வு இருக்கிறது. ஒரு கருத்து உருவாக்கம் இருக்கிறது. அவர் தானே அனுபவித்ததில்லை. அறிவை இரவல் பெற்றுள்ளார்.

நீங்கள் ஏன் ஒரு கிறிஸ்தவராகவோ, இந்துவாகவோ, ஜெயினராகவோ இருக்கிறீர்கள்? ஏனென்றால் உங்களுக்கு கற்றுக் கொடுக்கப்பட்டுள்ளது. நீங்கள் ஒரு கிறிஸ்தவக் குடும்பத்தில் பிறந்து இருக்கிறீர்கள். கிறிஸ்தவக் கோட்பாடுகள் குழந்தைப்

பருவத்திலிருந்தே கற்றுக் கொடுக்கப்பட்டுள்ளன. தாய்ப் பாலோடு கிறிஸ்தவமும் உங்களுக்கு ஊட்டப்பட்டுள்ளது. அதனால் நீங்கள் கிறிஸ்தவராக இருக்கிறீர்கள். ஆனால் நீங்கள் அறிவுபூர்வமாக கிறிஸ்தவராக இருக்க முடிவெடுக்க வில்லை. அது ஒரு திணிப்பு. கிறிஸ்தவராக இருக்க நிர்ப்பந்திக்கப்பட்டுள்ளீர்கள். அடிமைத்தனம், சிறையீடு. ஒரு கிறிஸ்தவராக இருக்க நிலைப்படுத்தப்பட்டு உள்ளீர்கள். நீங்கள் உங்கள் பெற்றோரைப் பின்பற்றி நடக்கின்றீர்கள். அவர்கள் அவர்களது பெற்றோரை போன்று நடந்து வந்துள்ளனர். உங்கள் குழந்தைகள் உங்களைப் போலவே நடந்துகொள்வார்கள். எல்லோரும் பாவனையாளர்களே.

மிகச் சிறிய குழந்தை கூட பாவனை செய்வதில் திறமை காட்டும் என்பது உங்களுக்குத் தெரியுமா? இப்போது ஒரு வாரமே ஆன குழந்தைகூட பிறரைப் போல பாவனை செய்யும் என்று ஆராய்ச்சிகள் கூறுகின்றன. முயற்சி செய்து பாருங்கள். குழந்தை நல்ல மனநிலையில் இருந்தால், அதனிடம் நாக்கைத் துருத்திக் காட்டுங்கள், அதுவும் பதிலுக்கு நாக்கைத் துருத்தும். பசியோ, அழுகையோ இல்லாவிட்டால் குழந்தையும் பதிலுக்கு நாக்கை துருத்திக் காட்டும். இது விசித்திரமான ஒன்று. சாதாரண இயல்நிகழ்வு அல்ல. காரணம் குழந்தை பதில் பேசுகிறது. எதிர் வினையாற்றுகிறது. அது உங்களைப் போல பாவித்துக் காட்ட தயாராக உள்ளது. ஏழே நாட்களாகும் குழந்தை கூட நீங்கள் புன்முறுவலிட்டால், பதிலுக்கு புன்முறுவல் செய்கிறது. கோபமாக முகத்தை வைத்துக் கொண்டால், குழந்தை அலறத் தொடங்குகிறது. குழந்தையும் பாவனை செய்யத் தயாராக உள்ளது. இப்படித்தான் அது லட்சக்கணக்கான விஷயங்களைக் கற்றுக்கொள்ளப்போகிறது. மொழியைக் கற்றுக்கொள்ளும். பண்புகளைத் தெரிந்துகொள்ளும், நடத்தைகளைக் கற்றுக் கொள்ளும். இவையெல்லாம் சரிதான், தேவையானதுதான். வெளியுலக வாழ்க்கைக்குத் தேவையானவை, சரிப்பட்டு வரும். ஆனால் அக வாழ்க்கைக்கு கற்றுக் கொள்வது என்பது தவறு. ஏனென்றால் அக வாழ்க்கை கண்டுபிடிக்கப்பட வேண்டிய ஒன்று.

ஒவ்வொருவரும் தாங்களாகவே தங்களுக்கான கடவுளைக் கண்டறிய வேண்டும். அப்போதுதான் அது உண்மையானதாக இருக்கும். மொழி என்றால் பரவாயில்லை. உங்கள் பெற்றோரிடமிருந்து கற்றுக்கொள்ளலாம். இல்லாவிட்டால் அதை வேறு எங்கிருந்து கற்றுக்கொள்ள முடியும்? ஆனால் சமயம், மொழி அல்ல, சமயம் பழகும் முறையல்ல. நடத்தையல்ல. கற்றுக் கொள்ள முடியாத ஒன்றே ஒன்று சமயம். அதுவே அதன் சிறப்பு, தனித்தன்மை. கற்றுக்கொள்ள முடியாத ஒன்று என்பதால் அது புரட்சிகரமானது. கற்றுக்கொண்டது எதுவும் புரட்சிகரமானதாக இருக்க முடியாது. அது சம்பிரதாயமாக இருக்கும். மரபுவழி சார்ந்ததாக இருக்கும். முந்தைய தலைமுறையிடமிருந்து பெற்றுக் கொண்டீர்கள் என்றால் நீங்கள் வெறுமனே பாவனை செய்கிறீர்கள். நினைவிற்கொள்ளவும், ரத்தக் குழாய்கள் சுருங்கி கடினமாவதினால் அவதிப்படும் மனிதர்களைப்போல், இவரும் மரபுகள் இறுகிப் போவதால் அவதிப்படுவார். மெல்லமெல்ல உங்கள் மரபுகள் இறுகும். நீங்கள் இளைஞராக வளர்ந்த போது, சுயமாக சிந்திக்கும் திறமை பெற்றபோது, நீங்கள் ஒரு நிலைப்படுத்தப்பட்டு, சிந்திக்கும் திறனற்று போவீர்கள்.

சமயசார்பிற்குள் நுழைவதற்கு ஒருவர் தன் சமயத்தைக் கைவிட்டு விடவேண்டும். தன் கருத்து முடிவை கைவிட வேண்டும். முற்றிலும் கருத்து முடிவுகளற்று இருக்க வேண்டும். நீங்கள் ஒரு கிறிஸ்தவராக, முகமதியராக அல்லது ஒரு கம்யூனிஸ்டாக உண்மையை அணுக முடியாது. உங்கள் சொந்தக் கருத்தாக்கத்தை வைத்துக் கொண்டு நீங்கள் கடவுளிடம் செல்ல முடியாது. அப்பட்டமான அம்மணத்துடன் வெறும் நிர்வாணமாய்தான் அணுக முடியும். நீங்கள் ஒரு நிலைக் கண்ணாடியாய்தான் செல்ல முடியும்.

உபநிடதங்கள், ஃபைபிள், குரான் எல்லாவற்றிலும் அழகான பண்புக்கூறுகள் இருக்கின்றன. அவற்றில் மதிப்பிற்குரிய மகாவாக்கியங்கள் இருக்கின்றன. ஆனால் இந்த இனிமைகளைக் கண்டு அதிகமாக மனவசியப்பட்டுவிடக் கூடாது. அவை

வெளித்தோற்றங்களே. சாவி அழகாக இருக்கிறது. வைரங்கள் பதிக்கப்பட்டு இருக்கிறது. நல்லது, ஆனால் அது உண்மையான மதிப்பு உடையதல்ல. அதன் உண்மையான மதிப்பு என்பது ஒரு குறிப்பிட்ட வளத்திற்கான கதவைத் திறக்கக் கூடியதில்தான் இருக்கிறது.

*இதைச் செய்தவுடன் அப்படிச் செய்த மக்களால் பொக்கிஷம் எங்கு உள்ளது என்று சொல்ல முடிந்தது.*

முற்சாய்வு இல்லாமல், வாதம் செய்யாமல், ஏற்பும் எதிர்ப்பும் இன்றி, எந்த வகையிலும் பற்றுதல் கொள்ளாமல் உங்களால் அமைதியாகக் கவனிக்கமுடியுமானால் கதவு திறக்கும். அந்த அமைதியில்தான் கதவு இருக்கிறது. அது வற்றாத நிறைவளத்திற்கான கதவு.

*பொக்கிஷங்களுக்கு மற்றொரு குணமும் இருந்தும் அவை வற்றா நிறைவளமுடையவை.*

இந்த மூன்று குறிப்புகளையும் நினைவில் கொள்ளவும். மனிதனின் உணர்வு நிலை பின்வரும் கட்டங்களை உடையது. முதலாவது சுய - உணர்வுநிலை - அறிவார்ந்த, தர்க்க ரீதியான மற்றும் கருத்து வடிவமுள்ளது. இது அதிகமாகிப் போனால் பித்த நிலைக்குப் போய் விடுகிறது, ஏனென்றால் நீங்கள் சமநிலை இழப்பீர்கள். இந்த பித்தம் வேதாந்திகளுக்கு, விஞ்ஞானிகளுக்கு, சிந்தனையாளர்களுக்கு ஏற்படும் ஒன்று; உதாரணமாக ஃபிரெட்ரிக் நீட்ஷேவிற்கு ஏற்பட்டது போன்ற ஒன்று. அதீதமான சுயம், விளக்கக்கூற்று, அதிகமான அகங்காரம் எல்லாமாக நீங்கள் ஒரே பக்கமாக சாய்கின்றீர்கள். விழுந்து விடுவீர்கள். வாழ்க்கை எனும் நடக்கும் கயிற்றிலிருந்து விழுந்து விடுவீர்கள்.

இரண்டாவது பகுத்தறிவற்ற, உணர்வுநிலையற்ற, உள்ளுணர்வு சார்ந்த மற்றும் உணர்ச்சிவயப்பட்ட நிலையாகும். இதுவும் அதிகமானால் பித்தம் ஏறும். இதுபோன்ற பித்தம், கவிஞர்கள், ஓவியர்கள், கலைஞர்கள் போன்றோருக்கு வரும். எடுத்துக்காட்டாக, வேன்காக், நிஜின்ஸ்கை மற்றும் பிறர்.

அளவிற்கு அதிக முரண்பாடு பகுத்தறிவில்லாத செயல்பாடும் பித்தத்திற்கு இட்டுச் செல்லும்.

இந்த இரண்டிற்கும் நடுவே மூன்றாவது நிலை ஒன்று இருக்கிறது. அது வெறும் சாட்சியாக இருப்பது. அது கடந்து போகும் உணர்வு நிலை, சுயமற்ற உணர்வுநிலை, சமநிலை, சார்பற்ற இடைநிலை. வெறுமனே நடுநிலையில் இருப்பது,. ஒன்று அல்லது மற்றொன்று என்ற தெரிவு இல்லா நிலை. இது அல்லது அது என்றில்லாத நிலை. *'நேதி' 'நேதி'* என்பதுபோல. இந்நிலையில்தான் ஒரு மனிதன் புத்தராகவோ, ஏசுவாகவோ உருவாகிறான்.

எந்த சச்சரவு, வாதம் இன்றி உங்களால் வாழ்க்கையைப் பார்க்க முடியுமானால் கடவுள் தன்னை உங்களிடம் வெளிப் படுத்திக் கொள்வார். ஆனால் மக்கள் எப்போதும் கருத்து முடிவுகளோடுதான் செய்கிறார்கள். சிலர் நாத்திகவாதிகளாகிப் போகிறார்கள். அவர்கள் கடவுள் இல்லை என்று ஏற்கனவே தீர்மானித்து விட்டனர். இப்போது உண்மை நிலவ இடைவெளி விட்டு வைக்கவில்லை. இதுதான் பிரச்சினை. கடவுள் இல்லையென்று தீர்மானித்துவிட்டார்கள் என்றால், நீங்கள் கடவுளைக் கண்டுபிடிக்கமுடியாது. ஏனென்றால் நீங்கள் முடிவுசெய்ததைத்தான் உங்களால் கண்டுபிடிக்க முடியும். நீங்கள் அதை தொடர்ந்து உருவாக்கிக் கொண்டே வருகிறீர்கள். கடவுள் இருக்கிறார் என்று முடிவு செய்திருந்தால், நீங்கள் கடவுளை உருவாக்குவீர்கள். இவையெல்லாம் கண்டுபிடியுங்கள் - கடவுள் அல்லது - கடவுள் இல்லை. உங்கள் நம்பிக்கைதான் ஒரு கருவியாக செய்யப்பட்டு உருவாக்குகிறது.

முற்றிலுமாக மௌனமாக இருங்கள். முழு திறந்த மனதுடன், எந்தக் கருத்துமின்றி இருங்கள். இதுவே தியானம். இங்கே இதைத்தான் நான் உங்களுக்குக் கற்றுக்கொடுக்க முயற்சிசெய்துகொண்டு இருக்கிறேன். வாழ்க்கையின் சாட்சியாகிவிடுங்கள். களங்கமற்ற நிலையிலிருந்து, ஒரு குழந்தையைப் போன்று, உண்மை எதுவென்று அறியாமல்

செயல்படுங்கள், நீங்கள் உண்மையை எதிர்கொள்வீர்கள். அறிவு மிகுந்தோர் அதனருகில் வருவதில்லை. களங்கமற்றோர்க்கு மட்டுமே அது சாத்தியப்படும். களங்கமற்ற நிலையிலிருந்தே செயல்படுங்கள், எப்போதும் அப்படியே இருங்கள், அறிவு மிகுந்தவராகி விடாதீர், அப்படியானால்தான் உண்மை கிட்டி உங்களை விடுவிக்கும். உண்மைமட்டுமே விடுவிக்கும், உண்மைபற்றிய உங்கள் கருத்துக்கள் அல்ல.

*இதற்கிடையில் மோதிரங்களுக்குரிய கட்சிக்காரர்கள் மோதிரங்களின் சிறப்புகளைப் பற்றி தங்கள் முன்னோர்கள் கூறிய கதையை சற்றே வெவ்வேறு விதமாக ஒப்புவித்துக் கொண்டிருந்தனர்.*

போகப்போக அவர்கள் கதைகளைப் புனையத் தொடங்கினர். வேதாந்தம் பேசினர், மற்றவரிடமிருந்து வேறுபடத் தொடங்கினர். இப்படித்தான் யூதர்கள் ஹிந்துக்களிடமிருந்து வேறுபடுகின்றனர், தாவோயிஸ்டுகளிடமிருந்து யூதர்கள் வேறுபடுகின்றனர். அதே விஷயம்தான். வேறுபாடுகள் எல்லாம் கதையோடு நீங்கள் தொடர்புபடுத்திக் கொள்வதைப் பொறுத்தே உள்ளது. ஒரு குறிப்பிட்ட மரபு ஒரு விஷயத்தை வலியுறுத்தினால் மற்றொன்று அதைப்பற்றி அதிகமாக கவலைப்படாது, அவ்வளவே. வேறுபாடு எல்லாம் வலியுறுத்தலில்தான். அடிப்படையான வேறுபாடு கிடையாது, அப்படி இருக்கமுடியாது. ஏனென்றால் உண்மை ஒன்றே. அது யூதமோ, ஹிந்துவோ அல்லது தாவோயிஸ்ட் என்று எல்லாம் கிடையாது.

*முதல் குழுவினர் தங்கள் பொக்கிஷத்தை ஏற்கெனவே கண்டுபிடித்து விட்டதாக நினைத்தனர்.*

*இரண்டாவது குழுவினர் அது உருவகப் படைப்பு என்று நினைத்தனர்.*

*மூன்றாவது குழுவினர் கதவுகளைத் திறக்கும் சாத்தியக் கூறுகளை ஒரு கற்பனையான வருங்காலத்திற்கு மாற்றீடு செய்தனர்.*

இந்த மூன்று நிலைகளில்தான் மக்கள் நிலைத்து இருக்கின்றனர். சில மனிதர்கள் நாங்கள் ஏற்கனவே அதைக் கண்டுபிடித்து விட்டதாக முடிவு செய்துவிட்டனர். ஆகையால் தேடுதல் தேவையில்லை. கண்டுபிடித்த ஒன்றைத் தேடுவதில் என்ன பயன்? நீங்கள் கோயிலுக்குச் செல்கிறீர்கள். நீங்கள் சொல்வது என்ன? நான் அதைக் கோயிலில் காண்கிறேன், அதனால்தான் கோயிலுக்குச் செல்கிறீர்கள். கண்டுபிடிக்க வேண்டுமென்றாலும் நீங்கள் வருவீர்கள். ''நீங்கள் கிறிஸ்துவின் பெயரை ஜெபிக்கிறீர்கள். அதன் பொருள் என்ன? நீங்கள் சொல்வது, ''நான் கண்டுபிடித்து விட்டேன்.'' கிறிஸ்துவை ஏற்றுக்கொள்ளாதவர்களுக்கு பச்சாதாபம் காட்டுகிறீர்கள். ''பாவப்பட்ட மனிதர்கள் இவர்கள், நரகத்திற்குப் போவார்கள். கிறிஸ்து இவர்களைக் காப்பாற்ற மாட்டார். நான் காப்பாற்றப் பட்டுவிட்டேன். என் இரட்சிப்பாளரை நான் கண்டுபிடித்து விட்டேன்.''

உலகின் மிக அதிகமாக மக்கள் திறன், இத்தகையவர்தான். தாங்கள் கண்டுபிடித்துவிட்டதாக நினைப்பவர்கள். இது மிகவும் தந்திரமான யுக்தி. இப்படித்தான் ஒருவர் தேடுதலைத் தவிர்க்க முடியும். தேடுதலை தவிர்ப்பதற்கான சிறந்த வழி என்னவென்றால், உங்களுக்கும் உலகிற்கும் நீங்கள் கண்டுபிடித்துவிட்டதாக அறிவிப்பதே. இப்போது எந்தப் பிரச்சினையும் இல்லை. நீங்கள் சாவியைப் புகழ்ந்துகொண்டே போகலாம். சாவி பற்றிய கவிதைகள் புனையலாம். மற்றவர்களை மாற்றலாம். ஆனால் நீங்கள் இன்னமும் கண்டுபிடிக்கவில்லை. அதற்கு முயற்சி கூட செய்யவில்லை. பிறகுதானே கண்டுபிடிப்பதைப் பற்றி சொல்ல வேண்டும். முதற்படி கூட எடுத்து வைக்கவில்லை.

இந்த கடும் பயணத்தை மேற்கொள்ள விரும்பாத மனிதர்கள் உள்ளனர். அவர்கள், ''நாங்கள் கண்டுபிடித்துவிட்டோம்'' என்கின்றனர். எங்கேயும் செல்லத் தேவையில்லை. இதுதான் எங்கள் நூல், கடவுள் இதில் இருக்கிறார். இதுவே எங்கள் கடவுள். இதுவே எங்கள் கோயில். எங்கேயும் செல்வதில்

என்ன பயன்? இந்த நிலை வெகுநாட்களாக மனித இனத்தில் மேலோங்கி இருக்கிறது.

இதிலிருந்து இளைஞர்கள் வெளிவருவது பெரும் மகிழ்ச்சியாக இருக்கிறது. இந்நிலையின் பொய்மையை இளைய தலைமுறை அடையாளம் கண்டுகொண்டுவிட்டது. வருடா வருடம் சர்ச்சிற்குப் போய்வருகிறோம். எதுவும் நடக்கவில்லை, நாங்கள் கண்டுபிடிக்கவும் இல்லை. அவர்கள் நம்பிக்கை இழந்துவிட்டனர். தேடிப்பார்க்கின்றனர். அறிதுயிலிலிருந்து மீண்டுவிட்டனர், கட்டுப்பாட்டுத் தளைகள் அறுக்கப்பட்டுவிட்டன. புதிய தலைமுறை மனம் தடுமாறி, குழம்பிப்போய் உள்ளது. முன்னோடிகள் எப்போதும் குழப்பத்தில்தான் இருப்பார்கள். பழமைவாதிகள் நிலைபெற்று இருப்பர். அவருக்கு எல்லா பதில்களும் தெரியும், சந்தேகமே வராது. ஆனால் அவர் உயிருடன் இல்லை. எப்போதெல்லாம் ஒரு மரபுவழி உடைக்கப்படுகிறதோ மக்கள் அதிலிருந்து விலகத் தொடங்குவர். சர்ச்சுகளிலிருந்து, கோயில்களிலிருந்து வெளியேறுவர். இயற்கையாகவே அவர்களுக்கு குழப்பம். அவர்களுக்கு மதிப்பு பற்றிய உணர்வு இல்லை. ஏனென்றால் மதிப்புபற்றிய உணர்வு மரபிலிருந்து, பாரம்பரியத்திலிருந்து வருவது. இப்போது அது வருவதில்லை, அளவுகோல் என்னவென்று அவர்களுக்குத் தெரியாது. ஆனால் இது நல்ல நிலைதான். இந்த பெருங்குழப்பம் ஆக்கப்பூர்வமானது.

இந்த ஒழுங்கற்ற நிலையை பூமி முழுவதும் பரப்புங்கள். மேலும் மேலும் அதிகமான மக்கள் குழப்பமாகட்டும், தடுமாறி போகட்டும், காரணம் இந்தக் குழப்பத்திலிருந்து தான் தேடல் துவங்குகிறது. இந்த திகைப்புற்ற நிலையிலிருந்து தான் ஒருவர் உள்நோக்கிப் பார்க்கத் தொடங்குகிறார். வெளியிலிருந்து மதிப்புக்கூறுகள் எதுவும் கிடைக்கவில்லை. வெளிப்புறத் தலைவர்களும் குருமார்களும் காணாமல் போய்விட்டனர். இப்போதுதான் ஒருவர் உட்புறமாகத் தேடத்தொடங்குகிறார். பூஜாரி இனி பொருந்தாதவர். ஒருவர் உண்மையான குருவைத் தேடத் தொடங்குகிறார். கிறிஸ்தவம் தோற்றுவிட்டது,

இனி தேவை ஒரு கிறிஸ்து, வேறு எதுவும் நிறைவு தராது. பௌத்தமும் தோற்றுவிட்டது. இனி ஒருவர் இமயமலையில் அலைந்து திரிந்து உண்மையான புத்தரை தேடுவார். உயிருள்ள ஒரு புத்தரை சுவாசித்து கொண்டிருக்க, தன் உடலில் இன்னமும் வாழ்ந்துகொண்டிருக்கும் புத்தரைத் தேடுவார். ஏனென்றால் பருப்பொருளுடன் இன்னமும் தொடர்புடைய ஒருவருடன்தான் உங்களாலும் தொடர்பு கொள்ள முடியும்.

> *முதல் குழுவினர் தங்கள் பொக்கிஷத்தை ஏற்கெனவே கண்டுபிடித்து விட்டதாக நினைத்தனர்.*
>
> *இரண்டாவது குழுவினர் அது உருவகப் படைப்பு என்று நினைத்தனர்.*

வேறு ஒரு வழியும் இருக்கிறது.

முதலாவது பொதுமக்கள் திரளைச் சேர்ந்தது. இரண்டாவது சிந்தனை செய்வோர் என்ற எண்ணம் உடையவர்களுக்கு. அதாவது தாங்கள் கற்றறிந்தோர் வகுப்பைச் சேர்ந்தோர் என்று நினைப்பவர்களுக்கு. அவர்கள் சொல்வது: ''இது உருவகமானது. இந்த மறைநூல்கள் எல்லாம் அழகான கதைகள், இவை எல்லாம் இலக்கியங்கள் ஆகும்.''

அன்று ஒரு நாள் நான் ஒரு புத்தகத்தைப் பார்த்துக்கொண்டு இருந்தேன். ''இலக்கிய நூலாக பைபிள்'' என்ற தலைப்புடைய நூல். பைபிள் இலக்கியம் அல்ல என்று அர்த்தமல்ல, அது இலக்கியம்தான். ஆனால் அது அவசியமற்றது. ஏசுவின் வாக்கியங்களின் அழகு அவசியமற்றது, அதில் இருக்கும் உண்மைதான் அவசியமானது. அவை அழகானவை, ஆனால் அழகான கவிதையாக அல்ல, அவை உண்மை என்ற பொருளில் அழகானவை. அதில் உண்மை பொதிந்து இருப்பதினால், அவை அழகானவை. பைபிளை ஓர் இலக்கியம் என்று நீங்கள் நினைத்தால் அது ஒரு சேக்ஸ்பியர் அல்லது காளிதாஸ் என்ற நிலைக்குக் குறைக்கப்படும். பார்வைக் கோளம் காணாமல் போய் விடும். ஆனால் கற்றறிந்தோர் குழாம் எப்போதும் இப்படித்தான் சிந்திக்கிறது.

*இரண்டாவது குழுவினர் அது உருவகப் படைப்பு என்று நினைத்தனர்.*

அது உருவகமானதும், அதற்கும் ''மேலானதும்'' கூட. அது வெறுமனே உருவகமானதல்ல. அந்த ''மேலானது'' என்பதை நினைவில் கொள்ள வேண்டும். உருவகத்தில் தொலைந்து போய்விடவேண்டாம்.

*மூன்றாவது குழுவினர் கதவுகளைத் திறக்கும் சாத்தியக் கூறுகளை ஒரு கற்பனையான வருங்காலத்திற்கு மாற்றீடு செய்தனர்.*

கற்பனை வளம் உள்ள இந்தக் கவிஞர்கள், எப்போதும் வருங்காலத்தை நோக்கி கனவு கண்களோடு இருப்பார்கள். மக்கள் கூட்டம் கடவுள் கண்டுபிடிக்கப்பட்டு விட்டார் என்று நினைக்கிறது. அது கிறிஸ்துவக் கடவுள், ஹிந்துக் கடவுள், மொகமதியக் கடவுள் என்று சொல்கிறது. ''மற்ற எல்லா கடவுள்களும் பொய், என் கடவுள் மட்டுமே மெய். இப்போது செய்ய வேண்டியவை எல்லாம் எல்லோரையும் என் சமயத்திற்கு மாற்ற வேண்டும்.''

இரண்டாவது கற்றறிந்தோர் குழாம், சிந்திக்கிறோம் என்று நினைத்துக் கொண்டிருக்கும் மனிதர்கள். நான் சொல்வது என்னவென்றால் அவர்கள் சிந்திக்காதவர்கள் என்பதால் சிந்திப்பதாய் நினைத்துக்கொண்டிருக்கின்றனர். அவர்கள் சாதுர்யமானவர்கள், ஆனால் அறிவார்ந்தவர் அல்லர், புத்திசாலிகள் கிடையாது. வாதம் செய்வார்கள். ஆனால் அதில் விரியம் இருக்காது. வெறும் குறிப்புணர்தல் மட்டுமே. உள்ளே அதை ஆதரிக்கும் அனுபவம் ஏதும் கிடையாது.

ஆனால் தாங்கள் செய்துகொண்டு இருப்பதற்கு சாதகமான வாதங்களைக் கண்டுபிடித்துக் கொண்டே இருப்பார்கள். தாங்கள் ஏதோ பெரிதாய் செய்துகொண்டிருப்பதாக மற்றவர்களை நம்பவைத்துக் கொண்டிருப்பார்கள். குறைந்தது ஒருவரை ஒருவர் நம்பவைக்க முயற்சித்துக்கொண்டிருப்பார்கள். அறிவாளிகள், பேராசிரியர்கள். எல்லோரும் தாங்கள் ஏதோ

பெரிதாய் செய்து கொண்டிருப்பதாய் ஒருவருக்கொருவர் நம்பவைத்துக் கொண்டிருப்பார்கள். வேதாந்திகள் யாவரும் மற்ற வேதாந்திகளுக்காக புத்தகங்கள் எழுதுகிறார்கள். அவர்களுக்குள் ஒத்துப்போவதும் இல்லை, தொடர்ந்து வாதம் செய்துகொண்டு இருப்பார்கள். யாருக்கும் தங்கள் தத்துவம் பற்றி அக்கறை இல்லை. தங்களின் சொந்தத் தத்துவம் கூட அவர்களின் சொந்த வாழ்க்கை மீது பாதிப்பு ஏற்படுத்தாது. அது மேம்போக்கானது.

நன்கு அறியப்பட்ட ஒரு தத்துவ ஞானி தன் காதை சுவற்றிற்கு அருகில் வைத்து உற்றுக் கேட்டுக்கொண்டு இருந்தார். அவர் தன் அருகில் இருந்த மனிதனை சப்தம் போட வேண்டாம் என்று சைகையோடு எச்சரித்து, ''இதைக் கேள்'' என்றார். அந்த மனிதனும் சிறிதுநேரம் கேட்டுவிட்டு ''ஒன்றும் கேட்கவில்லையே'' என்றான். ''இல்லை'' என்ற தத்துவ ஞானி, ''நாள் முழுவதும் இப்படியேதான் இருக்கிறது'' என்றார்.

இப்படியாகத்தான் அவர்கள் வெற்று விஷயங்களைச் செய்து கொண்டு இருக்கிறார்கள், அது ரொம்ப முக்கியமானது என்றும் நினைத்துக்கொண்டிருக்கிறார்கள். இவர்களுடைய விளங்கா மொழிநடை ஏதோ குறிப்பிடத்தக்கது நடக்கிறது என்கிற மாயையை உருவாக்குகிறது.

எப்போது ஒருவர் உண்மையை உணர்ந்துவிட்டார் என்றால், அவர் எளிமையான மொழியைப் பேசுவார். அவருடைய பேச்சு சிக்கலாக இருக்காது. அவர் மிகவும் எளிமையாக இருப்பார். புத்தரைபோல, கிறிஸ்துவைப் போல. எப்போதெல்லாம் ஒருவர் அருகில் வருவதுபோல் பாசாங்கு செய்கிறாரோ, உண்மையை அறிந்ததாக பாவனை செய்கிறாரோ அவர் பெரிய விளங்காத தொடர்கள் நிரம்பிய மொழி நடையை உருவாக்குவார். இந்தப் புரியாப் பேச்சானது ஒரு மேகமூட்டம் போல செயல்படும். விஷயம் என்னவென்றும், என்ன சொல்லப் படுகிறது என்றும் உங்களால் கண்டுபிடிக்க முடியாது. நீங்கள் ஹெகல் அல்லது ஹெய்டெகர் போன்றோரைப் படியுங்கள்.

நீங்கள் படித்துக் கொண்டே இருப்பீர்கள். ஆனால் என்ன சொல்ல வருகிறார் என்பது மட்டும் புரியாது. எழுதியவர்க்கே தெரியாது. ஒரு வார்த்தை மற்றொன்றிற்கு இட்டுச் செல்லும், இப்படியே சுற்றி சுற்றி வந்துகொண்டு இருக்கும். இவர்கள்தான் சமயம் என்பது உருவகமானது என்று சொல்பவர்கள். இவர்கள்தான் சமயத்தின் தத்துவம்பற்றி எழுதுபவர்கள்.

சமயத்திற்கு தத்துவம் கிடையாது. சமயம் ஒரு அனுபவம், தத்துவம் அல்ல.

பிறகு, இந்த மூன்றாவது வகையினர். கலைநயமுடையோர், கவித்துவமானவர்கள், கற்பனை வளமுடையோர், உணர்ச்சிப் பூர்வமானவர்கள். இவர்கள் எப்போதும் கற்பனை உலகில் திரிந்துகொண்டு வருங்காலத்தின்மீதே கவனமாக இருப்பர். அவர்கள் எப்போதும் அங்கே, தூரத்திலேயே பார்த்துக்கொண்டு இருப்பர்.

இது ஒருமுறை நடந்தது. ஒரு பெரிய ஜோதிடர் மேலே உள்ள நட்சத்திரங்களைப் பார்த்தவாறு நடந்து போய்க் கொண்டு இருக்கையில் ஒரு கிணத்துக்குள் விழுந்துவிட்டார். அருகில் வசித்து வந்த ஒரு ஏழைப்பெண் அவரை எப்படியோ வெளியே வர உதவி செய்தாள். ஜோதிடர் அந்தப் பெண்ணிடம் ''நான் யார் என்று உனக்கு தெரியாது, நான் பெரிய ஜோதிடன், அரச ஜோதிடன். என் கட்டணம் அவ்வளவு அதிகமானதால் ராஜாக்கள் மற்றும் பணக்காரர்களுக்கு மட்டுமே கட்டுப்படியாகும். ஆனால் நீ என் உயிரைக் காப்பாற்றி இருக்கிறாய். உன் வருங் காலத்தைப் பற்றி உனக்குத் தெரிந்துகொள்ள வேண்டுமானால் என்னிடம் வா, உன் கையைப் பார்க்கிறேன், உன் ஜாதகத்தைப் படித்துச் சொல்கிறேன்... எல்லாம் இலவசம், நீ என் உயிரைக் காப்பாற்றியவள்''என்றார்.

அந்தப் பெண் சிரித்தாள். ''நீ ஒரு முட்டாளாக இருக்க வேண்டும்'' என்றாள் அவள். ''என்னது?'' என்று அதிர்ச்சியுற்றார் ஜோதிடர். அந்தப் பெண் சொன்னாள். ''உனக்கு முன்னால்

ஓரடியில் உள்ளதைக்கூட உன்னால் பார்க்க முடியவில்லை. வருங்காலத்தைப் பற்றி உன் கணிப்பை எப்படி நம்பமுடியும்? நீ என்னை ஏமாற்ற முடியாது'' என்று பதில் சொன்னாள்.

அவள் சொன்னது சரிதான். இந்த மூன்றாவது வகையினர் எப்போதும் கற்பனையான நல்லுலகம் எனும் 'உடோபியா' பற்றியே சிந்தித்துக் கொண்டு இருப்பார்கள்.

> *மூன்றாவது குழுவினர் கதவுகளைத் திறக்கும் சாத்தியக் கூறுகளை ஒரு கற்பனையான வருங்காலத்திற்கு மாற்றீடு செய்தனர்.*

''என்றாவது ஒரு நாள் நடக்கும்'' என்பார்கள். அதாவது ஏசுவின் மீள்வருகை, புத்தரின் இரண்டாம் அவதரிப்பு.. ''என்றோ ஒரு நாள் நடக்கும், ஆனால் இப்போது அல்ல..'' நாளை என்றும் வருவதில்லை. எது வருவதானாலும் அது இன்றேதான். அது எப்போதும் இப்பொழுதுதான். ஏதாவது நடக்க வேண்டும் என்றால், அது இப்போது நடக்கவேண்டும், இப்போது அல்லது எப்போதும் இல்லை. இதை நினைவிற்கொள்ளவும். மெய்மைக்குள் நீங்கள் நுழையவேண்டும். ஏனென்றால் இப்போதுமட்டும்தான் அதற்கான நேரம், மேலும் இங்கு மட்டுமே அதற்கான இடம். நீங்கள் இங்கே என்பதற்கு மாறாக அங்கே என்றும், இப்பொழுது என்பதற்கு எதிராக அப்பொழுது என்றும் இருந்தால் நீங்கள் கற்பனையில்மட்டுமே இருப்பீர்கள். அழகான விளையாட்டில் ஈடுபட்டு இருப்பீர்கள். ஆனால் அவை எல்லாமே கனவுகளாக இருக்கும்.

இந்த மூன்று விஷயங்களையும் நீங்கள் தவிர்க்க வேண்டும். கற்பனையாளர்களைத் தவிர்க்க வேண்டும், ஏனென்றால் அவர் உடோபியாவில் வசித்துக்கொண்டு இருக்கிறார். அறிஞர்களைத் தவிர்க்கவேண்டும், ஏனென்றால் அவர் புத்திசாலி போல் தோன்றுவார். ஆனால் அப்படியில்லை, இடைத்தரமான மக்கள் திரளை தவிர்க்க வேண்டும், ஏனென்றால் அதுதான் கண்டுபிடித்து விட்டதாக நம்புகிறது. இந்த மூன்றையும் தவிர்த்துவிட்டால் சாவி உங்களிடம் இருக்கும்.

சாவியைக் கவனியுங்கள். நீங்கள்தான் சாவி, உங்களுக்கு வேண்டியதெல்லாம் கொடுக்கப்பட்டுள்ளது, எல்லாமே. உங்கள் உணர்வு நிலையை கவனியுங்கள், உங்கள் மனதிற்கு சாட்சியாக இருங்கள். எந்த சச்சரவுமின்றி, முற்சாய்வு இன்றி, ஏற்பும் எதிர்ப்பும் இன்றி களங்கமற்ற நிலையிலிருந்து கவனித்துக் கொண்டேயிருங்கள். திடீரென கதவு திறந்துவிட்டதைக் காண்பீர்கள். உண்மையில் கதவு திறந்தேதான் இருந்தது. நீங்கள்தான் அதற்கு திறந்த மனதோடு இருக்கவில்லை. தொடக்கத்திலிருந்தே கதவு திறந்துதான் இருந்தது. அது எப்போதும் மூடப்பட்டு இருக்கவில்லை. அது ஏன் மூடியிருக்க வேண்டும்? நீங்கள் அதற்குள் நுழைய வேண்டும் என்று கடவுள் விரும்புகிறார். ஆதாம் ஏடன் தோட்டத்தில் இருந்த காலம் தொட்டு கதவு திறந்துதான் இருந்தது. ஒரு மாதிரியான காத்திருப்பு நிலையில் கடவுள் உங்களைத் தேடிக்கொண்டும் கேட்டுக்கொண்டும் இருக்கிறார். "ஆதாம் எங்கே இருக்கிறாய்?" நீங்களோ ஏதோ ஒரு புதருக்குப் பின்னால் பதுங்கிக்கொண்டு இருக்கிறீர்கள். இவைதான் அந்த மூன்று புதர்கள், அவற்றை தவிர்த்து விடுங்கள்.

உங்கள் கடவுளை எதிர்கொள்ளுங்கள், ஏனென்றால் உங்கள் கடவுள்தான் உங்களின் அக மூலஸ்தான உயிருரு. மெய்மையை எதிர்கொள்ளுங்கள். அவர் உள்ளும் இருக்கிறார். புறமும் இருக்கிறார். தேவை எல்லாம் முற்சாய்வு இல்லாத மனம், வாதப் பிரதிவாதம் இல்லாத மனம். எந்த வேதாந்தம் அல்லது சமயம் அல்லது கருத்தாக்கத்தினால் ஆக்கிரமிக்கப்படாத மனம்.

ஒரு அமைதியான மனம் தேவை... கதவு திறந்துள்ளது.

முதல் கேள்வி:

*எவ்வளவு குருடாக இருந்திருக்கிறேன். பல வழிகாட்டிகள் இருந்தும், தவற விட்டு இருக்கிறேன். இப்போது அந்த வழிகாட்டிகளை எழுதியவர்கள் பற்றி யோசித்துக் கொண்டு இருக்கிறேன். மற்றவர்களின் வார்த்தைகள் மூலம் மெய்மையின் சுவடுகளை நான் கண்டுபிடித்துக் கொண்டிருக்கிறேன். ''அவர்கள் எல்லாம் எங்கே'' என்று கேட்கிறேன், குறிப்பாக சில ஆங்கிலேய கவிகள், ஷேக்ஸ்பியர், பாப்டைலான் போன்றோர். அவர்கள் என்ன சொல்கிறார்கள் என்பதை உணர்ந்து இருந்தார்களா? அவர்கள் தங்கள் கண்ணோட்டங்களை உணர்வு நிலையோடு பகிர்ந்து கொண்டார்களா? (டி.எஸ். எலியட், லூயிஸ் கரோல்).*

பிரதிபா இது சிக்கலான கேள்வி. இதைப்பற்றிய புரிதலுக்கு முன்னால் சில விஷயங்களைப் புரிந்துகொள்ள வேண்டும். மெய்ஞானிகள் வேறு ஓர் மெய்மையில், ஒரு தனியானதொரு மெய்மையில் வாழ்கின்றனர். அவருடைய இருப்பிடம் 'அங்கே' உள்ளது. கவிஞருக்கு ஷணநேரத் தோற்றங்கள் மட்டுமே கிடைக்கும். சில சமயங்களில்தான் கதவு திறந்து அவர் ஏதாவது பார்க்க முடியும், உடனே கதவு மூடிக்கொள்ளும். என்ன நடக்கிறது என்பது பற்றி அவருக்குப் புரிதல் கிடையாது. அவரால் சுயமாக அதை அர்த்தம் செய்துகொள்ள முடியாது. அது மர்மமாகவே இருக்கும்.

அதைப்பற்றிய விளக்கம் அவரிடம் இருக்காது. எங்கிருந்து வருகிறது, ஏன் வருகிறது எல்லாமே புதிர்தான். அதனால் ஆட்கொள்ளப்படுகிறார். சில நேரங்களில் முற்றிலுமாக ஆட்கொள்ளப்படுகிறார். அந்த கணத்தில் சில விஷயங்களை

சொல்லத் தொடங்குகிறார். ஆனால் அதைப்பற்றி அவரால் பின்னர் விளக்கம் தர இயலாது.

ஒரு பெரிய கவி பற்றிய ஒரு நிகழ்வு. ஒரு முறை ஒரு மனிதன் அந்தக் கவியை சந்தித்து அவர் இருபது வருடங்களுக்கு முன்பு எழுதிய ஒரு குறிப்பிட்ட கவிதை பற்றிய விளக்கம் கேட்டார். ''ரொம்பத் தாமதம் ஆகிவிட்டது'' என்றார் கவி. ''நான் அதை எழுதியபோது இரண்டு நபர்கள் அதன் பொருள் அறிந்து இருந்தனர். இப்போது ஒருவர் மட்டுமே அதை அறிவார்'' என்றார் கவி. ''அந்த ஒருவர் நீங்களாகத்தான் இருக்க வேண்டும்'' என்றார் வந்தவர். கவி சொன்னார், ''அது நான் இல்லை, நான் இந்தக் கவிதையை எழுதிய போது, உண்மையாகச் சொல்வதானால், என்னால் இந்தக் கவிதை எழுதப்பட்டபோது, என் மூலமாக எழுதப்பட்ட போது, எனக்கும் கடவுளுக்கும் இதன் பொருள் தெரிந்து இருந்தது. இப்போது எனக்குத் தெரியாது. கடவுளுக்கு மட்டுமே தெரியும்'' என்று முடித்தார் கவிஞர்.

கவியானவர் தியான நிலையில் இருப்பது இல்லை. விழிப்புணர்வு நிலையில் இல்லை. அறியாத ஒன்றிற்கு எளிதில் இலக்காகத் தந்தவர்.

முன் அறியாத ஒன்றிற்கு அவருக்கு சில திறப்புகள் நிச்சயமாக உள்ளன. முன் அறியாதது அவரை துளைக்கின்றது, அவர் இதயத்தை அதிர்வுறச் செய்கிறது, அவரின் உயிருருவில் எதிரொலிக்கிறது, அது சில சமயங்களில் பாட்டாகவும், நடனமாகவும், ஓவியமாகவும் உருவெடுக்கிறது, ஆனால் அந்தக் கவிக்கு நடப்பவை ஏதும் தெரியாது. எங்கிருந்து வருகிறது என்று அறியமாட்டார். மின்னல் போல வந்து மறைகிறது. அவர் அதை எழுதவேண்டும், அவர் எழுதிக்கொள்ள வேண்டிய கடமை இருக்கிறது. எழுதும் வரை அது அவருள்ளேயே தங்குகிறது. கவி அதை எழுதக் காரணம் என்னவென்றால் எழுதாமல் போனால் அதன் கணம் அதிகமாகி விடுகிறது. அவர் அதை எழுதி சுமை இறக்கிக் கொள்கிறார். கவிதை என்பது ஓர் ஆழ் உணர்ச்சி. தூய்மையாக்கி. தொடர்ந்த தன் கவனத்தைக் கோரும் ஒன்றை எழுதி முடித்துவிட்டபோது கவி நன்மை உணர்கிறார்.

மறைஞானி வீடுபேறு அடைந்தவர். மின்னல் ஒளிக்கீற்றுகளைப் பார்ப்பவர் அல்ல. வேறு ஓர் உலகம், அறியா ஒன்று, கடவுள் என்றே அழைத்துக் கொள்ளுங்கள், நீங்கள் விருப்பம் கொள்ளும் எதுவானாலும்-ஞானியின் இருப்பிடமாகிறது. அது அவருடைய மெய்மை. அவர் அங்கே வசிக்கிறார். அது வானத்திலிருந்து குதிப்பதில்லை. அவர் அதன் அங்கம், அத்தோடு அதிர்வுறுகிறார். பிரிவீடு விடுபட்டுப் போகிறது. அவர் சொல்வதை அவர் அறிவார்.

ஆக, இங்கே கலை இரண்டு வகையானது: சாதாரணமான கலை-ஷேக்ஸ்பியர், டைலான், கரோல்- இது அக உணர்வு சார்ந்த கலை. அதிகமான கற்பனை கலந்தது. சுத்தங்கள் அல்ல. வேறு ஒரு வகையான கலை இருக்கிறது. உபநிடதங்கள், பைபிள், அஜந்தா, எல்லோரா குகைகள், பிரமிட்கள், புத்தர் சிலைகள், தாஜ்மஹால், கஜூரோகோ, கோனார்க் என்று பல. இவை முற்றிலும் வேறு வகையானவை. குறிக்கோளானவை, மெய் பொருட்டானவை.

அஜந்தா, எல்லோரா குகைகளை உருவாக்கிய மனிதர்களுக்கு தாங்கள் என்ன செய்கிறோம் என்று அறிந்து இருந்தனர். அவர்கள் வெறுமனே ஒரு கருத்தினால் ஆட்கொள்ளப்பட்டு இருக்கவில்லை, அவர்கள் திட்டநோக்குடன் கருத்தூன்றிய பலனுக்காக உருவாக்கினர்.

பிகாசோவின் ஓவியங்கள் ஒரு வகையான கனவு. அந்தக் கனவு அழகாகக்கூட இல்லை. கொடுங்கனவாக இருக்கிறது. அவர் அதை ஓவியமாக்க வேண்டும். இல்லாவிட்டால் அது அவரைப் பித்தனாக்கி விடும். யோசித்துப் பாருங்கள், ஒருக்கால் பிகாசோ வரையவிடாமல் தடுக்கப்பட்டு இருந்தால் அவருக்கு என்னவாகியிருக்கும்? அவர் பைத்தியமாகி இருப்பார். அந்த பயங்கரக் கனவுகளை எல்லாம் தாங்கியிருக்க மாட்டார். அந்தக் கோரக் கனாக்காட்சிகளை அவர் வரைந்து ஓய்ந்து போனார். அது ஒரு விதமான சுய மனநலப் பகுப்பாய்வு என்று சொல்லலாம். உளப்பகுப்பாய்வின் அடித்தளமே இதுதான்.

இந்த மனநலப் பகுப்பாய்வில் என்ன நடக்கிறது? உங்களின் தன் உணர்வற்ற நிலையில் மறைந்து உள்ள அனைத்தையும் மேல்மட்டத்திற்குக் கொண்டுவருகிறீர்கள். உளவியலாளரிடம் அதை விவரிக்கிறீர்கள். அவர் கூர்மையாக கவனிக்கிறார். பொறுமையாகவும் பற்றுதல் இன்றியும் கேட்டுக்கொள்கிறார். ஒருமுறை நீங்கள் அதை எல்லா விதமான கோணங்களிலிருந்தும் சொல்லி முடிந்த பிறகு அது உங்களிடமிருந்து மறைவுறுகிறது, ஆவியாகிப் போகிறது. நீங்களும் சுமையிறக்கப்பட்டு உணர்வீர்கள். இப்போது இந்த உளப்பகுப்பியல் இதையும் கண்டுபிடித்து உள்ளது. அதாவது கலையையும் ஒரு சிகிச்சையாக பயன்படுத்தலாம் என்பதைக் கண்டுபிடித்து கலை மூலமாக சிகிச்சை. உண்மையில் அது எப்போதும் இருக்கும் ஒன்றுதான். ஓவியங்கள் தீட்டவில்லை என்றால் பிகாசோ பயித்தியமாகி இருப்பார். இதுதான் மற்றோர் பெரிய ஓவியரான வேன் காகிற்கு ஏற்பட்டது. அவர் மிகவும் ஏழை, அவரால் வர்ணம், தூரிகை, வரைதிரை எல்லாம் வாங்க வசதியற்று இருந்தார். அவருடைய சகோதரர் அவருக்கு பணம் கொடுப்பார், வெறுமனே வாழ்வதற்கு போதுமான அளவு மட்டுமே, ஒரு தம்படி அதிகம் கிடைக்காது. பல வருடங்களாக என்ன செய்தார் வேன்காக்? வாரத்தில் நான்கு நாட்கள் சாப்பிடுவார். மற்ற மூன்று நாட்கள் பட்டினி இருந்து ஓவியம் வரைவதற்காக பணம் சேமிப்பார். இறுதியில் பயித்தியமானார். அவருக்குள் கனன்றுகொண்டு இருந்த, ஆர்ப்பரித்துக்கொண்டு இருந்தவற்றை எல்லாம் அவரால் வரைய முடியவில்லை. அவர் ஒரு எரிமலை மீது அமர்ந்துகொண்டு இருந்தார். அவருக்கு மின்னல்கள் ஏற்பட்டுக்கொண்டு இருந்தன. அவரால் தன்னை சுமையிறக்கிக் கொள்ள முடியவில்லை. அவையெல்லாம் உள்ளுக்குள்ளேயே திரண்டுகொண்டிருந்தன. முதலில் அவர் பைத்தியமானார். இறுதியாக தற்கொலை செய்துகொண்டார். வாழ்வதென்பது அதிகமான ஒன்று ஆகிவிட்டது.

காலங்காலமாய் இதை கவிஞர்கள், ஓவியர்கள், சிற்பிகள் உணர்த்தி இருக்கின்றனர். அதாவது ஒரு அரக்கன்

அல்லது துர்தேவதை அல்லது அடையாளம் தெரியாத ஆவி ஏதோ ஒன்றினால் ஆட்கொள்ளப்பட்டு, அது இவர்களை எழுதுவதற்கு கட்டாயப்படுத்துகிறது. அவர்கள் எழுதித்தான் ஆக வேண்டும். அதை மறுக்க முடியாது, தப்பிக்க முடியாது. அதை நிறைவேற்றாமல் அவர்கள் சுதந்திரமாக உணரமாட்டார்கள். இதுதான் அக உணர்வு சார்ந்த கலையாகும்.

மறைஞானியும் உருவாக்குகிறார். பேசுவதன் மூலம் புத்தர் உருவாக்குகிறார். அவர் வார்த்தைகளால் செதுக்குகிறார். அவர் நீதிக்கதைகள் சொல்கிறார். கதைகளுக்குள் கதைகள் புனைகின்றார். உலகிற்குள் உள்நோக்கு கொண்டு வருகிறார். ஆனால் இது ஆட்கொள்ளப்பட்டதால் அல்ல. அவர் முற்றிலுமாக இயலமைதியோடு இருக்கிறார். அவர் முடிவு செய்தால் அவரால் அமைதியாய் இருக்க முடியும், பயித்தியமாகி விடமாட்டார். தான் என்ன செய்கிறோம் என்று துல்லியமாக அவர் அறிவார். அதனால்தான் இது பொருள் நோக்கமுடைய கலை என்று அழைக்கப்படுகிறது. இந்தக் குறிப்பிட்ட விஷயத்தின்மீது தியானம் செய்தால், அதன் விளைவு இதுவாக இருக்கும் என்று அவர் அறிவார். முற்றிலும் அறிவியல்பூர்வமானது.

நீங்கள் ஒரு புத்தர் சிலை மீது தியானம் செய்தீர்களானால், நீங்கள் சட்டென அமைதியாய், உள் அமைதியாய், குளிர்ச்சியாய் உணர்வீர்கள். ஒருவகையான சமச்சீர் தன்மை நடைபெறுவதைக் காண்பீர்கள். அல்லது தாஜ்மஹாலின் முன் ஒரு பௌர்ணமி இரவில் தியானம் செய்வது. அது சூஃபிகளால் உருவாக்கப்பட்ட கலை. அது அன்பின் செய்தியாகும். ஒரு முழுநிலவு இருக்கும் இரவில் சென்று வெறுமனே உட்கார்ந்து இருங்கள். தாஜ்மஹாலைப் பற்றி யோசிக்காதீர்கள்.

''ஆகா என்ன ஒரு அழகு'' என்பதுபோன்ற அசட்டுத் தனங்கள் வேண்டாம். வெறுமனே தியானித்துக்கொண்டு, உள்வாங்கிக் கொண்டு இருங்கள். பெரியதொரு உள்ளொளியை உணர்வீர்கள். இரவு ஏறி ஆழமாகும்போது உங்களுக்குள்ளும் ஏதோ ஒன்று ஆழமாவதை உணர்வீர்கள்.

நிலவு மேலெழும்பும்போது, உங்களுக்குள் ஏதோ ஒன்று எழும். நகரத்தின் சப்தங்கள் கரையும்போது, உங்கள் இரசமிக்க மனமும் ஒடுங்குவதை அறிவீர்கள். தாஜ்மஹாலின் மூலமாக பெரிய தியான அனுபவத்தை நீங்கள் பெற முடியும். தியானம் நடைபெறும்போது நீங்கள் அன்பினால் நிரம்பி வழிவதை உணர்வீர்கள். இதுதான் தாஜ்மஹாலுக்கும் அஜந்தாவிற்கும் உள்ள வேறுபாடு. அஜந்தாவில் அன்பு, நேசம் வெளிப்படாது. தியானம் மட்டுமே நடைபெறும். அஜந்தா பௌத்த மறைஞானிகளால் உருவாக்கப்பட்டது. இவர்கள் விழிப்புணர்வில் மட்டுமே நம்பிக்கை கொண்டனர், வேறு எதன் மீதும் அல்ல. சூஃபிக்கள் நேசத்தை நம்பினார்கள், தியானம் அதில் ஓர் அங்கம்.

புறநிலையான கலையானது ஒரு நோக்கத்தோடு, தான் என்ன செய்கிறோம் என்று அறிந்து இருப்பவரால் வேண்டுமென்றே உருவாக்கப்பட்ட ஒன்றாகும். வேறு ஒரு பரிமாணத்திலிருந்து ஏதோ ஒரு வடிவை இந்த உலகிற்குக் கொண்டு வருகிறார். அந்த வடிவைக் கவனிப்பதின்மூலம் உங்களுக்குள் ஓர் வடிவு எழும், ஒரு பாட்டு வரும். அந்தப் பாட்டைப் பாடுவதின் மூலம் நீங்கள் ஏதோ ஒன்றாக உருவாவீர்கள். ஆனால் நீங்கள் தியானம் செய்யத் தொடங்கினால் ஆச்சரியப்படுவீர்கள். பல சமயங்களில் இந்தக் கவிஞர்களிடமிருந்து அழகான வரிகளைக் கண்டுபிடிக்க முடியும்.

உங்களுக்கு நான் ஞாபகப்படுத்துவது என்னவென்றால், சில சமயங்களில் எலியட் கூட உணர்ந்திராத ஏதோ ஒன்று உங்களுக்கு வசப்படும். நீங்கள் தியானம் செய்தீர்களானால், தியானத்திற்குள் ஆழமாகச் சென்றீர்கள் என்றால் இது போன்ற தற்சார்புடைய கலையிலிருந்தும்கூட நீங்கள் ஆயிரத்தோரு அழகான அனுபவங்களைப் பெற முடியும். அதை உருவாக்கியவரால் கூட அது சாத்தியப்பட்டு இருக்காது. ஏனென்றால், அதன் சிருஷ்டிகர்த்தா அதை உருவாக்குகையில் ஒருவிதமான கனவு நிலையில் இருந்தார். எனவேதான், நீங்கள் ஒரு ஓவியத்தை விரும்புகிறீர்கள் என்றால் அந்த

ஓவியரை சென்று பார்ப்பது, அல்லது ஒரு கவிதை உங்களுக்குப் பிடித்துப் போகிறது எனில் அந்தக் கவிஞரை சென்று பார்ப்பது போன்றவற்றைத் தவிர்ப்பது புத்திசாலித்தனம். ஒரு வகையான விரக்தி ஏற்படலாம். கவிஞர் ரொம்ப சாதாரணமானவராகத் தோன்றுவார். ஏனென்றால் கவிஞர் இருபத்து நான்கு மணிநேரமும் கவிஞராக இருப்பதில்லை. எப்போதாவது ஒரு முறை கதவு திறக்கப்படும்போது அவர் கவியாகிடுவார். கதவு எப்படித் திறக்கிறது, எப்படி மூடுகிறது என்பது அவருக்குத் தெரியாது. சாவி அவர் கையில் இல்லை. வேண்டும்போது அவரால் திறக்க முடியாது. முற்றிலும் உதவியற்று, சக்தியற்று இருப்பார். அது நடக்கும்போது நடக்கும் அவ்வளவே. அது நடக்கும்போது அவர் அந்தக் கணநேரத்திற்கு ஒரு மறைஞானியின் உயிருருவைப் பங்கிட்டுக் கொள்கிறார். அந்த அரை நொடிப்பொழுதின்போது அறியாதொன்றின் துளி அவரின் உயிருருக்குள் விழுகிறது, அந்த விதை அவர் இதயத்தின் ஆழத்திற்குள் அமிழ்ந்து போய்விடுகிறது, அதன் பிறகு அவர் சாதாரணமாகிறார். மிச்சநேரம் எல்லாம் அவர் உங்களைப் போன்று சாதாரணமானவராக இருக்கிறார். சில சமயங்களில் அதிக சாதாரணத் தன்மையோடு இருக்கிறார். அந்த க்ஷணநேரத் தோற்றம் தன்னைப் பற்றிய ஒரு அதீதமான அகங்காரப் பார்வை தருவதினால் அவர் தன்னைப்பற்றி பெருமையாக நினைக்கத் தொடங்குகிறார். அதனால்தான் நீங்கள், கவிஞர்கள், ஓவியர்கள் ஆகியோரை அகங்காரம் கொண்டவர்களாக, வீண் கர்வமுடையவர்களாக காண்பீர்கள். கலைஞர்கள் போல சாதாரண மனிதர்களை இவ்வளவு அகங்காரம் கொண்டு காண மாட்டீர்கள். அவர்கள் சிருஷ்டி கர்த்தாக்கள், அதனால் அவர்கள் தான் என்ற அகங்காரம் கொள்ள காரணம். பாருங்கள், எவ்வளவு மகத்தான கவிதை படைத்திருக்கிறார்கள், எவ்வளவு சிறப்பான ஓவியங்கள். அந்த ஓவியங்கள், கவிதைகள் எல்லாம் அவர்கள் செய்தவை அல்ல. ஏதோ மர்மமான ஒன்று அவர்களுக்குள் நடக்கிறது. அவர்கள் கருவிகளாகின்றனர். ஊடகர்களாக செயல்படுகின்றனர். ஆனால் ஒரு மறைஞானி ஊடகர் அல்லர். அவர் அதன் ஆதாரம், தோற்றுவாய்.

சில சமயங்களில் எலியட்டின் படைப்புகளில் ஒரு புத்தர் அல்லது ஏசுவின் வார்த்தைகள் போன்ற அழகான வார்த்தைகளைக் காண முடியும், ஆனால் இவற்றிற்கிடையே ஒரு பண்பு சார்ந்த வேறுபாடு தெரியும். எலியட்டிற்கு தான் என்ன செய்கிறோம் என்று தெரியாது. ஏசுவிற்கு தான் என்ன செய்கிறோம், என்ன செய்ய வேண்டும் என்று முழுதும் உணர்ந்து இருக்கிறார். அவரின் ஒவ்வொரு வாக்கியமும் உணர்வு நிலையில் வேண்டுமென்றே சொல்லப்பட்டவை.

ஆனால் நீங்கள் தியானம் செய்யத் தொடங்கினால் பல மூலைகளிலிருந்து உங்களால் அடையாளம் காண முடியும். கவிஞர்கள் கூட மறைஞானிகளாகத் தோன்றுவார்கள்.

ஆக்டேவியோ பாஸின் வார்த்தைகளைக் கேளுங்கள்:

*இங்கே உள்ளதொரு அமைதியான நீண்ட தெரு.*

*நான் காரிருளில் நடக்கையில் தடுமாறிக் கீழே விழுகிறேன். மீண்டெழுந்து பார்வையின்றி நடக்கிறேன்.*

*சப்தமற்ற கற்களையும், காய்ந்த சருகுகளையும் என் கால்கள் மிதித்து நடக்கின்றன.*

*எவரோ என் பின்னால் கற்களையும் சருகுகளையும் மிதிக்கின்றார்.*

*நான் வேகம் குறைக்க.. அவரும் குறைக்கின்றார்;*

*நான் ஓடினால் அவரும் ஓடி வருகிறார்.*

*திரும்பிப் பார்க்கிறேன். எவருமில்லை.*

*எல்லாமே காரிருள், கதவுகளும் இல்லை.*

*என் காலடிகள் மட்டுமே என்னை உணர்கின்றன.*

*மூலைச் சந்திப்புக்களுக்கிடையே திருப்பங்கள், மேலும் திருப்பங்கள்.*

*அவை மீண்டும்மீண்டும் தெருக்களுக்கு இட்டுச் செல்கின்றன.*

*எனக்காக அங்கே எவரும் காத்திருப்பதில்லை.*

*எவரும் என்னைப் பின்தொடர்வதுமில்லை,*

*அங்கே நான் மனிதன் ஒருவனைப் பின்தொடர்ந்து செல்ல,*

*அவன் தடுமாறிக் கீழே விழுந்து பின் எழ*

*என்னைப் பார்த்து அவன் சொல்வது, ''எவருமில்லை''.*

மாபெரும் உள்நோக்கு. அகங்காரம் எனும் இயல் நிகழ்வின் மீது ஒரு மாபெரும் உள்நோக்கு. நீங்கள் அதைப் பார்க்கவில்லை என்றால், அது அங்கே இருக்கிறது. ஒரு நிழலைப்போல் பின்தொடர்கிறது. அதை பார்க்கப் போனால் - எவரும் இருப்பதில்லை.

போதிதர்மரைப் பார்த்து ஒரு பெரிய அரசர் கேட்டார். ''நான் ஒரே ஒரு விஷயத்தைத் தேடிக்கொண்டிருக்கிறேன்.'' எப்படி அகங்காரம் இல்லாமல் ஆவது? எல்லா பெரிய குருக்களும் காலங்காலமாய் இதை சொல்லி வருகிறார்கள். அகங்காரமற்று இரு. நீ கடவுளை கண்டுபிடிக்க முடியும். அகங்காரமற்று போ. நிர்வாணம் அடையலாம். நானும் கடுமையாக முயற்சித்து விட்டேன். மனிதனால் இயன்றதை எல்லாம் செய்து விட்டேன். எனினும் இந்த அகங்காரத்தை விட்டொழிக்க முடியவில்லை. ஐயா தயவுசெய்து எனக்கு உதவ முடியுமா?''என்று கேட்டார்.

போதிதர்மர் அவரைப் பார்த்தார். கூரான, நெருப்பு போன்ற ஊடுருவும் பார்வை. அவர் சொன்னார், ''ஒன்று செய், இப்போது நிறைய செய்து விட்டாய். அது எனக்குத் தெரிகிறது. இதற்குமேல் எதுவும் செய்ய வேண்டாம். நான் அதைச்செய்கிறேன். நாளை காலை மூன்று மணிக்கு வா, அதை முழுவதுமாக முடித்து விடுகிறேன்'' என்றார்.

அரசர் சற்றே குழப்பமானார். ''என்ன அபத்தமான பேச்சு இது? எப்படி என்றென்றைக்கும் என் அகங்காரத்தை அழித்துவிட முடியும்? ஆனால் முயற்சிப்பதில் அர்த்தம் இருக்கிறது.''

அரசர் திரும்பிப்போய்க் கொண்டிருக்கையில் போதிதர்மர் அவரை அழைத்தார். ''கேள்! நாளை வரும்போது, உன் அகங்காரத்தைக் கொண்டு வா. மறந்துவிடாதே. கொண்டு வா அதை. நான் அதைக் கொன்றுவிடுகிறேன். நிச்சயமாக அதை முடித்துவிடுவேன்.''

இப்போது அரசனுக்கு குழப்பம் அதிகமாகிவிட்டது. ''என்ன சொல்கிறார்? அகங்காரத்தைக் கொண்டுவருவதா? நான் வரும்போது அதுவும் இருக்கத்தான் போகிறது. இந்த மனிதன் பைத்தியம் போல் உள்ளது. பார்ப்பதற்கு மட்டுமல்ல, இவர் பைத்தியமேதான்.'' இரவு முழுவதும் அரசன் தூங்கவேயில்லை, சிந்தனைக்கு மேல் சிந்தனை. அதிகாலை காரிருளில் இந்த மனிதனிடம் செல்வது கூட முட்டாள்தனம் என்று நினைத்தார். அதுமட்டுமல்லாமல் ''தனியாக வா, மெய்க்காவலர்கள் யாருக்கும் அனுமதி கிடையாது'' என்று வேறு சொல்கிறார். ''யாருக்குத் தெரியும், இந்த மனிதன் எதை வேண்டுமானாலும் செய்யக்கூடும். என்னை அடிக்கக்கூடச் செய்யலாம், பார்ப்பதற்கு ஆபத்தானவராய் தோன்றுகிறார்.'' ஆனால் அரசர் தன் வாழ்நாள் முழுவதும் இதற்காக முயற்சித்துக் கொண்டிருக்கிறார். அதனால் போய் பார்க்கலாம், இடர் நேரலாம். வேறு வழியில்லை. மூன்று மணிக்கு ஆவலை அடக்க முடியாமல் போய்விட்டார். பயம் இருந்தது. போதிதர்மர் இருந்த குகையை அடைந்ததும்; போதிதர்மர் கேட்டார். ''எங்கே உன் அகங்காரம், கொண்டு வரச்சொன்னேன் இல்லையா? மறந்துவிட்டாயா?''

அரசன் சொன்னான். ''நீங்கள் பேசுவது அபத்தம். நான் இங்கே இருக்கும்போது என் அகங்காரமும் இங்கேதான் இருக்கும். அதை எப்படி நான் விட்டுவர முடியும். பிரச்சினையே அதுதான். அதை விட்டொழிக்க விரும்புகிறேன். என்னால் முடியவில்லை. நிழல்போல என்னைத் தொடர்கிறது.''

போதிதர்மர் சொன்னார். ''சரி பரவாயில்லை. உட்கார்ந்து கண்ணை மூடு. அது எங்கேயிருக்கிறது என்று கண்டுபிடி. கண்டவுடன் உடனே சொல்.... நீ கண்டுபிடிக்காமல் நான்

அதை எப்படிக் கொல்வது? உன் முன்னால் கையில் கழியோடு நான் உட்கார்ந்து கொள்கிறேன். நீ கண்டுபிடித்தவுடன் எனக்கு தலையசைத்து சைகை காட்டு, நான் அதை ஒரேயடியாக முடித்து விடுகிறேன்.''

அரசனுக்கு பயம், கடும் குளிர். காலை நேரம், ஆனால் அவனுக்கு வியர்த்துக் கொட்டியது. ஆனால் முயற்சி செய்தான். தனக்குள் சென்றான். தன் உயிருருக்குள் உள்ள ஒவ்வொரு மூலை முடுக்கிலும் தேடினான். ஆச்சரியமாக இருந்தது. அவனால் அகங்காரத்தைக் கண்டுபிடிக்க முடியவில்லை. மூன்று மணிநேரம் ஆயிற்று. அரசனின் முகம் மாறியது. பெரியதொரு அருள் அரசனின் மீது இறங்கத் தொடங்கியது. அவனது அதிர்வுகள் மாறத்தொடங்கின. ஆசீர்வதிக்கப்பட்டதாய் உணர்ந்தான். ஒரு அருளாசி சூழ்ந்து இருந்தது. சூரியன் எழத்தொடங்கியது, குகை ஒளிமயமாகிக் கொண்டிருந்தது.

போதிதர்மர் சிரித்துவிட்டு சொன்னார். ''ரொம்ப நேரமாய் தேடுகிறாயே, கிடைக்கவில்லையா?'' அரசன் கண்களைத் திறந்து, போதிதர்மரின் கால்களில் விழுந்தான். ''நீங்கள் அதை அழித்து விட்டீர்கள். எப்படிச் செய்தீர்கள்?''

போதிதர்மர் சொன்னார். ''அது எளிது. நீ அதைப் பார்க்காத வரையில் அகங்காரம் இருக்கும். அதற்கு புறமுதுகு காட்டும் வரை அது இருக்கும். நீ அதை திரும்பி எதிர்நோக்கினால்— எவருமில்லை.''

இப்போது ஆக்டேவியோ பாஸின் அழகான கவிதையைக் கேளுங்கள், இதைத்தான் துல்லியமாக சொல்கிறது.

*இங்கே உள்ளதொரு அமைதியான நீண்ட தெரு.*

*நான் காரிருளில் நடக்கையில் தடுமாறிக் கீழே விழுகிறேன். மீண்டெழுந்து பார்வையின்றி நடக்கிறேன்.*

*சப்தமற்ற கற்களையும், காய்ந்த சருகுகளையும் என் கால்கள் மிதித்து நடக்கின்றன.*

*எவரோ என் பின்னால் கற்களையும் சருகுகளையும் மிதிக்கின்றார்.*

*நான் வேகம் குறைக்க அவரும் குறைக்கின்றார்;*

*நான் ஓடினால் அவரும் ஓடி வருகிறார்.*

*திரும்பிப் பார்க்கிறேன். எவருமில்லை.*

இது புத்தரின் கதையில் ஒரு பகுதிதான். ஒருமுறை அகங்காரம் அகன்று விட்டதென்றால், ஒரு கணம் கூட சுயம் தங்கியிருக்கும் என்று நினைக்காதீர்கள். அகங்காரம் அழிந்தபிறகு சுயமும் காணாமல் போய்விடும். அதனால்தான் புத்தர் சொல்கிறார். ''உங்களிடம் ஆன்மாவும் கிடையாது, சுயமும் கிடையாது. நீங்களே இல்லை. யாரும் அங்கே இருப்பதில்லை. அகங்காரமோ, ஆத்மாவோ இல்லை. இவை இரண்டுமே மாயையின் இரண்டு அம்சங்கள், அவ்வளவே.''

நீங்கள் ஒரு நிழலாய் தொடர்புபடுத்துகிறீர்கள். திரும்பிப் பார்த்தால் நிழல் காணாமல் போய்விடுகிறது. இரண்டாவது பகுதி என்னவென்றால், நீங்கள் மேலும் ஆழமாய் பார்த்தால் நீங்களும் காணாமல் போய்விடுவீர்கள். நாடும் பொருள் மட்டுமல்ல, பொருள் நாடியவரும் காணாமல் போகிறார். ஆக்டேவியோ கவிதையின் இரண்டாம் பகுதி இதைத்தான் குறிக்கிறது.

*எல்லாமே காரிருள், கதவுகளும் இல்லை.*

*என் காலடிகள் மட்டுமே என்னை உணர்கின்றன.*

*மூலைச் சந்திப்புக்களுக்கிடையே திருப்பங்கள், மேலும் திருப்பங்கள்.*

*அவை மீண்டும்மீண்டும் தெருக்களுக்கு இட்டுச் செல்கின்றன.*

*எனக்காக அங்கே எவரும் காத்திருப்பதில்லை.*

*எவரும் என்னைப் பின்தொடர்வதுமில்லை,*

*அங்கே நான் மனிதன் ஒருவனைப் பின்தொடர்ந்து செல்ல,*

*அவன் தடுமாறிக் கீழே விழுந்து பின் எழ*

*என்னைப் பார்த்து அவன் சொல்வது, ''எவருமில்லை''.*

இரண்டு பக்கங்களிலிருந்தும் யாருமில்லை. அகங்காரம் சுயத்தை நோக்கினால் எவருமில்லை. சுயம் அகங்காரத்தை நோக்கினால் — எவருமில்லை. பார்வை ஏற்படும்போது, வெறுமனே எவரும் இருப்பதில்லை. இருவரும் காணாமல் போய்விட்டனர், பார்ப்பவரும், பார்க்கப்பட்டதும்.

இதுதான் ஜென் பௌத்தத்தின் முழு அடித்தளமாகும். சூஃபிசத்தின் அடித்தளமும் இதுவே. ''*ஃபானா*'' எல்லாமும் காணாமல் போய்விடுகிறது.

ஆனால் ஆக்டேவியோ ஒரு மறைஞானி அல்ல, அவர் ஒரு புத்தர் அல்ல, அவர் உங்களைப் போன்ற சாதாரணமானவர். அவரிடமிருந்த ஒரே சிறப்பு, உங்கள் கதவுகள் திறக்கவே திறக்காது, அவருடைய கதவுகள் சில சமயங்களில் திறந்துகொள்ளும். ஏன் எப்படி திறக்கிறது என்று ஒருவர் அறியாமல் இருக்கலாம். காற்று வந்து கதவை திறந்துவிட மற்றொரு காற்று அலை வந்து அதை மூடிவிட்டுச் செல்லலாம். ஒருக்கால் உங்கள் கதவு இறுக்கமாக மூடியிருக்கலாம். கவிஞர் உங்களுக்கும் மறைஞானிக்கும் இடையில் இருப்பவர். கவிஞர் உங்களைவிட சற்றே நெகிழ்ந்து இருப்பவர், உங்களைவிட சற்றே இளகி இருப்பவர். சில சமயங்களில் இளகி விடுகிறார், வேறு சமயங்களில் தன்னை இளக அனுமதிக்கின்றார்.

நீங்கள் மருந்து சாப்பிடும்போது அதுதான் நடக்கிறது. உங்கள் வேதியியல் மாறுகிறது, நீங்களும் இளகிவிடுவீர்கள். இது மதுவினால் ஏற்படலாம், ஹஷிஷ் போன்ற போதை வஸ்துகளினாலும் ஏற்படலாம். பல விஷயங்கள் மூலமாக நடக்கும். உபவாசம், சுவாசம், உடற்பயிற்சி, ஓடுதல், நீந்துதல், என பல. ஒரே விஷயம் என்னவென்றால், நீங்கள் சற்றே நெகிழ்ந்து கொடுத்தால், கதவுகள் திறக்கும். நீங்களும் அப்பால்

உள்ளதைப் பார்க்கலாம். ஆனால் ஒரு கணம்தான் இது நடக்கும். வேதியியல், உங்களுக்கு ஷணநேரத் தோற்றத்தை மட்டுமே கொடுக்க முடியும். ஒருக்கால் கவிஞர் உங்களைவிட சற்றே அதிக அளவு LSDயோடு பிறந்து இருக்கிறாரோ என்னவோ, கொஞ்சம் ஹார்மோன் வித்தியாசங்கள், அவ்வளவுதான். ஒருநாள் இது கண்டுபிடிக்கப்படும். ஹார்மோன்களும், வேதியியலும் ஏற்படுத்தும் வேறுபாடுகளைத் தெரிந்துகொள்ளப் போகிறீர்கள்.

ஒரு ஆணுக்கும் பெண்ணுக்கும் உள்ள வேறுபாடு என்ன? வேறுபாடு வேதியியலில்தான். எந்த ஆணையும்விட ஒரு பெண்ணால் அதிகமாக உணரமுடியும். ஆணை விட பெண்ணால் அதிகமாக நேசிக்கமுடியும். பெண் பிரார்த்தனை செய்யும்போது அவள் உண்மையிலேயே உணர்ச்சிவயப்படுகிறாள்.

ஆண் பிரார்த்தனை செய்யும்போது தனக்கு சாதகமாக்கி கொள்ளப் பார்க்கிறான். அதனால் மன நெகிழ்ச்சி அடைவதில்லை. அதன் மூலம் கடவுளை வசப்படுத்த முயற்சி செய்கிறான். பெண் பிரார்த்தனை செய்கையில், அதனால் வசப்பட்டு, கடவுளால் ஈர்க்கப்பட தன்னை அனுமதிக்கிறாள். பெண்ணின் அருள், அவள் உயிருருவின் முழுமை ஹார்மோன் சார்ந்தது.

தாயின் உடம்பில் குழந்தை வளரும்போது, அந்தப் பெண்ணிற்கு ஏதாவது ஹார்மோன் மாற்றங்கள், தொந்தரவுகள் ஏற்பட்டு, அதிக ஆண் ஹார்மோன்கள் கொண்டிருந்தால், பிறக்கும் குழந்தை ஆண் பிள்ளையாக இராவிட்டால், பிறந்த அந்த பெண் குழந்தை ஒரு ஆண்டங்கியாக இருப்பாள். ஆண் தன்மை மிகுந்து இருக்கும். ஏனென்றால் அந்த ஹார்மோன் குலைவுகள் பெண்குழந்தையை ஆண்டங்கியாக்கிவிடும். சாதாரணப் பெண்ணாக இருக்கமாட்டாள், இயல்நயம், இருக்காது. சண்டைக்கு முன் நிற்பாள்.

உங்களிடமிருந்து, ஒரு கவியின் வேதியியல் சற்றே வேறுபடுகிறது. மறைஞானி உணர்வுநிலையில் மாறுபடுகிறார்

வேதியியலில் அல்ல. அதனால் தான் நான் போதை வஸ்துகளுக்கு எதிராக இருக்கிறேன். அவை உங்களிடம் வேதியியல் மாற்றங்கள் மட்டுமே செய்ய முடியும், உணர்வு நிலையை மாற்றவே முடியாது. போதை மருந்துகள் உங்களுக்கு சமாதி அளிக்க முடியும் என்று ஆல்டஸ் ஹக்ஸ்லி சொல்வது முற்றிலும் தவறு. உங்களுக்கு அது கொஞ்சம் கவிதை தர இயலும், உண்மைதான். அறியாதவற்றை பற்றிய க்ஷணநேரத் தோற்றங்களை தர முடியும், ஆனால் நீங்கள் மாறாமல் அப்படியேதான் இருப்பீர்கள். அந்தந்த தோற்றங்கள் அழகான அனுபவங்களாக மாறலாம், ஆனால் அவை அனுபவங்கள் மட்டுமே. அவற்றினால் அனுபவிப்பவர் மாறுவதில்லை. அதனால்தான் சொல்கிறேன். உங்களுக்கு கவிதை பிடிக்கும் என்றால், கவிஞரைச் சென்று பார்க்காதீர்கள். ஏமாற்றமடைவீர்கள். ரொம்பச் சாதாரணமான வரை காணலாம். அதிக அகங்காரமுடையவராய் இருக்கலாம், சிறப்பாக ஏதும் இருக்காது. ஏனென்றால் அந்த அனுபவங்கள் அவரின் உயிருருவில் எந்த மாற்றத்தையும் ஏற்படுத்தவில்லை. நீங்கள் ஒரு போதைவஸ்துவை எடுத்துக்கொண்டு காற்றில் மிதக்கலாம். உலகையே மாயத்தோற்றமான வர்ணங்களில் காணலாம். உலகமே வேறாகத் தெரியும். பூமியே ஒரு மாபெரும் கவிதையாகத் தோற்றமளிக்கும், கீழே இறங்கி வரும்போது எல்லாம் காணக்கிடைக்காமல் போய்விடும், உலகமானது முன்னைவிட அதிக புழுதிமயமாகவும் இருண்டும் தோற்ற மளிக்கும். இதைத் தவறவிடுவதினால் மேலும் அதிக போதைப் பொருட்களுக்காக அலைகிறீர்கள்.

இந்த இரண்டு விஷயங்கள் உங்களுக்குள் இருக்கின்றன. வேதியியல் மற்றும் உணர்வுநிலை. வேதியியல் உங்களை முட்டாளாக்கக் கூடும், எச்சரிக்கை வேண்டும். வேதியியலின் தூண்டிலில் சிக்கிக் கொள்ளாதீர்கள். உங்கள் உணர்வு நிலை புதியதாய் இல்லாத பட்சத்தில் அந்தச் சிறிய அனுபவங்கள் எல்லாம் பெரிய வித்தியாசத்தை ஏற்படுத்தாது. அவை ஒரு பொருட்டல்ல.

இரண்டாவது கேள்வி.

*பெண்கள் ஞானம் அடையமாட்டார்கள் என்று கேள்விப்பட்டேன். அது என்னைக் கலங்க வைக்கவில்லை — அப்படியானால் என்னால் என்ன சாத்தியப்படும்.*

பிரதிபா! நீங்கள் ஏதோ ஒரு ஆணாதிக்கப் பன்றியைச் சந்தித்திருக்கவேண்டும். உணர்வு நிலையில் ஆணுக்கும் பெண்ணுக்கும் வேறுபாடு இல்லை. வேறுபாடு வேதியலில்தான். மேலும் வேதியல் உணர்வு நிலையில் எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்தாது. உணர்வு நிலையானது ஆண் அல்லது பெண்பால் என்று கிடையாது. அது கடந்த ஒரு நிலையாகும். இதை சிறுமைகள் வழியாக வகைப்படுத்தலாகாது. அது இரண்டையும் கடந்த ஒன்றாகும்.

ஆனால் ஆண் எப்போதும் பெண்களைப் பற்றி சொல்லிக் கொண்டு இருக்கிறான். பெண் தாழ்ந்தவள் என்று நிரூபிக்க ஆண் எப்போதும் முயற்சி செய்துகொண்டு இருக்கிறான். ஏனென்றால் தான் பெண்ணைவிட தரத்தில் தாழ்ந்ததாக நினைக்கிறான். அடிப்படை தாழ்வு மனப்பான்மையின் காரணம். பெண்ணால் குழந்தை பெற முடியும். ஆணுக்கு இதனால் பொறாமை. அவள் சக்திவாய்ந்தவளாகத் தோன்றுகிறாள். அவளால் ஓர் உயிரை ஈன்றெடுக்க முடியும். இதனால் ஆணுக்கு எப்போதும் ஒரு தாழ்வுமனப்பான்மை. இதனால் ஆண் பழி வாங்குகிறான். அவள் தாழ்ந்தவள் என்று நிரூபணம் செய்ய முயற்சிக்கிறான். அவளால் இதைச்செய்ய முடியாது, அதைச்செய்ய முடியாது என்று சொல்லிக் கொண்டிருக்கிறான்.

ஞானம் பற்றிய விஷயத்தில் இந்த முட்டாள் மனிதர்கள் பெண்ணால் அடைய முடியாது என்று சொல்லிக்கொண்டு இருக்கிறார்கள். ஏன்? ஆண் அல்லது பெண்ணிற்கும் இதற்கும் என்ன தொடர்பு? ஆணாகவோ பெண்ணாகவோ இருப்பது விஷயத்திற்கு ஒவ்வாதது.

உங்கள் உயிருருக்குள் நீங்கள் ஆழமாகச் சென்று வெறும் சாட்சியாக இருக்கும்போது, அந்த சாட்சி பெண்ணாகவே

இருக்குமா? சாட்சியாக இருக்கும் உணர்வு நிலையானது. ஒரு பெண் அல்லது ஆணின் உடலிற்கு வெளியே இருந்து சாட்சியாகப் போகிறது. அது பால் இனம் சாராமல் இருக்கும். அது வெறுமனே இருக்கும். ஒரு நிலைக்கண்ணாடி போல் செயல்படும்.

ஆனால் ஒவ்வொரு வழியிலுமாக ஆண் பெண்ணைத் தடுத்து நிறுத்தப் பார்க்கிறான். அவனுக்கு பயம். அவனால் பெண்ணை மிக உயரத்தில் தூக்கி வைத்து தெய்வமாகக் கும்பிட முடியும் அல்லது குற்றம் குறை கூறி கீழே இறக்கிவிட முடியும், ஆனால் தனக்கு சமமாகப் பாவித்து ஏற்றுக்கொள்ள முடியாது. இது பெண் மீது ஆதிக்கம் செலுத்துவதற்கான இரு வகைகள். ஆண் சொல்கிறான், ''பெண் புனிதமானவள்'' அதன் பொருள் என்னவென்றால், அவன் வேசியிடம் சென்றாலும் மன்னிக்கப் படவேண்டும். ஏனென்றால் அவன் புனிதன் அல்ல. பெண் மன்னிக்கப்படலாகாது. இதனால்தான் ஆண்களில் வேசி என்று யாரும் இல்லை.

ஆண்கள் பலவற்றை செய்யலாம். அவனுக்கு அனுமதி உண்டு. அவர்கள் சொல்வதுண்டு, ''ஆண் பிள்ளைகள் ஆண்பிள்ளைகள் தான்'' பெண்ணிற்கு அனுமதி கிடையாது. அவளுடைய புனிதத்தன்மை, அவள் பெண் தெய்வமாக இருப்பது எல்லாம் அவளை கூண்டிலிட்டு முடக்குவதற்கான தந்திரம், யுக்தி. அவளை தொழுது, எல்லா நற்பண்புகளையும் அவளுக்கு சாற்றிய பின் அவள் உங்கள் கைப்பிடியில் இருக்கிறாள். அவளால் நகர முடியாது. ஏனென்றால் அவள் தன் தெய்வத்தன்மையை இழந்துவிடுவாள். இது ஒரு வகையான யுக்தி.

மற்றொன்று அவளை தீவினையாக பிரகடனம் செய்வது. அப்படியானால் அவளை சித்திரவதை செய்ய உங்களுக்கு அனுமதி கிடைக்கிறது, அவளை வரையறைகளுக்குள் கட்டுப்படுத்தி வைக்க முடியும். அவள் ஒரு தீவினை என்பதால் அவளுக்கு முழு சுதந்திரம் கொடுக்கலாகாது. அவள் ஆபத்தானவள். அவள் உலகில் நரகத்தைக் கட்டவிழ்த்து விடுவாள்.

துறவிகள் என்று அழைக்கப்படுவோர் அனைவரும் இறுதியில் சாதாரண மனிதர்கள் என்று நிரூபித்துவிட்டனர்.

நீங்களே அதை முடிவு செய்யலாம். பெண்களைப் பழித்துரைத்தால் அவர் துறவியின் பண்புபற்றி அறியாதவர் என்பதை நீங்கள் நன்றாகவே தெரிந்துகொள்ளலாம். ஆண் மற்றும் பெண் ஆகியவற்றைக் கடந்த முழுமையைப் பற்றி எதுவும் அறியாதவர். அவர்தான் ஒரு ஆண் என்பதைப் பற்றிய அக்கறை கொண்டும், பெண்கள் பற்றிய அச்சமும் கொண்டவர். இதைப் பற்றியெல்லாம் கவலை கொள்ளத் தேவையில்லை.

நீங்கள் சொல்வது, *''பெண்கள் ஞானம் அடைய மாட்டார்கள் என்று கேள்விப்பட்டேன்''.*

இதுபோன்ற குப்பைகளுக்கு கவனம் தர வேண்டாம்.

மேலும் நீங்கள் சொன்னது, *''அது என்னைக் கலங்க வைக்கவில்லை....''*

ரொம்ப நல்லது, ஏனென்றால் உங்களை குலைய வைத்தது என்றால் அது ஆபத்தானது. ஆபத்து என்னவென்றால், நீங்கள் அந்த 'பெண்கள் விடுதலை' இயக்கத்தின் அங்கமாகி விடக்கூடும். அது மற்றொரு துருவமுனை. ஆண் வெறுக்கத்தக்க முறையில் நடந்துகொண்டான். இந்த பெண் விடுதலை இயக்கத்தின் மூலம் பெண்களும் வெறுக்கத்தக்கவராக மாறுகின்றனர். ஆணின் முட்டாள்தனம் பெண்களையும் இந்த முட்டாள்தனத்தை நோக்கி விரட்டுகிறது. இரண்டுமே கைவிடப்பட வேண்டியவை.

நீங்கள் இதன் காரணமாக கலங்காமல் இருந்தது நல்லது. கலக்கம் கொண்டால் அவற்றை உங்களுக்குள் வர அனுமதிக்கிறீர்கள், பிறகு அவற்றின் தாக்கம் உங்களை மாற்றி விடும்.

*''அது உண்மைதானா என்று யோசிக்க வைத்தது.''*

அது உண்மையல்ல, எப்படி உண்மையாக இருக்க முடியும்? ஒரு பெண்ணிடமிருந்து பிறந்தவர் புத்தர், அப்படியானால் ஒரு பெண்ணிடமிருந்து புத்தத்தன்மை பிறக்காதா? என்ன மாதிரியான முட்டாள்தனம் இது? எல்லா புத்தர்களும் பெண்ணிடமிருந்தே பிறக்கின்றனர். தன் கருப்பையில் ஒரு புத்தரை சுமந்துகொள்ள முடியுமென்றால், அவளால் தன் அடி ஆழ உணர்வுநிலை

கருவறையில் புத்தத் தன்மையை கொண்டு இருக்க முடியாதா? இதில் எந்தப் பிரச்சினையும் இல்லை.

காரணம் வேறு எங்கோ இருக்கிறது. காரணம் என்னவென்றால், கடந்த காலத்தில் சமயங்கள் பாலுணர்விற்கு எதிராக இருந்தன. ஆண் பெண்ணைக் கண்டு அச்சப்பட்டான். ஏனென்றால் அவன் பெண்ணுக்கு அருகில் வந்த கணமே கவரப்படுகிறான். மருட்சிக்கு உள்ளாகின்றான். இந்த ஈர்ப்புகள்பற்றி அவனுக்குப் பயம். ஆனால் அவை கண்டனம் செய்யப்படுகின்றன. இந்த கவர்ச்சி, மயக்கம் எல்லாமே பெண்ணின் அருகாமையில் ஏற்படுவதாலும், அவளின் தேகரீதியான அருகாமை மட்டுமல்லாமல் பெண்ணைப் பற்றிய கருத்தே தீங்காகி விடுகிறது.

பெண் பலியாடாகிறாள். அவளுக்கு அதில் தொடர்பே இல்லை. அவளும் ஒரு ஆணருகே வரும் பொழுதில் அவனால் ஈர்க்கப்படுகிறாள். ஆனால் அவள் ஆணைப்போல அசிங்க மானவளும் முரடாகவும் இல்லை. அவள் ஆண்தான் நரகத்திற்கான கதவு என்று சொல்லவில்லை. ஆனால் துறவிகள் என்று அழைக்கப்படுவோரே பெண்தான் நரகத்திற்கான கதவு, ஆக 'நரகத்தைத் தவிர்க்க வேண்டுமானால் பெண்ணைத் தவிர்' என்று மீண்டும் மீண்டும் கூறி வருகின்றனர்.

முழுக் கருத்துமே தவறான வாதத்தின் அடிப்படையில் உருவானது. அதாவது புணர்வு - செக்ஸ் தவறான ஒன்று. செக்ஸ் என்பது ஒரு இயல் நிகழ்வு, இயற்கையானது என்று ஏற்றுக்கொள்ளப்பட்டால், பிரச்சினை இல்லாமல் போய்விடும். அதைத்தான் நான் இங்கே செய்ய முயற்சிக்கிறேன்.

நான் இங்கே என்ன செய்கிறேன், எப்படி செய்கிறேன் என்பது பற்றி நீங்கள் அறியாமல் இருக்கலாம். அதன் தாக்கம் பற்றி தெரியாமல் இருக்கலாம். அவை பரந்த எல்லைகளைத் தொடுபவை.

நான் சமயத்தின் பழைய முழு அடித்தளத்தையும் தகர்த்துவிட்டு ஒரு முற்றிலும் புதிய அடித்தளம் அமைக்க முயற்சி

செய்கிறேன். இந்த அடித்தளம் இயற்கையானது, இயல்பானது, மனித ஜீவனுக்குரியது. இந்த அடித்தளம் ஆண் - பெண் உறவை அதன் முழு அழகு மற்றும் சிறப்போடு ஏற்றுக்கொள்ளும்.

நான் இதைச் சொல்லியாக வேண்டும்:. உங்கள் பால்தன்மையை முற்றிலும் நேசத்தோடும் நயத்தோடும் ஏற்றுக்கொள்ளாவிட்டால் நீங்கள் அதைக் கடந்து வர முடியாது. கடந்து போவதற்கான ஒரே வழி அதனூடே போவதுதான். மறுக்கப்பட்ட எந்த அனுபவமும் தொடர்ந்து நிலைக்கும். அது மறுபடியும்மறுபடியும் உங்களுக்குள் நுழைய முற்படும். உங்கள் கதவுகளைத் தட்டிக் கொண்டேயிருக்கும். உங்கள் உயிருருவின் எந்தப் பகுதியையும் உங்களால் மறுக்க முடியாது. அப்படிச் செய்தீர்களானால் நீங்கள் முழுமையாக இருக்கமுடியாது. நீங்கள் முழுமையாகக்கூட இல்லாவிட்டால் நீங்கள் எப்படி புனிதமாக இருக்கமுடியும்?

எதுவும் மறுக்கப்பட வேண்டாம். எல்லாமே ஏற்றுக் கொள்ளப்பட்டுக் கடந்து போதல் வேண்டும்.

கடவுள் கொடுத்த அனைத்தையும் ஏற்றுக்கொண்டு, எந்த விதமான மறுத்தலும் இல்லாமல் அதை மாற்றி அமைக்கும் மனிதனை நான் அறிவார்ந்தவன் என்று சொல்வேன். ஏனென்றால், தவறான எதையும் கடவுளால் உங்களுக்கு கொடுக்க முடியாது. ஏதோ ஒன்று தவறு என்று நீங்கள் நினைத்தால் அது உங்கள் கருத்து, உங்கள் விளக்கம், உங்கள் முற்சாய்வாக இருக்கும். கோபம் இருக்கிறது. கோபமே உங்கள் தியானமாகி விட்டால். கோபத்திலிருந்து புதியதொரு தத்துவம் எழுவதைக் காண்பீர்கள். அது பரிவன்பு. கோபமுடையவன்தான் பரிவு காட்ட முடியும். கோபம் இல்லாவிட்டால் அந்த மனிதன் எப்போதும் பரிவு காட்ட முடியாது, ஆண்மையற்று இருப்பான். முதுகெலும்பே இருக்காது.

புணர்விலிருந்துதான் சமாதி. உங்கள் உயிருருக்குள் நுழையும் ஏணியின் முதற்படி செக்ஸ். அதன் இறுதிப்படி சமாதி. கீழே உள்ளதைத் தொடாமல் மேலே எட்ட முடியாது. அடியில்தான் வேர்கள் உள்ளன. உயர்மட்டத்தில் இருக்கும்

ஒன்று அடிமட்டத்தைச் சார்ந்தே இருக்கிறது. அடிமட்டம் என்றால் தாழ்ந்தது என்று அர்த்தமல்ல. அடிமட்டம் என்று நான் சொல்லும்போது நாம் மதிப்பீடு செய்யவில்லை. நான் வெறுமனே அதன் நிலையை குறிக்கின்றேன். அடித்தளம் கீழே இருந்தால்தான் கட்டிடம் அதன் மீது எழுப்பப்பட முடியும். ஆனால் கீழே உள்ளே காரணத்தினால் அது தாழ்ந்தது என்று பொருள் அல்ல. அது முழுக் கட்டிடத்தையும் தாங்கியிருக்கிறது. அதுவில்லாமல் முழுக் கட்டிடமே போய்விடும்.

செக்ஸ், பாலுணர்வு தான் வாழ்க்கையின் இழைமம்,அதுதான் தாங்கிப்பிடிக்கும் கட்டுமானம். நடப்பது எல்லாமே அதே பாலுணர்வுச் சக்தியின்மூலமாகவே நடக்கிறது. ஆம், அந்த சக்தியில் பல புதிய உருமாற்றங்கள் உள்ளன. அது நேசமாக உருவமாகிறது, அது பிரார்த்தனையாகிறது, அது சமாதியாகிறது. இறுதியில் அது கடவுள் ஆகிறது.

செக்ஸ் கடவுளின் விதை, ஆனால் கடவுளே அல்ல. ஆயினும் விதை தன்னுள் மரத்தை உள்ளடக்கி இருக்கிறது- சாத்தியமானதை செக்ஸ் தனக்குள் வைத்துள்ளது. அதை நீங்கள் நேசிக்காத வரையில், அதை உங்கள் உணர்வு நிலை என்ற நிலத்தில் விதைக்காத வரையில் உங்களால் மரத்தையும் காணமுடியாது, அதன் அழகான பூக்களையும் காணமுடியாது. அந்த ஆயிரம் இதழ் கொண்ட தாமரை உங்கள் உயிருக்குள் எப்போதும் எழாது. செக்ஸ் கண்டனம் செய்யப்பட்டதால் பெண்ணும் கண்டனத்திற்கு உள்ளாகிறாள். கண்டனம் இரண்டாம்பட்சம்தான், அடிப்படையான கண்டனம் செக்ஸ், புணர்வு பற்றியது. செக்ஸ் ஏற்றுக்கொள்ளாதவரையிலும் பெண் ஏற்றுக்கொள்ளப்பட மாட்டாள்.

ஆகவே நான் உங்களுக்கு முற்றிலும் ஒரு புதிய பார்வை தருகிறேன். வாழ்க்கை எப்படியுள்ளதோ அதை அப்படியே ஏற்றுக்கொள்ளுங்கள். எல்லாமே நல்லதுதான், அதற்கென்று எங்கே உள்ளீர்களோ அங்கேயே தங்கியிருக்க வேண்டும் என்று அர்த்தம் இல்லை. எல்லாமே நல்லதுதான் என்பதின் பொருள், எல்லாவற்றையும் மேலும் மேலும் உயர்ந்த அனுபவங்களுக்காக

பயன்படுத்திக் கொள்ளலாம் என்பதே. எல்லாவற்றையும் படிக்கல்லாகப் பயன்படுத்திக் கொள்ளலாம்.

## மூன்றாவது கேள்வி.

வாழ்க்கையைப் பற்றி எனக்குத் தெரியும் என்று நான் முன்னர் நினைத்தேன், ஆனால் அவை வெறும் நம்பிக்கைகள் என்று புரிதல் ஏற்பட்டது.

அதில் மேலும்மேலும் உள்ளே செல்லும்போது எனக்கு தெரியவில்லை என்பதைத் தெரிந்துகொள்கிறேன். உங்களைப்பற்றி எந்த சந்தேகங்களும் இல்லாமல் வந்தேன். இப்போது அவை எழுகின்றன. மனது பற்றி அதிகம் தெரிந்தவர் ஒருவரிடம் பேசினேன். உங்களின் அனேக வழிகள் மூளைச்சலவை செய்பவை என்று அவர் சொன்னார்.

ஆனால், நான் உங்களை நேசிக்கிறேன் பகவான். எனக்கே நான் அடிக்கடி சொல்லிக்கொள்வது, ''துணிந்து செயல்படு, வெற்றி கூடும், நீ தோற்றுப் போகலாம், ஆனால் சிக்கிக்கொண்டு நிற்காதே-துணிவோடு இரு. இதுதான் நீ கொடுக்கும் விலை.'' நான் குழப்பத்தில் இருக்கிறேன் பகவான். ஆனால் என் பயத்தோடு நான் சண்டையிட்டுத் தாவுவேன் என்று நம்பிக்கை இருக்கிறது. நீங்கள் உண்மையிலேயே மூளைச்சலவை செய்கிறீர்களா? அப்படியானால் ஏன்?

மூளைச்சலவை பற்றி ஏன் உங்களுக்கு இவ்வளவு பயம்? சலவை செய்வது எப்போதும் நல்லதுதான். நீங்கள் ஏதாவது ஹிப்பி போன்றவரா என்ன? மூன்று கதைகள் கேட்டிருக்கிறேன்.

ஒன்று:

இரண்டு ஹிப்பிகள் சர்ச்சின் முன் உட்கார்ந்து இருக்கிறார்கள். ஒரு ஆம்புலன்ஸ் வருகிறது, அதிலிருந்து ஸ்ட்ரெட்சரில் பாதிரியார் கொண்டுவரப்படுகிறார்.

“இந்தக் கிழப்பூனைக்கு என்னவாயிற்று ?'' என்று முதல் ஹிப்பி கேட்கிறான். இரண்டாமவன் சொல்கிறான், ''குளித்துவிட்டு வெளியே வரும்போது கீழே விழுந்து கால் உடைந்து விட்டது.'' சில கணங்கள் மௌனத்திற்குப்பிறகு இரண்டாவது ஹிப்பி கேட்கிறான். ''ஆனால், குளிப்பது என்றால் என்ன?''

முதல் ஹிப்பி சொல்கிறான்.

''எனக்கு எப்படித் தெரியும்? நான் ஒரு கத்தோலிக்''

அடுத்த கதை:

தன் மகன்மீது தந்தைக்கு பயங்கர கோபம். கோபத்தில் தன் மகனை சலூனுக்கு இழுத்துச் செல்கிறார். தலைமுடி, தாடி எல்லாம் வெட்டப்படுகிறது. பையனைக் கண்ட தந்தை, ''அடக்கடவுளே இவ்வளவு நாளாக யாரோ ஒருத்தருடைய மகனையா வளர்த்து வந்தேன்?''

மூன்றாவது கதை:

ஒரு ஹிப்பி வலுக்கட்டாயமாக மருத்துவமனைக்கு இழுத்து வரப்பட்டான். அவன் உயிரைக் காப்பாற்றக்கூடிய ஒரு அறுவைச் சிகிச்சை செய்யப்பட வேண்டியிருந்தது. அவன் தாறுமாறாக கத்திக்கொண்டிருந்தான். அவன் தப்பிப்போகும் பொருட்டு இவ்வாறு சொன்னான். ''எனக்கு அலோபதி மீது நம்பிக்கையில்லை, நான் அக்குபஞ்சர், ஹோமியோபதியை நம்புகிறேன். நேச்சுரோபதி மீதுதான் எனக்கு நம்பிக்கை, எனக்கு அலோபதி வேண்டாம்.'' ஆனால் அவன் பெற்றோர் அவனை விடுவதாய் இல்லை.

மருத்துவர்கள் அவனுக்கு முதலில் ஒரு முழுக்குளியல் வேண்டும் என்றனர். ''அவன் நாற்றம் எடுக்கிறான், இப்படி இருந்தால், அவனுக்கு ஆபரேஷன் செய்ய முடியாது'' என்றனர். அவனை அழைத்துச்சென்று நன்றாகத் தேய்த்துக் குளிப்பாட்டி விட்டனர்.

வெளியே வந்தவுடன் ஹிப்பி சொன்னது. ''கடவுளே, இந்த ஆபரேஷனுக்கா இவ்வளவு பயந்தேன்''.

ஏன் இந்த மூளைச்சலவைக் கண்டு இவ்வளவு பயம்? அது உங்களைச் சுத்தம் செய்யும். உங்களுக்கு அது தேவை. உங்கள் மூளையில் அவ்வளவு குப்பை சுமந்து கொண்டிருக்கிறீர்கள். அதற்கு ஒரு நல்ல சலவை தேவை என்று நினைப்பதே இல்லையா? ஆம், அதைத்தான் நான் இங்கே செய்துகொண்டிருக்கிறேன்.

சமுதாயத்தால் ஒரு நிலைமைக்குப் பழக்கப்படுத்தப்பட்டு விட்டீர்கள், அது கட்டறுக்கப்பட வேண்டும். ஆனால் இலக்கு கட்டறுப்பு அல்ல, மறுசீரமைப்புதான். நீங்கள் ஒரு கத்தோலிக்காக, அல்லது ஹிந்து சார்புடையவராக இருப்பின் உங்களை ஒரு கம்யூனிஸ்டாக நிலைப்படுத்த வேண்டுமெனில் முதலில் உங்களை ஒரு கத்தோலிக் என்பதிலிருந்து கட்டறுக்க வேண்டும், அடுத்து ஒரு கம்யூனிஸ்டாக மறுசீரமைக்க வேண்டும், இயற்கையாகவே உங்கள் மூளையில் ஒன்று எழுதப்பட வேண்டுமென்றால் ஏற்கனவே இருப்பது அழிக்கப்பட வேண்டும். புத்தர் பயன்படுத்தியது போல, ஏசு பயன்படுத்தியதுபோல நானும் மூளைச்சலவையைப் பயன்படுத்துகிறேன். ஆனால் ஒரு வித்தியாசம் உள்ளது. அது மாவோ செய்தது போல அல்ல. நான் வெறுமனே உங்கள் மூளையைச் சுத்தம் செய்து அப்படியே விட்டுவிடுகிறேன். நான் அதில் புதிதாக எதுவும் எழுதுவதில்லை. அதை சுத்தமாக வைத்துவிடுகிறேன், எந்த நிலைப்படுத்தலுமின்றி உங்களை விட்டுவிடுகிறேன்.

உண்மையில் அதுதான் உங்கள் பயமே. தங்கள் மூளைச்சலவை செய்யப்படுவது பற்றி உங்களுக்கு பயம் இல்லை, வெறுமையாக, சுத்தமாக விட்டு வைப்பது பற்றித்தான் உங்கள் பயம். உடனேயே மறுசீரமைப்பு வேண்டும் என்று விரும்புகிறீர்கள். வேறு ஒரு விஷயம் பிடித்துக்கொள்வதற்கு, நம்பிக்கை வைப்பதற்கு வேறு ஒரு தத்துவம். நீங்கள் நம்புவதற்காக நான் வேறு ஒரு தத்துவத்தைத் தரப் போவதில்லை. எல்லாத் தத்துவங்களையும் அழித்துவிட்டு உங்களை தனியாக விட்டுவிடுவேன். அதுதான் சுதந்திரம், ஆனால் அது எப்போதும் அச்சம் தருவதுதான். அதன் பிறகு உங்களுக்கு பிடித்துக்கொள்ள ஏதும் இல்லை, சாய்ந்து கொள்ள ஏதுமில்லை. படுகுழியில் விடப்படுவீர்கள். அதை நான்

கடவுள் என்பேன். அடிப்பரப்பே இல்லாத படுகுழி. ஒரு அறியா நிலையில் விட்டுவிடுவேன், ஆனால் இந்த அறியாமைதான் நீங்கற்றது, ஒரு மாசறு நிலை.

நான் உங்களை கட்டுப்பாடுகளற்று ஆக்குவது, உங்களை மூளைச்சலவை செய்வதுபற்றி உங்களுக்கு அவ்வளவு கவலையில்லை. மாசற்ற நிலையில் உங்களை விட்டு விடுவதே உங்கள் கவலையாகும், இப்போது எப்படி செயல்பட முடியும்? வாழ்க்கையை எப்படி நடத்துவது, எப்போதும் நிபந்தனைகளைச் சார்ந்தே இருந்து விட்டீர்கள், அது உங்களுக்கு ஓர் அடையாளத்தைத் தந்துள்ளது. ஒரு ஹிந்துவாக, ஒரு முகமதியராக, கிறிஸ்துவராக அடையாளம் காட்டியது. நீங்கள் யார் என்று அறிவீர். தேவைகள் ஏற்பட்டால் எங்கே போக வேண்டும் என்று உங்களுக்குத் தெரியும். சர்ச்சுக்குப் போக வேண்டும், பைபிளில் தேட வேண்டும், பாதிரியாரைக் கலந்தாலோசிக்க வேண்டும். பிரச்சினை என்றால் எங்கே போக வேண்டும் என்று உங்களுக்குத் தெரியும்.

ஆனால் நான் உங்களை முற்றிலும் உதவியற்று விட்டு விடுகிறேன். உங்கள் சர்ச், பைபிள், குரான் எல்லாவற்றையும் எடுத்து விடுகிறேன். நான் அவற்றை எதைக் கொண்டும் மாற்றி வைப்பதில்லை. ஆனால் உண்மையான வேலை புத்தர்களால் செய்யப்படுகின்றது: அவர்கள் உங்களைத் தனியே விடுகின்றனர். உங்களுக்கு தனிமையில் இருக்கும் துணிவு இருந்தால், அந்த ஆற்றாமையில், முதல் முறையாக நீங்கள் வளரத் தொடங்குவீர்கள். அந்த அறியாதநிலையில் முதல்முறையாக புரிதல் எழும். இல்லாவிட்டால் நீங்கள் அறிவை நம்பி இருக்கும்போது புரிதல் எழத் தேவையில்லை. புரிதலின் வேலையை அறிவு செய்து கொண்டேயிருக்கும். அறிவு அனைத்தும் கைவிடப்பட்ட பின்பு நீங்கள் அறிவின் துணையின்றி வாழ்க்கையை எதிர்நோக்க வேண்டியிருக்கும். கடந்தகாலம் என்று ஒன்று இல்லாமல் நீங்கள் எதிர்வினையாற்ற வேண்டியிருக்கும். நினைவிற்குள் போக முடியாது, அது இருக்காது. நீங்கள் இங்கேயே, இப்போதே பதில் சொல்ல வேண்டும். உடனே செயல்பட வேண்டும். அந்த செயல்பாட்டில் புரிதல் பிறக்கும்.

துணிவு கொள்ளுங்கள்.

இடர்நேர்விற்கு உட்பட்டதுதான். ஆனால் துணியுங்கள். உண்மையில் இழப்பதற்கு என்ன இருக்கிறது? உங்கள் மூளையில் என்ன இருக்கிறது? மூளை சுத்தமாக்கப்படும் என்று அவ்வளவு கவலைப்படுகிறீர்கள். மதிப்புமிக்கது அங்கே ஒன்றுமில்லை, எல்லாம் குப்பைதான். அது உங்களுக்கு நன்றாகவே தெரியும், வேறு யார் அதை அவ்வளவு நன்றாகத் தெரிந்து இருக்க முடியும்? அமைதியாக அரைமணி நேரம் உட்கார்ந்து உள்ளுக்குள் பாருங்கள், உங்கள் மூளையை அறிந்து கொள்வீர்கள். அது பைத்தியமானது ஆயிரத்தோரு விஷயங்கள் அதனுள்ளே நடந்துகொண்டேயிருக்கின்றன, ஒரு பெரும் கூட்டம். மதிப்புள்ளது என்ன இருக்கிறது?

அது ஒரு முறை போய்விட்டால், உங்கள் இதயம் திறந்து கொள்ளும். பாசாங்குசெய்பவன் போய் மெய்யானது ஆட்கொள்ளும். போலி நாணயம் தூக்கி எறியப்பட்டு, நீங்கள் உண்மையான நாணயத்தைத் தேடுவீர்கள். அது உங்களுக்குள் அடங்கியிருக்கிறது. தலைமீது வெறுப்புவர அந்த ஞானம் இதுநாள் வரை காத்திருக்கிறது. ஒருமுறை அந்த ஞானத்தை நீங்கள் அறிந்துகொண்டால், வாழ்க்கையில் எது மதிப்பு மிக்கது என்பதைப் புரிந்துகொள்வீர்கள்.

## நான்காவது கேள்வி.

*யாருக்கானாலும் ஏன் சன்யாசம் வழங்குகிறீர்கள். அதன் பொருளைப் புரிந்து கொள்ளாதவருக்கும் வழங்கு கிறீர்களே?*

கேள்வி கிளாஸ் ஃப்ரெய்தாகிடமிருந்து.

வாழ்க்கையில் சில விஷயங்கள் உள்ளிருந்துதான் தெரிந்து கொள்ள முடியும். காதலின் அர்த்தம் தெரிந்தால்தான், காதலிப்பேன், அதற்கு முன்னர் அல்ல என்று நீங்கள் முடிவு செய்தீர்கள் என்றால் நீங்கள் காதலிக்கவே மாட்டீர்கள். காதல் பற்றித் தெரிந்து கொள்ள வழியே இல்லை. நூலகத்திற்குச் சென்று

காதல் பற்றிய ஆயிரமாயிரம் புத்தகங்களை நீங்கள் படிக்கலாம். ஒரு முகவர் ஆராய்ச்சி கூட செய்யலாம். ஆனால் காதல் பற்றி எதுவும் நீங்கள் தெரிந்து இருக்க மாட்டீர்கள்.

காதல் என்பது நாக்கின்மீது இருக்கும் சுவை போல. நீங்கள் அதை அனுபவித்துப் பார்க்க வேண்டும். அதனால்தான் நான் எவருக்கும், எல்லோருக்கும் சன்யாசம் தருகிறேன். காரணம் அது மட்டுமே அதை அனுபவிப்பதற்கான வழி. அது உங்களுக்கு நான் சொல்லக்கூடிய அனுபவம் அல்ல. அது நடைமுறைக்கான அனுபவம். நீங்கள் அதில் பங்கேற்க வேண்டும்.

பல மனிதர்களுக்கு இங்கே முதல்முறையாக வரும்போது இந்தக் கேள்வி எழுவது இயற்கைதான். ஏனென்றால் நீங்கள் அந்த வகையில் வளர்க்கப்பட்டு இருக்கிறீர்கள். முதலில் அதைப்பற்றி சிந்திக்கவேண்டும். இதனால்தான் பல்லாயிரக்கணக்கான விஷயங்களை நழுவ விடுகிறீர்கள். காரணம், உங்களின் கோரிக்கை ''முதலில் நான் அனுபவிக்க வேண்டும்.''

இதுபோன்ற விஷயங்களில் உள்ளார்ந்த இயல்பு என்ன வென்றால், அனுபவமே அனுபவிப்பது மூலமாகத்தான் கிடைக்கும், உங்களுக்கு மாதிரி எல்லாம் கொடுப்பதற்கு வழியில்லை. நீங்கள் தவறவிட்டுக் கொண்டேயிருப்பீர்கள்.

பலர் என்னிடம் வந்து சொல்வது, ''முதலில் கடவுள் இருக்கிறாரா என்று நிரூபிக்கப்பட வேண்டும். பிறகுதான் நாங்கள் தேடுதலைத் தொடங்குவோம். அவர்கள் எந்தத் தேடலிலும் ஈடுபடமாட்டார்கள். கடவுளையும் கண்டுபிடிக்க மாட்டார்கள். இது வெளிப்படையான ஒன்று, எப்படிக் கண்டுபிடிக்க முடியும்? ''முதலில் கடவுளை நிரூபி'' என்று கோரிக்கை. கடவுளை ஒரு வாதப்பொருளாகக் கருதி நிரூபிப்பது சாத்தியமில்லை. கடவுள் உரைசார்வாதமல்ல.

நீங்கள் போய்த் தேட வேண்டும்.... நீங்கள் அறியாத ஒன்று... அது பற்றி நிச்சயமில்லாத ஒன்றைத்தேட வேண்டும். உண்மையில் தேடலின் கிளர்ச்சியே அந்த அறியாமையில்தான் உள்ளது. நீங்கள் ஒன்றிற்குள் நகரத் துணிந்தது இருக்கும் அல்லது

இல்லாது போகலாம், நீங்கள் சூதாட்டத்தில் இறங்குகிறீர்கள், அதில்தான் மகிழ்ச்சியே. ஆனால் அந்த சூதாட்டத்தில்தான் வளர்வீர்கள். அந்த வளர்ச்சியில் கடவுள் அருகே வருவார். தொடர்ந்து தேடி, துணிந்தீர்கள் என்றால், என்றாவது ஒரு நாள் திடீரென கடவுள் உள்ளார் என்பதைக் கண்டறிவீர்கள். கடவுள் மட்டுமே என்பதை உணர்வீர்கள்.

சன்யாசம் ஒரு காதல் விவகாரம். அது நிரூபித்து பிறகு ஏற்றுக்கொள்வதற்கான ஒன்றல்ல.

> நீங்கள் கேட்கிறீர்கள். *''யாருக்கானாலும் ஏன் சன்யாசம் வழங்குகிறீர்கள்.....''*

ஏனென்றால் எனக்கு, 'ஒருவருமிலர்' என்பவர் 'எவரேனும் ஒருவரே.' என்னைப் பொறுத்த வரையிலும் எல்லோரும் புத்தராகக்கூடிய உள்ளாற்றல் கொண்டவரே. நான் உங்களுக்கு சன்யாசம் வழங்கும்போது உங்கள் மீது இருக்கும் மதிப்பினால் தருகிறேன். உங்கள் மீது இருக்கும் நேசத்தினால் தருகிறேன். நான் உங்களுக்கு சன்யாசம் வழங்கும்போது, வெறுமனே நான் தெரிவிப்பது என்னவென்றால், நான் உங்களை மதிக்கின்றேன், நீங்களும் உங்களையே மதிக்கத் தொடங்க வேண்டும்.

உங்களுக்கு சன்யாசம் வழங்கியதன் குறியீடு என்னவென்றால், உங்களுடைய உள்ளாற்றல் பெரிதாய் உள்ளது என்பதே. அதை பற்றி நீங்கள் அறியாமல் இருக்கிறீர்கள். நீங்கள் எப்படி உள்ளீர்களோ அப்படித்தான் இருக்கிறீர்கள் என்று எண்ணாதீர்கள். நீங்கள் அதைவிட அதிகமானவர், எப்போதும் அதிகமாகவே இருப்பீர்கள். அந்த 'அதிகம்' என்பது வற்றாத நிறைவளமுடையது.

அன்று நாம் படித்துக்கொண்டிருக்கும் கதையின் பொருள் இதுதான். அந்த பொக்கிஷம் வற்றாதது. அது நீங்கள்தான்.

சன்யாசம் என்பது ஒரு குறியீடான சாவி. உங்களுக்குள் இருக்கும் பொக்கிஷத்தை நான் கண்டவுடன், சாவியைக் கொடுக்க அவசரப்படுகிறேன். நீங்கள் அதைப் புரிந்துகொள்கிறீர்களா

இல்லையா என்பதுபற்றி நான் கவலைப்படவில்லை. நீங்கள் எப்படிப் புரிந்து கொள்ளமுடியும்? அதற்கு வழியில்லை. உள்ளிருந்துதான் அறிந்துகொள்ள முடியும் உள்ளே நுழைந்தால்தான் தெரிந்து கொள்ளமுடியும். நான் ஒவ்வொரு வருக்கும் சன்யாசம் வழங்கியிருக்கிறேன், ஏனென்றால் ஒவ்வொருவரும் தெய்வீகமானவர்தான்.

ஒவ்வொருவரும் கடவுளாகத் தகுதியானவர்தாம். அது ஒவ்வொருவருடைய விதி. நீங்கள் அதைத் தாமதப்படுத்தலாம், ஆனால் தடுத்துநிறுத்த முடியாது. உங்களுக்கு சன்யாசம் வழங்குவதின் மூலம் நான் அதை துரிதப்படுத்த முயற்சிக்கிறேன். சன்யாசம் வழங்குவதின் மூலம் அதை இனியும் தள்ளிப்போட வேண்டாம் என்று அறிவுறுத்துகிறேன். இனியும் தள்ளிப்போட வேண்டாம் என்கிற உதவிதான் சன்யாசம் வழங்குவது. அது இப்போதே கூட நடக்கலாம். மறுநாளுக்காகக் காத்திருக்காதீர்கள். நாளை என்றும் வருவதில்லை. நாளை என்பது மனத்தின் தந்திரம், நாளை என்பதின் மூலம் மனம் காலம் கடத்துகிறது.

எப்போதெல்லாம் என்னிடம் ஒருவர் வருகிறாரோ, ஒரு வெளியிடைக்கான சிறு சாத்தியக்கூற்றைக் கண்டால் நான் அவருக்கு சன்னியாசம் வழங்கத் தயாராக இருக்கிறேன். பெரும் மதிப்பின் காரணமாகத்தான் இது. நான் அவருள் ஓர் புத்தரைக் காண்கிறேன். புத்தர் ஏற்கனவே ரொம்ப காலமாய் காத்திருந்து விட்டார், நீங்கள்தான் அதைப் பார்க்கவில்லை.

நான் உங்களை சன்யாசியாகச் சொல்லும்போது, ‘நேரம் வந்துவிட்டது, துணிந்து இறங்குங்கள்’ என்று பொருள். இதுபோன்ற புதிய வாழ்க்கை முறையை முயன்று பாருங்கள். பழைய வழிகளில் வாழ்ந்துவிட்டீர்கள். அதனால் ஏதும் நடக்கவில்லை, அல்லது நடந்தது எதுவாகினும் அது மேலோட்டமானதும் பயனற்றதும் என்று நிரூபணமாகிவிட்டது. இந்த வழியையும் முயன்று பாருங்கள்.

நான் தொடர்ந்து சன்னியாசத்தை வழங்கிக் கொண்டிருக் கிறேன். காரணம் சாவி உங்கள் கையில் இருப்பது எனக்குத்

தெரிகிறது. ஆனால் ரொம்ப காலம் அது தங்கி இருக்காது. நான் இருக்கும்போது முயற்சி செய்யுங்கள். சாத்தியக் கூறுகள் அதிகம். நான் போனபிறகு அந்தச் சாவியின் அழகைப்பற்றி சிந்திப்பீர்கள். அதில் உள்ள வைரங்கள், தங்கம், அதன் மதிப்பு சாவியைப்பற்றிய ஒரு தத்துவம் உருவாக்குவீர்கள். கதவு மறக்கப்படும்.

நான்தான் கதவு!

சன்யாசியாகி நீங்கள் எனக்கு அன்பைக் காட்டுகிறீர்கள் — என்னுடன் அறியாத பிரதேசத்திற்குள் வரத்தயாராக உள்ளீர்கள், என்னிடம் எதிர்ப்பு காட்டமாட்டீர்கள். சண்டையிட மாட்டீர்கள் நீங்கள் சன்யாசியாக இல்லாவிட்டால், வெளிமனிதராகவே இருப்பீர்கள், அது உங்கள் முடிவு. வெளியிலிருந்து நோக்கும் எதுவும் உண்மையாக இருக்காது. இவையெல்லாம் வெளியிலிருந்து தெரிந்துகொள்ளும் விஷயங்கள் அல்ல. இந்த விஷயங்களைத் தெரிந்துகொள்ள வேண்டுமானால் நீங்கள் ஒரு பங்கேற்பாளராக வேண்டும். என்னுடன் தொடர்பு விடாத நிலையில் இருக்கவேண்டும். அதுதான் சன்னியாசம் என்பதின் பொருள்.

> *''யாருக்கானாலும் ஏன் சன்னியாசம் வழங்குகிறீர்கள். அதன் பொருளைப் புரிந்துகொள்ளாதவருக்கும் வழங்குகிறீர்கள்.*

அர்த்தம் புரிந்த எவருக்கும் நான் சன்னியாசம் இதுவரை வழங்கியதில்லை. அது இயலாத ஒன்று. அர்த்தம் புரிந்து கொண்டவரை எங்கே போய்த் தேடுவது? அதை அவர் புரிந்து கொண்டால் சன்னியாசம் தருவதில் என்ன பயன்? அவருக்கு அதைப்பற்றி ஏற்கனவே தெரியுமே. புத்தரோ, ஏசுவோ என்னிடம் வந்தால் நான் சன்னியாசம் வழங்கமாட்டேன், அவருக்கு அர்த்தம் தெரியும். பயணம் முற்றுப்பெற்றுவிட்டது. உங்களுக்குப் புரியாததால்தான் நான் சன்னியாசம் வழங்குகிறேன். இதை ஒரு முன் நிபந்தனை ஆக்காதீர்கள்.

என் எண்ணம் என்னவென்றால், கிளாஸ் ஃபிரெய்தாக் சன்னியாசம் பற்றி யோசித்துக்கொண்டு இருக்கவேண்டும்.

ஆனால் அதைப்பற்றிப் புரிந்துகொள்ளாமல் உள்ளே குதிப்பதற்கு அவருக்குப் பயம். மண்டையைப் போட்டுக் குழப்பிக் கொள்ளாதீர்கள். சில விஷயங்கள் இதயத்தைச் சார்ந்தவை. தலைக்குத் தெரியாத பல காரணங்கள் இதயத்திற்கு இருக்கின்றன இதயத்தை அனுமதியுங்கள். இது இதயம் சார்ந்த இயல்நிகழ்வு. சார்பதிர்வுகளை எடைபோட்ட மனம் ''ஆம். இதை எடுத்துக்கொள்வது நல்லது'' என்று சொல்ல, இது ஒன்றும் தலை முடிவுசெய்ய வேண்டிய விஷயமல்ல. நீங்கள் வெறுமனே என் கண்களைப் பார்க்கிறீர்கள். பிறகு ''சரி இந்த விஷயத்தை முயற்சித்துப் பார்க்கலாம்'' என்று சொல்லி, இறங்குகிறீர்கள். இதுதான் சரியான வழியாகும்.

தலையால் முடிவு செய்தவர்களுக்கு நான் சன்னியாசம் கொடுத்திருக்கிறேன். அவர்கள் சன்னியாசிகள் ஆகின்றனர். ஆயினும் ஆவதில்லை. தவறவிடுகின்றனர். தொடர்ந்து தவற விட்டுக் கொண்டே இருக்கின்றனர். காரணம், முதல் அடியே தவறான திசையில் எடுத்து வைக்கப்பட்டது. தலையால் முடிவு செய்யப்படும் எதுவும் தலையைத் தாண்டிப் போகாது! தலையை மட்டுமே கொண்டிராத சில முடிவுகள் உங்கள் வாழ்க்கையில் இருக்கட்டும். அதுதான் உதவி செய்யும்.

காதலில் விழுங்கள். காதலின்மூலம் சன்னியாசம் ஏற்படட்டும்.

## ஐந்தாவது கேள்வி:

*ஒன்றிற்கும் மேற்பட்ட மனிதர்களை நேசிக்கலாமா?*

ஒருவர் முழு உலகத்தையும் நேசிக்கலாம். கண்டிப்பாக நேசிக்கவேண்டும். ஆனால் நேசம் எந்த வகையிலும் உடைமை கொண்டாடுவதாக இருக்கக் கூடாது. தனிப்பட்டதாக இருக்கக் கூடாது. உள்ளடக்கியதாக இருக்க வேண்டும். நேசம் உள்ளடங்கலானதாக இருக்கும்போதுதான் அது என்னவென்று நீங்கள் அறிவீர்கள். அது தனிப்பட்டதாக, ஒருவருக்கானது மட்டும் என்று இருக்கும்போது அதை நீங்கள் அந்தளவிற்கு குறுக்குவதால்

அதைக் கொன்றுவிடுவீர்கள். அதன் எல்லையற்றத் தன்மையை அழிக்கின்றீர்கள். முழு வானத்தையும் ஒரு சிறு வெளியிடத்தில் அடக்கப் பார்க்கின்றீர்கள். ஒரு சிறு இடைவெளியில் அதை அடக்கமுடியாது.

ஒருவர் நேசிக்க வேண்டும். நேசிப்பு வெறும் உறவுமுறையாக இருக்கக்கூடாது. அது ஒரு இருப்பு நிலையாக இருக்க வேண்டும். நீங்கள் எப்போது ஒருவரை நேசிக்கின்றீர்களோ, அவர்மூலம் எல்லோரையும் நேசிக்கவேண்டும். நேசம் உண்மையிலேயே இருக்கிறது என்றால், நீங்கள் திடீரென மரங்கள், பறவைகள், வானம், மக்கள் என எல்லாவற்றையும் நேசிக்கத் தொடங்குவதைக் காண்பீர்கள். பெண் மீது காதல் வயப்படுகிறீர்கள் என்றால் என்ன நடந்தது? நீங்கள் ஒரு பெண்ணின்மீது நேசம் கொள்கிறீர்கள் எனில் எல்லா பெண்களையும் நேசிக்கின்றீர்கள். அந்த ஒரு பெண் வெறுமனே ஒரு பிரதிநிதிதான். அந்த ஒரு பெண் உலகில் இருந்த அத்தனை பெண்கள், இருக்கின்ற பெண்கள் மற்றும் இவ்வுலகில் இருக்கப்போகும் அத்தனை பெண்களுக்கும் ஒரு உதாரணம் போன்றவள். அந்த ஒரு பெண் பெண்மைக்கான கதவு. ஆனால் அந்தப் பெண் ஒரு பெண் மட்டுமல்ல; அவள் ஓர் மனித ஜீவனும் கூட. அதனால் நீங்கள் முழு மனித ஜீவர்கள் மீதும் நேசம் கொண்டு இருக்கிறீர்கள். ஒருமுறை நீங்கள் நேசிக்கத் தொடங்கினால் அந்த நேசத்தின் சக்தி எல்லோரையும் நோக்கி வெளிப்படுவதைக் கண்டு ஆச்சரியப்படுவீர்கள். அதுதான் உண்மையான காதல், நேசம்.

உடைமை கொண்டாடும் நேசம் உண்மையான நேசமல்ல. அது மிகக் குறுகியது. அது தன்னையே மூச்சுத் திணற வைக்கும். மற்றவரையும் அவ்வாறு செய்யும். ஆனால் இதுநாள்வரை அப்படித்தான் இருந்தது. நேசம் உள்ளடக்கியதாக இல்லை. தனிப்பட்ட நேசம் மட்டுமே உங்களுக்குக் கற்றுக் கொடுக்கப் பட்டுள்ளது.

உங்கள் தாய் சொல்கிறார். ''நான் உன் அம்மா, என்னை நேசி''. தந்தை சொல்கிறார். ''நான் உன் அப்பா, என்னை நேசி''. இதுமட்டுமல்ல, மேலோட்டமான ஹாஸ்யமாகத் தெரிந்தாலும்,

உங்கள் அப்பா, அம்மா சில சமயங்களில் உண்மையாகவே கேட்பது, ''யாரை அதிகம் நேசிக்கின்றாய், அம்மாவா, அப்பாவா?'

இது குழந்தையிடம் நீங்கள் கேட்கும் தவறான கேள்வி. கேள்வியில் ''அதிகம் என்ற பதத்தைக் கொண்டுவருவது முட்டாள்தனம். நேசம் உள்ளது அல்லது அது கிடையாது. அதிகம் குறைவு என்ற கேள்விக்கே இடமில்லை. குழந்தைக்கு தவறான கணக்குப் பாடம் சொல்லித் தருகிறீர்கள். அம்மாவும் உடைமை கொண்டாடப் பார்க்கிறாள். அடுத்து எல்லோரும் உடைமை கொண்டாட முயற்சிக்கின்றனர். ''என்னை நேசி, வேறு யாரையும் நேசிக்காதே'' உண்மையில் கடந்த காலத்தில் ஒருவருக்கு ஒருவர் என்ற உறவுமுறையை ஒப்புக் கொள்ளாதவர்களை மனநிலை சரியில்லாதவர்கள் என்று கருதப்பட்டனர். உண்மையில் தனிப்பட்ட உறவுமுறைக்குமட்டுமே கட்டுப்பட்டவர்தான் முதிர்ச்சியுற்றவர். ஒரே ஒருவரை நேசித்தல் என்பது பெற்றோரின் உறுதிப்பாட்டின் காரணமாக குழந்தைகளுக்குரிய தொடக்க நிலையிலேயே தங்கிப் போவதாகும். ஒருவர் பல ஈடுபாடுகள், பல உறவுமுறைகள், பல நேசிப்புகள் கொள்ள சுதந்திரம் கொண்டு இருக்க வேண்டும்.

ஆனால் இது ஆபத்தானதாகத் தோன்றுகிறது. ஆபத்தானது என்றால், அது நம் பழக்க வழக்கங்களுக்கு எதிராகப் போகிறது. யார் இந்தப் பழக்கங்களை உருவாக்கினார்கள்? ஒரு நுட்பமான தர்க்கவாதம் இந்தப் பழக்க வழக்கங்களில் பொதிந்து உள்ளது. மனிதன் ஒரு பற்றாக்குறை பொருளாதார நிலையிலேயே வாழ்ந்து வந்துள்ளான். எல்லோருக்கும் உணவு இல்லை. வீடுகள் இல்லை. அனைவருக்கும் போதுமான உடைகள் இல்லை. காலங்காலமாக பற்றாக்குறைப் பொருளியல் கொண்டே வாழ்ந்து வந்துள்ளான். எல்லாமே பற்றாக்குறைதான்.

இதனால் நேசமும் கிடைப்பதற்கரிய பொருள் என்ற கருத்து உருவாகி விட்டது. இரண்டு பேரை விரும்பினால் இருவருக்கும் பாதி பாதிதான் கிடைக்கும். அதுவே மூன்று பேர் என்றால்

மேலும் பாகுபாடு. நீங்கள் ஆயிரக்கணக்கானோரை நேசித்தால் நேசம் அவ்வளவு மெல்லியதாய் பரவி கிட்டத்தட்ட நீங்கள் யாரையுமே நேசிக்கவில்லை என்பதுபோல் தோன்றும்.

நேசத்தைப் பொறுத்தவரையில் அப்படியில்லை. நேசம் வற்றாத நிறை வளமுடையது. பற்றாக்குறை என்ற கேள்விக்கே இடமில்லை. நேசம் உட்பட பலவற்றிற்கு பற்றாக்குறை உள்ளது என்ற சிக்மண்ட் ஃபிராய்ட் போன்றோரின் சிந்தனை உங்களை ஆச்சரியப்படுத்தலாம். உங்கள் அண்டை வீட்டுக்காரருக்கு அல்லது அறியாதவர்களை நேசிப்பதற்கு ஃபிராய்டு எதிரானவர். ''உங்கள் அண்டை வீட்டாரை நேசியுங்கள்'' என்ற ஏசுவின் வாக்கிற்கு ஃபிராய்டு எதிரானவர். அவருடைய வாதம் மிக எளிமையான பொருளாதார நோக்குடையது. நேசம் மெல்லியதாக பரவுவதைப் பற்றி ஃபிராய்ட் எழுதுகிறார்: ''உங்கள் அண்டை வீட்டுக்காரரை நேசிப்பது உளவியலுக்கு எதிரானது''. மேலும் அவர் எழுதியது: ''அதீதமான நேச விரிதல் அல்லது வீக்கம் அதன் மதிப்பைக் குறைத்துவிடும்.'' மனதில் பற்றாக்குறை பொருளாதாரமே நிலவியிருக்கிறது என்பது ஃபிராய்டின் அனுமானம். இருக்கும் ஆண்மை, நேசம் ஆகியவற்றின் அளவை மனதில்கொண்டு அவற்றை எங்கே முதலீடு செய்கிறோம் என்பதைப்பற்றிக் கவனமாக இருக்கவேண்டும் என்கிறார் ஃபிராய்டு. இது அடிமுட்டாள்தனம். முற்றிலும் தவறு.

அந்தளவிற்குத்தான் நேசம் இருக்கிறது என்று கிடையாது. அளப்பரிய அளவில் உள்ளது. இந்த யோசனை உங்கள் தலைக்குள் இடப்பட்டதால் நீங்கள் அவதிப்படுகிறீர்கள். அதனால்தான் எந்தக் காதலரும் திருப்திப்பட்டதாய் தெரியவில்லை. அது சாத்தியமில்லை. ஏனென்றால் நேசம் என்பது அந்தளவிற்கு இருப்பதால் அதை ஒரேயொருவருக்கு தருவதன்மூலம் நீங்கள் திருப்தி அடைய முடியாது. நிறைவற்று உணர்வீர்கள். நீங்கள் உலகத்திற்கே வழங்க முடியும். அதனால் தரப்படாதது, அங்கேயே தங்கியிருக்கிறது. உள்ளுக்குள் அடக்கப்பட்டு இருக்கும் எந்த சக்தியும், வெளிப்படுத்தப்படாவிட்டால் அழிவுக் கருவியாகிவிடும். எதிரியாக மாறிவிடும்.

நேசம் பாயட்டும். நேசத்தின் ஊற்றுக்கண் நீங்கள். அவர்களால் முடிந்த அளவு மனிதர்கள் உங்களிடமிருந்து நேசத்தை எடுத்துக் கொள்ளட்டும். புத்தம் புதிய நீர் அங்கே சுரக்கும். நீங்கள் எல்லையற்ற சமுத்திரத்தோடு தொடர்புடையவர். நேசம் என்பது வற்றாதது என்பதை ஒரு முறை மனிதன் உணர்ந்து கொண்டால், அதற்கு பற்றாக்குறை இல்லை என்பதை தெரிந்து கொண்டால், பொறாமை வற்றிவிடும். பொறாமை என்பது பற்றாக்குறை பொருளாதாரத்தின் ஓர் அங்கம்.

நீங்கள் வேறு ஒரு பெண்ணுடன் சிரித்துப் பேசிக் கொண்டிருந்தால் உங்கள் மனைவிக்குப் பயம் வந்துவிடுகிறது. இனி தன்னுடன் சிரித்துப் பேசமாட்டீர்கள் என்று அவளுக்கு தெரிந்துவிட்டது. அந்த அளவிற்கு சிரிப்பு போய்விட்டது. அவ்வளவுதான் சிரிப்பு, நேசம் எல்லாம். நீங்கள் புன்னகைத்துக் கொண்டிருந்தீர்கள், அந்த அளவிற்கு புன்னகை வீணாகிவிட்டது. இப்போது மனைவியோடு இருக்கும்போது புன்னகை செய்யமாட்டீர்கள். அது அடி முட்டாள்தனம். உண்மையில் மற்ற மனிதர்களோடு உங்கள் கணவர் புன்னகைத்துக் கொண்டிருந்தால், உங்களோடும் அவ்வாறே இருப்பதற்கு சாத்தியம் அதிகமாகிறது. காரணம் அவர் புன்னகை செய்யப் பழகிக் கொண்டிருந்தார்.

உங்களைத் தவிர மற்ற ஒவ்வொருவரிடமிருந்து உங்கள் கணவர் அந்நியமாக இருந்தால், அவர் திறந்த மனதன்றி இருக்கப் பழகுகிறார். அவர் உங்களிடம் வரும்போதும் அது போன்றே இருக்கிறார். அது ஒரு பழக்கமாகி விடும். புன்னகை செய்யாமல் இருப்பதே ஒரு வழக்கமாகி விடும். உங்களைத் தவிர யாரையும் அவர் நேசிக்கக் கூடாது என்றால், அவர் நாள் முழுவதும் நேசிக்காமல் இருக்க முயற்சிக்கிறார் என்பதை நினைவில் கொள்ளுங்கள். அலுவலகம் சென்றால், உடன் பணியாற்றுபவர்களிடம் நேசமின்றிப் பழகுகிறார். நண்பர்களுடன் சென்றாலும் அதேபோல்தான். கிளப்பிற்குப் போனாலும் நேசமின்மையே. அவர் நேசமின்மையைப் பழகிக் கொண்டிருக்கிறார். இப்படி நேசமின்மையை நன்றாகப் பழகிக் கொண்டு, அது வளர்ந்தபின்பு வீட்டிற்கு வருகிறார். உங்களைப்

பார்க்கிறார். அவரால் எப்படி நேசமுடன் இருக்க முடியும்? நேசம் என்பது என்ன என்று மறந்துவிட்டார். போகப் போக அது அவருடைய இரண்டாம் இயல்பாகிவிட்டது. நீங்கள் நேச பாசமற்ற மக்களைக் காண்கிறீர்கள். காரணம் என்னவென்றால், நேசம் அரிதானது என்று முடிவு செய்துவிட்டனர். அதை ஒவ்வொருவருக்கும் வழங்கிக் கொண்டு இருக்கமுடியாது. ஆனால் நான் என் அனுபவத்தில் சொல்கிறேன். நான் அதை லட்சக்கணக்கான மனிதர்களுக்கு வழங்கியிருக்கிறேன். நீங்கள் அதிகமாகக் கொடுக்கக் கொடுக்க உங்களுக்கு மேலும் அதிகமாக கிடைக்கும்.

ஆனால் இதையும் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். நேசம் என்பது எப்போதும் புணர்வு என்று பொருள்படுத்திக் கொள்ள வேண்டாம். காதல் எப்போதும் புணர்வுசார்ந்தே இருக்க வேண்டும் என்று அர்த்தமில்லை. நேசத்திற்கு பல பரிமாணங்கள் இருக்கின்றன. அது பன்முகத்தன்மையுடையது. நீங்கள் இசையை நேசிக்கலாம், கவிதையை விரும்பலாம். ஆனால், இதைக் கவனித்துள்ளீர்களா? நீங்கள் இசைமீது அதீதமாய் விருப்பம் கொண்டிருந்தால் உங்கள் மனைவிக்கு இசைமீது கூட பொறாமை வரும். உங்கள் கிடாரைக் கூட உடைக்கலாம், தூக்கி எறியலாம். கிடார் இப்போது போட்டியாளராகிவிட்டது போலும். ஏனென்றால், நீங்கள் கிடாரை எடுக்கும்போது அது உங்கள் அன்புக்குரியது போன்று அதை கையாள்வீர்கள். இசையை நேசிக்கும்போது கிடார் உங்களுக்கு வெறும் கருவியல்ல. அது ஒரு ஆளுமை. அதற்கு உயிர் இருக்கிறது. அதைப் பார்க்கின்றீர்கள். கண்களில் நேசம் தெரிகிறது. தொடுதலில் அன்பு இருக்கிறது. அதை நெஞ்சோடு அணைத்துக் கொள்கிறீர்கள். அது உயிர் பெறுகிறது. நேசம் எல்லாவற்றிற்கும் உயிரூட்டுகிறது. நேசம் தான் தொடுவதை எல்லாம் உயிர் பெறச் செய்கிறது. நேசமின்மை எல்லாவற்றையும் உயிரற்றதாக்குகிறது. அது தொடுவதெல்லாம் இறந்து போகிறது.

நேசமின்மையில் நீங்கள் வாழ்ந்தால், நீங்கள் ஓர் இறந்த உலகில் வாழ்கின்றீர்கள். நேசத்தில் வாழ்ந்தால், உயிருள்ள ஓர் உலகில் வாழ்கின்றீர்கள்.

ஆனால் மனைவிக்குப் பொறாமை. உங்கள் மனைவியை நீங்கள் வருடிக் கொடுப்பதே இல்லை. ஆனால் எவ்வளவு அன்போடு கிடாரை வருடிக் கொண்டிருக்கிறீர்கள். ஒரு கிடாரைக் கையாள்வதுபோல அன்போடு மனைவியின் உடலைக் கையாள்வது இல்லை; அவளும் தன்னுள்ளே ஒரு இசையைச் சுமந்துகொண்டிருக்கிறாள். பொறாமையில் மனைவி நினைக்கிறாள், ''இந்த கிடார் ஒரு போட்டியாளர், அது போக வேண்டும்.''

அதேபோல் ஒரு அழகான புத்தகத்தில் ஆழ்ந்து போய் விட்டீர்கள். அருகிலேயே இருக்கும் மனைவி உங்கள் கவனத்திற்காக இடைவிடாமல் ஆரவாரித்துக் கொண்டிருக்கிறாள். ''இது ரொம்ப அதிகம். நான் இங்கேயே இருக்கிறேன். நீங்கள் பாட்டிற்குப் படித்துக் கொண்டிருக்கிறீர்கள்.'' அவள் புத்தகத்தைத் தூக்கி வீசுகிறாள். புத்தகத்தின் மீது நீங்கள் காதல் கொண்டால்கூட பொறாமையை உண்டாக்கும். மனைவி ஓவியர் என்றால், கணவனுக்கும் பொறாமை. வீட்டிற்கு வந்தால் மனைவி ஓவியம் தீட்டிக்கொண்டிருப்பாள்.

இது எல்லாமே ஒரு தவறான கருத்தில் வருவது - மிகவும் தவறான, ஆழமாக வேரூன்றிய கருத்து - அது நேசம் அரிதான ஒன்று என்பதுதான். அதை சேமித்து வைக்கவும். நீங்கள் நேசிப்பவருக்கு மட்டுமே அது வழங்கப்பட வேண்டும். ஏனென்றால் அது இவ்வளவே இருக்கிறது.

ஆனால், உண்மையில் உங்களிடம் நேசம் இவ்வளவுதான் இருக்கிறது என்று இல்லை. எவ்வளவு கொடுக்கின்றீர்களோ அவ்வளவு இருக்கிறது. கொடுப்பதின் மூலம் அது உங்களிடம் இருக்கிறது. உங்களால் அதைப் பதுக்கிவைக்க முடியாது. பதுக்குவதில் நேசம் மரித்துப் போகிறது. அது பகிர்வதால் மட்டுமே வாழ்கிறது. அது தொடர்பில்மட்டுமே வாழ்கிறது. ஒருவரிடமிருந்து மற்றொருவருக்கு அது போகும்போது அது அதிக சக்தியை சேகரிக்கின்றது. அது மேலும் அதிகமாக வெளியே பாயும்போது, அதைப் பாய்ச்சும் திறன் உங்களுக்கு அதிகமாகிறது.

கடவுள் உங்கள் மூலமாக உலகிற்குள் பாய்வதற்கு மேலும் மேலும் பெரியதொரு வழித்தடமாக நீங்கள் உருவாகிறீர்கள்.

*ஒன்றிற்கும் மேற்பட்ட மனிதர்களை நேசிக்கலாமா? என்று கேட்கிறீர்கள்.*

நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் ஒரே ஒருவரைத்தான் நேசிக்கின்றீர்கள் என்றால் நீங்கள் ஒரு துறவியாவதிலிருந்து வெகுதொலைவில் இல்லை - வெறுமனே ஒரு மனிதரை விட்டுவிட்டால் போதுமானது. ஒரே ஒரு அடியெடுப்பு, சம்சாரி, சாமியார் ஆகிவிடுவார். இவ்வளவுதான் உங்களிடம் அன்பு இருக்கும்போது அதை ஏன் அந்த ஒருவருக்குக் கூட வழங்க வேண்டும்? உங்களுக்கே அதை வைத்துக்கொள்வது தானே? தர்க்க வாதம் ஒன்றேதான். தர்க்கரீதியான முடிவின்படி துறவிதான் சரியான மனிதர். ஏன் ஒரு மனைவி, கணவன் அல்லது நண்பன் என்று அல்லல்படவேண்டும்? ஏன் ஏத்தாஸ் மலைக்குச் செல்லக்கூடாது. ஒரு கத்தோலிக்க மடாலயத்திற்குப் போகக் கூடாது? ஏன் ஒரு ஹிந்து துறவு மடத்திற்குப் போய் மலைகளில் மறைந்து கொள்ளக்கூடாது? நேசத்தை உங்களிடமே இவ்வாறு வைத்துக் கொள்ளலாமே. துறவிக்கு நேசம் என்று ஏதாவது இருக்கிறது என்று நினைக்கின்றீர்களா?

இந்தக் கருத்து ஏன் சமயத்தில் எழுந்துள்ளது? அதே பற்றாக்குறைக் கருத்தியல்தான் காரணம். நீங்கள் உலக மக்களுக்கு அன்பை வழங்கிவிட்டால் பிறகு கடவுளுக்கு எப்படிக் கொடுக்க முடியும்? அதனால் உலகிலிருந்து காணாமல் போய்விடுங்கள். மனைவிக்குக் கொடுக்காதீர்கள். குழந்தைக்குக் கொடுக்காதீர்கள். இல்லையென்றால் அன்பின் இருப்பு குறைந்துவிடும். உங்கள் நேசத்தை எல்லாம் சேகரித்துக்கொண்டு ஒரு மடாலயத்திற்கு தப்பிச்சென்று விடுங்கள். எல்லாவற்றையும் கடவுளுக்குக் கொடுங்கள்.

இது முட்டாள்தனம். உங்களால் கொடுக்கமுடியாது. ஏனென்றால், கடவுளுக்கு கொடுப்பதற்கான ஒரே வழி உலகிற்கு

கொடுப்பதுதான். கடவுள் இங்கே மறைந்து இருக்கிறார். ஏதோ ஒரு மடாலயத்தில் கடவுள் மறைந்து வாழ்ந்து கொண்டு இருக்கவில்லை. அவர் இருப்பு எங்கினும் பரந்து வியாபித்து இருக்கிறார். பாறைகளில், ஆறுகளில், மலைகளில் என எங்கும். நீங்கள் கொடுங்கள்.கொடுக்கக் கற்றுக் கொள்ளுங்கள். அப்படிச் செய்தீர்களானால் புதிய வளங்கள் உங்களுக்காகத் திறந்து கொண்டேயிருக்கும்.

ஆண்டோல் ஃபிரான்ஸின் கூற்றுடன் நான் ஒத்துப்போகிறேன். ''பிறழ்வு நிலைகளிலேயே மிக விசித்திரமானது கற்புடைமை'' என்கிறார் ஆண்டோல். கற்புடைமை என்பது ஒரு வகையான கஞ்சத்தனம். யாருக்கும் நேசத்தை தராதே. நீங்கள் உள்ளடக்கி வைத்தீர்களானால், மக்கள் நீங்கள் கற்புடைமை கொண்டவர் என்று நினைப்பர். அப்படி இல்லை. நீங்கள் வெறுமனே நஞ்சு ஊட்டப்பட்டுள்ளீர்கள்.

நேசத்திலிருந்து எழுவது கற்புடைமை, அன்பை வழங்குவது. கற்புடையோர் என்பவர் நிபந்தனைகளற்று அன்பில் பொங்கி வழிந்து கொண்டிருப்பவர். கற்புடையவர் நேசத்தில் உறவுமுறை என்பது இருக்காது. அது ஒரு இருத்தல்தன்மை. தூங்கும்போது கூட அவர் அன்பில் அதிர்வுறுகிறார். வாழ்க்கை முழுவதும் அன்பினால் நிரம்பியிருக்கிறது. அன்பு பொங்கி வழிந்தோடுகிறது. அந்த மனிதன் கற்புடைமை கொண்டவர். எல்லையில்லா அன்பே கற்புடைமை தருகிறது.

ஆனால் பழைய கருத்து என்னவென்றால், இதயத்திலிருந்து வெளிப்படும் அன்பு அனைத்தையும் தடுத்து நிறுத்தினால் நீங்கள் கற்புடைமையோடு இருப்பீர்கள். நீங்கள் அவ்வாறு இருக்கமாட்டீர்கள். உயிரற்று இருப்பீர்கள். நீங்கள் உளநோயுடன் பிறழ்வு நோயராக இருப்பீர்கள்.

## கடைசிக் கேள்வி:

*பகவான், சரியான நபர்களைத் தேர்ந்து எடுப்பது பற்றி, நீங்கள் பேசும்போது எனக்கு மரண பயம் ஏற்படுகிறது.*

ஷீலா, துல்லியமான நோக்கமும், அதுதான் - உங்களுக்கு மரண பயம் உண்டாக்குவது.

உண்மையை சொல்வதானால் என்னைப் பொறுத்தவரையில் எல்லோரும் நல்ல மனிதர்கள். நான் இதுவரை தவறான மனிதரை எதிர்கொண்டதில்லை. என்னிடம் இறுதி தீர்வுகள் கிடையாது. யார் சரி, யார் தவறு என்று நான் எப்படி முடிவு செய்யமுடியும்? நான் யார் அதை முடிவு செய்வதற்கு?

நான் தீர்வுகளற்ற உணர்வு நிலையில் உள்ளவன். நான் சரியான மனிதர்களைத் தேர்வு செய்வேன் என்று பேசுவது உங்களை பலப் படுத்துவதற்காகத்தான். அது ஒரு கருவி.

இது உங்களை அதிக விழிப்புணர்வோடு இருக்கச் செய்யும்.

நான் உங்களை பலமுறை பயப்படுத்துகிறேன். காரணம், உங்களை அதிக விழிப்புணர்வு நிலைக்குக் கொண்டு வர இது ஒன்றே வழி. நீங்கள் அதிகமான உணர்வு நிலைக்கு வர என்னால் உதவ முடியும். அச்சத்தில் மட்டுமே நீங்கள் சற்றே குறைவாக தூக்கத்தில் இருப்பீர்கள். ஒரு உருவிய வாளை உங்கள் நெஞ்சிற்கு மேல் வைத்தால்தான் நீங்கள் கண்களைத் திறந்து, ''என்ன விஷயம்?'' என்று கேட்பீர்கள். இல்லையென்றால் அயர்ந்து தூங்கி குறட்டை விட்டுக் கொண்டிருப்பீர்கள்.

மேலும், அதிகத் தூக்கத்தில் இருப்பவர் ஷீலா. அவரிடம் இருக்கும் ஒரே நல்ல விஷயம் அவர் குறட்டை விடுவதில்லை. குறட்டை மோசமானது. அது மற்றவர்களின் தூக்கத்தைக் கெடுக்கிறது!

## முதல் கேள்வி:

*மெய் நிலையில் அகங்காரம் என்று ஒன்று இல்லை. சுயம் இல்லை. ஆத்மா இல்லை. ''நான் ஒரு மனிதன் அல்ல. ஆனால் ஒரு இருப்பு, ஒரு நிலை கண்ணாடி' என்று உங்களைப் பற்றி சொல்கிறீர்கள். வெளியே மேகமூட்டமாக இருந்தால் நீங்களும் அவ்வாறே இருக்கிறீர்கள். எது எப்படியுள்ளதோ அதைப் பிரதிபலிக்கின்றீர்கள்.*

*எல்லோரும் தனித்தன்மை உடையவர் என்றும் சொல்கிறீர்கள். ஒரு கண்ணாடியில் எப்படி தனித் தன்மையை காண முடியும்? தனித்தன்மை என்றாலே விலகி இருப்பது. தனிச்சிறப்பு பண்பு என்பதை குறிக்கின்றது. ஞானம் பெறுவது ஒன்று சேர்க்கையாகும். ஞானம் அடைவதிலும் தனித்தன்மை இருக்க வேண்டும் என்று எனக்குத் தெரிகிறது. காரணம் கிறிஸ்துவோ அல்லது புத்தரோ இப்போது உயிருடன் இருந்தால் நீங்கள் இங்கே ஆசிரமம் நடத்துவதுபோல் நடத்துவார்களா என்று என்னால் கற்பனைசெய்து பார்க்கமுடியவில்லை. நீங்கள் மூவருமே அதைச் செய்துகொண்டிருந்தீர்கள். இதை அறிந்ததினால் என்னால் இந்த முரண்பாட்டை இன்னமும் புரிந்துகொள்ள முடியவில்லை. என்னை மேலும் புதிருக்கு உள்ளாக்குகிறது. தயவுசெய்து விளக்கம் கொடுங்கள்.*

சாரதா, நீங்கள் தனித்தன்மையுடன் இருக்க வேண்டுமென்றால், ஞானம் பெறுவதைத் தவிர்த்திடுங்கள்.

எல்லோரும் தனித்தன்மை கொண்டவர்தான். ஆனால் ஒரு புத்தரோ, கிறிஸ்துவோ, கிருஷ்ணரோ அல்லது நானோ அப்படியல்ல. தனித்தன்மையோடு இருக்க வேண்டுமென்றால்

முதலில் நீங்கள் இருக்க வேண்டும். ஆனால் புத்தரோ தானே இல்லாமல் போய் விட்டவர். அவர் எப்படி தனித்தன்மையோடு இருக்க முடியும்? அதற்கு சாத்தியமே இல்லை.

ஞானம் அடைதலும் அது போன்றதுதான். அதன் சுவையும் அதேதான். அது எப்போது நடந்தாலும் அதே உண்மைதான். அதில் தனித்தன்மை என்பது கிடையாது. அதனால் அப்படி இருக்க முடியாது. கட்டுப்படியாகாது. வியாதிகள் தனித்துவமாக இருக்க முடியும். ஆரோக்கியம் அப்படியல்ல. ஆரோக்கியம் வெறுமனே ஆரோக்கியம். அவ்வளவே. உங்களுக்கு என தனியான வியாதி இருக்க முடியும். உங்கள் வழியில் நோய்வாய்ப்பட்டு இருக்கலாம். மற்றொருவர் வேறுவழியில் நோய் கொண்டு இருக்கலாம். லட்சக்கணக்கில் உலகில் வியாதிகள் இருக்கின்றன. நீங்கள் வேண்டியதை தேர்வு செய்யலாம். - ஆனால் ஆரோக்கியம் ஒன்றே. உங்கள் வியாதிகளை நீங்கள் கைவிடத் தொடங்கும் கணமே உங்கள் தனித்தன்மையையும் கைவிடுகின்றீர்கள். உண்மையிலேயே ஆரோக்கியமான ஒரு மனிதனுக்கு தன் உடல்நிலைபற்றி எந்தத் தனித்தன்மையும் கிடையாது. எப்படி அவ்வாறு இருக்கமுடியும்? அவர் ஆரோக்கியமானவர் அவ்வளவே.

ஒரு புத்தகம் மற்றொன்றிலிருந்து வேறுபடுகிறது. ஏனென்றால் ஏதோ ஒன்று அதில் எழுதப்பட்டுள்ளது. எழுதப்பட்ட செய்தி வித்தியாசத்தை ஏற்படுத்துகிறது. ஆனால் இரண்டு வெற்றுப் பக்கங்கள் எந்த வகையிலும் வேறுபடுவதில்லை. ஒரு வீடு மற்றொரு வீட்டிலிருந்து வேறுபடுகிறது. அவற்றிற்கு வெவ்வேறு வடிவங்கள், பெயர்கள். பெயர் மற்றும் கட்டடக் கலையிலும் வித்தியாசம் இருக்கின்றன. ஆனால் இரண்டு வெற்று இடங்கள் எந்த வகையிலும் தனித்தன்மையோடு இருக்க முடியாது. அவை ஒரே போன்றுதான் இருக்கும். இரண்டு பூஜ்ஜியங்கள் வெறுமனே பூஜ்ஜியம்தான். வேறு ஒன்றுமில்லை.

புத்தர் ஒரு பூஜ்ஜியம், சூனியம், அவர் அங்கு இல்லை. அவர் அங்கு இல்லாததே அவரின் பௌத்த தன்மை. இதை

நீங்கள் புரிந்துகொண்டால், முரண்பாடு விலகிவிடும். முரண்பாடு எழுவதற்குக் காரணமே நீங்கள் தொடர்ந்து உங்களைப் பற்றி பல வழிகளில் சிந்திப்பதால்தான். நான் மீண்டும் மீண்டும் சொல்கிறேன். நீங்கள் தனித்தன்மை வாய்ந்தவர். நீங்கள் இதற்குமுன்னர் இருந்ததில்லை. உங்களைப் போன்று வேறு ஒருவர்கூட இருந்ததில்லை. நீங்கள் அந்த அளவிற்கு நோய் கண்டு இருப்பதால், நீங்கள் தனித்தன்மையோடுதான் இருக்க முடியும். உங்களைப் போல வேறு ஒருவர் எப்போதும் இருக்க முடியாது. உங்கள் கட்டை விரல் ரேகை பதிப்பு உங்களுடையது மட்டுமே.

ஆனால் நான் ஒரு புத்தரைப் பற்றிக் கூறவில்லை. உங்களைப் பற்றிக் கூறுகிறேன். எல்லா பயித்தியக்கார மனிதர்களும் தனித்தன்மை வாய்ந்தவர்களே. அவர்கள் தெளிந்துவிட்டால், அந்தத் தனித்தன்மையும் மறைந்துவிடும். தனித்தன்மையோடு இருக்கவேண்டும் என்ற கருத்தே பைத்தியக்காரத்தனத்தின் பகுதிதான். அது ஒரு அகங்காரப் பயணம்.

நீங்கள் கேட்பது, *''மெய்நிலையில் அகங்காரம் என்று ஒன்றும் இல்லை. சுயம் இல்லை. ஆத்மா இல்லை;*

ஆம் அப்படித்தான்.

> *''நான் ஒரு மனிதன் அல்ல. ஆனால் ஒரு இருப்பு. ஒரு நிலைக் கண்ணாடி என்று உங்களைப் பற்றி சொல்கிறீர்கள். வெளியே மேகமூட்டமாக இருந்தால் நீங்களும் அவ்வாறே இருக்கிறீர்கள்.''*

இங்கே நீங்கள் ஒரு விஷயத்தைப் புரிந்துகொள்ள வேண்டும். வெளியே மேகமூட்டமாக இருந்தால் நானும் மூடுமேகமாக இருப்பதில்லை. மேகங்கள் வெறுமனே பிரதிபலிக்கப் படுகின்றன. கண்ணாடி வெறுமனே பிரதிபலிக்கின்றது. அது மாறாது. கண்ணாடி மேகங்களைப் பிரதிபலிக்கும்போது கண்ணாடி மாறிவிட்டது என நினைக்கிறீர்களா? கண்ணாடி பிரதிபலித்துக் காட்டுகிறது. அவ்வளவே, எதையும் சேர்ப்பதில்லை. கழிப்பதில்லை. தன் மீது விழுவதைப் பற்றிக் கருத்தின்றி இருக்கிறது.

*''எல்லோரும் தனித்தன்மை உடையவர் என்றும் சொல்கிறீர்கள்''*

எல்லோரும், புத்தர்களைத் தவிர. அவர்கள் இந்த 'எல்லோர்' என்பதில் அடங்கமாட்டார். அவர்கள் இனி முழுமையின் ஓர் பகுதி. தனித்து இருப்பது என்ற கருத்து அவர்களுக்கு இல்லை.

*''தனித்தன்மை என்றாலே விலகி இருப்பது''*

நிச்சயமாக அதுதான்.

*''தனித்தன்மை தனிச்சிறப்பு பண்பு என்பதைக் குறிக்கிறது''.*

ஆம் கண்டிப்பாக.

*''ஞானம் பெறுவது ஒன்று சேர்க்கையாகும்''*

ஆக ஒன்று சேர்வதில் தனித்தன்மை என்பது இருக்க முடியாது. அது வெகு சாதாரணமானது; எப்போதும் இதேபோன்றுதான் இருந்துள்ளது. இனி எப்போதும் இதேபோன்றுதான் இருக்கும். அதனால்தான் ஞானம் தேடுபவர் எவரும் அகங்காரப் பயணம் செல்ல இயலாது. ஞானம் நாடுவதென்பது அகங்காரத்தைப் பொறுத்தவரையில் தற்கொலை செய்துகொள்வதாகும். தனித்தன்மை, ஆத்மா, சுயம் எல்லாமே அகங்காரத்தின் வேறு பெயர்கள். அழகான பெயர்கள், வேறு ஒன்றுமில்லை. அகங்காரம் என்று சொல்லும்போது சற்றே அசிங்கமாக இருக்கிறது.சுயம் என்றால் சற்றே பரவாயில்லை. ஆத்மன் என்று அழைத்தால் புனிதமாகிறது. எல்லாமே அதேதான். உட்பொருள்தான்.

ஞானம் பெறுதல் என்பது அகங்காரம் இல்லாமல் போவது, தனித்தன்மையற்று போவது. கங்கை கடலில் சங்கமிக்கும்போது என்ன தனித்தன்மை இருக்க முடியும். அது தனித்தன்மையோடு இருந்தது. சொந்த வடிவு கொண்டு இருந்தது. அதற்கென ஒரு நிறம், வலிமை எல்லாம் இருந்தது. மற்றொரு நதியிலிருந்து வேறுபட்டு இருந்தது. ஆனால் கடலில் விழுந்த பிறகு, அதற்கு

என்ன தனித்தன்மை இருக்க முடியும்? எல்லா நதிகளும் கடலில் சங்கமிக்கின்றன. அமேசான், தேம்ஸ் - எல்லாம் கடலில் கலந்து காணாமல் போகின்றன. எல்லாமே உப்புக்கரித்துப் போகின்றன.

*ஞானம் அடைவதிலும் தனித்தன்மை இருக்க வேண்டும் என்று எனக்குத் தெரியும்.*

இல்லை சாரதா. தனித்தன்மை என்ற கருத்தே மனித மனதின் நோய்குறியின் ஒரு பகுதிதான். ஞானம் பெறுவது என்பது முற்றிலும் சாதாரணமானது. அதுதான் அதன் அசாதாரணத் தன்மை. இந்த வாழ்க்கையில் எல்லாமே பிரத்யேகமானது, தனித்தன்மை உடையது. ஞானம் அடைவது தவிர. தனித்தன்மை என்ற பதத்தை நீங்கள் பயன்படுத்த விரும்பினால், இந்த சாதாரணம்தான் அதன் தனித்தன்மை. ஆனால் இந்த தனித்தன்மை உலகில் உள்ள மற்ற எல்லாவற்றோடும் ஒப்பீடு உடையது. இரண்டு புத்தர்களை நீங்கள் ஒப்பிட்டுப் பார்க்க முடியும் என்ற அர்த்தத்தில் இல்லை. ஒருமுறை நதி கடலில் கலந்துவிட்டால் ஒப்பீடு செய்ய வழி யில்லை. நதி என்பது இனியில்லை. கடலே உள்ளது.

*''ஞானம் அடைவதிலும் தனித்தன்மை இருக்க வேண்டும் என்று எனக்குத் தெரியும்'' என்று நீங்கள் சொல்கிறீர்கள்.*

அது அப்படியல்ல. நான் இல்லாமல் போய்விட்டேன். நான் உங்களிடம் சொல்கிறேன். அது அப்படியல்ல. உங்கள் அகங்காரம்தான் தனித்தன்மை, சிறப்புத்தன்மை என்ற ரீதியில் சிந்தித்துக்கொண்டிருக்கிறது. ''நான் ஞானம் பெற்றால் அது ஒரு தனிச்சிறப்பான அனுபவமாக இருக்கப் போகிறது'' என்று அது நினைக்கிறது. அந்த மாதிரி எதுவும் கிடையாது. அனுபவம் அதேபோன்றுதான். நதி எப்போதெல்லாம் கடலில் கலக்கிறதோ அது எப்போதும் ஒரே போன்றுதான் இருக்கும்.

*''..... கிறிஸ்துவோ, அல்லது புத்தரோ இப்போது உயிருடன் இருந்தால் நீங்கள் இங்கே ஆசிரமம் நடத்துவதுபோல நடத்துவீர்களா என்று என்னால் கற்பனை செய்து பார்க்க*

*முடியவில்லை. நீங்கள் மூவருமே அதைச் செய்து கொண்டிருந்தீர்கள்.''*

அது உண்மைதான். நான் நடத்துவதுபோல புத்தரால் ஆசிரமத்தை நடத்த முடியாது. அதேபோல புத்தர் வழியில் நானும் செயல்பட முடியாது. ஆனால் இதற்கும் ஞானத்திற்கும் எந்தத் தொடர்பும் இல்லை. நீங்கள் வழிமுறையைப் புரிந்துகொள்ள வேண்டும்.

நீங்கள் ஞானம் அடையப் பெற்றீர்கள் என்றால், எல்லா வற்றின் ஒற்றுமையையும் புரிந்துகொள்வீர்கள். ஆனால் உங்களுடைய நடைமுறை உங்களோடுதான் இருக்கும். ஆனால் உங்கள் நடைமுறையோடும், மனதோடும், உடலோடும் நீங்கள் அடையாளப்படுத்தப்பட மாட்டீர்கள். நீங்கள் கடந்துவிட்டீர்கள் என உங்களுக்குத் தெரியும். ஆனால் உடல் உள்ளது, மனம் இருக்கிறது. நீங்கள் மனம் - உடல் அல்ல என்ற உண்மையை உணர்ந்துகொண்டீர்கள். நீங்கள் முழுமை என்று அறிவீர்கள். உங்களுக்கு இந்த அனுபவத்தை வெளிப்படுத்த வேண்டுமென்றால் நீங்கள் ஞானம் பெறும் முன் பயன்படுத்திய அதே உடல், அதே மனதைத்தான் பயன்படுத்தியாக வேண்டும். பயன்படுத்த உங்களுக்கு வேறு கருவிகள் கிடையாது. அதனால்தான் அந்தத் தனித்தன்மை.

கிறிஸ்து தன் மனதைப் பயன்படுத்துகிறார். நிச்சயமாக அவர் பேச நினைக்கும்போது, அவர் 'ஆர்மாயிக்' மொழியில் பேசுவார். அவர் சமஸ்கிருதத்தில் பேசியிருக்க முடியாது. புத்தர் பேசுகையில் பாலி மொழியில் பேசினார். அவர் ஆர்மாயிக்கில் பேசியிருக்க முடியாது. ஏசு ஏன் ஆர்மாயிக்கில் பேசுகிறார்? அவர் ஞானம் அடையும் முன் அந்த மொழியைத்தான் பயன்படுத்தினார். அவருக்கு இருந்த மொழி அது ஒன்றுதான். அவருடைய பயோ - கம்ப்யூட்டர் வைத்திருந்த மொழி அது ஒன்றே. இப்போது ஞானம் அடைந்தாகிவிட்டது. அவர் மெய் எது என கண்டுவிட்டார். அவரே மெய்மையாகிவிட்டார். அவருக்கு அதை வெளிப்படுத்தவேண்டும். அவருடைய வெளிப்படுத்தும் திறன் தனித்தன்மையானதுதான்.

ஏசு, புத்தர், கிருஷ்ணர் யாவரும் தங்கள் அனுபவத்தில் தனிப்பட்டு இருக்கவில்லை. ஆனால் அவர்களது வெளிப்படுத்துதல்தான் தனித்தன்மையோடு இருக்கிறது. வெளிப்படுத்துதல் இவ்வுலகத்தைச் சார்ந்தது. அது மற்றொரு மெய்மையை இவ்வுலக மெய்மையாக மொழிமாற்றம் செய்து தருகிறது. அதன் பிறகே விஷயங்கள் மாறத் தொடங்குகின்றன.

கபீர் பேசும்போது ஒரு ஏழை நெசவாளராகப் பேசுகிறார். அவர் ஒரு ஏழை நெசவாளி. அவர் எப்படி ஒரு புத்தரைப் போலப் பேசியிருக்க முடியும்? புத்தர் ஒரு அரசரின் மகன், நன்கு படித்தவர். பண்பானவர். அரசசபை நயமான வழிமுறைகளில் தேர்ச்சி பெற்றவர், நாட்டின் மிகச் சிறந்த ஆசான்களால் கற்றுக் கொடுக்கப்பட்டவர். ஒரு உயர்குடி வாழ்க்கை வாழ்ந்தவர் புத்தர்.

புத்தர் பேசும்போது, அது உயர்குடியினரின் பேச்சாகவே இருக்கும். ஏசு பேசுகையில் அவர் ஒரு தச்சரின் மகனாகவே பேசுவார். அவர் சிறுசிறு வேலைகளைச் செய்துகொண்டு இருந்திருப்பார். தன் அப்பாவின் பட்டறைக்கு மரக்கட்டைகளைச் சுமந்திருப்பார். தன் அப்பாவிற்கு உதவியாக இருந்திருப்பார். அவர் தச்சர்களின் மொழிதான் அறிவார். ஏசு மிக ஏழ்மையான மக்களை ஈர்த்தது தற்செயல் நேர்ச்சியல்ல. அவருடைய பன்னிரெண்டு திருத்தூதர்களும் ஏழை குடும்பங்களிலிருந்து வந்தவர்கள். யாரோ ஒருவர் மீனவர், இன்னொருவர் விவசாயி. மற்றொருவர் நெசவாளர் - மக்கள் இவ்வாறு இருந்தனர். புத்தரிடம் வந்தோர் நெசவாளர்களோ, தச்சர்களோ அல்ல. அவர் மேட்டுக்குடி மக்களை, இளவரசர்களை, பண்டிதர்களை, பிராமணர்களை, கற்றோரைத் தன்பால் ஈர்த்தார். இயல்பாகவே அவர் வேறு வகையான மனிதர்களிடம் பேசிக் கொண்டிருந்தார். அவர் உலகைத் துறந்ததும், அவரைச் சுற்றியுள்ளோரிடம்தான் அந்தச் செய்திப் பரவியது. அதனால் பல அரச குடும்பத்தைச் சேர்ந்தவர்கள் புத்தரைப் பின்தொடர்ந்தனர். அவருடைய உள்வட்ட சீடர் வளையம் எப்போதும் மேட்டுக்குடியினராகத்தான் இருந்தது. சாரிப்புத்தர், மோத்காலயம், மகாகாஷ்யபா -

எல்லோரும் அதிக பண்பட்ட பிராமணக் குடும்பங்களிலிருந்து வந்தவர்கள்.

ஏசுவின் சீடர்கள் ஏழைகள். ஏசு அவர்களின் மொழி பேசினார். அவருக்கு அது ஒன்றே தெரியும். அதேபோல் இன்றும் உலகின் ஏழை மக்களை ஏசு ஈர்ப்பதும், உலகின் பணக்காரர்களை புத்தர் ஈர்ப்பதும் தற்செயல் அல்ல. அமெரிக்கா பௌத்தமாக மாறி வருகிறது. ஏன்? அமெரிக்கா வளம்பெற்று விட்டது. அதனால் ஜென் கவர்ச்சியாக இருக்கிறது. கிழக்கில் இதற்கு நேர்மாறாக இருக்கிறது. மேலும்மேலும் மக்கள் கிறிஸ்தவர்களாக மாறுகின்றனர்.

இந்த முழு வழிமுறையையும் ஆராய்ந்து பார்த்தால், நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள்: கம்யூனிசம், சோசலிசம் மற்றும் எல்லா விதமான சமுதாயப் புரட்சிகள் யாவும் கிறிஸ்துவத்தின் துணைப்பொருட்கள். பௌத்தத்தின் நீண்ட மரபுவழியில் கம்யூனிசம் போன்று ஒன்று நடந்ததேயில்லை. நடக்கமுடியாது. அந்த மரபு வழி உயர்குடிமை சார்ந்தது. அந்தப் படிவமே மேட்தட்டாட்சியை சார்ந்தது. அது ஒடுக்கப்பட்டோரின் பக்கத்திலிருந்து விஷயங்களைக் காண முடியாது. மார்க்ஸ் கிறிஸ்துவத்திற்கு வேண்டுமானால் எதிராக இருக்கலாம். ஆனால் அடிப்படையில் அவர் ஓர் கிறிஸ்துவர். கிறிஸ்துவத்தின் துணைப்பொருள். அவர் இந்தியாவில் பிறந்து இருக்க முடியாது; அது நடவாத ஒன்று. அவர் கிறிஸ்துவ உலகில் மட்டுமே பிறந்து இருக்க முடியும்.

இதுதான் தனித்தன்மை; வெளிப்பாடுதான் தனித்தன்மை வாய்ந்தது. நீங்கள் ஒரு கவியாக இருந்து, ஞானம் அடையப் பெற்றிருந்தீர்களானால், நீங்கள் நிச்சயமாக பாட்டெழுதுவீர்கள். மகாமுத்தராவின் பாட்டு நிர்வாணத்தின் கவிதை. கவியாக எப்போதும் இருக்கவில்லையென்றால், ஞானம் அடைந்தாலும் உங்களால் பாட்டுப் பாட முடியாது. ஓவியராக இருந்தால் நீங்கள் ஓவியம் தீட்டலாம். ஜென் குருக்கள் அழகானவற்றை ஓவியமாக்கி உள்ளனர்; அது அவர்கள் வெளிப்பாட்டு முறை. நீங்கள் நடனக் கலைஞர் எனில் உங்கள் ஞானம் பெறுதல்

நடனமாக வெளிவரும்.வேறு எதுவும் உங்களால் கண்டுபிடிக்க முடியாது. வெளிப்படுத்துதல் என்பது உங்களைச் சார்ந்தது.

ஞானத்திற்கு முன்பு எப்படி இருந்தீர்கள் என்பதைப் பொறுத்தது; ஏனென்றால் உங்களின் முழு இயக்கமும் அதை வெளிப்படுத்துவதற்குத் தயாராக இருக்கும். அந்தவிதமான இயக்கம் மட்டுமே ஒருவரிடம் இருக்க முடியும். வெளிப்பாட்டு வகையில் நான் வேறுபடுகிறேன். என் வழியில் நான் செயல்படுகிறேன். ஆனால் என் ஞானம் அடைதல் என்பது எந்த வகையிலும் கிறிஸ்து, கிருஷ்ணர் அல்லது புத்தரிடமிருந்து வேறுபட்டது என்பது பொருள் அல்ல. இதில் முரண்பாடே இல்லை.

முரண்பாடு உங்கள் மனதில் எழுகின்றது. உங்கள் மனம் தனித்தன்மைக்காக அலைகிறது. ஒருவிதமான பயம் இருக்கிறது. ஞானம் அடைதல் எவ்வாறு தனித்தன்மையோடு இருக்க முடியும்? இருக்க முடியாது.

## இரண்டாவது கேள்வி:

*புதிது புனைதல்/கண்டுபிடித்தல்/உருவாக்குதல் இதைப் பற்றி தயவுசெய்து விரிவாக சொல்லுங்கள். இவற்றிற்கு இடையே என்ன தொடர்பு இருக்கிறது என்று சொல்கிறீர்கள், மேலும் அது உருவாக்கப்பட வேண்டும் என்றும் சொல்கிறீர்கள். ஆத்மா உருவாக்கப்பட வேண்டும். வாழ்க்கையின் அர்த்தம் - கடவுளின் அர்த்தம் கூட. உருவாக்குதலும் கண்டுபிடித்தலும் ஒன்றா?*

அவை ஒரே போன்றது அல்ல. ஆனால் ஒன்றைப் போன்றது. மற்றொன்று அவற்றின் ஊடே ஒரு பொதுவானது இழையோடுகிறது. ஆனால் அவை வெவ்வேறானவை. புனைதல், கண்டுபிடித்தல், உருவாக்குதல் இந்த மூன்றும் வெவ்வேறானவை.

புதிது புனைதல் என்பது கற்பனை செய்தலாகும். அது புனைவாற்றல், உணர்வு சார்ந்தது, இதயத்திற்கானது. புனைதல் உலகில் கலையை உருவாக்குகிறது. பிகாசோ தன் ஓவியங்களைப்

புனையவில்லை என்றால், அவை இன்று இருப்பில் இருந்திருக்காது. வேறு எவரும் அதைச் செய்திருக்க மாட்டார். அவரால் மட்டுமே அது முடிந்தது. அவை புனைதலுக்கானவை. அவை வெளிக்கொண்டு வரவேண்டியவை அல்ல. அவை உளதாந்தன்மை கொண்டவை அல்ல. ஆனாலும் அவை உருவாக்கப்பட்டவை அல்ல. அது வெறும் கற்பனை. இந்த ஓவியங்கள் வெறுமனே பிகாஸோவின் கனவைப் பற்றிச் சொல்கின்றன. வேறு ஒன்றுமில்லை. அவை மெய்மையாகாது. என்றும் ஆகாது. ஒரு ஓவியம் உங்கள் கற்பனையில் இருக்கும்போது அது மெய்யானதாக இருக்காது. அது தீட்டப்பட்டபிறகு மெய்பொருளானாலும், உண்மையாகிவிடாது. தண்ணீரைப் போன்று நிதர்சனமாகாது. அது இயல் உலகின் ஓர் அங்கம் இல்லை. சூரிய வெளிச்சத்தைப் போன்று உண்மைநிலை கிடையாது. அது புனையப்பட்ட ஓர் கற்பனை. அதன் பின்புலமாக ஒரு அடிப்படை நியதி கிடையாது. கடவுள் அதன் பின்னே இல்லை. அது உண்மை இல்லை என்கிறபோது இதைத்தான் குறிக்கின்றேன். எல்லாக் கலைகளும் புனைதல்தான்.

புனைதல் உள்நோக்குதலாகும். உங்களுக்கு உள்ளேயிருக்கும் கனவுகளைப் பார்க்கவேண்டும். பின்பு அந்தக் கனவுகளை புறத்தெரிவாக்க வேண்டும். அது கவிதையாக இருக்கலாம். ஓவியமாக இருக்கலாம். இசையாகவும் இருக்கலாம். எதுவாகினும், உலகில் புனைதல் செய்யும் ஒரே விலங்கு மனிதன் மட்டுமே. அதுவே மனிதனின் தனிப்பட்ட உரிமையாகிறது, பேராற்றல் ஆகிறது.

ஒரு சமுதாயம் கலைத்திறன் வாய்ந்து இருந்தால், அது பண்பட்ட ஒன்று எனலாம். மனிதம் இயங்கிக் கொண்டு இருக்கிறது என்று தெரிகிறது. விலங்கிலிருந்து முன்னேறிவிட்டான் மனிதன். விலங்கு மெய்மையில் மட்டுமே வாழ்கிறது. அதற்கு கற்பனை பற்றி எதுவும் தெரியாது. மனிதன் மெய்போன்ற ஓர் உலகை உருவாக்குகிறான். இதனால்தான் கலைஞர்கள் அவ்வளவு அகங்காரம் கொண்டு இருக்கின்றனர். அவர்கள் புனைவாளர்கள், ஏதோ செய்துவிட்டனர். எதையோ உருவாக்குகின்றனர்.

இரண்டாவது, கண்டுபிடிப்பு. அறிவியல் கண்டுபிடிக்கிறது. கலை புனைவு செய்கிறது. அதீத கற்பனைகளுக்கு கலை உரு கொடுக்கிறது. அறிவியல் உள்ளதைக் கண்டுபிடிக்கிறது. அறிவியல் அதில் தலையிடுவதில்லை. புறத்தெறிவு செய்வதில்லை. அறிவியல் வழிமுறையே தனித்து இருக்க வேண்டும். கருத்தற்று இருக்க வேண்டும். நீங்கள் தலையிடக் கூடாது. விஷயத்தை அறிவிக்க மட்டுமே வேண்டும். உள்ளே வரக்கூடாது. எந்த வகையான வர்ணமும் அதற்குப் பூசக் கூடாது. கலை இதற்கு நேர் எதிர். விஷயத்தை உள்ளபடியே சொல்லக்கூடாது. ஓவியர் ஒரு விஷயத்தை அப்படியே ஒப்புவித்தாரானால் அவர் ஓவியர் அல்ல. அவர் ஒரு காமிரா. அவர் படைப்பும் ஓவியமாக இராது. புகைப்படமாக இருக்கும். அதை ஒரு இயந்திரம் செய்யும். பிறகு புனைவு எங்கே இருக்கிறது?

கடந்த காலத்தில் கலை என்று பெரிதாக ஒன்றும் இல்லை. அது கிட்டதட்ட அறிக்கை தருவது போன்றது என்று நவீன கலை சொல்வதும் சரிதான். கலைஞர் காமிராவின் வேலையைச் செய்து கொண்டிருந்தார். காமிரா வந்த பிறகு கலைஞர் உண்மையான கலையைச் சொல்லவேண்டி வந்தது. அவர் வெறுமனே அறிவித்துக்கொண்டே இருக்கமுடியாது. புனைதல் செய்ய வேண்டும். வெறுமனே அறிவிப்பதை இயந்திரங்கள் மேலும் திறமையோடும், சிறப்பாகவும் செய்யும். அப்படியானால் கலைஞன் எங்கே வருகிறான். அவன் மெய்மைக்கு வர்ணம் கொடுக்கிறான். வெறுமனே செடியின் உள்ள பூவைக் காட்டினால் அது புகைப்படம் மட்டுமே. அந்தப் புனைவை மேம்படுத்தி புதிய பண்புகள் கொடுத்து அதற்கு இல்லாதவற்றை சேர்த்து வழங்கினால், தன் கற்பனை சக்தி அனைத்தையும் அந்த பூவின் மீது செலுத்தினால் அவன் ஒரு கலைஞன்.

வான் காக் ஓவியங்களைப் பார்த்திருக்கிறீர்களா? மரங்கள் நெடுக வளர்ந்து வானைத் தொடும். நீங்கள் அவ்வளவு உயரமான மரங்களைப் பார்த்திருக்க மாட்டீர்கள். எந்த மரமும் நட்சத்திரங்களை எட்டியதில்லை.

யாரோ ஒருவர் வான் காக்கைக் கேட்டார். "ஏன் இந்த மரங்கள் இவ்வளவு உயரம் வளர்கின்றன? அவை உண்மையல்லவே!" அவர் சொன்னார், "இல்லை, நான் மரங்கள் நட்சத்திரங்களைத் தொடுவதைப் பார்த்திருக்கிறேன். எப்போதெல்லாம் ஒரு மரத்தைப் பார்க்கின்றேனோ, நட்சத்திரங்களோடு ஒரு சந்திப்பிற்கு பூமி விரும்புவதைப் பார்க்கின்றேன். ஒவ்வொரு மரமும் வானுடன் ஒரு சந்திப்பை விரும்பும் பூமியின் ஆசை வெளிப்பாடாகும். அதனால்தான் மரங்கள் மேலே, மேலே வளர்ந்துகொண்டேயிருக்கின்றன. அவை அந்தப் பாதையில் செல்கின்றன; நான் வெறுமனே இறுதிக்கட்டத்தை மட்டுமே காட்டியுள்ளேன். நான் எல்லாம் இறுதியாக செல்வதையும் அடைவதையும் கண்டு இருக்கிறேன். பூமி எங்கே செல்ல விழைகின்றதோ அதைப் பற்றிய ஓவியம்தான் என்னுடையது. என்னால் அதை முன்னரே காணமுடியும். கணித்துச் சொல்ல முடியும்" என்றார் வான் காக்.

இப்போது இந்த விஷயம் மெய்யானது அல்ல. இது ஓர் புனைவுதான். தன் இயல்பிலேயே அழகானது. புனைவாளர்கள் இல்லாமல்போனால் பெரிய இழப்பு மனிதனுக்குத்தான். இவர்கள் வாழ்க்கை வாழ்வதற்கு அதிக மதிப்பு தருகின்றனர்.

அறிவியல் கண்டுபிடிக்கிறது. அது ஆண்பாலாகும், கலை பெண்தன்மை கொண்டது. தன் செயலின்மையில் கலைஞன் காத்திருக்கிறான். அவன் கனவு காண்கிறான். இச்சை கொள்கிறான். ஏக்கம் கொள்கிறான். அந்த கனவில், இச்சையில், காத்திருப்பில் ஏதோ ஒன்று புனையப்படுகிறது. விஞ்ஞானி மெய்மையைத் துளைக்கின்றார். கிட்டத்தட்ட வன்புணர்வாளர் போலத்தான் அவர் அதை வெளிப்படுத்துகிறார். அவர் மூடியிருக்கும் ஆடைகளை அகற்றி மெய்மையை நிர்வாணமாக்குகிறார். நிர்வாணத்திற்கு அதைக் கட்டாயப்படுத்துகிறார்.

புனைதல் உணர்ச்சிவசப்பட்டது. கண்டுபிடிப்பு சிந்தனைக் கானது. புனைதல் இதயத்தின்மூலமாகவும், கண்டுபிடிப்பு தலையின் மூலமாகவும் நடக்கிறது.

அப்படியானால் படைப்பாற்றல் என்றால் என்ன? உருவாக்குதல் இவை இரண்டையும் தாண்டிய ஒன்று. எப்போது ஒரு மனிதன் தன் தலை அல்லது இதயத்தோடு அடையாளப்படுத்திக் கொள்ளவில்லையோ அவன் மறைஞானியாகிறான். மறைஞானி உருவாக்குகிறான். ஒரு கவிஞன் புனைகிறார். ஒரு விஞ்ஞானி கண்டுபிடிக்கிறார்.

ஆக மறைஞானி உருவாக்குகிறார். அவர் புறமாகவும், உள்முகமாகவும் நோக்குபவர் அல்ல. ஆணும் அல்ல. பெண்ணும் அல்ல. அவர் இருமை கடந்தவர். தன்னை இறைவடனிடத்தில் கரைந்து கொண்டவர். இறைவன்தான் படைத்தல் சக்தி. மறைஞானி தனித்துச் செயல்படுவதில்லை. அவர் படைக்கும் சக்தியோடு ஓர் அங்கமாகிவிட்டார். அவர் கடவுளாகி விட்டார். நான் ஏசு ஒரு கடவுள், புத்தர் ஒரு கடவுள் என்று சொல்லும்போது, அதைத்தான் குறிக்கின்றேன். அவர்கள் தனித்து இருப்பதில்லை.

ஓவியர் தனித்து இருக்கிறார், கவி தனித்து இருக்கிறார், இயற்பியலாளர் மற்றும் வேதியியலாளர் தனித்து இருக்கின்றார். ஆனால் மறைஞானி முழுமையுடன் ஒன்றாகியிருக்கிறார். இருப்பின், உருவாக்கும் தன்மையோடு தன்னைக் கரைத்துக் கொண்டு விட்டார். அதன் பிறகு அவரிடமிருந்து பிறப்பதுதான் படைப்பாற்றல், அவரிடமிருந்து பிறப்பதுதான் மெய்மை. நான் ''கடவுளை உருவாக்கு, ஆன்மாவை உருவாக்கு'' என்று சொல்வதின் அர்த்தம் இதுவே. புத்தர் ஞானத்தை படைத்தார். ஏசு, கடவுளைப் படைத்தார். மஹாவீரர் மோட்சத்தைப் படைத்தார். இவை எல்லாம் வெவ்வேறு பெயர்கள். ஆனால் அவை தங்களை முழுமையில் கரைத்துக்கொண்டன. அந்தக் கரைவிலிருந்து வெளிவருவதுதான் படைத்தல்.

கலை என்பது புனைவு, அறிவியல் கண்டுபிடிப்பாகும், சமயம் உருவாக்கலாகும்.

படைக்கவேண்டுமென்றால் நீங்கள் காணாமல் போக வேண்டும். கடவுளுக்கு வழிவிட வேண்டும். எதையும்

செய்வதற்கு நீங்கள் இல்லாதபோது நீங்கள் ஒரு வெற்று மூங்கிலாக ஒரு புல்லாங்குழலாகி விடுவீர்கள். அதன் பிறகு இசை உங்களிடம் இறங்கத் துவங்கும்.

## மூன்றாவது கேள்வி:

> *ஒரு ஆன்மிக அனுபவம் ஏன் 'தரிசனம்' என்று அழைக்கப்படுகிறது? பார்வைக்கும் தரிசனத்திற்கும் உள்ள வித்தியாசம் என்ன? சற்றுமுன்பு ''கேட்டல்' பற்றி பேசினீர்கள். தயவுசெய்து 'பார்த்தல்' என்றால் என்ன என்று விளக்கம் சொல்லவும்.*

ஒரு பார்வையற்றவர் சூரியனைப் பார்க்கிறார். சூரியன் அங்கேதான் இருக்கிறது. ஆனால் அவரால் பார்க்க முடியாது. ஏனென்றால் இவர் பார்வையற்றவர். அவருக்குக் கண்கள் இல்லை. அவருக்குப் பார்வை கிட்டுமானால், அவர் சூரியனைக் காணமுடியும். காண்பது உள்ளேயும் பார்ப்பது வெளியேயும் ஏற்படுவது.

கண்களை நீங்கள் தேட வேண்டும். நீங்கள் பார்ப்பவராக வேண்டும். உங்கள் குருட்டுத்தன்மையை, அறியாமையை விட வேண்டும்.உங்கள் கண்களை மூடியிருக்கும் எல்லாவிதமான இடைதாங்கிகளையும் கைவிட வேண்டும். திறந்து இருக்க வேண்டும். அதுதான் பார்வை கிடைக்கப் பெறுவது அல்லது உள்நோக்கு என்பதின் பொருள். உள்நோக்கு என்பது அதிகச் சிறப்புடையது. ஏனென்றால் அது 'உள்' என்பதை வலியுறுத்துகிறது. தோற்றம் உள்ளே நடக்கிறது. - அதுவே உள்நோக்கின் பொருள். திறந்த மனதோடு இருந்தால், நீங்கள் கேட்பீர்கள், பார்ப்பீர்கள், கேட்கும் திறன் பெறுவீர்கள். உளதாய் இருக்கும் எல்லாவற்றையும் மூலமுதலான ஓம்காரத்தைக் கேட்பீர்கள். உங்களைச் சூழ்ந்துள்ள தேவகானத்தைக் கேட்பீர்கள். இவற்றை நீங்கள் இதுவரை கேட்டதில்லை. ஏனென்றால் கேட்பதற்கு உங்களிடம் காதுகள் இல்லை; கூர் உணர்வுடைய காதுகள் இல்லை. உங்களால் இரைச்சல்களைமட்டுமே கேட்கமுடியும். இசையைக்

கேட்க இயலாது. நீங்கள் பயிற்சி செய்தால், காதுகளைப் பழக்கினால் மெல்லமெல்ல உங்கள் காதுகள் அதிக மௌனமாகும். ஏற்புத்திறன் அதிகமாகும். அடங்கும், அதிகமாகத் தியானிக்கும். அது தாவோயிஸ்டுகள் கூறும் ''வு - வெய்'' அதாவது 'செயலின்மை' என்று பொருள்படும் நிலையை அடைவீர்கள். தன்னிச்சையாக எந்தக் கலக்கமும் இல்லாமல் முற்றிலுமான அமைதி எய்திடுவீர்கள். இது ஏனென்றால் உங்களுக்குள்ளே கலக்கம், அல்லது அதிர்வுகள் இருக்குமானால், அங்கே உள்ளதைத் தவறவிடுவீர்கள். கண்கள் வெறுமையாகையில் உள்நோக்கு கிடைக்கப் பெறுவீர்கள். சிந்தனைகள், முற்சாய்வுகள், கருத்தாக்கங்கள், நம்பிக்கைகள் நிறைந்த கண்களால் காணமுடியாது. தாங்கள் நம்புவதை மட்டுமே தொடர்ந்து காண்பார்கள். என்ன உள்ளதோ அதைப் பார்க்க மாட்டார்கள். எல்லாவிதமான நம்பிக்கைகளிலிருந்தும் உங்களை நீங்கள் விடுவித்துக்கொள்ள வேண்டும். கிறிஸ்தவர், ஹிந்து, மொகமதியர் என்று எல்லாத் தத்துவங்களையும் கைவிடுங்கள். உங்கள் கண்கள் முற்றிலும் நிர்வாணமான பிறகு, உங்களுக்குள் எந்த நம்பிக்கையும் இல்லாதபோது, அது என்ன என்று தெரியாத நிலையில், வெறுமனே எதுவும் தெரியாது இருக்கையில், உங்களுக்கு ஒன்று மட்டுமே தெரியும், அது உங்களுக்கு எதுவும் தெரியாது என்பது. அப்படியானால் நீங்கள் களங்கமற்றவர். அந்தப் பேதைமை நிலையில் உங்களுக்கு உள்நோக்கு கிடைக்கும். அந்த உள்நோக்கின்மூலம் நீங்கள் எவற்றையெல்லாம் பார்க்கின்றீர்களோ அதுவே 'தரிசனம்'.

கனவுகளிலிருந்து வேறுபடுத்திக்காட்டுவதற்காக அது தரிசனம் என்று அழைக்கப்படுகிறது. தரிசனம் உண்மையிலே உள்ளது. கனவும் இருக்கிறது. ஆனால் அது உண்மையானதல்ல. கனவு உங்களால் புறத்தெறிவு செய்யப்பட்ட ஒன்று, ஆனால் தரிசனம் மெய்மையின் அங்கம். கனவின் போது மெய்மை மீது செயல்படுகிறீர்கள்; தரிசனத்தில் மெய்மை உங்கள்மீது செயல்படுகிறது. ஆனால் தரிசனத்தில் நீங்கள் செயலற்று இருக்கிறீர்கள் - 'வு-வெய்' மெய்மை உங்கள்மீது செயல்பட

அனுமதிக்கின்றீர்கள். கனவில் நீங்கள் பெரிய கர்த்தா செயல் புரிபவர். கனவு உங்களது ஆக்கம். தரிசனத்தில் நீங்கள் செயல்புரியாதவர். பெறும் நிலையில் உள்ளவர். ஒரு கருப்பை, திறந்த நிலையில், வரவேற்கும் பாங்குடன் உள்ளீர்கள். ஒரு நெகிழ்வுத் தன்மை இருக்கிறது. அப்படியொரு நெகிழ்வு நிலையில் உள்ளபோது மெய்மை உங்களுக்கு ஏற்படுகிறது. ஏனென்றால் நீங்கள் அதற்கு தடையாய் இருப்பதில்லை. அது உங்களுக்கு தொடர்ந்து ஏற்பட முயற்சி செய்துகொண்டிருக்கிறது. ஆனால் நீங்கள்தான் அதை தடுத்துக் கொண்டேயிருக்கிறீர்கள்.

கடவுள் உங்களிடம் ஒரு கோடி வழிகளில் வருகிறார். ஆனால் நீங்கள் கடவுள் பற்றி ஒரு குறிப்பிட்ட கருத்தோடு இருக்கின்றீர்கள். கடவுளுக்கு உங்கள் கருத்தை நிறைவேற்ற வேண்டிய எந்தக் கடமையும் இல்லை. அவர் அவருக்கான வழிகளில் வந்து கொண்டேயிருக்கிறார். நீங்களோ உங்களுக்கான நம்பிக்கைக்கு ஏற்றவாறு காத்துக்கொண்டேயிருக்கிறீர்கள். ஆதலினால் தொடர்ந்து தவறவிட்டுக் கொண்டே இருக்கிறீர்கள்.

உதாரணமாக, கிறிஸ்தவர்கள் தொடர்ந்து ஏசு கிறிஸ்துவை தவறவிடுவர். காரணம் அவர்கள் அதே ஏசுவிற்காக காத்து இருக்கின்றனர். கிறிஸ்து தத்துவம் உலகில் ஏற்படவேயில்லை என்று அர்த்தம் இல்லை. அது நடந்தது. கபீரில், மொகமதில், நானக்கில் மற்றும் பல மனிதர்களிடம் அது நடந்தது. ஆனால் கிறிஸ்தவர்கள் தங்கள் கருத்திற்கேற்ற அதே கிறிஸ்துவிற்காகக் காத்திருக்கின்றனர். கிறிஸ்துவின் மீள் வருகைக்காகக் காத்திருக் கின்றனர். அது எப்போதும் நடக்கப் போவதில்லை. வீணுக்குக் காத்திருக்கின்றனர். கிறிஸ்து வந்துகொண்டேயிருக்கிறார். ஆனால் அதேபோல் வரப்போவதில்லை. கிறிஸ்து அதே வகையில் வரவேண்டும் என்பதற்காக முழு இயல் உலகமும் அதே சூழலில் இருக்க வேண்டும். அது இனி என்றும் நடக்கப் போவதில்லை. சற்றே யோசித்துப் பாருங்கள்.... துல்லியமாக அதே சூழ்நிலை. ஒவ்வொரு கல்லும் அதே இடத்தில், ஒவ்வொரு மனிதனும் அதே வடிவோடு. இது எப்படி சாத்தியமாகும்?

இப்போது பாண்டியஸ் பைலேட் கவர்னர் அல்ல. அவரும் சட்டங்கள் இயற்றிக் கொண்டு இருக்கவில்லை. யூதர்களின் அந்த உலகம், அவர்கள் கனவுகளுக்கேற்ற அந்த புராணயிலான உலகம் இனி செல்லுபடியாகாது. விஷயங்கள் மாறிவிட்டன.

நான் கேள்விப்பட்டது...

ஒரு வயதான யூதர் பிரார்த்தனை செய்து கொண்டிருந்தார். அவர் கடவுளிடம், ''ஐயா, நாங்கள்தான் உங்களின் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் என்பது உண்மையா?'' என்று கேட்டார்.

வானத்திலிருந்து கடவுள் கர்ஜித்தார். ''ஆம், நீங்கள்தான் என் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களாவீர்கள்.''

இதைக் கேட்ட அந்த வயதான யூதர் சொன்னார், ''ஐயா, வேறு யாரையாவது நீங்கள் தேர்ந்து எடுக்கும் காலம் வரவில்லையா? நான் அதிகமாகவே துன்பப்பட்டு விட்டேனே.''

இப்போது யூதர்களும் தாங்கள் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்களாக இருக்க விருப்பமில்லை. தாங்கள் தாம் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள் என்ற முட்டாள்தனமான கருத்தைக் கொண்டிருந்தபடியால், அவர்கள் துன்பத்திற்கு ஆளாகினர். இந்த அகங்காரமான கருத்து எல்லோருக்கும் எதிராக இருந்தது. ஆகவே எல்லோருக்கும் யூதர்களை அவர்களுக்கான இடத்தில் வைக்க வேண்டும் என்று முயற்சி செய்தனர். அவர்கள் கொலை செய்யப்பட்டனர். கொன்று குவிக்கப்பட்டனர். இதற்கு எல்லாம் பின்புலமான கருத்து: ''நாங்கள்தான் தேர்ந்தெடுக்கப்பட்ட மக்கள்'' என்பதே.

இப்போது உலகம் முற்றிலுமாக மாறிவிட்டது. அப்போது வந்த மாதிரியே ஏசுவால் இன்று வரமுடியாது. உலகம் அதே சூழ்நிலைக்குப் போனால்தான். அது எப்படி சாத்தியமாகும். அது நடவாத காரியம்.

உலகம் மறுபடியும் அதேபோன்று இருக்கப் போவதில்லை. அது மாறிக்கொண்டேயிருக்கிறது. கிறிஸ்தவர்கள் ஏசுவிற்காகவும், ஹிந்துக்கள் கிருஷ்ணருக்காகவும் காத்திருக்கின்றனர். அவர்கள்

ஐந்தாயிரம் வருடங்களாகக் காத்திருக்கின்றனர். ஏனென்றால், ''எப்போது பிரச்சினைகள் இருக்கின்றனவோ, தர்மம் அழிகிறதோ, நாஸ்திக உலகில் இருக்கும், என் மக்கள் ஒடுக்கப்படும்போது, துன்பத்தில் இருக்கும்போது, நான் வருவேன்; இது என் வாக்குறுதி'' அவர்களும் காத்துக் கொண்டிருக்கின்றனர். கிருஷ்ணர் வருவதற்கு இப்போது இருப்பதைவிட இந்தியாவிற்கு அதித துன்பம் என்ன வரவேண்டும்? இந்தியாவை விட அதித துயரமிக்க நாட்டை நீங்கள் சிந்தித்துப்பார்க்க முடியுமா? இப்போது வர முடியாவிட்டால், நம்பிக்கையே இல்லை. ஏனென்றால், இதைவிட அதிகத் துன்பம் சாத்தியமில்லை. ஆனால் அவர் வரவில்லை. ஹிந்துக்களும் வானத்தைப் பார்த்தவாறே காத்திருக்கின்றனர்.

அவர் வந்துகொண்டுதான் இருக்கிறார், ஆனால் கடவுள் உங்கள் நம்பிக்கைக்கு ஏற்ப வரமுடியாது. ஒரு வரவேற்கும் தன்மையோடு நீங்கள் இருக்கவேண்டும். எல்லா நம்பிக்கைகளையும் கைவிடவேண்டும்; திடீரென ஒரு தரிசனம்! உள்நோக்கு தயாரானதும் தரிசனம் நடக்கிறது. உள்நோக்கு கனவு அல்ல. அது மெய்மை.

கிறிஸ்தவர்கள் கனவு காண்கின்றனர். ஹிந்துக்கள் கனவு காண்கின்றனர். இவர்கள் வெவ்வேறு வகையான கனவு காண்பவர்கள், இவர்கள் விஷயம் அதேபோன்று இருக்கும் என்று கனவு காண்கின்றனர். கடந்த காலத்தைப் பற்றியே கனவு காண்கின்றனர். கடந்தகாலத்தையே தங்கள் மனதில் மீண்டும் மீண்டும் நினைத்துக் கொண்டு இருக்கின்றனர். அதில் கைதேர்ந்து விட்டனர். அவர்கள் மெய்மையை மாறிவிட்டதையும், தங்கள் விளையாட்டு வெறும் அபத்தம் என்பதையும் காண மறுக்கின்றனர்.

தரிசனம் என்பது உங்கள் கனவு அல்ல. தரிசனம் ஏற்படுவது கனவுகள் அனைத்தும் கலைந்த பிறகு. கனவு காணும் மனம் இல்லாதபோது ஏற்படுவதே தரிசனம். ஆனால் அதற்குத் தேவை உள்நோக்கு. எப்படி இருக்க வேண்டும் என்று நீங்கள் கற்றுக்

கொள்ள வேண்டும். எப்படிப் பார்க்க வேண்டும், கேட்க வேண்டும், எப்படி முகரவேண்டும், சுவைக்கவேண்டும், எப்படித் தொடவேண்டும் என்பதை எல்லாம் நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டும். பிறகு நீங்களே ஆச்சரியப்படுவீர்கள். - கடவுள் எல்லாப் புலன்கள் வழியாகவும் வருவார். நுண் உணர்வு கொண்டு இருங்கள். நம்பிக்கை குறைவாகவும், தலையினால் குறைவாகவும் உணர்வினால் அதிகமாகவும் இருங்கள். துடிப்புணர்வுடன் இருக்கவும், திடீரென ஒரு நாள் காண்பீர்கள். உங்களுக்கு வருவது வெறும் வெளிச்சமல்ல, அது கடவுளே வெளிச்ச ரூபமாய் வருகிறார். உங்கள் முன் நிற்பது மரமல்ல. அது கடவுள்; வெறும் கற்பாறையல்ல அது கடவுள்; உங்கள் மீது மையல் கொண்டது பெண் அல்ல, கடவுளே. அந்த ஆண் அல்ல, கடவுள்தான். உள்நோக்கு தெளிவாகவும், மேகமூட்டமாகவும் இல்லாவிட்டால் திடீரென எல்லா இடங்களிலும் கடவுளைக் காண்பீர். ஏனென்றால் எல்லாமே கடவுள்.

ஒருவர் பூ ஒன்றை எடுத்து ஒரு வார்த்தைகூட பேசாமல், தன்னைச் சுற்றி இருந்தவர்களிடம் காட்டினார். ஒவ்வொருவரும் பூவைப் பற்றித் தங்கள் கருத்து, பொருள் விளக்கம் மற்றும் அது அடையாளப்படுத்துவது எல்லாம் கூறினர். கடைசியாக இருந்தவர் மட்டும் ஏதும் சொல்லாமல் புன்னகைத்தார். பூவைக் காட்டியவரும் புன்முறுவல் செய்து ஏதும் பேசாமல் பூவை அவரிடம் கொடுத்தார். ஜென்னின் மூலங்கள் இதிலிருந்து தொடங்கியதாகக் கூறப்படுகிறது.

நடுவில் இருந்தவர் புத்தர் என்பது ஒரு பொருட்டல்ல. எப்போது வேண்டுமானாலும் எச்சமயத்திலும் எந்த உள்நோக்கும் மனிதருக்கும் ஏற்படுவது ஜென். அதே போன்றுதான் சூஃபிசம்: அதுவும் மெய்மைக்குள் நோக்குவதற்கான ஒரு புதிய வழிமுறை. அதேபோலத்தான் தந்திரம், யோகம் எல்லாம் - இவையெல்லாம் ஒரே இயல் நிகழ்வின் பல்வேறு பெயர்கள். மெய்மைக்குள் பார்ப்பதற்கான திறன்.

ஆனால், நீங்கள் விளக்கங்களால் நிறைந்து இருக்கிறீர்கள். பூவை என் கையில் பிடித்தவாறு உங்கள்முன்னே நான்

நிற்கிறேன். ஆனால் உங்களால் பூவைப் பார்க்க முடியாது. ஏனென்றால் நீங்கள் விளக்கங்கள் நிறைந்து இருக்கின்றீர்கள், கேள்விகளாலும், பதில்களாலும் தத்துவங்களினாலும் நிறைந்து இருக்கிறீர்கள்.

ஜென்னின் பிறப்பு சமய வரலாற்றிலேயே மிக அழகான உவமானங்களில் ஒன்று.....

''ஒவ்வொருவரும் பூவைப் பற்றித் தங்கள் கருத்து, பொருள் விளக்கம், மற்றும் அது அடையாளப்படுத்துவது எல்லாம் கூறினர்.''

பூ விளக்கப்பட வேண்டிய ஒன்றல்ல. பூ தன்னிலையிலேயே ஒரு விளக்கம்தான். மற்ற எல்லா பொருளுரைகளும் அதன் மெய்மைக்குள் ஊடுருவல்கள்தான். ஒரு ரோஜாவை என்னவென்று சொல்வீர்கள்? ஒரு ரோஜா, ஒரு ரோஜா, ஒரு ரோஜாதான்! நீங்கள் என்ன சொன்னாலும் அது தவறாக இருக்கும். ஏனென்றால் ஒரு ரோஜா இது போன்றது என்று சொல்வதானால், நீங்கள் ரோஜாவை ஒரு ரோஜா அல்லாததோடு அடையாளப்படுத்துகிறீர்கள். நாம் தொடர்ந்து இதையே சொல்லிக் கொண்டு இருக்கிறோம்.

யாரோ ஒருவர், ''இது என்ன'' என்று கேட்டால்? நீங்கள் வேறு எதையாவது கொண்டு அதை விளக்க முற்படுவீர்கள். அந்த வேறு ஏதோ ஒன்று கேட்கப்பட்ட பொருள் அல்ல. எல்லா விளக்கங்களும் வழி தவறிவிடுகின்றன. எந்த விளக்கமும் விளக்குவதில்லை. அவை விளக்கம் தராமல் போகின்றன. அவை மனதின் தந்திரங்கள்.

''அவர்கள் அதன் பொருள் விளக்கம், அதன் குறிப்பு, அது அடையாளம், அடையாளப்படுத்துவது எல்லாவற்றையும் கூறினர்.''

ஒரு பூ எதையும் அடையாளப்படுத்துவதில்லை. அது ஒரு அடையாளம் அல்ல. அது ஒரு உருவகம் அல்ல. சின்னம் அல்ல. அது அதுவே. அது வேறு எவரையும் பிரதிநிதித்துவம் செய்வதில்லை. அது தன் சொந்த உயிருரு. அவர்கள் எல்லோருமே தவறவிட்டார்கள். புத்தரைச் சுற்றி அமர்ந்து இருந்தவர்கள்,

புத்தர் பூவைக் கையில் ஏந்தி, இருந்தார். அவர்கள் பூவைப் பற்றி வியாக்கியானம் செய்தனர். எல்லோரும் தவறவிட்டனர். அதற்குக் காரணம் அவர்கள் விளக்கங்களால் நிறைந்திருந்தனர். அவர்களால் பூவைப் பார்க்க முடியவில்லை. பூ அவர்களின் விளக்கங்களில் தொலைந்து போயிருந்தது. அவர்கள் பூவின் மர்மத்தினால் ஆட்கொள்ளப்பட்டு இருந்தனர். புத்தர் ஏன் அதை கையில் தாங்கியுள்ளார்? அது என்ன குறிக்கின்றது, எந்த வகையைச் சார்ந்தது? அதன் வர்ணம், வடிவு, உரு என எல்லாவற்றையும் ஆராய்ந்தனர். பூவை முற்றிலும் மறந்துவிட்டனர். பல்வேறு திசைகளில் ஓடத் தொடங்கினர். மேலும் அவர்கள் பண்டிதர்கள், சாமர்த்தியசாலிகள்; அவர்கள் மறைநூல்களில் இருந்து எடுத்துக்காட்டி இருப்பார்கள். வேதம், உபநிடதங்களை விவாதத்திற்கு கொண்டு வந்திருக்க வேண்டும். தங்கள் அறிவை பற்றியும் பேசியிருப்பார்கள். பெரிய வகையில் அகங்காரம் நிறைந்த நியாயங்களை முன்வைத்திருப்பார்கள். பல தர்க்கவாதங்கள் தோன்றியிருக்கும். இவையெல்லாம் புத்தரை திருப்தி செய்யும் என்றும் எண்ணியிருப்பார்கள்.

புத்தர் வெகுவாக வருத்தப்பட்டு இருப்பார்.

ஒரு பூ வெறுமனே அங்கே இருக்கிறது. அதற்கு எந்த விளக்கமும் தேவையில்லை. நீங்கள் அதை ரசிக்க மட்டுமே வேண்டும்; அதைப்பற்றி எதுவும் கூறத் தேவையில்லை. பார்க்க மட்டுமே வேண்டும். ஒருவர் மட்டுமே அதைச் செய்தார்.

''ஆயினும் பூவைப் பார்த்து ஒருவர் மட்டும் ஏதும் சொல்ல வில்லை.''

அவர் பெயர் மகாகாஷ்யபர். அவர் ஜென் உருவாகக் காரணமானார். அவரே பூவை உள்ளபடியே பார்த்தவரில் முதலாமவர். அவருக்கு உள்நோக்கும், தரிசனமும் இருந்தது.

அவர் ஏதும் சொல்லாமல் புன்னகைத்தார்.

அந்தப் புன்னகையினால் என்னவாயிற்று. அந்தப் புன்னகையில் அவரே ஒரு பூவாகிவிட்டார். இதை நீங்கள் கவனித்து இருக்கிறீர்களா? நீங்கள் புன்னகை செய்யும்போது

மலர்வீர்கள். அவர் ஏதும் பேசவில்லை. ஆனால் எல்லாவற்றையும் சொல்லிவிட்டார். ஒரு பூவாகிப் போனதில் எல்லாவற்றையும் சொல்லிவிட்டார். அவர் வெறுமனே புன்னகை செய்தார்.

உண்மையில் ஒரு மனிதனின் புன்னகையைவிட எந்தப் பூவும் அழகாக இருப்பதில்லை. ஒரு மனிதனின் புன்னகைக்கு முன் மிக அழகான பூவும் மங்கலாகிவிடும். மனிதனின் புன்னகையோடு ஒப்பீடே கிடையாது. அது உங்களின் உயிருருவிலிருந்து எழுமானால் அது உங்களின்மீது முழுவதுமாக பரவிவிடும். நீங்களே மலர்வீர்கள். புன்னகை என்பது மனித உணர்வு நிலையின் பூவாகும். மகாகாஷ்யபர் புன்னகைத்தார்.

''நடுவில் இருந்தவரும் புன்னகை செய்தார்.''

ஆக அன்று மூன்று பூக்கள் இருந்தன. முழு முழுமையும் இருந்தது. பூ ஏற்கனவே புன்னகை செய்து கொண்டிருந்தது. மகாகாஷ்யபர் புன்னகை செய்தார். இந்த இரண்டு அழகான பூக்களும் புன்னகை செய்வதைக் கண்டு புத்தரும் புன்னகைத்தார். அந்த மூன்று புன்முறுவல்களும், ஜென்னின் அடித்தளமாயின; அந்த மூன்று பூக்கள். இதுபோன்று நடக்கும்போது, ஒரு மாபெரும் பாரம்பரியம் பிறக்கின்றது. ஆனால் அது எவ்வளவு அமைதியாக நடந்தது! ஒற்றை வார்த்தை பேசப்படவில்லை! புத்தரும் ஒரு வார்த்தை கூட பேசவில்லை. அவர் வெறுமனே பூவை மகாகாஷ்யபரிடம் கொடுத்தார். அவர் மகாகாஷ்யபரிடம் கொடுத்தது வார்த்தைகளால் விவரிக்கமுடியாததென்று சொல்லப்படுகிறது. அது உள்நோக்க மற்றும் தரிசனம், மறைநூல்கள் மற்றும் வார்த்தைகளைக் கடந்த ஒரு மாற்றீடு.

இவ்வாறுதான் சூஃபிசம், ஹசிடிசம், ஜென், யோகா எல்லாம் காலங்காலமாக வரும் தலைமுறைக்கு வழங்கப்பட்டது. எப்பொதெல்லாம் ஒருவரால் 'பார்க்க' முடிகிறதோ பூ வழங்கப் பட்டது.

நான் உங்கள் முன்னே பூவை வைத்துக் கொண்டிருக்கிறேன் என்று உங்களால் அதைக் காண முடிகிறதோ, அது உங்களுக்குத் தரப்படும். நான் பூவை தொடர்ந்து வைத்துக்

கொண்டேயிருப்பேன். உங்களுக்கு அதைப் பற்றிய விளக்கம் இல்லாத கணம் வரை நான் காத்துக் கொண்டிருப்பேன். நீங்கள் எந்த விளக்கமும் கேட்காதபோது, எந்த விளக்கமும் நீங்களாகத் தராதபோது, வெறுமனே அந்த புதிர் நிலையில் வாழ்க்கையில் அந்த புதிரான கணத்தில் நீங்கள் புன்னகைப்பீர்கள். அந்தப் புதிரானது உங்களுக்குள் பூவாக மலரும்.

அழகான பூ என்பது என்னவென்று நீங்கள் புரிந்து கொள்வீர்கள். நீங்கள் மலர்ந்தால் ஒழிய ஒரு ரோஜா என்னவென்று உங்களுக்குப் புரியாது. எப்படி உங்களால் புரிந்துகொள்ள முடியும்? உங்களுக்குள் எந்த மலர்தலையும் நீங்கள் எப்போதும் அறிந்ததில்லை. ஒரு ரோஜாவிற்குள் என்ன நடக்கிறது என்று புத்தர் மட்டுமே அறிவார். நட்சத்திரங்களுக்குள் என்ன நடக்கிறது என்று ஒரு புத்தர் மட்டுமே அறிவார். ஒரு புத்தருக்கு மட்டுமே. அந்த அளப்பரிய மர்மமான இயல் உலகிற்குள் என்ன நடக்கிறது என்று புரியும். மெய்மையை நீங்கள் சுவைத்துப் பார்த்தபின் நீங்கள் தகுதி பெறுவீர்கள். அது மறைநூல்கள் மூலம் அல்ல, புத்தகங்கள் படிப்பதன்மூலம் அல்ல, அது அனுபவத்தின் மூலமாக மட்டுமே முடியும்.

''ஜென்னின் தொடக்க மூலங்கள் அனைத்தும் இந்த நீதிக் கதையில் உள்ளதாகச் சொல்லப்படுகிறது.''

எந்த இந்திய மறைநூல்களிலும் இந்தக் கதை காணப்படவில்லை என்பது உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கலாம். நானும் தேடித் தேடிப் பார்க்கிறேன். இந்திய மறை இலக்கியங்கள் இக்கதை யோடு தொடர்புபடுத்திக் கொள்ளவேயில்லை. சம்பிரதாயப் பௌத்தர்களைக் கேட்டீர்களானால், ''இது ஜென் சார்பு மனிதர்களின் புனைவு'' என்பார்கள்.

ஒரு முறை புத்த பண்டிதர் ஒருவர் என்னிடம் வந்தார். பௌத்த மறைநூல்களில் அவர் உலகப் புகழ்பெற்ற அறிஞர். அவர் பெயர் பிக்கு ஆனந்த் கோசலயானா. நீங்கள் ''இந்தக் கதை பற்றிப் பேசிக் கொண்டே போகிறீர்கள். ஆனால் இவை சரித்திரச் சான்று அற்றவை. ஏனென்றால் மறைநூல்களில் இதுபற்றி ஒரு

குறிப்புகூட இல்லை. தயவுசெய்து இதைப் பற்றிப் பேசுவதை நிறுத்துங்கள்'' என்றார் அவர்.

'''இது தெளிவாக ஒரு இந்திய மனதை வெளிக்காட்டுகிறது. வேறொன்றுமில்லை. இந்திய மனதினால் புரிந்துகொள்ள முடியாது. அது ரொம்பவே பாண்டித்தியம் அடைந்துவிட்டது'' என்று நான் பதில் சொன்னேன்.

என் எண்ணம் என்னவென்றால், இந்த விடியல் நடக்கையில், விளக்கங்கள் அளித்த பண்டிதர்கள், எல்லா தகவல்களையும் பின்னர் திரட்டியிருப்பர். ஆம் சேகரித்து இருப்பார்கள். இந்த பூ விஷயத்தையே மறந்திருப்பார்கள். அது அவ்வளவாக மதிக்கத்தக்கதல்ல. அதை ஒரு ஹாஸ்யமாகக் கருதியிருப்பார்கள். ''புத்தர் ஏதோ வேடிக்கை மனநிலையில் இருந்திருக்க வேண்டும்'' என்று கருதியிருப்பார்கள். எழுதி பதிவு செய்வதற்கு ஒன்றுமில்லை. பண்டிதர் எப்போதும் சொல்லப்பட்டதைதான் அறிக்கையாக்குவார். அப்படி ஏதுமில்லை. ஏதும் நடக்கவில்லை. அது ஒரு மௌனமான மாற்றீடு. பண்டிதர்கள் அந்த நிகழ்வைத் தவறவிட்டனர். அதனால் அதைக் குறிப்பிடவும் இல்லை.

நான் அந்தப் பெரிய பண்டிதரிடம் சொன்னேன். ''புத்தர் மூலமாக நடந்த மிக முக்கியமான விஷயமாகத்தான் இதைக் கருதுகிறேன். இது மறைநூல்களில் காணப்படவில்லை என்றால், அவை தவறானவை. ஏனென்றால் எனக்கு இதுதான் மிக முக்கியமான செய்தி. என்னால் மற்ற நூல்களை எல்லாம் போட்டு எரித்துவிட முடியும். ஆனால் இந்தக் கதையை கைவிடமுடியாது. இந்த நீதிக் கதையானது முழுமையைத் தன்னடக்கியிருக்கிறது.

இதை முதலில் சொன்னவர்கள் சீனர்கள். தாவோயிசத்தினால் இது அறிவிக்கப்பட்டது. தாவோயிச அணுகுமுறையின் காரணமாக முதல் முறையாக இது புரிந்து கொள்ளப்பட்டது. அதனால் இது சீன மறைநூல்களில் குறிப்பிடப்பட்டுள்ளது. ஆனால் இந்திய நூல்களில் அல்ல. இந்திய மனம் பாண்டித்தியமானது. அது தத்துவார்த்தமும் தர்க்கவாதமும் மற்றும் விவாதச் சார்புடையது.

சீன மனமானது அதீத கலையுணர்ச்சியுடையது. அழகியல் சார்ந்தது. அது மௌனத்திற்குள் பார்க்க வல்லது. மௌனத்தை உணர முடியும்.

ஜென், பௌத்தம் மற்றும் தாவோயிசத்தின் கலப்பினம். அது ஐம்பது சதவீதம் பௌத்தம், ஐம்பது சதம் தாவோயிசம் இரண்டையும் விட வளமானது. காரணம், இரண்டிலும் உள்ள அழகானவற்றையெல்லாம் தன்னுள் கொண்டுள்ளது. இரண்டின் மௌனத்தையும் சேகரித்துக் கொண்டது. அதுவே ஜென்னின் அழகுத்தன்மை.

ஆனால் நினைவில் கொள்ளுங்கள். நடுவில் இருந்தவர் புத்தர் என்பது ஒரு பொருட்டல்ல. எந்த ஒரு மனிதனும், எந்த இடத்திலும், எந்த சமயத்திலும் ''பார்க்க' முடிகிறதோ அப்போது ஜென் நடந்தேறுகிறது.

ஜென் இப்போது இங்கேயே நடக்கக் கூடும். ஒரு மரத்தின் அருகில் அமர்ந்திருக்கும்போது நடக்கலாம், அல்லது ஒரு ஆற்றோரமாகக் கூட இருக்கலாம். ஜென் எங்கேயும் நடக்கும். எப்போதெல்லாம் உங்களுக்குப் பார்க்கும் தகுதி இருக்கிறதோ, ஜென் நடக்கும். உங்களிடையே உள்நோக்கில், உங்கள் உள்நோக்கின் திறப்பில் தரிசனம் நடக்கும். அந்தத் தரிசனமே ஜென். அதுவே சூஃபிசம். இவை எல்லாம் வெவ்வேறானவை அல்ல.

## நான்காவது கேள்வி:

*பகவான், இருளுக்குள் ஒளியை எடுத்துச் செல்லுங்கள், இருள் அகலும் என்று நீங்கள் சொல்கிறீர்கள். நீங்கள்தான் ஒளி. அப்படியானால் இருள் எங்கே? மேலும் நான் ஏன் இருளுக்காகவும் ஏங்குகிறேன்?*

சேத்னா, ஒளியைக் கொண்டு வாருங்கள், இருள் அகலும் என்று நான் சொன்னால், அதன் சரியான பொருள் என்னவென்றால், ஒளியைக் கொண்டு வாருங்கள், இருள் ஒளிவீசத் தொடங்கும். இருள் இல்லாமல் போய்விடாது. எதுவும் காணாமல் போக

முடியாது. ஒளியைக் கொண்டு வந்தால் இருள் ஒளிபெறுகிறது. ஒளி வருகையில் அது இருளின் பண்பையே உருமாற்றுகிறது. எதுவும் மறைவதில்லை. விஷயங்கள் உருமாறுகின்றன. அவ்வளவே. என்னை உங்கள் இதயத்திற்குள் அனுமதித்தீர்களானால், இருளைக் காணமாட்டீர்கள். இருள் போய்விட்டது என்று அர்த்தம் அல்ல; இருள் உருமாறிவிட்டது என்று பொருள். இருள் இனி இருளல்ல, அது ஒளியாகிவிட்டது. உண்மையில் இருளும் ஒளியும் நாம் சாதாரணமாக நினைப்பதுபோல இரண்டு நேர் எதிரான விஷயங்கள் அல்ல. இருளுக்கும் ஒளிக்கும் உண்டான வேறுபாடு என்பது எதிரீடு அல்ல. அவை ஒன்றேதான்.

இது வெப்பம் மற்றும் குளிர் போன்றது. நீங்கள் குளிரானது என்று சொல்வது ஒப்புமை அளவில்தான். அதேபோல வெப்பமானதும் ஒப்புமை அளவில்தான்; வேறுபாடு என்பது இல்லை. ஒரு பரிசோதனை செய்து பாருங்கள். உங்கள் முன் ஒரு வாளியில் தண்ணீர் வைத்துக் கொள்ளவும். ஒரு கையை ஹீட்டரில் சூடுபடுத்திக் கொள்ளவும், மற்றொரு கையைப் பனிக்கட்டியில் வைத்து சில்லென்று ஆக்கிக்கொள்ளவும். இப்போது உங்கள் இரண்டு கைகளும் சூட்டையும், குளிரையும் உணரும்போது, வாளியில் உள்ள தண்ணீரில் முக்கவும். நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். வாளியின் தண்ணீர் சூடாக இருக்கிறதா சில்லென்று இருக்கிறதா என்று கேட்டால் நீங்கள் யோசிப்பீர்கள். ஏனென்றால் ஒரு கை சூடு என்று சொல்லும், மற்றொன்று குளிர்ச்சி என்று சொல்லும். வெப்பமும் குளிர்ச்சியும் இரண்டு விஷயங்கள் அல்ல; ஆனால் ஒப்புமை அளவிலான அனுபவங்கள், அதேபோன்றதுதான் இருளும், வெளிச்சமும்.

ஆந்தை இருக்கிறது. அதனால் இருட்டில் பார்க்க முடியும். அதற்கு இருள் என்பது கிடையாது. அதன் கண்கள் உங்களுடையது போன்றதன்று. பகலில் ஆந்தையால் பார்க்க முடியாது. அதனால்தான் ஆந்தை, குறிப்பாக மேற்கில், அறிவின் அடையாளமாகக் கருதப்படுகிறது. ஏனென்றால் அதற்கு இருளும் வெளிச்சம்தான். அதைத்தான் ஞானம் என்றழைக்கின்றனர். இருள் ஒளிமயமாகும்போது என் முழு முயற்சியும் உங்களை

ஒரு ஆந்தையாக உருமாற்றுவதே. அதனால் இருள் ஒளியாக மாறிவிடும். ஆனால் உங்கள் பிரச்சினையும் எனக்குப் புரிகிறது.

*''இருளுக்குள் ஒளியை எடுத்துச் செல்லுங்கள். இருள் அகலும் என்று நீங்கள் சொல்கிறீர்கள். நீங்கள்தான் ஒளி. அப்படியானால் இருள் எங்கே? மேலும் நான் ஏன் இருளுக்காகவும் ஏங்குகிறேன்?*

நீங்கள் அதற்காக ஏங்குவீர்கள். ஒளிக்கு நீங்கள் பழக்கப்பட சற்று காலமாகும். நீங்கள் வெகுகாலம் இருட்டில் வாழ்ந்து வந்துள்ளீர்கள். பல கோடி வாழ்க்கைகள் இருட்டில் கழிந்து இருக்கின்றன. அந்தப் பழைய பழக்கத்தில் நீங்கள் இருளைக் கேட்டீர்கள். ஒளியை இவ்வளவு தூரம்தான் உங்களால் எடுத்துக் கொள்ள முடியும். அதன் பிறகு இருளுக்குள் திரும்பிச் சென்று நெகிழ்ந்திருக்க விரும்புவீர்கள். அது இளைப்பாறுதலாக இருக்கும். அது ஒரு வகையான தூக்கம். அதைப் பற்றிக் கவலைப்பட ஒன்றுமில்லை; அப்படித்தான் நடக்கும். மேலும் ஒருவர் வெளிச்சத்திற்குப் பழகிக் கொள்ள வேண்டும். மெல்ல மெல்ல உங்களின் இடைவெளி திறந்து அது பெரிதாகும். உங்களால் அதிகமாக உள்வாங்கிக் கொள்ள முடியும். இறுதியாக ஒரு நாள் அது நடக்கும்போது இருளும் ஒளியும் ஒன்றே என்பதைப் புரிந்துகொள்வீர்கள். நீங்கள் ஒளியில்கூட ஓய்வாகிக்கொள்ள முடியும். இது உங்கள் அனுபவமான பிறகு, இருளின் தேவை மறைந்துவிடும். ஆனால் அது இருக்கும்.

சில சமயங்களில் நீங்கள் எனக்கு மிக அருகில் வருவீர்கள். அப்போது ஒளி நிரம்ப இருப்பீர்கள். அதுதான் சேத்னாவிற்கு நடக்கிறது. அவர் சில சமயங்களில் எனக்கு மிக அருகில் வருவது தெரிகிறது. விரைவிலேயே அவர் இருளுக்காக ஏங்கத் தொடங்கி விடுவார்; அதன்பிறகு என்னிடமிருந்து விலகிவிடுவார்.

இதேதான் இங்கிருக்கும் எல்லோருக்கும் நடக்கிறது. நீங்கள் என்னை நோக்கி வருகின்றீர்கள். பின்பு போவீர்கள். ஊசலாட்டம் போல. நீங்கள் பெண்டுலம் போல செயல்படுகிறீர்கள். சில சமயம்

அருகே, மற்றொரு சமயம் விலகி விடுகிறீர்கள். ஆனால் இது ஒரு தேவை. இப்பொழுது உங்களால் என்னை முழுவதுமாக உட்கிரகித்துக் கொள்ளமுடியாது. நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டும். மிக அலாதியான ஒன்றை ஈர்த்துக் கொள்ள நீங்கள் கற்றுக்கொள்ள வேண்டும். அது கிட்டத்தட்ட மரணத்தைப் போலத் தோன்றும். பலமுறை என்னிடமிருந்து விலகிவிடும் தேவை உங்களுக்கு வரும்.

அதனால்தான் நீங்கள் சில சமயங்களில் எதிர்மறையாகி விடுகிறீர்கள். சில சமயங்களில் எனக்கு எதிராக வாதம் செய்கிறீர்கள். சண்டையிடுகிறீர்கள் - இவையெல்லாம் நேசத்தின் ஒரு பகுதிதான். நீங்கள் என்னை வெறுக்கவும் செய்ய வேண்டும். ஆக இதைப் பற்றி அதிகம் கவலை வேண்டாம். அதிகக் கவனம் செலுத்தாதீர்கள். ஓரளவிற்கே எடுத்துக் கொள்ள முடியும். அதற்கு மேல் அது தாங்க முடியாததாகிவிடும். பிறகு உங்களுக்கு விலகத் தோன்றும்.

விலகிப் போவதற்கு ஆயிரமாயிரம் வழிகள் இருக்கின்றன. ஷீலாவைப் பாருங்கள். அயர்ந்து தூங்கிக் கொண்டிருக்கிறார். தூர விலக இதுவும் ஓர் வழி. இந்தளவிற்குத்தான் போக முடியும். பிறகு மனம் சொல்லும். ''தூங்கிவிடுவது நல்லது''. ''தூங்க முடியாமல் போகிறது''. நீங்கள் ஓராயிரம் விஷயங்கள் பற்றி சிந்திக்கத் தொடங்குகிறீர்கள். என் முன்னே உட்கார்ந்திருப்பீர்கள். மனம் கடைத்தெருவிற்குப் போகும். நீங்கள் ஏற்கெனவே பிருந்தாவனத்தில் இருக்கிறீர்கள். நான் முடித்தவுடனேயே நீங்கள் ஓடிவிடுவீர்கள். ஆனாலும் நீங்கள் ஏற்கனவே ஓடிக் கொண்டு இருக்கிறீர்கள்! உங்கள் மனம் ஏற்கனவே அங்கேதான் இருக்கிறது. உங்கள் உடல்மட்டும்தான் பின்தொடர வேண்டும். மேலும் என்னைப் பற்றி விஷயங்கள் சிந்திப்பீர்கள். சின்ன விஷயங்கள், அதைப்பற்றி பெரிய அமளி செய்வீர்கள். மடுவை மலையாக்குவீர்கள். பிறகு ஒரு நாள் நீங்கள் தேவையற்றதை எல்லாம் செய்துகொண்டு இருந்தீர்கள் என்பதைப் புரிந்து கொள்ளும்போது ஆச்சரியப்படுவீர்கள். ஆனால் இவையெல்லாம் வளர்ச்சியின் பகுதிதான்.

இப்பொழுது நீங்கள் பகலில் மட்டும்தான் விழித்து இருக்க முடியும். இரவில் தூங்கியாக வேண்டும். இருட்டு தேவைப்படுகிறது. என்னிடம் இந்த இரண்டு விஷயங்களும் தொடர்ந்து நடந்துகொண்டேயிருக்கின்றன. சில சமயம் நமக்கிடையே அது பகலாக இருக்க, வேறு ஒரு சமயம் அது இரவாக இருக்கும். சில சமயங்களில் என்னைப் பார்ப்பீர்கள். மற்ற சமயங்களில் கண்களை மூடிக்கொள்வீர்கள். சில சமயங்களில் உங்கள் இதயத்தைத் திறப்பீர்கள். சில சமயங்களில் மூடிக்கொள்வீர்கள். ஆனால் இப்படித்தான் நடக்கும். கவலைப்பட ஒன்றுமில்லை.

## ஐந்தாவது கேள்வி:

*நீங்கள் ஜோக் சொல்லும்போது நான் ஏன் அதிர்ச்சிக்கு உள்ளாகிறேன்?*

அதைத்தான் நான் இப்போது சொல்லிக் கொண்டிருக்கிறேன் - நீங்கள் மடுவை மலையாக்கலாம். ஏதோ ஒன்றினால் அதிர்ச்சிக்கு உள்ளாக நீங்கள் விரும்புகிறீர்கள். நானும் உங்களுக்குப் பல அதிர்ச்சிகளைத் தருகிறேன். இப்போது உங்களுக்கு ஒன்றைக் கண்டுபிடித்து அதைக் குறிப்பிட்டுக் காட்டவேண்டும். நீங்கள் அதிர்ச்சி அடைவதற்கான உண்மையான காரணங்கள் வேறாக இருக்கலாம். ஆனால் அவற்றை உங்களால் ஏற்றுக் கொள்ள முடியாது. அதனால் ''இதன்காரணமாக நான் அதிர்ச்சியடைகிறேன்'' என்கிறீர்கள்.

உதாரணமாக, நீங்கள் சம்பிரதாய கிறிஸ்தவர் அல்லது ஹிந்து அல்லது முகமதியராக இருக்கலாம். ஆனால் உங்களால் ஏற்றுக்கொள்ள முடியாது. நீங்கள் ஒரு வைதீக ஹிந்து என்பதை உங்கள் அகங்காரம் ஏற்க மறுக்கிறது. நீங்கள் எப்படிப்பட்ட முற்போக்கான மனிதர். ஒரு புரட்சியாளர். ஆகையினால் நான் ஏதாவது ஹிந்துயிசத்தைப் பற்றி எதிராகச் சொன்னால் நீங்கள் வருத்தப்படுகிறீர்கள் என்று உங்களால் சொல்ல முடியவில்லை. ஏனென்றால் நீங்கள் ஒரு முற்போக்காளர், புரட்சியாளர். ஆக,

தேடத் தொடங்குகிறீர்கள். ஏதோ ஒரு பலியாடு வேண்டும். சாக்குப்போக்கு வேண்டும். உங்களுக்குள் முதலில் நோக்குங்கள். ஜோக்குகள் கள்ளமற்றவை. ஆனால் வேறு காரணங்களும் இருக்கலாம். ஜோக்கில் இல்லாத ஒன்றை நீங்கள் கேட்டுக் கொண்டிருக்கலாம். அதில் இல்லாத ஒன்றை விளக்கிக் கொண்டு இருக்கலாம்.

இந்த ஜோக்கை கேளுங்கள். சக்ரியாஸ் வெர்னர் பாதிரியாராக மாறிய காதற்காவியக் கவிஞர். அவர் 1809-ல் வியன்னா தேவாலயங்களில் பாலுறவு பற்றிய தன் பேச்சுகளால் அவை நிரம்பச் செய்வார். ஒரு ஞாயிற்றுக்கிழமை தன் சமய உரையின் போது, மனித உடலின் அந்த சிறிய தசைத் துண்டு, மனிதனின் மிக அபாயகரமான சார் பொருள் பற்றி உபதேசித்துக் கொண்டு இருந்தார். அந்த உறுப்பின் தகாத பயன்பாடு, அதன் அதிபயங்கர விளைவுகள் ஆகியவற்றைப் பற்றிய பாதிரியாரின் விலாவரியான விளக்கம் கேட்டு கூடியிருந்த கனவான்கள் வெளிறிப் போயிருந்தனர். சீமாட்டிகள் முகம் சிவந்தனர்.

உரையின் முடிவின் போது அவையோரைப் பார்த்து அந்த சிறு துண்டான உறுப்பை பெயரிடட்டுமா என்று கூச்சலிட்டார். கூட்டம் திக்பிரமை பிடித்து நின்றது. பெண்டிர் எல்லாம் மூர்ச்சை அடைந்தால் மீண்டெழுவதற்கு தங்கள் டம்பப்பைகளிலிருந்து ‘முகரும் உப்பை’ எடுக்கத் தொடங்கினர். தொண்டை கரகரப்புடன் அவர் முன்னே சாய்ந்து, ''அந்த தசை துண்டைக் காட்டட்டுமா'' என்றார் பாதிரி. அதிர்ச்சியான மௌனம் நிலவியது. ஒரு முணுமுணுப்புகூட எழவில்லை. வேத நூலின் பக்கம் புரட்டும் சப்தம் கூட கேட்கவில்லை. வெர்னரின் குரல் குறைந்தது. ஒரு வஞ்சகப் புன்முறுவல் அவர் முகத்தில் தோன்றியது. ''சீமாட்டிகளே, சீமான்களே, எல்லோரும் பாருங்கள். நம் பாவங்களின் மூலத்தை'' என்று கூவி தன் நாக்கை வெளியே துருத்திக் காட்டினார்.

நீங்கள் இல்லாத ஒன்றைப் பற்றித் தொடர்ந்து நினைத்துக் கொண்டே இருக்கலாம். அது உங்கள் மனதில் உள்ளது. எந்த

ஜோக்கும் அசிங்கமானது இல்லை. அசிங்கமான மனங்களே இருக்கின்றன. ஜோக் எப்படி அசிங்கமாக இருக்க முடியும்? ஜோக் வெறுமனே ஒரு ஜோக்குதான். ஆனால் அசிங்கமான மனங்கள் இருக்கின்றன.

ஒருக்கால் உங்களால் சமயத்தையும் ஹாஸ்யத்தையும் தொடர்புபடுத்திக் கொள்ள முடியவில்லை போலும். அதுதான் பிரச்சினை. உங்களுக்குத் தெரியாது. கடவுளுக்கு ஜோக்ஸ் ரொம்ப பிடிக்கும். ரொம்ப நம்பத்தகுந்த வட்டாரங்களிலிருந்து சொல்கிறேன்.... எப்போதெல்லாம் யாராவது ஒரு புத்தராகி, இறந்த பிறகு கடவுளிடம் செல்லும் போது, கடவுள் சொல்வார், ''இப்போ ஒரு ஜோக் சொல். பூமியில் என்ன நடக்கிறது?'' உங்களால் ஒரு ஜோக் சொல்ல முடியவில்லை என்றால் தர்ம சங்கடமாக உணர்வீர்கள்.

நீங்கள் ஹாஸ்யம், சிரிப்பு எல்லாம் சமயச்சார்பு அற்றது என்று ஏனோ நினைக்கிறீர்கள். ஏனென்றால், அந்த வகையில் பண்பட்டு விட்டீர்கள். சர்ச்கள் ஹாஸ்யமற்று ஆகிவிட்டன. என்னைப் பார்க்க வரும்போது ஒரு புத்தர் எப்படியிருக்க வேண்டும் என்று உங்கள் சொந்தக் கருத்துக்களோடு வருகின்றீர்கள். ஆனால், அவை உண்மையில் புத்தரைப் பற்றியது அல்ல. அவையெல்லாம் நீங்கள் ஒரு கத்தோலிக்க பாதிரியார், அல்லது ஜைன முனி அல்லது ஓர் ஹிந்து சுவாமியைப் பார்த்து நீங்களாக உருவாக்கிக் கொண்டவை. உங்களுக்கு போதிதர்மரைப் பற்றி ஒன்றும் தெரியாது. கடவுளின் உண்மையான மக்கள் பற்றி உங்களுக்கு ஏதும் தெரியாது. அவர்களின் வாழ்க்கை அனுபவத்தில் பூமியும் வானும் வெவ்வேறானவையல்ல. அபச்சாரமனதும், புனிதமானதும் வேறல்ல. எல்லாம் ஒன்றே. ஹாஸ்யமும் பிரார்த்தனையும் அதே தோற்றத்தின் இரண்டு அம்சங்கள்.

ஹாஸ்யம் சமயத்திற்கு எதிரானதல்ல. சிரிப்பு என்பது மனித வாழ்க்கையில் மிகவும் வளர்ச்சியடைந்த நிகழ்ச்சிகளில் ஒன்றாகும். வேறு எந்த விலங்கும் சிரிக்காது; மனிதனால் மட்டுமே சிரிக்க இயலும்.

உங்கள் சிரிப்பை நீங்கள் பிரார்த்தனையாக மாற்றலாம். நீங்கள் மட்டுமே உருமாற முடியும். நிச்சயமாக வேறு எந்த விலங்கிற்கும் சுவாரஸ்யமின்மை ஏற்படாது. ஆகவே இந்த இரண்டு குறிப்பிட்ட விஷயங்களை மனிதனால் மட்டுமே செய்ய முடியும். ஒன்று சலிப்பு கொள்ளலாம். அல்லது சிரித்து மகிழலாம். பழைய சமயங்கள் அனைத்தும் சலிப்பைத் தேர்ந்தெடுத்துள்ளன.

நான் சிரிப்பைத் தேர்ந்தெடுத்து இருக்கிறேன். உங்கள் சர்ச்சுகளினால் கடவுள் மகிழ்ச்சியாக இருப்பார் என்று எனக்குத் தோன்றவில்லை. அவை விடாத சலிப்பைத் தருகின்றன. சர்ச்சைவிட கடவுளுக்கு ஹாஸ்ய உணர்வு அதிகமாக இருந்திருக்க வேண்டும். இல்லையென்றால் அவர் மனிதனைப் படைத்திருக்கவே மாட்டார். அவர் மனிதனைப் படைத்த பிறகு ஆதாமைப் பார்த்துச் சொன்னார். ''ஞான மரத்திலிருந்து பழத்தைத் தின்னாதே'' அடுத்து ஆதாம் நெறி தவற பாம்பைப் படைத்தார். அடுத்து ஏவாளைப் படைத்து பிரச்சினையை உண்டாக்கினார். இந்த உலகம் ஒரு பெரிய காமெடி. அது அபத்தமானது.

முன் ஒரு காலத்தில் இருந்த அரசன் ஒருவனுக்குத் தாகமெடுத்தது.

அவனுக்கு தன் சிரமம் என்னவென்று தெரியவில்லை. ஆனால், 'என் தொண்டை வறண்டு விட்டது'' என்றான்.

பணியாட்கள் உடனே வேகமாய் ஓடினர்.

அரசனின் நிலையை சரிசெய்ய பொருத்தமான ஏதோ ஒன்றைக் கண்டுபிடிக்க வேண்டும்.

மசகிடும் எண்ணெய் கொண்டு வந்தனர்.

அரசன் அதைக் குடித்ததும், அவர் தொண்டையில் வறண்ட உணர்வு கொள்ளவில்லை.

ஆயினும் ஏதோ ஒன்று சரியில்லை என்று அவனுக்குத் தெரிந்தது.

எண்ணெய் அவன் வாயில் ஒரு விசித்திரமான உணர்வை ஏற்படுத்தியது.

'என் நாக்கு கசக்கிறது. வழவழக்கிறது. மோசமாக தெரிகிறது...'' என்ற கரகரப்பாக கூறினான்.

மருத்துவர் உடனே ஊறுகாயும், புளிக்காடியும் கொடுக்கச் சொன்னார் - அதையும் அரசன் உண்டான்.

அவன் துன்பங்கள் கூடும் வகையில் சடுதியில் அரசனுக்கு வயிற்றுவலியும் கண்களில் நீரும் தேங்கி வழிந்தது.

''எனக்கு தாகமாக இருக்க வேண்டும்'' என்று முணுமுணுத் தான். அவன் துன்பங்கள் அவனை சற்றே யோசிக்க வைத்திருக்க வேண்டும்.

''தாகம் கண்களில் நீரை வரவழைக்காதே'' என்று அரசவையினர் ஒருவருக்கொருவர் பேசிக் கொண்டனர்.

ஆனால் அரசர்கள் அநேகமாக சலன புத்தி கொண்டவர்கள்.

அவர்கள் அரசனுக்கு ஏற்ற வகையில், பன்னீர் நறுமண மது வகைகள் என கொண்டு வர ஓடினர்.

எல்லாவற்றையும் குடித்தான் அரசன். ஆனாலும் உடல்நிலை தேறவில்லை. அவன் செரிமானமும் கெட்டது.

இந்த இக்கட்டின்போது ஒரு ஞானி ஒருவர் அவ்வழியே வந்தார்.

''மாட்சிமை தாங்கிய அரசருக்கு சாதாரண குடிநீர் தேவை'' என்று சொன்னார்.

''அரசன் சாதாரண தண்ணீர் குடிக்க மாட்டார்'' என்று ஒருசேர அரசவை கூவியது.

''நிச்சயமாக முடியாது'' என்றான் அரசன்.

''உண்மையில் சாதாரணத் தண்ணீர் எனக்கு வழங்கப்பட வேண்டும் என்பதே ஒரு அரசனாகவும் நோயாளியாகவும் அவமானமாக உணர்கிறேன்.

எல்லாவற்றிற்கும் மேலே எனக்கு ஏற்பட்டது போன்ற பயங்கரமான, சிக்கலான நோய்க்கு இவ்வளவு எளிய பரிகாரம் என்பதே நடவாத காரியம்.

இந்த யோசனையே தர்க்க முரணானது. இதன் காரணகர்த்தாவிற்கே அவமானம், நோய்ப்பட்டவர்க்கு அவமதிப்பு.''

இப்படியாகத்தான் ஞானி, ''முட்டாள்'' என்று பெயரிடப் பட்டான்.

மனிதன் எப்போதுமே நெருக்கடியில் இருப்பான். மனிதனே நெருக்கடிதான்... தொடர் நெருக்கடி. அது ஒரு விபத்தல்ல. அது அவசியமானது. மனிதனின் உயிருருவிலேயே நெருக்கடி இருக்கிறது. ஆகையால் மன இறுக்கம், துயரம், எல்லாம். விலங்குகளிலேயே மனிதன் மட்டும்தான் வளர்ந்து நகர்ந்து உருவாகின்றான். மனிதன்தான் முழுமையாகப் பிறக்காமல், வரையறுக்கப்படாமல் பிறக்கும் ஒரே விலங்கு; அவன் ஒரு படிமுறையாகப் பிறக்கிறான். மனிதன் திறந்த நிலையில் இருக்கின்றான். அவன் உயிருருவே உருவாவதில் இருக்கின்றது. அதுதான் நெருக்கடியே.

அவன் மேலும் உருவாகையில் மேலும் அவ்வாறே இருக்கிறான். மனிதன் தன்னை சாதாரணமாக எடுத்துக்கொள்ளக் கூடாது. இல்லையென்றால் அவன் தேங்கிவிடுவான். செயலற்ற தாவரம் போன்று ஆவான். வாழ்வே காணாமல்போகும். ஓரிடத்திலிருந்து மற்றோர் இடத்திற்கு நகரும் போதே வாழ்க்கை நிலைத்து இருக்கும். இரண்டு இடங்களுக்கு இடையேயான நகர்வே வாழ்க்கையாகும். ஒரே இடத்தில் இருந்தவாறு நீங்கள் உயிரோட்டத்துடன் இருக்க முடியாது. இதுதான் ஒரு உயிரற்ற பொருளுக்கும் உயிரோட்டத்துடன் இருக்கும் ஒரு நிகழ்விற்கும் உண்டான வேறுபாடு. உயிரற்றது ஓரிடத்திலேயே அசைவற்று இருக்கும். உயிருள்ளது நகரும். நகர்வது மட்டுமல்லாமல், தாண்டும், குதிக்கும். உயிரற்றது அறிந்ததிலேயே நிலை கொண்டிருக்கும். உயிருள்ளது அறிந்ததிலிருந்து அறியாததை நோக்கி தொடர்ந்து போய்க்கொண்டேயிருக்கும். இதுதான் நெருக்கடி. மனிதன் மிகவும் உயிரோட்டத்துடன் இருக்கிறான்.

நீங்கள் தொடர்ந்து நகர்ந்துகொண்டேயிருக்க வேண்டும். ஏனென்றால், நகர்வு என்றால் நீங்கள் அறிந்தவற்றிற்கு தொடர்ந்து

இறந்துகொண்டே இருக்க வேண்டும். பரிச்சயமானதற்கு கடந்த காலத்திற்கு, சௌகரியமானவற்றிற்கு, சுகமளிப்பதற்கு என எல்லாவற்றிற்கும் இறந்துகொண்டிருக்க வேண்டும். அதாவது அதைவிட்டு நகர்ந்துசெல்ல வேண்டும். அதை வாழ்ந்து பார்த்து விட்டீர்கள். அதில் திறமை பயின்று விட்டீர்கள். அதைப் பற்றி அதிகம் தெரிந்து கொண்டுள்ளீர்கள். அதில் இனி எந்த ஆபத்தும் இல்லை. அது உங்களுக்குப் பொருந்துகிறது. நீங்கள் அதற்குப் பொருந்துகிறீர்கள். ஆனால் மனிதன் முன்னேற வேண்டும். அவன் வீரதீரம் தேடிச் செல்ல வேண்டும். நீங்கள் தொடர்ந்து அந்த வீரதீரத்தில் ஈடுபடவேண்டும். அறிந்ததிலிருந்து அறியாததற்குப் போகும்போதுதான் நீங்கள் ஒரு மனிதன்.

மனம் கடந்தகாலத்துடன் தொங்கிக் கொண்டிருக்கும். ஏனென்றால் மனமே கடந்தகாலம்தான். ஆனால் உங்கள் உயிருரு கடந்த காலத்தையும் தாண்டிப் போக விரும்புகிறது. அது ஆராய முற்படுகிறது. உங்கள் உயிருருக்கு ஒரு உள்ளார்ந்த அதிருப்தி இருக்கிறது. நான் அதை தெய்வீக அதிருப்தி என்றழைப்பேன். உங்களுக்கு என்ன இருக்கிறதோ அது முடிந்து போனது. நீங்கள் என்னவாக இருக்கின்றீர்களோ அதுவும் முடிந்து போன ஒன்று. எது இல்லையோ அது இப்போது உங்களுக்கு தேவை. நீங்கள் எதுவாக இல்லையோ அதுவாக இருப்பது உங்கள் விருப்பம். மனிதன் வளமான உயிருருவாக, இருப்பதற்காக ஒரு புதிய உயிருருவாக இருப்பதற்காக இருட்டில் துழாவுகிறான்.

மனிதன் ஒரு நாள் பிறந்து மற்றொரு நாள் இறக்கிறான் என்பது சரியானது அல்ல. அது விலங்குகளுக்குப் பொருந்தும். ஆனால் மனிதனுக்கு மெய்ப்படாது. விலங்குகள் ஒரு நாள் பிறக்கும் - அவற்றிற்கு பிறந்த நாள் இருக்கும், பிறகு ஒருநாள் இறந்துபோகும். மனிதன் தொடர்ந்து இறந்துகொண்டே இருக்கிறான். தொடர்ந்து பிறந்துகொண்டேயிருக்கிறான். ஒவ்வொரு கணமும் ஒரு பிறப்பு மற்றும் இறப்பாகும். மனிதனில் பிறப்பும் இறப்பும் நேர்மாறானதல்ல. ஒரு பறவையின் இரண்டு இறக்கைகள் போல, நேயமுடையவை, ஒன்றிற்கு ஒன்று

உதவி செய்பவை. இறப்பு வெறுமனே பிறப்பு உண்டாக உதவி செய்கிறது. இறப்பு தொடர்ந்து களத்தை சுத்தம் செய்து கொண்டேயிருக்கிறது. இதனால் கடந்த காலம் இல்லாமல் போகும். வருங்காலம் இருக்க முடியும். இறப்பு பிறப்பின் சேவைக்காக இருக்கிறது. உண்மையில் அவற்றை இரண்டென அழைப்பதே தவறு. அது இரண்டு வெவ்வேறு கோணங்களில் பார்க்கப்படுகின்ற ஒரே வழிமுறையாகும்.

அது ஒரு கதவு போன்றது. ஒருபுறம் நுழைவு, மறுபுறம் வெளியேற்றம். அல்லது சுவாசம் போன்றது எனலாம். உள்ளே போகும் மூச்சை உள்மூச்சு என்றும், வெளியேறும் அதே மூச்சை வெளிமூச்சு என்றும் சொல்கிறோம். ஆனால் மூச்சு ஒன்றே.

இறப்பு வெளிமூச்சு, பிறப்பு உள்மூச்சு. பிறப்பு நுழைவு, இறப்பு வெளியேற்றம். ஆனால் அதே உயிராற்றல் தான். அதே அலைதான். மனிதன் ஒவ்வொரு கணமும் இறக்கவேண்டும். மீண்டும், மீண்டும், மீண்டும் பிறக்கத் தயாராக இருக்கவேண்டும். பிறப்பு மற்றும் இறப்பு என்ற வேற்றுமைக்கு இடையேதான் வாழ்வு. இந்த இரண்டிற்கும் நடுவே ஒரு இடைவெளி, அது வாழ்க்கை. கடந்த காலத்திற்கும் வருங்காலத்திற்கும் இடையே இருப்பது வாழ்க்கை.

அந்த சிறிய இடைவெளி 'நிகழ்காலம்' என்று அழைக்கப் படுகிறது. அதற்கு கால நீட்சி என்பது கிடையாது. அது காலவரையில்லாதது. கடந்த காலத்திற்கு கால அளவு இருக்கிறது. வருங்காலமும் அது போன்றதே, கால தொடர்ச்சி உள்ளது. ஆனால் நிகழ்காலத்திற்கு இல்லை. அது வெறுமனே இருக்கிறது. அணுநிலையாய் இருக்கிறது. நீண்ட கடந்த காலத்திற்கும் நீண்ட வருங்காலத்திற்கும் இடையே அந்த இடைவெளி நிலவுகிறது. யார் யார் தொடர்ந்து இறந்து கொண்டும், பிறந்து கொண்டும் இருக்கிறார்களோ அவர்கள் அந்த இடைவெளியை அறிவார்கள். ஏனென்றால் அவர்கள் மறுபடியும் மறுபடியும் அந்த இடைவெளியைக் கடந்து கொண்டேயிருப்பார்கள். ஒவ்வொரு முறையும் நீங்கள் அந்த இடைவெளியைக் கடக்கத் தயாராக இருக்கும்போது, ஒரு நெருக்கடியைக் காண்பீர்கள்.

நெருக்கடி என்னவென்றால், மனம் இயல்பாகவே அறிந்தவற்றை, பரிச்சயமானதை பற்றிக் கொள்ள விரும்பும். அதில் மனம் திறமையானது. அது எப்படியோ கற்றுக் கொண்டது, கடினமான கற்றல்தான். இப்போது நீங்கள் திடீரென நகர முற்படுகிறீர்கள். அந்தக் கற்றல் எல்லாம் வீண், தொலைந்து போகும். மறுபடியும் பொருத்தமாகாது. வேறு எந்தச் சூழ்நிலையிலும் அதற்கு அர்த்தம் இருக்காது. நீங்கள் எந்தச் சூழ்நிலையில் வாழ்ந்தீர்களோ அது மட்டுமே மனதுக்கு பொருள்படும். அதைப் பற்றிக் கொள் என்று மனம் சொல்லும்.

ஆனால் மனதினால் உயிருருவைக் கட்டுப்படுத்தி வைக்க முடியாது. உயிருரு எல்லையற்றது. மனம் ஒரு சிறிய ஓட்டை. உயிருரு வானத்தைப் போன்றது. மனதினுள் அதை அடக்க முடியாது. மனம் மிகக் குறுகலானது. உயிருரு அதனிடமிருந்து வெளியேற விரும்புகிறது. அதற்கு வளர்ந்து மேலும் மேலும் விரிய விரும்புகிறது. இருப்பின் தொலைவான மூலைக்குச் செல்ல உயிருரு விரும்புகிறது. உயிருரு வீரதீரமிக்கது. அது இடர்நேர்விற்கு விழைகின்றது. இதுதான் நெருக்கடி.

ஒவ்வொரு மனிதனும் இந்த நெருக்கடியைச் சந்திக்க வேண்டும். இதற்கு இரண்டு மாற்று வழிகள் உள்ளன. பயத்தின் காரணமாக கடந்தகாலத்திற்கு இறந்துபோவதை நீங்கள் நிறுத்திக் கொண்டு, தேங்கியவாறு இருக்கலாம். இந்தத் தேக்கத்தை மக்கள் பாதுகாப்பு என்கின்றனர். பாதுகாப்பு, இடர்காப்பு எல்லாம் தேக்கத்திற்கான பகுத்தறிவாக்கம். அவை நதிகளாய் இல்லாமல் குட்டைகளாகிவிடும். அவை சுருங்கிக் கொண்டே போகும். பாய்வின் மகிழ்ச்சி என்னவென்று அறியாதிருப்பர். பாய்வின் உபபொருள்தான் மகிழ்ச்சி, ஆறு பாயும்போது அதில் மகிழ்ச்சியுள்ளது, நடனம் தெரிகிறது. இசை கேட்கிறது. ஒரு இடைவெளியிலிருந்து மற்றோர் இடைவெளிக்கு உங்கள் வாழ்க்கை பாயும்போது அங்கே மகிழ்ச்சி இருக்கிறது. புதியதின் சிலிர்ப்பு இருக்கிறது.

கடந்தகாலத்திலே நீங்கள் பாதுகாப்பாக இருக்கலாம். நெருக்கடியைத் தவிர்க்கலாம். அதைத்தான் கோடிக்கணக்கானோர்

முடிவு செய்துள்ளனர். ஆனால் அவர்கள் இடைப்பட்ட தரமாகவே இருப்பார்கள். குறை அறிவுடையோராக இருப்பர். அவர்களுக்கு வயதாகுமே தவிர வளர மாட்டார்கள். தேங்கி நிற்பார்கள். அவர்கள் வாழ்க்கை தரிசு நிலமாக இருக்குமேயன்றி சமுத்திரத்தைக் காண வரமாட்டார்கள். சமுத்திரத்திற்குள் நுழையும்போதுதான் ஆனந்தம் என்பதை உணர முடியும். மனிதன் தொடர்ந்து தன் கடந்த காலத்தை விட்டுவிட வேண்டும். தேடிக் கொண்டேயிருக்க வேண்டும். மனிதன் தன் தேடலுக்கு உணவளிக்க வேண்டும். ஊட்டச்சத்து அளிக்க வேண்டும்.

ஆனால் அதைத் தவிர்க்க மனிதன் பலவற்றைப் புனைந்துள்ளான். பல தத்துவங்களைக் கண்டுபிடித்துள்ளான். தத்துவம் ஒரு கவனமாற்றம். அது உண்மையான பிரச்சினையை உங்கள் முன் வைக்காது. பிரச்சினையைத் தவிர்க்க பல பிரச்சினைகளை முன் வைக்கும். தொடர்ந்து புதிய பிரச்சினைகளை உருவாக்கி, அந்தப் பிரச்சினைகளுக்குள் சென்று அவற்றிற்கு தீர்வு கண்டுபிடித்து, அந்தத் தீர்வுகளிலிருந்து மேலும் பல பிரச்சினைகளை உருவாக்கி, இப்படியே மேன்மேலும் போய்க்கொண்டே இருக்கும். அது ஒரு கவனச் சிதைவுக் கருவி.

உண்மையான பிரச்சினை ஒன்றே ஒன்றுதான். பிரச்சினை என்னவென்றால், தொடர்ந்து எவ்வாறு கடந்தகாலத்திற்கு இறந்துகொண்டே போவது? ஒவ்வொரு கணமும் புதிய வாழ்வை ஏற்றுக்கொள்ள எப்படித் துணிவுடன் இருப்பது? எப்படித் தொடர்ந்து புதிதாய் பிறந்து கொண்டே இருப்பது? இந்தப் பிரச்சினையை தத்துவம் தவிர்க்கின்றது. அது கடவுளைப் பற்றிப் பேசும். உண்மையைப் பற்றிப் பேசும். உருவாக்கம் பற்றிப் பேசும். சொர்க்கம், நரகம் என்று ஓராயிரம் விஷயங்களைப் பற்றிப் பேசும். அதை தாவோயிஸ்டுகள் ''பத்தாயிரம் விஷயங்கள்'' என்பர். தத்துவம் இவற்றைப் பற்றியெல்லாம் பேசிக் கொண்டேயிருக்கும். தேவையற்ற பரபரப்பு உண்டாக்கும். இந்த தத்துவார்த்த ஊடகங்களில் தொலைந்துபோவது மிக எளிதானது. அது எதற்கும் தீர்வு தராது. அது வெறுமனே உங்களை ஏய்க்கும்.

அடுத்து மத சாஸ்திரங்கள் இருக்கின்றன. தத்துவம் கவனச் சிதைவு என்றால் மத சாஸ்திரம் ஒரு போலி - சமயம், உண்மை நிலை வலியுறுத்துபவை அல்ல. அது சமயம் என்ற போர்வையில் இருக்கும் தத்துவம். சமயத்தைப் போல் பாசாங்கு செய்யும் தத்துவம்தான் மத சாஸ்திரங்கள். கிறிஸ்துவ சாஸ்திரம், ஹிந்து சாஸ்திரம், பௌத்த சாஸ்திரம் என இறையியல்கள் இருக்கின்றன. இவை உங்களுக்கு செயற்கையான பதில்களையே தரும். 'கேள்வியை' வாழ்ந்து பார்ப்பதின் மூலமாகவே உண்மையான பதில் கிடைக்கும். பிரச்சினையைத் தீர்க்க அதனுள் செல்ல வேண்டும். வேறு வழியில்லை. மற்றவர்களின் பதில்கள் மூலம் தீர்வு கிடைக்காது. என் பதில் உங்களுக்குப் பதிலாகாது. உங்கள் 'பிரச்சினையை' நீங்கள் வாழ்ந்தாக வேண்டும். நீங்கள் பற்பல துயரங்கள், தவிப்புகளைக் கடந்து வரவேண்டும். நெருக்கடியினூடே நீங்கள் வாழ்ந்து வெளிவர வேண்டும்; அப்படியானால்தான் உங்கள் பனிக்கட்டி உருகி நீங்கள் பாயத் தொடங்குவீர்கள்.

இந்த நெருக்கடிகளை எல்லாம் எளிதாக தத்துவம் அல்லது இறையியல்கொண்டு தவிர்க்கமுடியாது. எல்லோரும் அவற்றைத் தவிர்க்க விரும்புகின்றனர். அதனால்தான், மக்கள் கிறிஸ்தவர்களாக, ஹிந்துக்களாக, முகமதியர்களாக உருவாகின்றனர். அவர்கள் எல்லோரும் மற்றவர்களின் பதிலை தங்களுடையது போல் எடுத்துக் கொண்டனர். ''அதுபோல'' என்பதிலேயே வாழ்கின்றனர். அவர்கள் முழு வாழ்க்கையுமே 'அதுபோல'' என்றாகிவிடுகிறது. அது உண்மையல்ல. நம்பத் தகுந்ததல்ல.

புத்தரின் பதில் எவ்வாறு உங்கள் பதிலாக முடியும்? புத்தருக்கு முன் பல புத்தர்கள் இருந்துள்ளார்கள்; அவர்களின் பதில் புத்தரின் பதிலாகியிருக்க முடியாது. எப்படி கிறிஸ்துவிற்கு பதில் உங்கள் பதிலாகும்? அவர் தன் பதிலை நாடினார். அதைக் கண்டுபிடிக்க வேண்டியிருந்தது. அவர் சிலுவையை சுமந்து, அதில் அறையப்பட வேண்டியிருந்தது. அவர் பதில் எப்படி உங்கள் பதிலாக முடியும்? நீங்கள் இன்னமும் சிலுவையை

உங்கள் முதுகில் சுமத்தவில்லையே. நீங்கள் தவிர்த்துக் கொண்டேயிருந்தீர்கள். தப்பித்துக் கொண்டேயிருந்தீர்கள். உங்கள் தருக்க வாதம் நெருப்புக் கோழியைப் போன்றது. உங்கள் கண்களைத் திறவுங்கள். பிரச்சினை பெரியது, அளப்பரியது. ஒருவர் தன் கண்களை மூடி அதைப் பற்றி மறந்துவிடுவது இயல்பே. ஏதாவது ஒரு வேலை, செயல் என்று எதிலாவது ஈடுபட்டு அதைப் பற்றி முற்றிலும் மறந்துவிடுவது. இதைத்தான் மக்கள் செய்து கொண்டேயிருக்கின்றனர்.

இதுதான் அரசியலும். மக்கள் அற்பமானவற்றில் ஈடுபட்டு, அதில் மூழ்கிப் போவதால் தீர்க்க வேண்டியதைப் பற்றி மறந்து போகின்றனர். அதுவில்லாமல் அவர்கள் மனிதர்களாகவே இருக்கமாட்டார்கள். அதை மறந்துவிடுகின்றனர். அரசியல் மக்கள் அனைவருக்கும் பிழைப்பு தருகிறது. ஊகம் மூலமாக எப்படி தத்துவம் பிழைப்பாக இருக்கிறதோ, அதேபோன்று செயல் மூலம் அரசியல் பிழைப்பாக இருக்கிறது.

பெற்றோரும் தாங்கள் கடன் வாங்கிய அறிவை தங்கள் பிள்ளைகளுக்குத் தருவதில் அவசரம் காட்டுகின்றனர். பள்ளிகள், கல்லூரிகள், பல்கலைக்கழகங்கள் பலவும் உங்கள் கடந்த காலம் உங்களுக்குள் வாழ்வதற்காகவே இருக்கின்றன. இதனால் உங்களால் கடந்தகாலத்தை மறப்பது இயலாத ஒன்று. மேலும் உங்கள் வருங்கால சாத்தியங்களையும் நீங்கள் மறக்க நேரிடுவீர்கள். பல்கலைக்கழகங்கள் உங்களை கடந்த காலத்தைப்பற்றி திறமை பயில வைக்கின்றன. வருங்காலச் சாத்தியக் கூறுகளை எல்லாம் அழித்து விடுகின்றன. பெற்றோர், சமய குருக்கள் மற்றும் அரசியல்வாதிகளின் கூட்டுச் சதியாக இருப்பதுதான் பல்கலைக்கழகம்.

நீங்கள் திரும்பத் திரும்ப ஒரு குறிப்பிட்ட அறிவுத் தொகுதியை செயலாற்றிக் கொண்டேயிருந்தால், அது உங்களுடையதே அல்ல என்பதை மறந்துவிடுவீர்கள்.

அடால்ஃப் ஹிட்லர் தன் சுய சரிதையான மெய்ன் காம்ஃபில் சொல்லியிருப்பது: உண்மைக்கும் பொய்க்கும்

சிறிய வேறுபாடே உள்ளது. அந்த வேறுபாடு திரும்பத் திரும்பச் சொல்லல். ஒரு பொய்யை திரும்பத் திரும்பச் சொன்னால் அது உண்மையாகிவிடும். அவருக்கு அது தெரியும். ஏனென்றால் அவர் அதைச் செய்திருக்கிறார்.

ஆனால் காலங்காலமாக மத குருக்களும் அரசியல்வாதிகளும் இதைச் செய்துவந்துள்ளனர். சில விஷயங்களை திரும்பத் திரும்பச் செய்துகொண்டிருந்தனர். மெல்ல மெல்ல இந்த திரும்பத் திரும்பச் சொன்னவை யாவும் உங்கள் எண்ணங்களின் பழக்கமாகிவிடும்; அவை தன்னுணர்வற்றுப் போய்விடும். நீங்கள் தொடர்ந்து சொல்லிக்கொண்டே இருப்பீர்கள். உங்கள் பெற்றோர் உங்களுக்குக் கொடுத்தாற்போல் நீங்கள் உங்கள் பிள்ளைகளுக்கு கொடுப்பீர்கள். உங்கள் பெற்றோர்கள் வாழ்ந்து பார்த்ததில்லை. இல்லையென்றால் அவர்கள் கிறிஸ்துவாக, புத்தராக, கிருஷ்ணராக உருவாகியிருப்பார்கள். ஒரு குழந்தையாக உங்களையே தற்காத்துக் கொள்ளமுடியாத நிலையில் நீங்கள் இருக்கும்போது உங்கள் பெற்றோர் வழங்கிய கருத்துக்களை நீங்கள் சொல்லிக் கொண்டிருக்கிறீர்கள். இது நீங்கள் குழந்தையாக, பாதிக்கப்படும் வகையில் இருக்கும்போது, நம்பிக்கை கொண்டு இருக்கும்போது நடந்தது. உங்கள் பெற்றோர் உங்களை ஏமாற்றுகிறார்கள் என்பது உங்களுக்குத் தெரியாது. ஆனால் அவர்கள் தெரிந்தே உங்களை ஏமாற்றவில்லை. அவர்கள் பெற்றோர் அதைச் செய்தனர். அப்படியே அவர்களின் பெற்றோரும் என்றவாறு நடந்தது. குழந்தைகளை நடத்த அவர்களுக்குத் தெரிந்த வழி இது ஒன்றுதான். அவர்களே பாதிக்கப்பட்டவர்கள். அவர்கள்மீது கோபப்படாதீர்கள். அவர்கள் தெரிந்து தவறு செய்யவில்லை. ஆனால் செய்தது தவறுதான்.

அவர்கள் உங்களை கிறிஸ்தவர்களாக, ஹிந்துக்களாக, மொகமதியர்களாக உருவாக்கியுள்ளனர். அவர்கள் உங்களை கம்யூனிஸ்டுகளாக, ஃபாசிஸ்டுகளாக அல்லது ஏதோ ஒன்றாக உருவாக்கியுள்ளனர். அவர்கள் உங்களுக்கு ஓர் திறந்த வளர்ச்சிப்

பாதை அளிக்கவில்லை. ஏன்? ஏன் அவ்வளவு பயந்தார்கள்? சர்ச்சிற்கு உங்களை அனுப்புவதில் ஏன் இவ்வளவு அவசரம்? அவசரம் ஏனென்றால் அவர்கள் உங்களை நேசிப்பதாக அவர்கள் நினைத்தார்கள். உங்களைப் பாதுகாக்க விரும்பினார்கள். பிரச்சினையிலிருந்து, ஒரு நாள் நீங்கள் எதிர்கொள்ளப் போகும் நெருக்கடியிலிருந்து உங்களைப் பாதுகாக்க விரும்பினார்கள். ஆகையால் கேள்விகள் எழுவதற்கு முன்னரே உங்களுக்குப் பதில்களை அளித்துக் கொண்டிருந்தனர். உங்களுக்கு பதில்கள் அளித்ததற்கு காரணம் எப்போது கேள்விகள் எழுகின்றனவோ உங்களிடம் பதில்கள் இருக்கும்.

ஆனால் அந்தப் பதில்கள் பொய்யானவை. உங்கள்மீது இருக்கும் பாசத்தால் சொன்னவை. பாசத்தினால் செய்தவை எல்லாம் சரியாக இருக்க வேண்டுமென்று அவசியமில்லை. பாசம் உணர்வு கொண்டு இருந்தாலொழிய அது தீமையே பயக்கும். உணர்வு இல்லாத நேசத்தினால் உலகம் அதிகம் துன்பத்திற்கு உள்ளாகிறது. அவர்கள் உங்களைக் காப்பாற்றும் பொருட்டு, உங்கள் வாழ்க்கையில் நீங்கள் எதிர்கொள்ளும் நெருக்கடியை சமாளிக்க உங்களுக்கு அவர்கள் பதில்களைத் தந்தனர் - ஆனால் பதில்கள் தரக்கூடியவை அல்ல. அவை கண்டு பிடிக்கப்பட வேண்டியவை.

பதில்களுக்கு ஒருவர் கட்டணம் செலுத்தவேண்டும். அவை மலிவானவையல்ல. அறிந்திருத்தல் என்பது அறிவு அல்ல. அரசியல் ஒரு வகையான கவனமாற்றம் தருகிறது என்றால், தத்துவம் வேறொரு வகையான கவன மாற்றம் வழங்குகிறது.

கலை என்பது வெறும் ஆறுதல்தான். அது சும்மா உங்கள் சிறைக் கூடத்தை அலங்கரிக்கின்றது, அழகாக்குகின்றது, வர்ணம் பூசிக் கொடுக்கிறது. வாழத் தகுதியாக்குகிறது. அது உங்களை சிறைக் கூடத்திலேயே வைக்கின்றது. ஏனென்றால் சிறைக்கூடம் அவ்வளவு அழகாக உள்ளது. தங்கத்தினால் ஆன கூண்டுபோல பறவை வானை மறந்துபோகிறது. கூண்டைவிட்டு வெளியேறுவது கடினமாகிறது - அது தங்கக் கூண்டல்லவா?

தத்துவம் கவனச்சிதைவு உண்டாக்குகிறது. இறையியல் ஏமாற்றுகிறது. கலை வெறுமனே அலங்காரம் செய்கிறது. ஆறுதல் அளிக்கிறது. கலை ஒரு வகையான மருந்துக் களிம்பு, ஆனால் தேவையோ அறுவை சிகிச்சை. களிம்பு அல்ல. ஆறுதலளிப்பது தான், ஆனால் உருமாற்றுவதல்ல. கல்வியே ஒரு சதிபோலச் செயல்படுகிறது. கல்வி கடந்த காலத்தின் சேவையில் உள்ளது. கல்வி படைப்புத்திறன் கொண்டு இல்லை. ஒருவர் கூடிய விரைவில் இவற்றில் எல்லாம்தான் ஈடுபடுகிறார்.

சமயம் மட்டுமே உங்களை தேக்கத்தைத் தாண்டி இட்டுச் செல்ல முடியும். ஆனால் நான் சமயம் என்று சொல்லும்போது ஹிந்து, கிறிஸ்துவம், இஸ்லாம் என்ற பொருளில் சொல்லவில்லை. நான் வெறுமனே சமயத்தன்மையைக் குறிப்பிடுகிறேன். சமயத்தன்மை எளிதான ஒன்று. அது அவ்வளவு எளிதாக இருப்பதினால் நீங்கள் அதை நம்ப மாட்டீர்கள். இறை இயல் சிக்கலானது. சமயம் எளிது. உண்மை வெகு எளிதானது. தத்துவங்கள் ரொம்ப சிக்கலானவை. தத்துவங்கள் சிக்கலாகத்தான் இருக்க வேண்டும். இல்லை என்றால் அதில் இருக்கும் பொய்யை நீங்கள் எளிதில் கண்டுவிடுவீர்கள். அவர்கள் அந்தளவிற்கு விளங்கா மொழிநடை, மேகமூட்டம், சூட்சுமங்கள், சிக்கல்களை உருவாக்க வேண்டும். அதை எதிர் புதிராகவும் ஒரு கடுவினா போலவும் உருவாக்க வேண்டும்.

நீங்கள் அதிலிருந்து வெளிவரவே முடியாது. தத்துவங்கள், இறையியல்கள் எல்லாமே கடுஞ்சிக்கலமைவுகள். அதற்குள் நீங்கள் நுழைய முடியும். வெளிவருவது கடினம், ஏனென்றால், ஒன்று மற்றொன்றிற்குள் இட்டுச் செல்லும். நீங்கள் அதற்குள் போகப் போக சிக்கலானவை மேலும் சிக்கல் மயமாகும்.

உண்மை எளிதானது. சமயம் எளிதானது. சமயத்திற்கு இறையியல் கிடையாது. சமயம் பரிசுத்தமான அனுபவம். நீங்கள் கடந்த காலத்திற்கு மடிந்து வருங்காலத்திற்குள் பிறக்கும்போது அந்த அனுபவம் ஏற்படும். இந்த இரண்டிற்குள் இருப்பது சமயம், மெய்மைக்குள் உள்நோக்குவது.

நினைவில் இருக்கட்டும். உலகின் இறையியலாளர்கள் விஷயங்கள் நிலையாமை உடையவை என்று சுட்டிக்காட்டுவர். ரோஜா ஒன்றின் பிரகாசமெல்லாம் சற்று நேரத்திற்குத்தான். ஈசல் பூச்சி காலையில் பிறந்து மாலையில் மரித்துப்போகும். கடவுள் வந்து போவதில்லை. ஆதலினால் கடவுளை மட்டுமே நாடுங்கள். இது பேராசை தவிர வேறு ஒன்றுமில்லை - அதே பழைய பேராசை புதிய வடிவில். பழைய மது புதிய புட்டியில் அவ்வளவே.

கடவுள் நிரந்தரமானவர் அல்ல. ஆனால் இறையியலாளர்களின் கடவுள் மட்டும் நிரந்தரம் - ஏனென்றால் நிரந்தரமாக ஏதோ ஒன்று வேண்டும் என்று அகங்காரம் விரும்புகிறது. அகங்காரம் பேராசையுடையது; ஏதோ ஒன்றுடன் தொங்கிக் கொண்டிருக்க வேண்டும். அதற்கு அறியாத கடவுள் வேண்டாம். நன்றாக அறியப்பட்ட கடவுளே அதற்கு வேண்டும். ஆகவே இறையியலாளர்கள் தரும் கருத்துக்களை மக்கள் பிடித்துக் கொள்கின்றனர். கிறிஸ்தவக் கடவுள், இந்துக் கடவுள், கடவுளின் வடிவு, கடவுளின் பெயர் என.

கடவுள் அறியாப் பொருள். அவரை அறிந்தவர்க்கு கூட அவரைத் தெரியாது. அவரை தெரிந்து கொண்டவுடன் அவர்கள் புரிந்துகொள்வது என்னவென்றால், தாங்கள் அறியாத ஒன்றிடம் வந்துவிட்டோம் என்பதைத்தான். அதுதான் அழகு. மேலும் கடவுள் நிரந்தரமல்ல. கடவுள் நிச்சயமாக காலவரம்பற்றவர். ஆனால் நிரந்தரமானவரல்ல. ஆனால் அந்த காலவரம்பு ஒரு பாய்வு. கோயிலில் நீங்கள் வணங்கும் கற்சிலையை விட கடவுள் பூவில் அதிகமாக இருக்கிறார். கடவுள் ஒவ்வொரு கணத்திலும் இருக்கிறார். ஒவ்வொரு இறப்பிலும், ஒவ்வொரு பிறப்பிலும் இருக்கிறார்.

கடவுள் என்பது மாற்றம். கடவுள் என்பது நெருக்கடி. கடவுள் என்பது பெருங்குழப்பம்.

பேராசையின் பெயரால் நீங்கள் தொடர்ந்து அறிந்த கடவுள்களையே வணங்கிக் கொண்டு இருக்கிறீர்கள். ஆயினும்

உண்மையான சமயம் கணநேரமுடையது. மாள்வுக்குரியது. உண்மையான சமயத்திற்கும், போலியான சமயத்திற்கும் உள்ள வேறுபாடு இதுவாகத்தான் இருக்க வேண்டும். போலி சமயம் நிரந்தரக் கடவுளைப் பற்றி பேசுகிறது. உண்மையான சமயம் நிரந்தரமற்ற வாழ்க்கை, பாய்மம் பற்றிப் பேசுகிறது - காலையில் பூத்த மலர் - மாலையில் இல்லாமல் போகிறது. சில நாட்கள் முன்பு வரை பச்சைப்பசேல் என்றிருந்த இவை இப்போது வாடிப்போய் மரத்திலிருந்து உதிர்ந்துவிடுகிறது. காற்று அதனுடன் விளையாடிக் கொண்டிருக்கிறது. இளமையாய் இருந்த மனிதன் இப்போது வயோதிகன். எல்லாம் மாறிக் கொண்டிருக்கின்றன. மாற்றத்தைத் தவிர எல்லாம் மாறிக் கொண்டிருக்கின்றன.

கடவுள் என்பது மாற்றம், ஏனென்றால் மாற்றம் ஒன்றே காலவரம்பற்றது. உண்மையான சமயம் க்ஷணநேரத்திற்கான மற்றும் மாள்விற்குரியதை பார்க்கிறது. வானிலிருந்து கீழிறங்கும் வானம்பாடி, பச்சைத் தழையின் மணம், ஓர் அந்நியனின் பார்வை, குழந்தையின் சிரிப்பு, யாரோ ஒருவரின் கண்களில் ஆனந்தக் கண்ணீர். காற்றின் இரைச்சல் - அந்த காற்றே.... என பல.

உண்மையான சமயம் இவ்வாழ்க்கையைத் தாண்டி வேறு எதைப் பற்றியும் கவலைப்படுவதில்லை. உண்மையான சமயம் இவ்வாழ்க்கைக்குள் நோக்கி அதற்கு அப்பால் உள்ளதைக் கண்டுபிடிக்கிறது. அந்த மற்றோர் மெய்மை வேறு எங்கும் இல்லை. அது இந்த மெய்மைக்குள்தான் ஒளிந்து இருக்கிறது. இந்த மெய்மைதான் மற்றோர் மெய்மை. வேறுபாடு உங்கள் நோக்கில்தான். உங்களிடம் ஆழம் இருக்குமாயின், இந்த மெய்மையே அந்த வேறோர் மெய்மை என்பதை நீங்கள் அறிவீர்கள். இதுவே அது/ பிரபலமான உபநிடதக் கருத்து: சுவேத கேது, நீதான் அது'. தத்துவமசி சுவேத கேது.

கடவுள் எல்லாவற்றிலும் இருக்கின்றார். எல்லாவற்றின் ஆழம்தான் கடவுள் - இந்த வழியிலும் குறிப்பிடலாம். ரோஜாப் பூவின் ஆழம்தான் கடவுள். பாறையின் ஆழம், ஆண் மற்றும் பெண்ணின் ஆழம் கடவுள். நேசம், துக்கம், மகிழ்ச்சி

என்பவற்றின் ஆழம் கடவுள். ஆக கடவுள் எனில் ஆழம். உங்களுக்கு ஆழமாக வாழத் தெரிந்தால் - அப்படி வாழத் தெரிவதற்கு, நீங்கள் தொடர்ந்து கடந்த காலத்திற்கு இறந்தும், வருங்காலத்திற்கு பிறந்துகொண்டும் இருக்கவேண்டும். இந்த இரண்டிற்கும் இடையே ஆழம் ஏற்படுகிறது, உங்கள் உயிருரு ஆழமாகிறது. திடீரென கதவு திறந்து உங்களால் அது எது என அறிய முடியும். ஒரு கணம் மனம் செயலற்றுப் போய்விடும், மனம் கைவிடப்படும். புதிய மனம் இன்னமும் பிறக்கவில்லை, நீங்கள் அப்போது உண்மையை உள்ளபடியே காண முடியும். விரைவில் புதிய மனம் பிறக்கும், அது பிறந்த கணத்திலேயே அதற்கு வயதாகத் தொடங்குகிறது. மறுபடியும் நீங்கள் அதை கைவிட வேண்டும். இதைத்தான் நான் தியானம் என்றழைக்கிறேன்.

தியானம் தான் வாழ்க்கையின் உண்மையான நெருக்கடியை எதிர்கொள்வதற்கான வழி. ஒருவருடைய சொந்த வளர்ச்சி மற்றும் வளர்ந்து வரும் துன்பங்களை எதிர்கொள்வதற்கான ஒரே வழி தியானம்தான்.

தத்துவம் கவன மாற்றம் செய்கிறது, இறையியல் ஏமாற்றுகிறது- அரசியல் உங்களை முட்டாள்தனங்களில் மட்டுமே ஈடுபட வைக்கிறது. அறிவியல் உண்மையான பிரச்சினைகளை சமாளிக்க இன்னும் துணிவு கொள்ளவில்லை, வெறுமனே புற விஷயங்களில் ஈடுபட்டுக் கொண்டிருக்கிறது.

பிறப்பு மற்றும் இறப்பு என இரண்டும் சேர்ந்து, பொருள் மற்றும் மனம் சேர்ந்து, இது மற்றும் அது என இரண்டும் சேர்ந்துள்ள முரண்பாடான மெய்மைக்குள் செல்லும் துணிவுதான் சமயம். வெகுசில மனிதர்களே சமயசார்புடையவராக இருந்துள்ளனர். ஒரு புத்தர், ஒரு கிருஷ்ணர், ஒரு சாருதுஷ்டிரா. ஒவ்வொரு மனிதனும் சமய சார்புடையதாக இருக்கும் மகிழ்வை உணர முடியும். கடவுளை வாழ்ந்து பார்க்க முடியும். ஆனால் நீங்கள் பலவற்றைத் துறக்க வேண்டியிருக்கும். உங்கள் தத்துவங்கள், சமயசார்புகள் ஆகியவற்றை நீங்கள் துறக்க வேண்டும். உங்கள் முட்டாள்தனமான ஈடுபாடுகளைக் கைவிட வேண்டும்.

நான் உலகைத் துறக்க வேண்டும் என்று சொல்லவில்லை. உங்கள் மனைவி, குழந்தைகள், உங்கள் வேலையை விடச் சொல்லவில்லை. அவை பிரச்சினையில்லை. உண்மையான பிரச்சினை உங்கள் நம்பிக்கைகள்தான். உங்கள் நம்பிக்கைகளைத் துறக்க வேண்டும்.

அப்படியானால் உலகில் என்ன நடக்கும்? யாரோ ஒருவர் உலகை வெறுத்து, குடும்பம் குழந்தைகளைத் துறந்து, இமயமலைக்கு ஓடிப்போகிறார், அல்லது ஒரு கத்தோலிக்க மடாலயத்திற்குப் போகிறார். அவர் தன் நம்பிக்கைகளைத் தவிர எல்லாவற்றையும் கைவிடுகிறார். அந்த நம்பிக்கைகளை மடாலயத்திற்கு தன்னுடன் எடுத்துச் செல்கிறார், ஆனால் உண்மையிலேயே துறக்க வேண்டியவை அந்த நம்பிக்கைகளைத்தான். நான் என் சன்யாசிகளுக்கு அந்த நம்பிக்கைகளை, கருத்தாக்கங்களை, முற்சாய்வுகளை துறக்கக் கற்றுக்கொடுக்கிறேன். உலகம் முழுமையான அழகுடையது, ஏனென்றால் உலகம்தான் கண்கண்ட கடவுள். நீங்கள் பக்குவப்பட்டதை, கற்றுக் கொடுக்கப்பட்டதை எல்லாம் துறந்திடுங்கள். நீங்கள் பக்குவப்பட வைக்கப்பட்டதைக் கைவிட்டால், உங்கள் அறியாமையைத் துறக்கின்றீர்கள். நீங்கள் அதன் பிறகு களங்கமற்று ஆவீர்கள். அந்தக் களங்கமற்ற நிலையில் அறிதல் எழும். ஒருவர் ஞானியாவார். ஆனால் நினைவில் கொள்ளுங்கள். நீங்கள் ஞானம் அடைந்து விட்டீர்கள் என்றால், உலகம் உங்களை ஞானியாகக் கருதாது. நீங்கள் ஒரு முட்டாள் என்று உலகம் நினைக்கும்.

ஏசுவை முட்டாள் என்று நினைத்தனர். புத்தருக்கும் அதே கதிதான். ஒருக்கால் லாவோட்சுவிடம் ''நீ ஒரு முட்டாள்'' என்று மக்கள் பல முறை சொல்லியிருக்க வேண்டும். அவர் ''*தாவே தேசிங்*'' நூலில் எழுதியது. ''என்னைத் தவிர எல்லோரும் புத்தி சாலிகளாக இருக்கிறார்கள். நான் ஒரு முட்டாள்'' முட்டாள்கள் அந்தளவிற்கு பெரும்பான்மையாக இருப்பதினால், நீங்கள் ஞானம் பெற்றுவிட்டால் நீங்கள் பயித்தியமாகி விட்டதாய் நினைப்பார்கள்.

நினைவில் கொள்ளுங்கள்-குருடர்கள் நிறைந்த பூமியில் கண்கள் பெற்று இருந்தால் நீங்கள் சில விஷயங்களுக்குத் தயாராக இருக்க வேண்டும். உங்களை கண்டு சிரிப்பார்கள். உங்களுக்கு கண்கள் உள்ளன என்று நம்பமாட்டார்கள். உங்களை ஒரு ஏமாற்றுக்காரன் என்று நினைப்பார்கள். உங்களுக்குப் பார்வை இருக்கிறது என்ற அறிவிப்பிற்குப் பின்னால் ஏதோ ஒரு செயல் நோக்கம் உள்ளது என்று நினைப்பார்கள். கோபப்படுவார்கள், மூர்க்கம் கொள்வார்கள். உங்களுக்கு விஷம் வைக்கலாம், கொல்ல முயலலாம். ஒன்று மட்டும் நிச்சயம். நீங்கள் ஒரு ஞானி என்பதை மட்டும் அவர்கள் நம்பவில்லை. இதற்குக் காரணம், நீங்கள் ஞானி என்று அவர்கள் நினைத்தால் நாங்கள் அவ்வாறு இல்லை என்பதை அவர்கள் ஏற்றுக்கொள்ள நேரிடும். அது வெகு கடினம். ஏசுவைக் கழுவில் ஏற்றுவதோ, மன்சூரைக் கொலை செய்வதோ, சாக்ரடீசிற்கு விஷம் வைப்பதோ நாம் எல்லோரும் முட்டாள்கள் என்று நினைப்பதை விட எளிது.

ஏசுவின் இருப்பு நெருக்கடியைக் கொண்டு வருகிறது. அவர் சரியென்றால் மற்றவரெல்லாம் தவறாகின்றனர். அவர் தவறென்றால் மற்றவரெல்லாம் தங்கள் சுகானுபவத்திலும், தங்களின் சுகவாச சீவன உலகில் நெகிழ்ந்து போய் நெருக்கடியைப் பற்றியெல்லாம் மறந்துவிடலாம். ஏசு கதவைத் திறக்கிறார். ஏசு பிரச்சினையாகிறார். இதை நினைவில் கொள்ளுங்கள்.

ஒரு உண்மையான புத்தரோ, ஏசுவோ உங்களுக்கு பதில்களை வழங்க மாட்டார். உங்களுக்கு மறந்துபோன பிரச்சினையைக் வெறுமனே கொண்டு வருவார். அவர் பிரச்சினையை மீண்டும் உருவாக்குகிறார். உங்கள் முன்பு பிரச்சினையை வாழ்ந்து காட்டுகிறார். பிரச்சினையைக் காண உங்களை நிர்பந்தப்படுத்துகிறார், அதில் அவர் அவ்வளவு விடாப்பிடியாக இருப்பதினால் அவர் உங்களுக்கு எரிச்சல் தருகிறார்.

ஏதென்ஸ் நகரின் தெருக்களில் நடந்துபோகும் சாக்ரடீசை நினைவு கூறுங்கள். அவர் எல்லோரையும் எரிச்சல்படுத்திக்

கொண்டிருந்தார். அவர் எவருக்கும் தீங்கு செய்யவில்லை. அவரை விஷமிட்டுக் கொல்வதற்குக் காரணமேயில்லை. ஆனால் அவர் எரிச்சல் மூட்டினார். அவர் கேள்விகள் கேட்டுக் கொண்டிருந்தார், யாருக்கும் கேட்கப் பிடிக்கவில்லை. ஏனென்றால் அந்தக் கேள்விகள் உங்கள் ஆதாரத்தையே குலைத்தது. அவை ஆபத்தான கேள்விகள். அவை உங்களுக்குள் சென்றால், அதன்பிறகு அவ்வளவு எளிதாக உங்களால் தாங்கமுடியாது. உங்களை ஆட்டிப்படைக்கும் அந்தக் கேள்விகள் ஒரு முறை உங்களின் உணர்வு நிலைக்குள் புகுந்துவிட்டதென்றால், நீங்கள் வாழ்ந்து வந்தது போல இனி வாழ முடியாது. அந்தக் கேள்விகள் உங்களுக்குள் விதைகளாகி விடும். உங்களுக்குள் வளரத் தொடங்கும், உங்களை மிக நுணுக்கமான முறையில் மாற்றத் தொடங்கிவிடும்.

ஆக, ஏசு, சாக்ரடீஸ் போன்றோர் மீது மக்கள் சினம் கொண்டு இருந்தனர். தங்கள் தூக்கத்தைக் காப்பாற்றும்பொருட்டு அவர்கள் கொலை செய்ய வேண்டி இருந்தது. பிரச்சினை மறக்க கொல்ல வேண்டியிருந்தது. ஏசு வெறுமனே ஒரு கேள்விக்குறி, அதை பணம், மதிப்பு, அதிகாரத் தேடல், அரசியல், தத்துவம் கலை என்று எப்படியோ மறந்து போயினர். எதிலாவது ஈடுபட்டு பிரச்சினையை மறந்தனர். இப்போது இந்த மனிதர் வந்து கூரை மேல் நின்று கொண்டு கூவுகிறார்.

அதைத்தான் ஏசு தன் சீடர்களிடம் சொன்னார். ''கூரை மேல் நின்று கூவுங்கள். ஏனென்றால் மக்கள் அயர்ந்து தூங்கிக்கொண்டிருக்கின்றனர். நீங்கள் சப்தமாகக் கத்திக் கொண்டேயிருந்தால்தான் அவர்கள் கேட்பார்கள். தொடர்ந்து அடித்துக் கொண்டேயிருந்தால் ஒரு நாள் தங்கள் வாழ்வின் உண்மையான பிரச்சினையை அவர்கள் தீர்க்கவில்லை என்பதை உணர்வார்கள்.'' உங்கள் வாழ்க்கையின் உண்மையான பிரச்சினையை நீங்கள் தீர்க்காவிட்டால் உங்களால் எப்படி வாழ முடியும்? வாழ்க்கையின் உண்மையான பிரச்சினை தீர்க்கப்பட்டால்தான் வாழ்க்கையே தொடங்கும்.

உண்மையான பிரச்சினை என்பது என்ன? உண்மையான பிரச்சினை என்பது எவ்வாறு கடந்த காலத்திற்கு இறந்து போயும் தொடர்ந்து வருங்காலத்திற்கு எப்படி பிறப்பதும் என்பதே. எவ்வாறு பனித்துளி போல இளமையாக, புத்துணர்ச்சியோடு இருப்பது எப்படி வயதாகாமல் இருப்பது. இதுதான் வளர்வதற்கான வழி. வாழ்விலும் சாவிலும் புத்துணர்ச்சி தொலைந்து விடக்கூடாது. உங்கள் மீது தூசு படிந்து விடக்கூடாது.

இப்பொழுது இந்த அழகான கதை:

> *முன் ஒரு காலத்தில் இருந்த அரசன் ஒருவனுக்குத் தாகமெடுத்தது. அவனுக்கு தன் சிரமம் என்னவென்று தெரியவில்லை. ஆனால், ''என் தொண்டை வறண்டு விட்டது'' என்று சொன்னான்.*

இந்த கதையை மிக மெல்லமெல்ல பொறுமையாக உள்வாங்கிக் கொள்ளுங்கள். ஏனென்றால் இது போன்ற கதைகள் சாதாரணமானவை அல்ல. அவை எல்லாம் செறிந்த வாழ்க்கை அனுபவங்கள்.

> *முன் ஒரு காலத்தில் இருந்த அரசன் ஒருவனுக்குத் தாக மெடுத்தது.*

அவனுடைய பிரச்சினை தாகம்.

> *அவனுக்கு தன் சிரமம் என்னவென்று தெரியவில்லை.*

உங்களுக்கு உங்கள் பிரச்சினை என்னவென்றே தெரியாத போது தீர்வுகள் தேடிப்போகாதீர்கள். ஏனென்றால் நீங்கள் கண்டுபிடித்தது எதுவானாலும் அது தவறாகவே இருக்கும். முதலில் தெரிந்து கொள்ள வேண்டியது பிரச்சினை என்னவென்று - காரணம் பிரச்சினையின் அடி ஆழ மையத்தில்தான் அதற்கான தீர்வு இருக்கும். பிரச்சினை என்னவென்று துல்லியமாகத் நீங்கள் தெரிந்துகொண்டால், நீங்கள் எதுவும் செய்வதற்கு முன்னரே பிரச்சினையில் பாதி தீர்ந்தது. ஏனென்றால் பிரச்சினையே அதற்கான சாவிகளைக் கொண்டிருக்கும்.

நீங்கள் தாகமாக இருக்கிறீர்கள் என்பதை தெரிந்து கொண்டால், பிரச்சினை தீர்ந்தது. இப்போது நீங்கள் தண்ணீர் தேடிப்போகலாம். தண்ணீர் எங்கும் கிடைக்கிறது, கண்டு பிடிப்பது ஒன்றும் கடினம் இல்லை. தாகத்திற்கு முன்னரே தண்ணீர் இருக்கிறது- தண்ணீர் இருப்பதினால்தான் தாகமே இருக்கிறது.

நினைவிருக்கட்டும், வாழ்க்கை வழங்கிக்கொண்டே இருக்கிறது.

குழந்தையைப் பிறக்கிறது; குழந்தை பிறப்பதற்கு முன் தாயின் தனங்கள் பால் நிறைந்து தளும்புகின்றன. குழந்தை இன்னும் பிறந்துவிடவில்லை. ஆனால் தாயின் தனங்கள் தயாராகிவிட்டன. குழந்தையின் பசிக்கு முன்னரே உணவு தயாராக உள்ளது. நீங்கள் வாழ்க்கையினூடே ஆழமாக நோக்கினால் இது எல்லா இடங்களிலும் நடப்பதைக் காண்பீர்கள். வாழ்க்கை வழங்குகிறது. அதை அறிந்துகொண்டீர்களானால் வாழ்க்கையில் ஒரு பெரும் நம்பிக்கை எழுகின்றது. அந்த நம்பிக்கைதான் சமய உணர்வு.

நம்பிக்கை என்றால் ஒரு நூலை நம்புவது, அல்லது ஒரு குறிப்பிட்ட கொள்கை மீது நம்பிக்கை என்று அர்த்தமல்ல. நம்பிக்கை என்பது வாழ்க்கை வழங்குவதைக் காண்பது, வாழ்க்கை அக்கறைகொள்கிறது என்பதை உணர்வது. எல்லாமே உங்களுக்கு எதிரானதல்ல, அது உங்களுக்காகவே, அது உங்களை அலட்சியப்படுத்துவதல்ல. அது உங்களை நேசிக்கிறது, பாதுகாக்கிறது. நீங்கள் கவலை கொள்ள வேண்டாம். பாதுகாப்பு பற்றிக் கவலை வேண்டாம். வாழ்க்கையே உங்கள் பாதுகாப்புதான்.

*முன் ஒரு காலத்தில் இருந்த அரசன் ஒருவனுக்கு தாக மெடுத்தது. அவனுக்கு தன் சிரமம் என்னவென்று தெரியவில்லை.*

யாருக்குமே பிரச்சினை என்னவென்றே தெரியாது. பிரச்சினையும் எளிதானது, தாகம் எடுப்பது போல.

நீங்கள் கடவுளைப் பற்றிச் சிந்திக்கத் தொடங்கும்போது தவறான திசையில் போகிறீர்கள். முதலில் உங்களுக்குள் ஆழமாக நோக்குங்கள். நீங்கள் தாகத்தைக் காண முடியும். அந்த தாகம் கடவுளுக்கானது அல்ல, எப்போதும் இல்லை. 'கடவுள்' என்ற வார்த்தையை நீங்கள் கேட்டிருக்கவில்லை என்றால், நீங்கள் கடவுளைப் பற்றி நினைத்திருக்கவே மாட்டீர்கள்.

ரஷ்யாவில் லட்சக்கணக்கான மக்கள் கடவுள் பற்றி சிந்திப்பதே இல்லை. அவர்களுக்கு அந்த 'சமய தாகம்' உணரவே மாட்டார்கள் என்று நினைக்கிறீர்களா? அவர்கள் உணர்வார்கள். ஆனால் கடவுளைப் பற்றி நினைக்க மாட்டார்கள். அவர்களுக்கு வேறு வழிபாட்டு உருவங்கள் வழங்கப்பட்டு இருக்கின்றன. அது கம்யூனிஸ்ட் கட்சி. இங்கே அது கிறிஸ்துவமல்ல. அது கம்யூனிஸ்ட் கட்சி. அது கோயில் அல்ல, அது கிரெம்லின். இனி அது கிறிஸ்து அல்ல, பதிலாக, லெனின் மார்க்ஸ், ஸ்டாலின் அல்லது வேறு யாரோ. மாவோ சீனாவில் பௌத்தப் பாரம்பரியத்தை அழித்தார். மக்கள் அங்கே புத்தரை நினைப்பதில்லை, அவர்கள் மாவோயிஸ்டு பற்றியே நினைக்கின்றனர்.

நீங்கள் உணர வேண்டியது கிறிஸ்து, பைபிள், கடவுள் அல்லது குரான் பற்றி. நீங்கள் சிந்திக்கின்றீர்களா என்ற கேள்வியே இல்லை, அது ஒரு பிரச்சினையே அல்ல. உங்கள் தாகத்திற்குள் பாருங்கள். துல்லியமாக உங்கள் தாகம் என்ன? உங்கள் அதிருப்தி என்ன? உங்களால் ஏன் நெகிழ முடியவில்லை? ஏன் எப்போதும் சஞ்சலமாக, இறுக்கமாக, துயரத்திலேயே இருக்கிறீர்கள்? உடனடியாக ஒரு முடிவிற்கு வந்து விடாதீர்கள். வெளியே என்ன கண்டுபிடிக்க வேண்டும் என்று நினைப்பதற்கு பதிலாக ஆழமாக உள்ளே செல்லுங்கள். தியானம் செய்யுங்கள். ஒருமுறை உங்கள் பிரச்சினை என்னவென்று தெரிந்துகொண்டீர்கள் என்றால் பிரச்சினை தீர்ந்து விட்டார்போலத்தான்.

எந்தக் கடவுளைப் பற்றியும் நினைக்காமல் புத்தர் அதைத் தீர்த்து வைத்தார். எந்த வேதங்களோ, உபநிடதங்களோ, எந்த மறைநூலோ இல்லாமல் தீர்வு கண்டார். அவர் என்ன செய்தார்?

அவர் வெறுமனே தன் தாகத்திற்குள் தேடினார். அவர் மேலும் மேலும் ஆழமாய் நோக்கினார். அடி மூலத்தின் காரணங்களுக்குள் சென்றார். இறுதியாக அவரால் பார்க்கக்கூடிய ஒரு கட்டத்திற்கு வந்தார்.

மனிதன் சந்திக்கும் பிரச்சினை, ஒரே பிரச்சினை என்னவென்றால், நாம் இருப்பிலிருந்து தனித்து நிற்கின்றோம். எப்படியோ வாழ்தலிலிருந்து, இருப்பிலிருந்து ஒத்திசைவற்றுப் போய்விட்டோம். அந்த இசைவிணக்கம் முறிந்துவிட்டது. இந்தப் பிரபஞ்சத்தின் இசைக்குழுவில் நாம் அங்கம் வகிக்கவில்லை. அதனால் அந்நியர்போல உணரத் தொடங்கிவிட்டோம். அதனால்தான் அந்தப் பாதுகாப்பற்ற உணர்வு, பயம் எல்லாம். நம்மை பாதுகாத்துக் கொள்ள வேண்டும், தற்காப்பு தேவை, நாம் எல்லாவற்றையும் செய்யவேண்டும். நம்மால் நெகிழ்வாய் இருக்க முடியாது, ஏனென்றால் அப்படியிருந்தால் நாம் தோல்வியாளர்களாகி விடுவோம். நாம் போராடியாக வேண்டும், நாம் உயிர்த்திருக்க வேண்டும். வாழ்க்கை ஏதோ நம்மை அழிப்பதற்காக இருப்பதுபோல நாம் வாழ்க்கை, இருப்பிற்கு எதிராக பகைமை உணர்வோடு சிந்திக்கத் தொடங்கிவிட்டோம்.

புத்தர் தன்னுள்ளே மேலும் ஆழமாகச் செல்லும்போது அவர் உணர்ந்த ஒரே பிரச்சினையானது ''நான் இருக்கிறேன்''- அகங்காரம் இருக்கிறது. அகங்காரம் எவ்வாறு தொடர்கிறது? அதன் உட்பொருள் என்ன? பிறகு, அவர் மேலும் ஆழமாக நோக்குகையில் அது கடந்தகாலத்தை உள்ளடக்கியது என கண்டுபிடித்தார். கடந்தகாலத்தை நீங்கள் கைவிட்டால், அகங்காரம் மறைகிறது. அவர் கடந்தகாலத்தை விட முயற்சி செய்தார். அதில் வெற்றிகொண்ட நாளன்று அகங்காரம் இல்லாமல் போனது, எந்தப் பிரச்சினையும் இல்லை. தாகம் ஏதும் இல்லை. எல்லாமும் தணிந்தது. அவர் மறுபடியும் முழுமையின் ஓர் அங்கமாகிவிட்டார். புனிதரானார். அவர் கடவுளைப் பற்றிச் சிந்திக்கவேயில்லை. அவர் பிரார்த்தனை

செய்யவேயில்லை, அவர் தியானம் மட்டும் செய்தார். தியானம் என்பதை எளிமையாகச் சொல்வதானால், அவர் தன்னுள் நோக்கி தன் பிரச்சினை என்னவென்று கண்டுபிடிக்க முயன்றார். ஒரு தீர்விற்காக அவசரப்படாமல் அவர் பிரச்சினையை நோக்கினார். நினைவிருக்கட்டும்; இவை இரண்டும் வெவ்வேறானவை.

நீங்கள் தீர்வைநோக்கிப் போனால் நீங்கள் வேதாந்தியாகி விடுவீர்கள். விரைவிலேயே ஏதோ ஒரு தத்துவம் அல்லது இறையியல் அல்லது ஏதோ ஒரு 'இசம்' உங்களைக் கைப்பற்றும். அதன்பிறகு நீங்கள்மட்டுமே பொறுப்பாவீர்கள். அந்த அங்காடிகள் இருக்கின்றன, வியாபாரிகள் இருக்கின்றனர். இயல்பாகவே அவர்களுக்கு என்ன விற்க வேண்டுமோ அதை தொடர்ந்து விற்றுக்கொண்டேயிருப்பார்கள். அவர்களிடம் நீங்கள் போக வேண்டிய தேவையில்லை. நீங்கள் தீர்வை நோக்கி நகரத் தொடங்கினால் சர்ச்சுகள், கோயில்கள், மற்றும் மசூதிகள் எல்லாம் தானாகவே காணாமல் போய்விடும். ஒருமுறை நீங்கள் பிரச்சினைக்குள் நுழைந்தால் தீர்வு உங்கள் சுயத்திற்குள்ளேயே இருப்பதைக் கண்டுபிடிக்க முடியும்.

> *முன் ஒரு காலத்தில் இருந்த அரசன் ஒருவனுக்குத் தாகமெடுத்தது. அவனுக்கு தன் சிரமம் என்னவென்று தெரிய வில்லை. ஆனால், ''என் தொண்டை வறண்டுவிட்டது'' என்றான்.*

இப்போது, தாகமாக இருப்பது ஒன்று.''என் தொண்டை வறண்டு போய்விட்டது'' என்பது வேறொன்று. கேள்வி தவறாக அமைந்துள்ளது. கேள்வியைத் தவறாக அமைத்தால் உடனே தவறான பதில்தான் கிடைக்கும். கேள்வி கேட்க ஒருவர் ரொம்ப புத்திசாலியாக இருக்கவேண்டும். ஏனென்றால் எல்லாமே உங்கள் கேள்வியின் அமைப்பில்தான் உள்ளது.

நான் தினமும் பலரை எதிர்கொள்கிறேன். அவர்கள் எப்போதுமே தவறான கேள்விகளைக் கேட்டுக்கொண்டே இருக்கிறார்கள். அவர்கள் தவறான கேள்விகேட்டதின்

காரணமாக, சரியான பதில் அளித்தாலும் அவர்களுக்குத் திருப்தியில்லை. ஏனென்றால் கேள்வியே அவர்களுடையது அல்ல. உண்மையான கேள்வியை அவர்கள் தமக்குள்ளேயே வைத்திருக்கின்றனர்.

ஆக, ஒவ்வொரு நாடுபவருக்கான முதல் விஷயமே கேள்வியை பற்றி வெகுதெளிவாகவும் விழிப்புடனும் இருக்க வேண்டும். அவசரமேயில்லை, அவகாசம் எடுத்துக்கொள்ளுங்கள், இயல்பாக எடுத்துக்கொள்ளுங்கள். ஆனால் பிரச்சினையை சுற்றி வாருங்கள். அது துல்லியமாக என்ன என்பதை ஒவ்வொரு கோணத்திலிருந்தும் பாருங்கள். ஒரு கேள்வி கேட்கும்முன் அது உங்களுடைய கேள்விதான் என்பதை முழுமையாக உறுதி செய்யவும். இல்லையென்றால் காத்திருங்கள், அவசரமில்லை. உங்களால் தேவையான அளவு காத்திருக்க முடியுமானால், உங்களுக்கு பொறுமை இருக்குமானால், உங்கள் கேள்வி என்னவென்று நீங்கள் தெரிந்துகொள்வீர்கள். இப்போது இந்த அரசன் தவறான கேள்வியைக் கேட்கிறான். அவன் தவறான பயணத்தைத் தொடங்குகிறான். ''என் தொண்டை வறண்டு விட்டது.'' ''வறண்டு'' என்ற ஒற்றைச் சொல் ஒரு நடைமுறையை தூண்டிவிட்டது.

> *பணியாட்கள் உடனே வேகமாய் ஓடினர், அரசனின் நிலையை சரி செய்ய பொருத்தமான ஏதோ ஒன்றைக் கண்டுபிடிக்க வேண்டும். மசகிடும் ண்ணெய் கொண்டு வந்தனர்.*

நிச்சயமாக, தொண்டை வறண்டு போனால் மசகிடும் வகையில் அதற்கு ஏதோ தேவை. அது பொருத்தமானதுதான்.

''எனக்கு தாகமாக இருக்கிறது'' என்று அரசன் சொல்லியிருந்தால் மசகு எண்ணெய் கொண்டு வருவது என்பது நடவாத காரியம். மசகு எண்ணெய் வந்ததற்குக் காரணம் தவறாக அமைக்கப்பட்ட கேள்வி. ''என் தொண்டை வறண்டுவிட்டது.'' நினைவிருக்கட்டும் ஆலோசகர்கள் நிறைந்திருக்கின்றனர். உங்களைச் சுற்றி லட்சக்

கணக்கானோர் இருக்கின்றனர். அவர்களுடைய சொந்தப் பிரச்சினையை தீர்த்து இருக்க மாட்டார்கள், ஆனால் உங்களுடையதை தீர்ப்பதில் மிக மிக மகிழ்ச்சி கொள்வார்கள். அவர்கள் தொண்டை வறண்டுபோய் இருக்கலாம். ஆனால், ''என் தொண்டை வறண்டு இருக்கிறது'' என்று நீங்கள் சொன்னால் உங்கள் மீது தாவி விழுவார்கள். நன்மை செய்ய பலர் உள்ளனர். பார்த்துக்கொண்டேயிருக்கின்றனர். யாரோ ஒருவருக்கு ஏதோ தேவை என்றால் அவர்களுக்கு மகிழ்ச்சி. உதவி செய்வது என்பது அவர்களின் அகங்காரத்திற்கு நல்லது. நீங்கள் பிரச்சினையில் உள்ளீர்கள். அவர்கள் உங்கள் சிரமத்தை ரசிக்கின்றனர். ஏனென்றால், உங்களுக்கு அவர்கள் உதவி தேவைப்படுகிறது. நீங்கள் மகிழ்ச்சியாக இருந்தால் எவரும் உங்களிடம் வரமாட்டார்கள். நீங்கள் பைத்தியம் என்று மக்கள் நினைப்பார்கள்.

நீங்கள் உண்மையிலேயே ஆரோக்கியமாக இருந்தால், மக்கள் நம்ப மாட்டார்கள். ''நீங்கள் சும்மா சொல்கிறீர்கள்'' என்பார்கள். நீங்கள் சிரித்தால் ''இதில் வேடிக்கை என்ன இருக்கிறது?'' என்று நினைப்பார்கள். நீங்கள் துன்பத்தில் இருந்தால் எல்லோருக்கும் மகிழ்ச்சி. உங்களைத் துன்பத்திலிருந்து விடுவிக்க அவர்கள் உதவத் தயாராக உள்ளனர். எல்லோருமே உதவிப் பணியாளர்கள், எல்லோரிடமும் எல்லாப் பிரச்சினைகளுக்கும் தீர்வு இருக்கிறது. அவர்கள் தங்கள் பிரச்சினைகளை தீர்த்துக்கொள்ளவில்லை. உண்மையில் தங்கள் பிரச்சினையை தவிர்க்க இது அவர்களின் வழிமுறையாகும். மற்றவர் பிரச்சினையில் நுழைவார்கள், மற்றவர்களுடன் ஈடுபடுவார்கள்.

நினைவில் கொள்ளுங்கள், உங்கள் பிரச்சினைகளை தீர்த்துக் கொண்டால் ஒழிய மற்றவர்களுக்கு உதவி செய்யத் தொடங்க வேண்டாம். அவர்களுக்கு உதவுவதற்குப் பதிலாக நீங்கள் அவர்களுக்குத் தீங்கு செய்வீர்கள்.

> *பணியாட்கள் உடனே வேகமாய் ஓடினர். அரசனின் நிலைமையை சரிசெய்ய பொருத்தமான ஏதோ ஒன்றைக் கண்டுபிடிக்க வேண்டும்.*

தாகம் ஒரு நோய் அல்ல. அது ஓர் அசௌகரியம் அவ்வளவே, நோயல்ல. தாகம் உண்மையில் ஆரோக்கியமானது. இறந்து போன ஒருவனால் தாகத்தை உணர முடியாது. தாகம் உயிர்ப்பைக் காட்டுகிறது. நிறைவின்மை நோயல்ல, அது வெறுமனே உயிர் நீட்டிப்பைக் குறிக்கிறது, உயிர் துடிப்பை காட்டுகிறது. இறந்துபோனவர்கள்தான் எந்த அதிருப்தியும் இல்லாமல் இருக்கின்றனர். உண்மையிலேயே உயிருடன் இருக்கும் ஒரு மனிதன் அதிருப்தியுடன்தான் வாழ வேண்டும். அந்த தீப்பொறியின் மூலமாக, அந்தத் தாகத்தின் மூலமாகவே அவன் ஒரு தீவிரமான வாழ்க்கை வாழ முடியும்.

மக்கள் குறைந்தபட்ச வாழ்க்கை வாழ்கின்றனர். பெரிதும் உகந்தது என்னவென்றே தெரிந்துகொள்வதில்லை. பெரிதும் கடந்த நிலையில்தான் விடியல்களும் நடக்கின்றன. புணர்ச்சிப் பரவசம் நிலையடைதல் கூட பெரிதும் உகந்த, சாதக சூழலில்தான் நடக்கும். ஆனால் மக்கள் குறைந்தபட்ச நிலையிலேயே வாழ்கின்றனர். வாழ்க்கையில் பெரிதும் கருமித்தனமாக உள்ளனர். ஓரளவிற்கே செல்கின்றனர், வாழ்தலில் அதிகமாக ஈடுபட்டுக் கொள்வதில்லை, எப்போதும் கிட்டத்தட்ட பார்வையாளர்களாகவே இருக்க விரும்புகின்றனர். நடனமாட வேண்டுமென்றால், யாரோ ஒரு நாட்டியக்காரர் ஆடுவதைப் போய் பார்க்கின்றனர். விளையாட வேண்டுமென்றால் ஒரு கால்பந்தாட்டப் போட்டிக்குப் போகின்றனர். நேசிக்க வேண்டுமென்றால், ஏதோ ஒரு கதையை அடிப்படையாகக் கொண்ட சினிமாவைப் பார்க்கப் போகிறார்கள். மக்கள் பார்வையாளர்களாகி விட்டனர். மேலும் தொலைக்காட்சி அவர்களை முற்றிலுமாக பார்வையாளர்கள் என்ற நிலைக்கு இறக்கிவிட்டது. எங்கெல்லாம் தொலைக்காட்சி இருக்கிறதோ மக்கள் தினமும் நான்கு, ஐந்து, அல்லது ஆறுமணி நேரம் அதன் முன் பிசின்போல் உட்கார்ந்து பார்க்கின்றனர். வாழ்க்கை வெறுமனே ''பார்த்தல்'' என்றாகிவிட்டது. இந்தப் பார்த்தலில் ஒரு நன்மை இருக்கிறது. நீங்கள் ஈடுபடவேண்டாம். வெறுமனே நாற்காலியில் உட்கார்ந்து இருந்தால் போதுமானது - அதிலிருந்து வெளியே

இருக்கிறீர்கள். எந்த ஆபத்தையும் நாடிப்போவதில்லை, எதற்கும் துணிவதில்லை. உங்களுக்காக மற்றவர் துணிய வேண்டும், நீங்கள் பார்வையாளராக மட்டுமே இருப்பீர்கள்.சாவித்துவாரம் வழியாக பார்த்துக் கொண்டிருப்பீர்கள்.

நீங்கள் எப்போது வாழப்போகிறீர்கள்? ஒவ்வொரு கணமும் வாழ்க்கை நழுவிக்கொண்டே இருக்கிறது. நினைவிருக்கட்டும். நீங்கள் ஒரு பிளாஸ்டிக் பூவல்ல. நீங்கள் ஒரு உண்மையான பூ. மறுநாள் காலையில் இல்லாமல் போய்விடுவீர்கள். காற்றோடு விளையாடுங்கள், சூரியனோடு உரையாடுங்கள், மேகங்களுடன் மெல்லப் பேசுங்கள். ஆடுங்கள், பாடுங்கள், மாலை நெருங்கிக் கொண்டிருக்கிறது. நீங்கள் ஆடாமல், பாடாமல் சூரியனுடன் பேசாமல் இருந்தீர்கள் என்றால் உங்கள் வாழ்க்கை ஏழ்மையாக இருக்கும், உங்கள் மரணமும் ஏழ்மையாகவே இருக்கும், காரணம், வாழ்க்கை வளமாக இருந்தால்தான் மழை வளமாக இருக்கமுடியும். நீங்கள் அர்த்தமற்று வாழ்வீர்கள், அர்த்தமற்று இறந்துபோவீர்கள்.

எங்கேயிருந்து இந்த அர்த்தம் வருகிறது? தீவிரமான வாழ்க்கையின் மூலமாக அர்த்தம் வருகிறது. தீவிரமே அர்த்தம் தருகிறது. உள்நோக்கும் அர்த்தம் தருகிறது. தீப்பந்தமானது இருமுனைகளிலும் ஒரு சேர எரிவதுபோல் வாழும் மனிதனுக்கே வாழ்க்கை என்ன என்பது தெரியும். அந்த அரிய தீவிர கணங்களில் கடவுள் வெளிப்படுவார், அதற்கு முன்னர் அல்ல. மன நிறைவு நிச்சயமாக கிடைக்கும். ஆனால் அது தீவிரமான மனநிறைவற்ற கணங்களில்தான் நடக்கும்.

நான் உங்களுக்கு மனநிறைவின்மையைக் கற்றுக் கொடுக்கிறேன், அப்படியானால்தான் மனநிறைவு உங்களுக்குக் கிடைக்கும். ஆனால் உங்களுக்கு மனநிறைவு பழக மற்றும் திருப்தியாக இருக்கக் கற்றுக்கொடுக்கப்பட்டுள்ளீர்கள்.

''நான் ஒரு மனநிறைவுடைய பன்றியாக இருப்பதற்குப் பதிலாக ஒரு அதிருப்தியான சாக்ரடீஸாகவே இருப்பேன்'' என்று சாக்ரடீஸ் சொல்வது சரியே. ஆனால் கோடிக்கணக்கானோர் வேறு விதமாக

முடிவு செய்துள்ளனர். அவர்கள் திருப்தியான பன்றிகளாக வாழ முடிவு செய்து விட்டனர். தீவிரமான எந்த இயல் நிகழ்வையும் தொடர்ந்து தவிர்த்துக் கொண்டே வருகின்றனர். தாங்களே தியானம் செய்வதற்குப் பதிலாக, அவர்கள் ''ஏசு ரட்சிப்பார்'' என்கின்றனர். இதில் ஏசுவிற்கு என்ன தொடர்பு இருக்கிறது? அவர் ஏன் உங்களைக் காப்பாற்ற வேண்டும்? மேலும் அவர் எப்படி உங்களைக் காப்பாற்ற முடியும்? நீங்கள் மட்டுமே உங்களை காப்பாற்றிக் கொள்ளமுடியும்.

வேறு ஒருவராலும் முடியாது? அது முற்றிலும் உங்கள் உரிமையாகும். நீங்கள் கோரினால் உங்களுக்கு கிடைக்கும். கோராவிட்டால் உங்களுக்கு அது கிடைக்காது. ஆனால் மக்கள் ரொம்ப சாமர்த்தியசாலிகள். தந்திரமானவர்கள். அவர்கள் தள்ளிப் போடுவர். அவர்கள் சொல்வது, ''சரி, ஏசு இருக்கிறார். எனில் நாம் ஏன் கவலைப்பட வேண்டும்?'' இங்கே வரும் மனிதர்கள் சொல்வது,''பகவான் நீங்கள் இருக்கிறீர்கள், நாங்கள் ஏன் தியானம் செய்ய வேண்டும்? உங்கள் மீது எங்களுக்கு நம்பிக்கை இருக்கிறது.''

நீங்கள் தியானம் செய்யாமல் என்மீது எப்படி நம்பிக்கை வைக்க முடியும்? தியானத்தின் ஒரு நறுமணமாக வெளிவருவதே நம்பிக்கை.

அவர்கள் சொல்வது, நம்பிக்கை இருக்கிறது என்றல்ல. அவர்கள் வெறுமனே சொல்வது,''நீங்கள் செய்ய முடிந்தால் செய்யுங்கள். நாங்களே அதைச் செய்ய எங்களுக்கு ஆர்வம் இல்லை. நாங்கள் இதில் துணிந்து இறங்குவதாய் இல்லை.''

நினைவிருக்கட்டும். தாகம், அதிருப்தி, பசி எல்லாம் ஆரோக்கியமான, நன்மை தருகின்ற பண்புகள். மனநிறைவான ஒரு மனிதன் மந்தமான முட்டாள் மனிதன். மனநிறைவு காலங்காலமாக பழகிவரப்பட்டதால் உங்கள் சர்ச்சுகள் அந்த மண்டுகளால் நிரம்பியிருக்கிறது. துறவுமடங்கள் மட்டிகளாலும், உயிரற்றவர்களாலும் நிரப்பப்பட்டு இருக்கிறது. இவர்கள் நடைபிணங்கள், எப்படியோ தங்களை இழந்துகொண்டு

செல்கின்றனர். சத்தெல்லாம் இழந்துவிட்டனர். அவர்கள் வாழ்க்கையில் நீரோட்டமில்லை, துடிப்பு இல்லை, அது ஓர் இசை இல்லை, ஒரு பன்திறமில்லை.

தாகம் முழுமையான அழகுடையது. ஏனென்றால் தாகத்தின் மூலமாகத்தான் நீங்கள் நிறைவு என்ன என்பதை அறிய முடியும். தாகம் இருந்தால்தான் தாகம் தணிந்த உணர்வின் அழகை அறிய முடியும். உண்மையிலேயே நீங்கள் தாகத்தோடு இருந்தால், தண்ணீர் குடிப்பதின் மகிழ்வை உணர்வீர்கள். உங்களுக்கு உண்மையிலேயே பசியிருந்தால்தான் உண்பதின் உவகை அறிவீர்கள். தீ போலப் பற்றி எரிந்து கொண்டிருந்தால், அதன் பிறகு நிறைவு கை கூடும். கடவுள்தான் இறுதி மன நிறைவு. அது மனநிறைவின்மையோடு வாழும் சமயப் பற்றுமிக்க மனிதனுக்கு நடக்கும். சமயப் பற்றுள்ள ஒருவனே தாகமாய் இருக்கிறான்.

ஆனால் உங்கள் கேள்வியை சரியாய் அமைத்திடுங்கள், இல்லாவிட்டால் பணியாட்கள் எப்போதும் தயாராய் இருக்கின்றனர்.

> *பணியாட்கள் உடனே வேகமாய் ஓடினர். அரசனின் நிலையை சரிசெய்ய பொருத்தமான ஏதோ ஒன்றை கண்டுபிடிக்க வேண்டும். மசகிடும் எண்ணெய் கொண்டு வந்தனர். அரசன் அதைக் குடித்ததும், அவன் தொண்டையில் வறண்ட உணர்வு கொள்ளவில்லை. ஆயினும் ஏதோ ஒன்று சரியில்லை என்று அவனுக்குத் தெரிந்தது.*

இதுதான் எங்கும் நடக்கின்றது. நீங்கள் சர்ச்சிற்குப் போகும்போது, ஒருவகையான சமய உணர்வு உங்களுக்குள் எழுவதை அறிவீர்கள், ஆனாலும் ஏதோ தவறு இருக்கிறது என்று தோன்றும். அதைக் குறிப்பிட்டுக் காட்ட முடியாது. அது என்ன, எங்கே என்று தெரியாது. ஆனால் ஏதோ தவறு இருக்கிறது. உங்களுக்கு ஆயிரத்தோர் பதில்கள் வழங்கப்படும், அவை ஏதோ உங்களுக்கு திருப்தி அளிக்கும். ஆனால் உங்களுக்குள் ஆழமாக ஏதோ தவறு இருக்கிறது என்பதை அறிவீர்கள். நீங்கள் தொடர்ந்து

பகவத்கீதையையும், பைபிளையும் சுமந்துகொண்டிருக்கலாம், ஆனால் அடி ஆழத்தில் ஏதோ தவறென்பதை அறிவீர்கள்.

*எண்ணெய் அவன் வாயில் ஒரு விசித்திரமான உணர்வை ஏற்படுத்தியது. ''என் நாக்கு கசக்கிறது. வழவழக்கிறது. மோசமாகத் தெரிகிறது''* என்று கரகரப்பாகக் கூறினான்.

இதுபோன்ற ஒரு சுவையை நீங்கள் சர்ச்சில் உணர்ந்திருக் கிறீர்களா? ''என் நாக்கு ஒரு மாதிரியாக இருக்கிறது'' என்று கரகரப்பாக சொன்னதில்லையா? பைபிள், கீதை அல்லது குரான் படிக்கும்போது அப்படி உணரவில்லையா? விஷயங்கள் மேலெழுந்த வாரியாக நன்றாக தோன்றும்போது, ஏதோ ஒன்று இல்லாதது போல் தோன்றவில்லையா? கிறிஸ்தவப் பாதிரியார் ஏசு பேசிய அதே மொழியைப் பேசிக்கொண்டே போகிறார். அதே வார்த்தைகளைக் கூடப் பயன்படுத்துகிறார். ஆனால் உங்களுக்குத் தெரிகிறது, இதில் ஏதோ குறைவுள்ளது என்று. ஆன்மா அங்கு இல்லை.

> *மருத்துவர் உடனே ஊறுகாயும், புளிக்காடியும் கொடுக்கச் சொன்னார் - அதையும் அரசன் உண்டான்.*

மறுபடியும் உங்களுக்கு நான் நினைவூட்டுகிறேன், இந்த மனிதர்கள் எங்கும் இருக்கின்றனர். அரசர்களைச் சுற்றி மட்டுமல்ல, எல்லோரையும் சுற்றித்தான்.

இயல்பாகவே நோய் இப்போது ஒரு புதிய கட்டத்தை அடைந்துவிட்டது. இப்போது தாகம் முற்றிலுமாகத் தொலைந்து விட்டது, மறந்தும் ஆகிவிட்டது. இனி யாரும் தாகத்தைப் பற்றி நினைத்துக்கூடப் பார்க்க மாட்டார்கள். ஒருமுறை தவறான அடி எடுத்து வைத்து விட்டால், அது அடுத்த தவறான அடிக்கு இட்டுச்செல்லும். இப்படியே போய்க்கொண்டேயிருக்கும். முதல் அடியே தவறானதென கண்டுபிடிப்பது இனி மனித ஆற்றலுக்கு அப்பாற்பட்ட ஒன்றாகிவிடும்.

ஆக, அவர் உடனே ஊறுகாயும், புளிக்காடியும் கொடுக்கச் சொன்னார். அரசனும் அதைச் சாப்பிட்டான்.

*சடுதியில் அரசனுக்கு வயிற்று வலியும், கண்களில் நீரும் தேங்கி வழிந்தது.*

இப்போது ஒரு பிரச்சினை தீர்ந்து மற்றொன்று உருவாயிற்று. விஷயங்கள் மேலும் சிக்கலாயின. எளிதாவதற்குப் பதிலாக அவை ஆபத்தாகிக் கொண்டு வந்தன.

*''நான் தாகமாக இருக்கவேண்டும்'' என்று முணு முணுத்தான், அவன் துன்பங்கள் அவனை சற்றே யோசிக்க வைத்திருக்க வேண்டும்.*

அவன் விவேகமுடையவனாக இருந்திருக்க வேண்டும். இல்லையென்றால் மக்கள் தொடர்ந்து துன்பப்பட்டுக் கொண்டேயிருப்பார்கள்; தங்கள் துன்பத்தைப் பற்றி சிந்திக்காமல், மற்றவர்களிடம் தங்கள் துயர் நீக்க வழிவகை கேட்டுக் கொண்டிருப்பார்கள். மற்றவர்களும் விடாமல் ஆலோசனை வழங்கிக் கொண்டேயிருப்பார்கள். நினைவிருக் கட்டும், யாரும் உங்களுக்கு ஆலோசனை வழங்க முடியாது. அவர் தரும் ஆலோசனை அவருக்குப் பொருந்தலாம், உங்களுக்கு பொருத்தமில்லாமல் போகலாம். உண்மையில் ஒரு விஷயம் ஒருவருக்குத்தான் பொருந்தும், அதுவும் ஒரே முறைதான். அது மறுபடியும் வேறு ஒருவருக்கு எடுபடாது. விஷயங்கள் மாறிக்கொண்டே இருக்கின்றன. நீங்கள் ஏற்கனவே கற்றுக்கொண்ட பதில்களை வைத்து வாழ முடியாது. அவை எல்லாம் எதிர்வினைகள். ஒவ்வொரு கணமும் மெய்மைக்கு நீங்கள் புதிதாக பதில் அளிக்க வேண்டும். ஒரு கண்ணாடிபோல் மறுமொழி வேண்டும், நீங்கள் ஒரு கண்ணாடி போல் இருந்தால் தான் அவ்வாறு பிரதிபலிக்க முடியும்.

ஆனால் மக்கள் புகைப்படத்தட்டு போல நடந்து கொள்கின்றனர்: கிடைப்பதை எல்லாம் உள்வாங்கிக் கொள்கின்றனர். கண்ணாடி எதையும் பிடித்துக்கொள்வதில்லை. அது பிரதிபலிக்குமே தவிர எதையும் உடைமை கொள்ளாது, எதையும் தன் வசம் வைத்திருக்காது. அது நழுவ விட்டுக் கொண்டேயிருக்கும். எந்த விதமான பற்றுதலிலும் அது இருக்காது. அதுதான் தியானத்தின்

அழகு. தியானம் என்பது பிரதிபலிப்பு. நீங்கள் வாழுங்கள். ஆயிரத்தொரு விடியல்களை வாழ்ந்து பாருங்கள், ஆனால் எதிலும் பற்றுக் கொண்டு இருக்காதீர்கள். வசந்தம் வரும்போது, அனுபவியுங்கள். அது போகையில், அது போய்விட்டது அவ்வளவே. நீங்கள் திரும்பிப்பார்த்து அதற்காக அழ வேண்டாம். சிந்திய பாலுக்காக கண்ணீர் வடிப்பது ஆகாது. நீங்கள் முன்னேறிச் செல்லுங்கள்.

அரசன் சற்றே சிந்தித்து இருக்க வேண்டும். என் முதல் கேள்வி தவறு. உண்மையில் நான் தாகமாகி இருந்தேன். ஆனால் விஷயங்கள் இப்போது அதிகக் கடினமாகி விட்டன.

''தாகம் கண்களில் நீரை வரவழைக்காதே...'' என்று அரச சபையினர் ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டனர். உண்மைதான்! தாகத்தினால் கண்ணீர் வந்தது என்று யாராவது கேள்விப்பட்டு இருக்கிறார்களா?

> *ஆனால், அரசர்கள் அனேகமாக சலன புத்தி கொண்டவர்கள். அவர்கள் அரசனுக்கு ஏற்ற வகையில், பன்னீர், நறுமண மது வகைகள் என கொண்டு வந்தனர்.*

எப்போதும் நினைவிருக்கட்டும், உங்கள் பிரச்சினை தீர வேண்டுமே தவிர, உங்கள் அகங்காரத்தை திருப்தி செய்யக் கூடாது.

சில சமயங்களில் நீங்கள் என்னிடம் வரும்போது இரண்டும் இருப்பதைப் பார்க்கிறேன். நான் உங்கள் பிரச்சினையைத் தீர்த்து வைத்தால் என்னிடம் கோபம் கொள்கிறீர்கள். ஏனென்றால அது உங்கள் அகங்காரத்தை நிறைவு செய்திருக்காது. நான் கடினமாக நடந்துகொள்கிறேன் என்று உங்களுக்குத் தோன்றலாம். உண்மையில் நீங்கள் என்னிடம் பிரச்சினை கருதி வரவில்லை. பிரச்சினை ஒரு சாக்குதான். நீங்கள் என்னிடம் உங்கள் அகங்காரத்தை நிறைவு செய்வதற்காக வந்தீர்கள். நான் அதைச் செய்துவிட்டால், உங்களுக்கு நான் எதிரியாகி விடுகிறேன். உங்களால் முடியாததை நான் செய்துவிட்டேன். இந்த வேறுபாட்டை நீங்கள் உணரவேண்டும்.

சில சமயங்களில் என்னிடம் இப்படிக் கேட்போர் உண்டு. ''குரு உண்மையானவர் என்று எப்படிக் கண்டுபிடிப்பது? அல்லது குரு உண்மையிலேயே ஞானம் அடைந்தவரா என்று எப்படிக் கண்டுபிடிப்பது?'' இதற்கான வழி ஒன்றுதான். நீங்கள் ஒரு குருவிடம் செல்கிறீர்கள், அவர் உங்கள் அகங்காரத்தை மட்டுமே திருப்தி செய்கிறார். நீங்களும் உங்கள் அகங்காரத்தை சிறப்பாக உணர்கிறீர்கள். விஷயம் இப்படியானால் குரு போலியானவர் என்று உறுதியாகத் தெரிந்துகொள்ளலாம். அவர் உங்கள் அகங்காரத்தை திருப்தி செய்யவில்லை என்றால், உங்களுக்கு ஒரு பலமான அடி தருகிறார். உங்களைத் தகர்த்து விடுகிறார். உங்களுக்கு அதிர்ச்சி வைத்தியம் தருகிறார். அதே சமயம் உங்கள் பிரச்சினையையும் தீர்க்க முயற்சிக்கிறார் என்றால், நீங்கள் உதவி செய்யக்கூடிய நிலையில் உள்ளவர் அருகில் இருக்கிறீர்கள் என்பதை உறுதிப்படுத்திக் கொள்ளலாம்.

ஆனால் இது கடினம், உங்கள் அகங்காரத்திற்கு தீனி போடும் ஒருவரைப் பற்றிக் கொண்டுதான் நீங்கள் இருப்பீர்கள். உங்கள் அகங்காரத்தைத் தகர்க்கும் ஒருவரைத் தவிர்த்துவிடுவீர்கள். நீங்களே உங்களுக்கு எதிரி. இதனால்தான் பல போலி மனிதர்கள் குருவாக வலம் வந்துகொண்டிருக்கின்றனர். இதுதான் அளவுகோல், குருவிடம் பரிவன்பு இருக்கும், ஆனால் கடினமாக இருப்பார். அவர் உங்கள் அகங்காரத்திற்கு தொடர்ந்து நீர் பாய்ச்சிக் கொண்டிருக்க மாட்டார். ஏனென்றால் உங்கள் அகங்காரம்தான் உங்களுடைய நரகமாகும். சில சமயங்களில் நீங்கள் ஒரு துறவியிடமோ அல்லது குருவிடமோ செல்வீர்கள். அவர் மிகுந்த பரிவன்புடன் இருக்கிறார். அவர் பரிவன்பின் காரணமாக நீங்களும் நன்றாக உணர்கின்றீர்கள். கவனியுங்கள், எங்கே உங்களுக்கு நிறைவு ஏற்படுகிறது?

உங்கள் அகங்காரத்திலா? அப்படியானால் தவிர்த்து விடுங்கள். எங்கே உங்கள் அகங்காரம் தகர்க்கப்படுமோ, அழிக்கப்படுமோ அங்கேயிருங்கள். ஏனென்றால், அதன் அழிவில்தான் புதியவை நடப்பதற்கான சாத்யக்கூறு உள்ளது.

ஒரு உண்மையான குரு ஒரு கொலைகாரர். அவர் உங்களை கொலை செய்யவேண்டும்.

*''தாகம் கண்களில் நீரை வரவழைக்காதே'' என்று அரசவையினர் ஒருவருக்கொருவர் பேசிக்கொண்டனர். ஆனால் அரசர்கள் அநேகமாக சலன புத்தி கொண்டவர்கள். அவர்கள் அரசனுக்கு ஏற்ற வகையில் பன்னீர், நறுமண மது வகைகள் என கொண்டு வர ஓடினர்.*

*எல்லாவற்றையும் குடித்தான் அரசன், ஆனாலும் உடல்நிலை தேறவில்லை.. அவன் செரிமானமும் கெட்டது.*

*இந்த இக்கட்டின்போது ஒரு ஞானி ஒருவர் அவ்வழியே வந்தார்....*

நீங்கள் ஒரு இக்கட்டின் நடுவே இருக்கும் போதுதான் ஞானிகள் தோன்றுவர். மற்றபடி நடக்காது, வேறு சமயத்தில் நடக்காது. ஞானிகள் உங்களுக்கு கிடைக்க மாட்டார்கள் என்று பொருளல்ல, ஞானி எப்போதும் உங்களுக்கு கிடைப்பார், ஆனால் நீங்கள் அவரை அடையாளம்காண்பது அல்லது உறவுகொள்வது என்பது நீங்கள் ஒரு நெருக்கடியில் சிக்கிக் கொள்ளும்போதுதான்.

இல்லையென்றால், யார் கவலைப்படுகிறார்கள்? ஒருவர் தன் வாழ்க்கையை திருப்தியாக பன்றி போல வாழ்ந்து கழிப்பார். உங்கள் பிரச்சினை தீவிரமாகும்போது, நீடித்து இருக்கும்போது, எங்கிருந்தும் தீர்வுகள் வராது என்று தோன்றும்போது, அந்தக் கட்டத்தில்தான் ஞானி கிடைப்பது சாத்தியமாகும். அப்படியும் நீங்கள் அவரைத் தவற விடுவதற்கு வாய்ப்புண்டு.

*இந்த இக்கட்டின்போது ஞானி ஒருவர் அவ்வழியே வந்தார். ''மாட்சிமை தாங்கிய அரசருக்கு சாதாரணத் தண்ணீர் தேவை'' என்று சொன்னார்.*

ஞானிகளிடம் எப்போதும் எளிய பதில்கள் இருக்கும். அவரின் பதில்கள் உங்கள் அறிவாற்றலுக்கு நிறைவு தராது. அவரின்

பதில்கள் அறிவுத்திறன் ஆட்டங்கள் அல்ல. விஷயம் என்னவோ, உள்ளபடி கூறுவார். கழுதையைக் குதிரை என்றழைக்க மாட்டார். அவர் மெய்மையுணர்த்தும் வார்த்தைகளையே பயன்படுத்துவார், மூடி மறைக்க மாட்டார்.

> அந்த ஞானி சொன்னார். ''மாட்சிமை தாங்கிய அரசருக்கு சாதாரணத் தண்ணீர் தேவை.'' ''அரசன் சாதாரணத் தண்ணீர் குடிக்க மாட்டார்'' என்று ஒரு சேர அரசவை கூவியது. ''நிச்சயமாக முடியாது'' என்றான் அரசன். ''உண்மையில் சாதாரணத் தண்ணீர் எனக்கு வழங்கப்பட வேண்டும் என்பதே ஒரு அரசனாகவும் ஒரு நோயாளியாகவும் அவமானமாக உணர்கிறேன். எல்லாவற்றிற்கும் மேலே, எனக்கு ஏற்பட்டதுபோன்ற பயங்கரமான, சிக்கலான நோய்க்கு இவ்வளவு எளிய பரிகாரம் என்பதே நடவாத காரியம். இந்த யோசனையே தர்க்க முரணானது. இதன் காரணகர்த்தாவிற்கு அவமானம், நோய்ப்பட்டவர்க்கு அவமதிப்பு.''

இவையெல்லாம் உங்கள் எதிர்வினைகள். நீங்கள் ஒரு ஞானியை சந்திக்கும்போது, இவையெல்லாம் உங்கள் எதிர்வினைகள். அவற்றை பற்றி எச்சரிக்கையாக இருங்கள். இந்தக் கதை ஒரு நாடுபவரைப் பற்றியது. தாகமுடைய ஒருவரைப் பற்றியது. ஒரு தெளிவான தீர்விற்கு அருகே வரும்போது கூட அவர் அதைக் கேட்பதற்குத் தயாராக இல்லை. அது மட்டுமல்லாமல், அவர் கோபம் கொள்கிறார்.

அரசவையினர் அப்படித்தான் இருப்பார்கள், அவர்களை மன்னித்து விடலாம். *''அரசர் சாதாரணத் தண்ணீர் குடிக்க மாட்டார்.''* என்றனர் அரசவையினர். அவர்களது முழு நோக்கமும் அரசனின் அகங்காரத்திற்கு தீனியிடுவதுதான். அவர்கள் வரையில் சரிதான், தங்கள் பணியைச் செய்கின்றனர். ஆனால் அரசனும் முட்டாளாக இருக்கிறான். அப்படித்தான் எல்லோரும் இருக்கின்றனர். *''நிச்சயமாக முடியாது''...* என்றான் அரசன். *''அவமானமாக உணர்கிறேன்.''*

உங்களிடம் நேரிடையாக உண்மை சொல்லப்படும்போது நீங்கள் அவமானமாக உணர்ந்ததில்லையா? பொய்கள் எப்போதும் ஆறுதலாக இருக்கும். பொய்களின்றி மனிதனால் வாழ முடியாது என்கிறார் ஃபெரிட்ரிக் நீட்ஷே. மனிதனுக்கு, பொய் தேவை. உண்மை தாங்க முடியாதது. 'மனிதர்களைத் தொந்தரவு செய்யாதீர்கள். தங்கள் பொய்களில் அவர்கள் வாழட்டும், பொய்கள் வாழ்க்கையின் ஆதாரங்கள்'' என்கிறார் ஃபெரிட்ரிக் நீட்ஷே.

நீங்கள் எல்லோரும் பொய்களில் வாழ்கிறீர்கள். அப்படிப் பொய்களில் வாழும்போது ஒரு எளிய உண்மைகூட, உங்கள் கண்ணாடி வீட்டைத் தகர்த்திட முடியும். நீங்கள் உண்மையை ஏற்க மாட்டீர்கள்.

> *''நிச்சயமாக முடியாது'' என்றான் அரசன். உண்மையில் சாதாரணத் தண்ணீர் எனக்கு வழங்கப்படவேண்டும் என்பதே ஒரு அரசனாகவும் ஒரு நோயாளியாகவும்.....''*

நீங்கள் ஒரு டாக்டரிடம் போகும்போது, அவர் 'உங்களுக்கு நோய் ஒன்றும் இல்லை, கவலைப்பட வேண்டாம்' என்று சொன்னால், உங்களுக்கு அது சரியாகப் படாது. வேறு ஒருவரைப் பார்க்கவேண்டும் என்று தோன்றும். ''எல்லாம் உங்கள் மனதில்தான் இருக்கிறது'' என்று டாக்டர் சொல்லிவிட்டால் வருத்தமடைவீர்கள். உங்களுக்கு ஒரு பெரிய வியாதி இருக்கிறது. என்று நினைத்து டாக்டரிடம் போனால், அவர் சாதாரண சளி என்கிறார். உங்களுக்கு அவர் சொன்னது பிடித்திருக்கிறதா? உண்மையில் பிடித்து இருக்க வேண்டும், ஆனால் அகங்காரம் புண்படுகிறது. அகங்காரம் முட்டாள்தனமானது. அதற்கு எல்லாமே பெரிதாய் வேண்டும். சாதாரண சளி மட்டும்தானா? நீங்கள் என்னவோ புற்றுநோய் அல்லது ஏதோ ஒன்று என்று நினைத்துக் கொண்டிருந்தீர்கள், ஏதாவது பெரிதாக.

அரசனுக்கு அவமானம். ''இது எனக்கு அவமானம். இவ்வளவு சிக்கலான நோய், அதுவும் நாளுக்கு நாள் அதிக சிக்கலாகி கொண்டு வருகிறது. அதற்கு இவ்வளவு எளிய பரிகாரமா?''

எப்போதும் நினைவிருக்கட்டும், பரிகாரங்கள் எளியவை. எளிய பரிகாரங்கள்தான் உதவும். ஏனென்றால் உண்மை எளிமையானது. வாழ்க்கை எளியது, நேசம் எளியது, கடவுளும் எளிதான ஒன்று. அதனால்தான்,'' எளியவர் அறிவர்'' என்று சொல்லப்படுகிறது. எளிமையாக இருப்பதினால் அவர்கள் முழுமையின் எளிமையோடு ஒத்திசைந்து போவர். எளிமையாக இருப்பதினால் இருப்பின் எளிமையோடு ஒரு பாலம் அமைத்துக் கொள்வர். அதனால்தான் ஏசு சொல்கிறார், ''நீங்கள் குழந்தைகள் போல இருந்தால்தான் என் கடவுளின் ராஜ்ஜியத்திற்குள் நுழைய முடியும்''. அவர் சிக்கலற்றவர். நீங்களும் சிக்கலின்றி, ஒரு குழந்தையின் களங்கமற்ற தன்மையோடு இருந்தால் கடவுளின் ராஜ்ஜியத்திற்குள் நுழைய முடியும், கடவுளின் ராஜ்ஜியம் உங்களைச் சூழ்ந்துகொள்ளும். அது இப்பொழுது இங்கே இருக்கிறது. ஆனால் நீங்கள் சிக்கல் மிகுந்து இருக்கிறீர்கள். உங்கள் சிக்கலின் பின்னால் மறைந்து கொள்கிறீர்கள்.

எல்லா கடுஞ்சிக்கல்களையும் கைவிடுங்கள். நிர்வாணமாய் இருங்கள். ஒரு மரத்தைப் போன்று சூரியனுக்கு அடியில் இருங்கள். உயர்நிலை அறிவீர்கள். பேரொளி உணர்வீர்கள்.

ஏசு தன் சீடர்களிடம் சொன்னது, ''தோட்டத்தில் உள்ள லில்லி மலர்களைப் பாருங்கள். சாலமன் தன் பேரொளியில் கூட இதில் ஒன்றைப்போல இல்லை'' அந்தச் சாதாரண லில்லி மலரின் அழகுதான் என்ன? அதன் எளிமை, அதன் சிக்கலின்மை, அதன் ஒன்றாத தன்மை!

சிக்கலான ஓர் மனிதன் ஒரு கூட்டம். ஒரு சிக்கலான மனிதன் பல துண்டுகளானவன், அவன் பலவானவன். எளிமை என்பது என்ன? நீங்கள் 'ஒன்றாக' இருக்கும் போது சிக்கலாக இருக்கும் சாத்தியமில்லை. உங்களுக்குள் ஒன்றாததன்மை இருக்கையில் அமைதி வியாபித்து இருக்கிறது, அசைவின்மை, களங்கமின்மை நிலவுகிறது. உங்களுக்கு எதுவும் தெரியாது. நீங்கள் வியப்பு நிறைந்து இருக்கிறீர்கள், ஆச்சரியப்படுகிறீர்கள்,

ஆனால் உங்களுக்கு எதுவும் தெரியாது. அப்படியானால் எது வேண்டுமானாலும் உங்களுக்கு இறுதி உண்மையை வெளிப்படுத்த முடியும். எந்த ஒரு சிறிய அனுபவமும் உங்களுக்கு ஒரு இறுதி 'ஆஹா' அனுபவமாகலாம். கதவு திறக்கக் கூடும். நீங்களும் மெய்மையினால் நிறைந்து போகலாம்.

ஆனால் அரசனோ, ''இவ்வளவு எளிதான பரிகாரமா? இந்த யோசனையே தர்க்க முரணானது'' என்கிறான்.

இயல்பாகவே அது தர்கக முரணானதுதான். இவ்வளவு மருத்துவர்கள், அரச சபை அறிஞர்கள் எல்லோரும் தோற்றுப் போயினர், அவ்வளவு பரிகாரங்களும் பலன் தரவில்லை. அந்தச் சமயத்தில் ஒருவர் வந்து ''சாதாரணத் தண்ணீர் கொடுங்கள்'' என்கிறார். அப்படியானால் ஏன் அரசவை முட்டாள்களால் நிரம்பியதா? என் தனிப்பட்ட மருத்துவர் ஒரு முட்டாளா?

> *''இந்த யோசனையே தர்க்க முரணானது, அதன் காரண கர்த்தாவிற்கே அவமானம்...''*

ஏனென்றால், இரண்டு சாத்தியக் கூறுகள்தான் உள்ளன: ஒன்று அந்த ஞானி சரியாக இருக்க வேண்டும், அல்லது முழு அரசவையும் தவறாக இருக்க வேண்டும். மேலும் மருத்துவர், அவர் நண்பர்கள், அரசன் எல்லோரும் தவறாக இருக்க வேண்டும். இது ஏற்றுக்கொள்ளக் கூடியது அல்ல. இது மிக அதிகம். இது இயல்பிற்கு எதிரான ஒன்று.

> *''காரணகர்த்தாவிற்கே அவமானம், நோய்ப்பட்டவர்க்கு அவமதிப்பு'' இப்படியாகத்தான் ஞானி ''முட்டாள்'' என்று பெயரிடப்பட்டார்.*

ஞானி என்றுமே ''முட்டாள்'' என்றுதான் அறியப்பட்டார், ஏனென்றால் அவர் வழிகள் விசித்திரமானவை, விசித்திரமான வழிகளில் நடந்துகொள்வார். அவர்கள் தோற்றத்தில் விசித்திரமாய் இருப்பர். ஏனென்றால் நீங்கள் வேறு ஒன்றிற்குப் பழக்கமாகியுள்ளீர்கள். ஞானி அந்நியன் போலத் தோன்றுவார்.

ஆனால் அவர் மட்டுமே உள் அறிந்தவர், ஆனால் உங்களுக்கு அவர் வெளி மனிதர் போலத் தோன்றுகிறார். அவர் பார்வைக்கு அசாதாரணமாகத் தெரிகிறார். ஆனால் உண்மையில் நீங்கள்தான் அப்படி இருக்கிறீர்கள். புத்தர்தான் எடுத்துக்காட்டு. ஏனென்றால் அவரே சாதாரணமாக, இயல்பாக உள்ளார். நீங்கள்தான் இயல்பு கடந்து இருக்கிறீர்கள். நோய்வாய்ப்பட்டும், பிறழ்வு அடைந்தும் இருக்கிறீர்கள். ஆனால் உங்களோடு பெரும்பான்மையினர் இருக்கின்றனர். புத்தர் தனியாக இருக்கிறார். உங்களால் அவரைக் கண்டனம் செய்ய முடியும். அவருக்கு உதவுவார் கிடையாது. அவரால் ஏதும் செய்ய இயலாது. அவர் ஏற்றுக்கொண்டாக வேண்டும். அவரை நீங்கள் ''முட்டாள்'' என்று அழைத்தால், அவர் ஏற்றுக் கொண்டாக வேண்டும். அவர் சிரிப்பார், உங்களைப் பார்த்துப் புன்னகைப்பார். ஆனால் அவரை முட்டாள் என்று அழைத்ததினால் உங்களையே உருமாற்றக்கூடிய அவருடைய ஆலோசனையை பின்பற்றுவதிலிருந்து உங்களையே தடுத்துக் கொள்கிறீர்கள். உங்கள் தாகத்தை அது தணித்து இருக்கக் கூடும்.

நினைவு இருக்கட்டும், உலகின் பைத்தியக்காரக் கூடங்களில் பைத்தியமல்லாத பலர் இருக்கின்றனர், உங்களைவிட அதிக நல்லறிவுடையவர்கள். ஆனால் அவர்கள் பிரச்சினையே அதுதான், நல்லறிவுடையவர்களைவிட அதிக அறிவு வாய்ந்து இருப்பது. அதனால்தான் அவர்களை மனநோய் விடுதிகளில் போட்டு விடுகின்றனர், அவர்கள் ஆபத்தானவர்கள்.

எப்போதுமே கவி, மறைஞானி, தூதுவர், உலகம் அறியாததைக் கொண்டுவரும் நபர் அனைவரும் கண்டனத்திற்கு உள்ளாகியிருக்கின்றனர் நீங்கள் அவரைக் கண்டனம் செய்யவில்லை என்றால், அவரால் உருமாற்றம் செய்யப்படுவீர். அதுதான் சீடனாக இருப்பதின் அர்த்தம் அது வெறுமனே உங்கள் தரப்பிலிருந்து ஒரு சைகை, ''நான் உங்களை கண்டனம் செய்ய மாட்டேன், சில சமயங்களில் நீங்கள் பித்துப்பிடித்தவர் போல எனக்குத் தோன்றினாலும், நான்

அந்த மனப்பான்மையுடன் உங்களைப் பார்க்கமாட்டேன். அந்த மனப்பான்மையை தள்ளி வைத்துவிட்டு, என் இயல்பையும் மீறி நான் உங்களைப் பின்பற்றுவேன்.'' இதுதான் சீடர் நிலை என்பதன் பொருளாகும்.

உங்களால் ஏசு அல்லது புத்தர் போன்ற ஒரு 'முட்டாளை' கண்டுபிடிக்க முடியுமானால், அந்த சந்தர்ப்பத்தை நழுவவிடாதீர்கள். அவருடன் போகவும், கண்ணை மூடிக் கொண்டு கூடவே சொல்லுங்கள். ஏனென்றால் அவர்தான் ஒரே நம்பிக்கை. உங்கள் மனம் கண்டனம் செய்யும், உங்கள் மனம் அதிக தர்க்கரீதியானது. ஆனால் புத்தர் தரும் பரிகாரங்களோ எளியவை.

இதைப்பற்றி யோசியுங்கள்...

ஒருவர் என்னிடம் வந்தார். அவர் ஒரு அரசியல்வாதி, அமைச்சர் அவர் தூக்கமின்மையால் அவதிப்பட்டுக் கொண்டிருந்தார். ''நீங்கள் வெறுமனே ஏதும் செய்யாமல் அமைதியாய் ஒரு மணி நேரம் உட்கார்ந்திருங்கள்'' என்று அவரிடம் சொன்னேன். ''சும்மா உட்கார்ந்து இருப்பது எப்படி உதவும்? என் பிரச்சினை சிக்கலானது. என் பிரச்சினை உங்களுக்குப் புரியவில்லை. முட்டாள்போல் ஒன்றும் செய்யாமல் ஒரு மணிநேரம் உட்காருவதா? அது எப்படி உதவி செய்யும்?'' அவர் தர்க்கரீதியாகப் பேசுவது தெரிகிறது. ஆனால் ஒரு அரசியல்வாதி அமைதியாய் ஒரு மணி நேரம் உட்கார்ந்தால், அவர் தன் முட்டாள்தனத்தைப் பார்க்க முடியும். அவர் தன் கடந்த இருபத்து மூன்று மணி நேரத்தில் என்ன செய்துகொண்டிருந்தார் என்பது அவருக்கே தெரியவரும்.

நான் ஒரு குருவைப் பற்றிக் கேள்விப்பட்டு இருக்கிறேன். ஒரு மனிதன் அவரிடம், ''நான் ஞானியாக என்ன செய்யவேண்டும்?'' என்று கேட்டான். ''வெளியே போய் நில்'' என்றார் குரு. வெளியே மழை பெய்துகொண்டிருந்தது. ''இது எவ்வாறு எனக்கு உதவும், சரி யாருக்குத் தெரியும்? குருக்கள் எல்லோரும்

விசித்திரமானவர்கள்'' என்று நினைத்தான். அவன் வெளியே சென்று, நின்று கொண்டான். அடாத மழை, விடாது பெய்தது. மழை நீர் அவன் ஆடைக்குள் நுழைந்தது, முற்றிலுமாக நனைந்துவிட்டான். பத்து நிமிடங்களுக்குப் பிறகு திரும்பி வந்தான். ''நான் வெளியே நின்று கொண்டிருந்தேன், இப்போது என்ன?'' என்று குருவிடம் கேட்டான். குரு அவனிடம், ''சரி என்ன நடந்தது? அங்கே நின்று கொண்டிருந்தபோது, ஏதாவது வெளிப்பாடு ஏற்பட்டதா?'' என்று கேட்டார். அவன் சொன்னான், ''வெளிப்பாடா? நான் ஒரு முட்டாள்போல் இருக்கிறேன் என்று தெரிந்தது.''

குரு சொன்னார், ''அப்படியா, இது பெரிய வெளிப்பாட்டுச் செய்தி அல்லவா! இதுதான் ஞானத்தின் தொடக்கம்! இனி, நீ தொடங்கலாம். சரியான பாதையில் இருக்கிறாய். நீ ஒரு முட்டாள் என உணர்ந்து கொண்டால், விஷயங்கள் ஏற்கனவே மாறத் தொடங்கிவிட்டன!''

ஆனால், அந்த அரசியல்வாதி என்னிடம், ''சும்மா ஒரு மணிநேரம் உட்கார்ந்து இருப்பது வெகு எளிது. இது எப்படி உதவும்?'' என்று கேட்கிறார்.

ஜென்னில், ஜப்பானில் எல்லாம் மனநலப் பகுப்பாய்வெல்லாம் செய்யமாட்டார்கள். நீண்ட பகுப்பாய்வு வழிமுறையில் அவர்கள் ஈடுபட மாட்டார்கள். ஒரு மனநோயாளி ஜென் மடாலயத்திற்கு கொண்டு வரப்படுவார். வெகு தொலைவில் ஒரு குடில் அவனுக்குத் தரப்படும். உணவு வழங்கப்படும். கவனிக்கப்படுவான். ஆனால் யாரும் எதுவும் பேச மாட்டார்கள். உணவு கொண்டு வருவோரும் அவனிடம் பேச அனுமதியில்லை. அவன் வெறுமனே தனியே விடப்படுவான். அவன் குடிலைச் சுற்றி வரலாம். வேண்டுமானால் தோட்டத்தில் ஏதாவது செய்யலாம். மூன்று வருட மனநலப் பகுப்பாய்வு சிகிச்சையில் நடக்காதது மூன்றே வாரங்களில் நடக்கும். வெறுமனே அந்த மனிதன், ஏதும் செய்யாமல், படுக்கையில் கிடந்து அல்லது

புல்வெளியில் உட்கார்ந்துகொண்டு நட்சத்திரங்களைப் பார்த்தவாறு இருப்பதால் வேகம் குறைகிறது, நெகிழ்வு ஏற்படுகிறது. இறுக்கம் தளர்ந்து, காணாமல் போகிறது. மன இறுக்கத்தை பகுப்பாய்வு செய்யவேண்டிய அவசியமில்லை. பகுப்பாய்வு இறுக்கத்தை ஏற்புடையதாக்கச் செய்யலாம். ஆனால் அதை அகற்றமுடியாது.

வெகு எளிதாகத் தோன்றுகிறது. ஆனால் ஃபிராய்ட் கோட்பாட்டாளரிடம் இதைக் கூறினால், நீங்கள் பேசுவது, முட்டாள்தனம் என்று நினைப்பார் - ''இவ்வளவு எளிதாக ஒன்றா, அது எப்படி உதவும்? பிரச்சினைகள் மிக சிக்கலானவை. கனவுகள் பகுப்பாய்வுபட வேண்டும். பிறகு உணர்வற்ற நிலைதான் ஆழமாகச் செல்ல வேண்டும்'' என்று நினைப்பார். ஒரு ஜென் ஆதரவாளரிடம் போனால், நீங்கள் முதலில் கூட்டு உணர்வற்ற நிலைக்குள் செல்ல வேண்டும் என்பார். ஒரு ஊக்க உளச்சிகிச்சை நிபுணரிடம் சென்றால், நீங்கள் தொடக்கநிலை அலறலுக்குக் கூட போக வேண்டும், பல வருடங்களாகும் என்பார். இந்த மனநலப் பகுப்பாய்வினால் நடப்பது, அதைப் பற்றி சிந்திப்பது, மற்றும் கனவுகள், கடந்த கால ஆய்வுகள் எல்லாற்றினாலும் மனிதன் வெறுத்துப் போய் - அவன் வழியில்லாமல் தன் நிலையை ஏற்றுக் கொள்ளத் தொடங்குகிறான். ''சரி, இப்படித்தான் நான் இருக்கிறேன்.'' இந்த ஆய்வுகளினால் பெரிதாய் ஒன்றும் நடப்பதில்லை. மனநலப் பகுப்பாய்வு ஒரு தோல்விதான். அது தோற்றுப்போன ஒன்று என்று புரிந்துகொள்வதற்கு மக்களுக்கு சற்று காலமாகும்.

ஆனால் கிழக்கத்திய நாடுகளில் நாம் முற்றிலும் வேறு வகையான அணுகுமுறையை முயற்சித்துள்ளோம். எளிதான ஒரு முறை. வெறுமனே அந்த மனிதனை தனியாக விட்டுவிட வேண்டும். அவன் நெகிழ்வாய் இருக்கட்டும். நீச்சலடிக்கட்டும். உட்கார்ந்து கொள்ளட்டும், அவன் உடலிலேயே இருக்க அனுமதிக்கப்படட்டும். அவன் வேறு எந்தச் செயலும் செய்வதற் கல்லாத சூழ்நிலையில் அவன் இருக்க அனுமதிக்கப்பட

வேண்டும். எந்தப் பொறுப்பும் இன்றி இங்கே இருக்கட்டும். அந்த மூன்று, நான்கு வாரங்கள், ஒரு கருவறை போன்றாகிவிடும். அவன் நெகிழ்வாய் இருந்து, உண்டு உறங்கி, குளித்து எதைப் பற்றிய கவலையும் இல்லாமல் இருப்பான். ஜென் மனிதர்கள் கூறுவது இதுதான், ''அமைதியாய் அமர்ந்து, ஏதும் செய்யாமல் இருந்தால், வசந்தம் வரும். புல் தானாகவே வளரும்''.

வாழ்க்கை தன்னைத்தானே பார்த்துக் கொள்ளும்.

உங்களுக்கான என் ஆலோசனை வெகு எளிதானது. யாரோ ஒருவர் என்னிடம் வருகிறார். நான் அவரிடம் ''நடனம் ஆடுங்கள்'' என்று சொல்கிறேன். அவர் அதை அவமதிப்பாய் எடுத்துக் கொள்கிறார். ''என்னது? நான் எவ்வளவு பெரிய பிரச்சினையை உங்களிடம் கொண்டு வந்திருக்கிறேன். நீங்கள் வெறுமனே 'ஆடு' என்கிறீர்கள். இது எப்படி உதவும்?''

உண்மை மிக எளியது. உங்களால் நடனமாட முடியுமானால். வெகுவாய் ஆழ்ந்து இருக்கும்போது நடனமாடுபவர் நடனத்தில் மறைந்து போகிறார். பிரச்சினைகள் மாறும். ஏனென்றால், நடனமாடுபவர் இல்லாதபோது, அகங்காரம் இல்லாமல் போகிறது. நீங்கள் அகங்காரம் இல்லாமல் மெய்மையைப் பார்க்கவேண்டும். இதுமட்டுமே உருமாற்றுவதற்கான ஒரே சக்தி. இதுவே தீவிர புரட்சியாகும்.

நினைவிருக்கட்டும், எல்லா பெரிய உண்மைகளும் எளிதானவை. பொய்கள் எளியவை அல்ல. அவற்றால் அப்படி இருக்கமுடியாது. ஏனென்றால், நீங்கள் அதனை உடனே பிடித்துக்கொண்டு, அது பொய்யென உடனே தெரிந்து கொள்வீர்கள். பொய் அதிநவீனமாய் இருக்க வேண்டும். மிகவும் வழவழப்பாய் இருக்கவேண்டும். அதை உங்களால் பிடிக்க முடியாது. அது மிகவும் சிக்கலாகவும் இருக்கவேண்டும். அதன் காரணமாக நீங்கள் அதைச் சுற்றி சுற்றி வரலாம். வாயிற்கதவைக் கண்டுபிடிக்கவே முடியாது. அதற்கு சிக்கலான வார்த்தைகளைப் பயன்படுத்த வேண்டும். விளங்கா மொழிநடை வேண்டும்.

உண்மை சூரியனைப் போல எளிமையானது. பறவைகள் பாடுவது போன்றது. உண்மை மரங்களின் பச்சை நிறத்தைப் போன்று எளிமையானது. உண்மை என்பது, ''நீங்கள் அங்கே உள்ளீர்கள்''. ''நான் இங்கே இருக்கிறேன்'' என்பதுபோன்ற எளிமையுடையது. உண்மை இந்த கணத்தைப் போன்று எளிமையானது. உங்களுக்கும் எனக்கும் உள்ள இடைவெளி, போன்று உண்மை எளிமையானது.

**முதல் கேள்வி:**

*நான் ஒரு அமைதியற்ற, குழம்பிப்போன புத்தனா? என் புத்தத்தன்மையின் விசித்திரமான பண்பை இப்பொழுதிற்கு ஏற்றுக்கொண்டால் போதுமானதா? அல்லது இப்போது நடந்துகொண்டிருப்பதிலிருந்து வரவிருக்கும் ஒன்று வேறுபட்டதா?*

சம்புத்தா, மற்ற எல்லோரையும் போலவே நீங்களும் தொடக்கத்திலிருந்தே ஒரு புத்தர்தான். புத்தர்தன்மைதான் மூலமும் அதுவே இலக்கமாகும். நீங்கள் தொடக்கத்திலிருந்தே ஒரு புத்தர்தான், முடிவுவரையிலும் அவ்வாறே இருப்பீர்கள். ஒரே கேள்வி என்னவென்றால், அதை அறிந்து இருப்பது அதை உணராமல் இருப்பதாகும். இது உண்மையானதுதான். அது ஏற்கனவே இருக்கிறது. உணர்தல்பற்றிக் கேள்வி இல்லை. ஆனால் அதை அடையாளம் காண்பது, உட்புறமாக திரும்புதல் தேவை. ''மாற்றம்'' என்ற சொல்லின் பொருள் தன்மீதே திரும்புதல்.

உணர்வுநிலை என்பது தொடர்ச்சியாக பொருட்களால் ஈடுபடுத்தப்படுவதாகும். அது வெளியே போதல். அதன் ஈடுபாடு, புறம்பானதற்கு, வெளியில் உள்ளதற்கு, அதை புறம்பானதிலிருந்து விடுவித்து, உட்புறமாக நீங்கள் செலுத்தினீர்கள் என்றால் உணர்தல் எழும். அதன்பிறகு முதன்முறையாக நீங்கள் உங்களின் உயிருருவை சுவைக்கத் தொடங்குவீர்கள். லட்சக்கணக்கான வாழ்வுகளில் நீங்கள் மற்றதை சுவைத்துக் கொண்டிருந்தீர்கள். மற்றது உங்களை வெறுமனே ஈடுபடுத்தி வைத்திருக்கும், அவ்வளவே, வேறு ஒன்றும் நடக்காது. மற்றது உங்களை இந்தப் பொம்மைகளோடு மட்டுமே ஈடுபடுத்தி வைத்திருக்கும்.

நீங்கள் மற்றதோடு ஈடுபடுத்திக் கொண்டது போல, மற்றதும் உங்களோடு ஈடுபட்டு இருக்கும். இது ஏனென்றால் அதற்கு, அவனுக்கு அல்லது அவளுக்கு நீங்கள்தான் மற்றது (அல்லது மற்றவர்) ஆவீர்கள்.

மற்றதைப் பார்த்து தன்னையே மறப்பது அறிவீனம். தன்னை நினைவில்கொண்டு மற்றதை மறப்பது விழிப்புணர்வு. உங்களைப் பற்றிய விழிப்புணர்வு உங்களுக்கு ஒருமுறை ஏற்பட்டு உங்கள் புத்தத் தன்மையை உணர்ந்துகொண்டால், நீங்கள் வெளியிலும் பார்க்கலாம். அப்போது மற்றது காணக் கிடைக்காது. நீங்கள் யார் என்பதை உணர்ந்துகொண்டால் அந்த ஞானத்தில் மற்றது மறைந்துவிடும்.

இதுதான் சுயஅறிதலின் முரண்பாட்டுப் பண்பாகும். நீங்கள் சுயத்தை உணர்ந்து கொண்டால், சுயம் மறைந்துவிடும். சுயம் மறைந்ததோடு மற்றதும் போய்விடும். சுயம் இல்லாமல் மற்றதும் நிலைத்து இருக்க முடியாது. 'நான்' - 'நீ' ஆகியவை ஜோடியாகத் தான் இருக்கும். அவற்றை உங்களால் பிரிக்க முடியாது. அவை இரண்டு வார்த்தைகள் அல்ல. அவை இணைச்சொற்கள். பிரிக்க முடியாதவை. 'நான்' உருவாக்கிய நிழலில் நீங்கள் மற்றதைத் தேடிக் கொண்டேயிருப்பீர்கள்.

நீங்கள் தொடர்ந்து மற்றவரோடு ஈடுபட்டுக் கொண்டே புதிய பொறிகளில் விழுந்துகொண்டேயிருப்பீர்கள், புதிய ஆட்டங்களில் ஈடுபட்டுக் கொண்டேயிருப்பீர்கள். மற்றது என்பது இந்த இயல் உலகம்.

உள்நோக்கித் திரும்புவது....

ஆனால் நீங்களோ வெளிநோக்கு வழியிலேயே கருத்தாக இருக்கின்றீர்கள். மற்றதே உங்களுக்கு கிளர்ச்சி உண்டாக்குகிறது, மற்றதை ஆராய முற்படுகிறீர்கள். அதனால் உங்கள் நகர்வு எப்போதும் மற்றதில்தான் இருக்கிறது, அதன்காரணமாக அடையாளமற்றதாக, நினைவுகொள்ளாமல், உணர்வற்று இருக்கிறீர்கள். புத்தத்தன்மை என்பது தன்னோடு ஈடுபடுத்திக்

கொள்வதைத் தவிர வேறொன்றுமில்லை. ஒரு முறை நீங்கள் யார் என்பதை அறிந்துகொண்டீர்களானால் 'நான்' என்பது மறைந்து விடும், 'நான்' என்பது மறைந்த பிறகு மற்றதும் மறைந்துவிடும். அதன்பிறகு எல்லாமே ஒன்றுதான். உள் ஒன்றும் புறம் ஒன்றும் என்று ஏதும் இருக்காது. அதைத்தான் ஞானம் அடைதல் என்பார்கள்.

> *நீங்கள் கேட்கிறீர்கள், ''நான் ஒரு அமைதியற்ற, குழம்பிப்போன புத்தனா? என் புத்தத்தன்மையின் விசித்திரமான பண்பை இப்பொழுதிற்கு ஏற்றுக்கொண்டால் போதுமானதா?...''*

எல்லோரும் அமைதியற்று, குழம்பிப்போய்தான் இருக்கிறார்கள். மற்றதுடன் உங்கள் ஈடுபாட்டினால்தான் குழப்பம் வருகிறது. மற்றதுதான் உங்களைக் குழப்புகிறது.

அமைதியின்மைக்கு காரணம், நீங்கள் மற்றதினால் அளவிற்கு அதிகமாய் கிளர்ச்சி அடைகிறீர்கள். அது இருக்கத்தான் செய்யும். ஆனால் உங்கள் புத்தத்தன்மை அழியாது. உங்களுடைய உள்ளார்ந்த ஆற்றல் இதன் காரணமாக தீண்டப்படாது. இது மேலெழுந்தவாரியானது, புற எல்லை மீதானது. காற்று புறப்பரப்பின் மீதுதான் வீசுகிறது, அலைகளும் புற எல்லையில் தான் ஏற்படுகின்றன, ஆனால் உங்களது அடி ஆழத்தில் நீங்கள் களங்கம் அடையமாட்டீர்கள். அசைவற்று இருப்பீர்கள். ஒரு சிற்றலை கூட எழாது. அதுதான் சூறாவளியின் மையம்.

உள்நோக்குத் தொடங்குங்கள். சில கணங்களாகக்கூட இருக்கட்டும். மற்றதை மறந்திடுங்கள். மெல்ல மெல்ல அந்தத் திறம் அறிந்துகொள்வீர்கள். ஆனால் அதற்கென ஒரு கலை கிடையாது, இருந்திருந்தால் நான் உங்களுக்கு கற்றுக் கொடுத்திருப்பேன். கற்றுக்கொடுக்க முடியாத ஒன்று. நீங்கள்தான் தேடிப்பார்க்க வேண்டும். தேடுதலில் ஒருவர் வந்தடைவார், அது உறுதி. காரணம் பலர் வந்தடைந்து உள்ளனர். நான் அடைந்துள்ளேன், நீங்களும் வந்தடைவீர்கள்.

நீங்கள் மற்றொருவரைப் பின்தொடர முடியாது. ஏனென்றால் ஒவ்வொருவரும் தங்களுக்கான தனி வழியில் வந்தடைவார்கள். காரணம் ஒவ்வொருவரும் தனித்தன்மை உடையவர்கள், மற்றவரிடமிருந்து வேறுபட்டவர்கள்.

ஆக தேடுதலைத் தொடங்கவும். அந்தத் தேடுதல்தான் தியானம். மற்றதற்கு உங்கள் கண்களை மூடுங்கள். புத்தர் சிலைகளைப் பார்த்திருப்பீர்கள். கண்களை மூடியவாறு புத்தர் அமர்ந்திருப்பார். மூடிய கண்கள் ஒரு அடையாளக் குறிதான். அதாவது மற்றதுடன் அவர் ஈடுபட்டு இருக்கவில்லை, மற்றதை இனியும் ஆராய்ந்துகொண்டு இருக்கவில்லை என்று கூறும் அடையாளம்தான் மூடிய கண்களாகும். அவர் முதன்மையான விஷயங்களை முதலில் செய்ய விரும்புகிறார். உள்ளுணர்வை ஆராய விரும்புகிறார். என்னுள் இருப்பது யார்? நான் யார் என்று தெரிந்து கொள்ளாவிட்டால், மற்றது பற்றி நான் அறிந்துகொள்ளவே முடியாது. என்னைப் பற்றிய அனுபவமே இல்லையென்றால், மற்றதைப் பற்றிய அனுபவம் எனக்கு எப்படி ஏற்படும். மற்றது தூரத்தில் இருக்கிறது. என் இதயத்துடிப்பை உணரும் அளவிற்குக்கூட என்னிடம் நுண்ணுணர்வு இல்லையென்றால், மற்றவரின் இதயத்துடிப்பை நான் எவ்வாறு உணர முடியும்? ஆனால் அதைத்தான் நீங்கள் முயற்சி செய்துகொண்டிருக்கிறீர்கள், தோற்றுப் போகிறீர்கள். மீண்டும் முயற்சி, நம்பிக்கை கொள்கிறீர்கள், மறுபடியும் மறுபடியும் ஏமாற்றம். இது ஒரு பழைய சக்கரச்சுவடு. அதில் சுற்றிக்கொண்டே இருப்பீர்கள். இது ஒரு கெடு சூழ்வட்டம்.

உள்முகமாகத் தேடுங்கள். எப்போதெல்லாம் தனியாக இருக்கிறீர்களோ — தனியாக இருக்கும் அவ்வப்போது முயற்சி செய்யுங்கள், எப்போதும் கூட்டத்தோடு இருப்பது நல்லதல்ல. உங்களுக்கான ஒரு இடத்தை தேடிப்பிடியுங்கள். பிறகு வெறுமனே கண்ணை மூடி இருங்கள். அது வெறும் அடையாளக் குறிதான். உலகத்திற்கு உங்களையே மூடிக்கொள்ளுங்கள்.

இது புரிந்துகொள்ள வேண்டிய ஒன்று, தற்காலத்திய மனதானது எப்படித் திறந்து இருக்க வேண்டும் என்று ரொம்பக்

கவலைப்படுகிறது. மற்றவர்களுக்கு எவ்வாறு திறந்த மனதோடு இருக்கவேண்டும் என்று கவலைப்படுகிறது. அது அழகான புரிதல்தான். ஆனால் அதன் மறு எல்லைக்கு எளிதாக போக வாய்ப்புண்டு. அதைத்தான் மனம் எப்போதும் செய்கிறது.

கடந்தகாலத்தில் திறப்பில்லாமல் மூடியவண்ணம் இருப்பதுபற்றி சமயங்கள் உங்களுக்குக் கற்றுக் கொடுத்தன. அது ஒரு முனைக்கோடி, ஆனால் திறந்தவாறு இருப்பது, மற்றவரை எப்படி ஏற்கும் வகையில் இருப்பது என்பதுதான் நவீனப் பாணியாகும். திறப்பில்லாமல் இருப்பது பற்றி நீங்கள் முற்றிலும் மறந்துவிடலாம்... இரண்டுமே ஆபத்தானவைதான். முதலில் கிறிஸ்தவத்தால் துன்பப்பட்டீர்கள். இப்போது, நவீன மனித வளர்ச்சி உளவியல்களால் நீங்கள் துன்பப்பட முடியும். சமநிலை தேவை. ஒருவருக்கு சுதந்திரம் வேண்டும். ஒருவருக்கு என்ன தேவையோ அதைச் செய்வதற்குரிய திறன் பெற்று இருக்க வேண்டும். சில சமயங்களில் நீங்கள் மனம் திறக்க வேண்டும், அது நேசம். நேசம் என்பது மற்றவர்க்கு திறந்து இருப்பதாகும். சிலசமயங்களில் முழு உலகிற்கே, முழு இருப்பிற்கே நீங்கள் மூடியவாறு இருக்க வேண்டும் — அது தியானம் ஆகும். இவ்விரண்டையும் தன் விருப்பத்திற்கேற்ப செய்யத் திறன் உள்ளவனே மனிதன். உண்மையில் வளர்ச்சியடைந்த மனிதன். உலகிற்கு தன்னை மூடிக்கொள்வது, உலகிற்காக திறந்து கொள்வதைத் தடுக்காது, அவனது திறப்பு மூடவே முடியாத ஒரு நிலையான இறுகிய செய்கையாகியும் விடாது.

உங்கள் கண்கள் போலாக வேண்டும். அவை ஓயாது இமை கொட்டும். உங்கள் கண்கள் நிலைகொண்டு இருந்தால், அவற்றால் இமைக்கமுடியாது. அது ஆரோக்கியமானதல்ல. உங்கள் கண்கள் மூடி, திறக்க முடியாமல் போய்விட்டால் அதுவும் ஆரோக்கியமானதல்ல. ஆக இந்த சமச்சீர் நிலையை நீங்கள் எப்போதும் ஞாபகம் வைத்துக்கொள்ள நான் விரும்புகிறேன். ஏனென்றால், மனம் எப்போதும் முனைக்கோடிக்கு நகரும். முழுவதுமாக மூடி கிறிஸ்தவ துறவியாகும், மடாலயத்திற்கும்

போகும். உலகை முற்றிலும் மறந்து சுருங்கத் தொடங்கும். மரணிக்கத் தொடங்கும் — இது தற்கொலையாகும். அல்லது நீங்கள் கூட்டத்தோடு சேர்வீர்கள். ஒரு கூட்டத்திலிருந்து மற்றொன்றிற்கு போவீர்கள், மறுபடியும் மறுபடியும் திறப்பு. உங்கள் முழு முயற்சியுமே எப்படித் திறப்பது பற்றி இருக்கும், எப்படி திறந்தவாறு இருப்பதுபற்றி இருக்கும். திறக்க முடியாமல் போனால் மிகவும் துயரப்படுவீர்கள். இதிலேயே செயல்பட்டுக்கொண்டு இருந்தீர்களானால், விரைவில் அதிலேயே நிலைத்திடுவீர்கள். உங்கள் இடைவெளிகள் திறந்தே இருக்கும், ஆனால் அவற்றை மூடவே முடியாது.

கிறிஸ்துவத் துறவியினால் நேசிக்கவே முடியாது. திறப்பு பற்றி அதீத ஈடுபாடு கொண்டுள்ளவர்கள் தியானம் செய்யமுடியாது. இரண்டும் தேவை. இரண்டும் துருவ முனைகளாகும்.

நேசத்தில் நீங்கள் மற்றவரோடு தொடர்பு கொள்வீர்கள், தியானத்தில் உங்களுடனே தொடர்பு கொள்வீர்கள். இரண்டும் வளமூட்டுபவை. நேசம் ஆழமான தியானத்தை அடித்தளமாகக் கொள்ளவில்லை என்றால், அது மேலோட்டமானதாக இருக்கும். அது நெருக்கமானதாக இருக்காது, அதில் ஆழமுடைமை இருக்காது. அது உங்களுக்கு ஆனந்தம் தராது. துயரங்களைக் கொண்டு வருமே தவிர பரவசம் அளிக்காது. நேசம் தியானத்தை அடிப்படையாக் கொண்டு இருக்கவேண்டும். நேசத்திற்கு எதிரான தியானம் வறண்ட பாலைவனமாகத்தான் இருக்க வேண்டும். ஒரு தரிசு நிலம், அதில் எந்தப் பூவும் மலராது.

மனித இனம் இரண்டையும் முயற்சித்துப் பார்த்து, இரண்டிலும் தோற்றுவிட்டது. ஆனால் இரண்டுமே தனித்தனியாக முயற்சி செய்து பார்க்கப்பட்டன, ஒன்றிற்கு மற்றொன்று பகை முரணாக. மனித வரலாற்றிலே தியானமும் நேசமும் ஒன்றாக முயற்சிக்கப் படவேயில்லை. பறவையின் இரண்டு சிறகுகளாக, எதிர் எதிரானது ஆனால் நேயமானதாக.

இங்கே என் அடிப்படை வேலையே இதுதான். நீங்கள் நேசத்தோடு திறந்தவாறு இருக்க நான் விரும்புகிறேன். அதே

சமயத்தில் தியானத்தோடு மூடியவாறு இருக்கவும் விரும்புகிறேன்.

திறப்பதும் மூடுவதும் மூச்சை உள்ளிழுப்பது மற்றும் வெளியேற்றுவது, கண் இமைப்பதுபோல இருக்க வேண்டும். இதயத்துடிப்புபோல இருக்கவேண்டும். இரண்டு துடிப்புகளுக்கிடையே இடைவெளி உள்ளது. அந்த இடைவெளியின் போது, இதயம் நின்று, மீண்டும் துடிக்கத் தொடங்குகிறது. துடிப்பு மற்றும் நிறுத்தும்—உங்கள் வாழ்க்கையே இசையாக இருக்கவேண்டும், மௌனத்தின் நாதமாய் இருக்க வேண்டும். ஒலி தனியாக இரைச்சல் தான். ஒலி மௌனத்தோடு ஒத்திசைய வேண்டும். இசை மேன்மையாகும்போது அதில் மேலும் மௌனம் உள்ளடங்கியிருக்கும். ஒலியின்மூலமாக மௌனத்தைக் கொண்டிருக்கும் இது முரண்பாடானது. மகத்தானவை எல்லாம் முரண்பாடானவைதான். நீங்கள் மனித உணர்வு நிலையின் உச்சத்திற்கு உண்மையிலேயே வரவிரும்பினால் நீங்கள் முரண்பாடாக இருக்க வேண்டும்.

தியானம் / நேசம், சுவாசம் உள்ளே / வெளியே, திற / மூடு - இந்த விஷயங்கள் மெல்ல மெல்ல இயல்பாகிவிடும். எதிலும் ஆட்கொண்டு விட வேண்டாம். மெதுவாக நீங்கள் யார் என்பதை அடையாளம் கண்டு கொள்வீர்கள். நீங்கள் ஒரு புத்தர்.

நினைவிருக்கட்டும், புத்தர்கள் எல்லா வடிவு மற்றும் அளவுகளிலும் வருவார்கள். புத்தரின் உருவச் சிலையைச் செய்யாதீர்கள். புத்தத் தன்மையின் ஒரு படிவம்தான் கௌதம புத்தர். நீங்கள் கௌதமர் போல இருக்கலாகாது. உங்கள் வழியில் நீங்கள் ஒரு புத்தராய் இருப்பீர்கள். உங்கள் புத்தத் தன்மைக்கு அதன் சொந்த சுவை இருக்கும், வடிவு இருக்கும், உயிருரு இருக்கும். நீங்கள் இரண்டாம்தரம் படிவமாக இருக்கமாட்டீர்கள். ஒரு கார்பன் காப்பியாக இருக்க மாட்டீர்கள். நீங்கள் மூலப்படிவமாக இருப்பீர்கள். இதுதான் வாழ்க்கையின் அழகு - இங்கே இருக்கும் எல்லோரும் மூலப்படிவங்கள்தான். அசல் தான். கடவுள் நகல் செய்வதில்லை. அவர் ஒவ்வொரு மனித ஜீவனையும் புத்தம் புதிதாக உருவாக்குகிறார்.

*"நான் ஒரு அமைதியற்ற குழம்பிப்போன புத்தனா? என் புத்தத்தன்மையின் விசித்திரமான பண்பை இப்பொழுதிற்கு ஏற்றுக்கொண்டால் போதுமானதா?...."*

இருப்பதையெல்லாம் நீங்கள் ஏற்றுக்கொண்டாக வேண்டும். நீங்கள் என்னவாக இருக்கிறீர்களோ அவற்றை எல்லாம் ஏற்றுக்கொள்ள வேண்டும், ஏனென்றால் ஏற்பினால் மட்டுமே அமைதியின்மை மறையும். ஏற்றுக்கொள்வதினால் மட்டுமே ஒருவர் அமைதியடையத் தொடங்க முடியும். ஒருவர் மேலும் அறிவுத்தெளிவு பெறமுடியும், மையமாக முடியும். ஏற்றுக்கொள்வதினால் இறுக்கங்கள் தளர்ந்துபோகும். ஏற்றுக் கொள்தல்தான் நெகிழ்தலாகும். நெகிழ்வில் உள்முகமாக திரும்ப வாய்ப்பு இருக்கிறது, அதே போல் வெளிப்புறமும் திரும்ப வாய்ப்புள்ளது. இரண்டுமே இலகுவாகின்றன. பாய்வு எளிதாகிறது. வெளியே சென்று மற்றதைக் காண முடியும், உள்ளே திரும்பி உங்களையே நோக்க முடியும். என்றாவது ஒரு நாள் உள்ளே இருப்பவரும், வெளியே இருப்பவரும் இருவர் அல்ல என்பதை உணர்ந்து ஆச்சரியப்படுவீர்கள். நீங்கள் வெளியே போகும்போது, உங்களுடைய சொந்த வெளிப்புறத்திற்கே போவீர்கள். உள்ளே செல்லும்போதும் உங்களுடைய உட்புறத்திற்கே போவீர்கள். "உள்ளும்" "புறமும்" உங்களின் இரு பக்கங்களாகும்.

இந்த முழு இருப்பும் ஒரு பிரபஞ்சமாகும். அது ஒன்றாந் தன்மை உடையது. அது பலவானதல்ல, அது ஒன்றானது. ஆனால் உங்களுடைய தியானம் மற்றும் நேசத்தின், உச்சத்தின் போதுதான் உங்களுக்கு இந்த ஒன்றாந்தன்மை வெளிப்படும்.

நீங்கள் யாராக இருந்தாலும் எப்படியிருந்தாலும் அதை ஏற்றுக்கொள்ளுங்கள். அங்கே நின்றுவிட வேண்டும் என்று பொருள் அல்ல. ஏற்றுக்கொள்ளவும், ஏற்பின்மூலமாக பாய்வு எழும், நீங்கள் நகரத்தொடங்குகிறீர்கள். ஆனால் அந்த நகர்வு நிராகரிப்பின்மூலமாக இல்லை. ஏதோ ஒரு இலக்கை அடைவதற்காக அந்த நகர்வு இல்லை. அந்தளவிற்கு

சக்தி இருப்பதினால், அந்த சக்தி தானாகவே நகர்கிறது. கங்கை இமயத்திலிருந்து பாய்வதைப் பாருங்கள். கங்கை உண்மையிலேயே சமுத்திரத்தைத் தேடிக்கொண்டிருக்கிறது என்று நினைக்கிறீர்களா? அது முற்றிலும் தவறு. கங்கைக்கு சமுத்திரம் பற்றிய எந்தக் கருத்தும் கிடையாது, அது சமுத்திரத்தைத் தேடவில்லை. அது சமுத்திரத்தை அடைவது வேறு விஷயம்... ஆனால் சமுத்திரத்தைத் தேடும் செயல்நோக்கும் அதற்கு இல்லை. அப்படியானால் என்ன நடக்கிறது? ஏன் பாய்கிறது? அது சமுத்திரத்தைநோக்கிப் போவதில்லை. அதனிடம் அடக்கமாட்டாத சக்தி உள்ளதினால் அது வெறுமனே நகர்ந்து கொண்டிருக்கிறது. பொங்கி வழியும் சக்தி இருப்பதினால் அது நகர்ந்துகொண்டிருக்கிறது.

இந்த வேறுபாட்டைக் கவனியுங்கள், அது மிகப்பெரிய வேறுபாடு. ஒரு மனிதன் இரண்டு வழிகளில் நகரலாம். ஒன்று செயல் நோக்கம்: வருங்காலத்தில் அடைவதற்கு ஏதோ ஒன்று இருக்கிறது. நீங்கள் வரிந்துகட்டிக்கொண்டு, இலக்கு நோக்கி உங்களையே இழுத்துக் கொண்டுபோவீர்கள். உங்கள் வாழ்க்கையே துன்பமயமாக இருக்கும். வேறு ஒரு வகையான நகர்வு இருக்கிறது. அது உண்மையான நகர்வு. அதற்கு செயல் நோக்கு கிடையாது. ஆனால் சக்தி பொங்கிவழிவதினால் நீங்கள் நகர்கின்றீர்கள்.

''சக்தி என்பது நகர்வு, சக்தி என்பது உவகை'' என்கிறார் வில்லியம் பிளேக். ஆம், ஏனென்றால் நகர்வு மகிழ்ச்சி தரும். நகர்வு என்பது நடனமாகும். நீங்கள் நகரத் தொடங்குவதற்கு காரணம் அந்தளவிற்கு சக்தி இருக்கிறது. அந்த சக்தி பொங்கிப் பாய்கிறது. என்றாவது ஒரு நாள் வந்தடைவீர்கள். ஆனால் அடைவது இலக்காக இருந்ததில்லை. அந்த வருகை முன்திட்டமிட்டதல்ல. நீங்கள் அதைப்பற்றி சிந்தித்ததில்லை. கங்கை சமுத்திரத்தை அடைகிறது. ஆனால் அது சமுத்திரத்தில் போய்ச் சேர முயற்சி செய்யவில்லை. தங்கள் சக்தியில் களிப்புற்று இருந்தது. அந்த மகிழ்ச்சியில், சக்தியின் பொங்குதலில் நகர்வு ஏற்படுகிறது.

உங்களை ஏற்றுக்கொள்ளுங்கள். அந்த ஏற்பின் சக்தியை சேமிக்கத் தொடங்குவீர்கள். இதுதான் இயங்குமுறை. உங்களையே ஏற்றுக்கொள்ளும்போது நீங்கள் போராட மாட்டீர்கள். போராட்டத்தில் சக்தி விரயமாகிறது. எப்போது நீங்கள் உங்களை முற்றிலும் உள்ளபடியே ஏற்றுக் கொள்கிறீர்களோ, எல்லாப் போராட்டங்களும் எல்லா உரசல் களும் கரைந்துபோகின்றன. சக்தி சேமிக்கப்படுகிறது. நீங்கள் ஒரு பெரிய சேமிப்புக் களஞ்சியமாவீர்கள். பெரும் சக்திப் பாய்வாகத் தொடங்குவீர்கள். விரைவில் நீங்கள் நகர்வதைக் காண்பீர்கள். அந்த நகர்விற்கு அழகு உள்ளது. ஏனென்றால் நீங்கள் எந்தக் குறிப்பிட்ட இலக்கையும்நோக்கி நகர்வதில்லை. கடவுள், நிர்வாணம், ஞானம், புத்தத்தன்மை எதுவும் இல்லை. நீங்கள் வெறுமனே நகர்கின்றீர்கள். ஏனென்றால் உங்களால் உங்களையே கட்டுப்படுத்த முடியவில்லை. நீங்கள் நகர்ந்தே ஆக வேண்டும். அடக்க முடியாத நிலை, அதுவேதான் உங்கள் நகர்வு. உண்மையில் அந்த நகர்வில் எதையும் செய்வதில்லை, அந்த நகர்வு உங்களுக்குத் தானாகவே ஏற்படுகிறது. வெறும் சக்தியினால் மட்டுமே அந்த நகர்வு உங்களுக்குள் வளர்கிறது.

இந்த இரண்டிற்கும் உள்ள வேறுபாட்டின்மீது தியானம் செய்யுங்கள். முதலாவதில் இறுக்கம், ஆசை, திட்டமிடுதல் வருங்காலம் போன்றவை இருக்கின்றன. நிகழ்காலம் தவற விடப்படுகிறது, நிகழ்காலம் நிராகரிக்கப்படுகிறது. தேர்வுகள் இருக்கின்றன. பல சாத்தியக் கூறுகள் இருக்கின்றன. நீங்கள் ஏதாவது ஒன்றை தேர்வு செய்ய வேண்டும். யாருக்குத் தெரியும் உங்கள் தேர்வு சரியா, தவறா என்று? அதனால் வேதனை, பதற்றம் நிலவுகிறது. யாருக்குத் தெரியும் கடவுள் இருக்கிறாரா இல்லையா என்று? ஆக, சந்தேகம், ஐய உணர்வு மற்றும் பயம் அந்த இலக்கின் காரணமாகவே நீங்கள் தொடர்ந்து முழு பயணத்தையும் தவறவிடுகிறீர்கள். பட்சிகளின் இசையை, சாலையோர மரங்களின் அழகை எல்லாம் ரசிக்க முடியவில்லை. ஏனென்றால் இலக்கின் மீதுதான் உங்கள் குறி. விரயம் செய்ய உங்களிடம் சக்தி இல்லை. நீங்கள் ஒரு கருமியாகிவிட்டீர்கள்,

எதையும் பார்ப்பதில்லை. வெறும் வேகமெடுத்தல்தான். உங்களிடம் அதீத பயத்தோடும், உள் நடுக்கத்தோடும் ஒரு ஓட்டம். நீங்கள் தவறான திசையில் கூட ஓடிக்கொண்டிருக்கலாம். தவறான மனிதரைப் பின்பற்றக்கூடும், ஒருக்கால் ஒரு புனைவைக்கூட பின் தொடரலாம். அப்படியொன்று இல்லாது போகலாம். உங்கள் முழு வாழ்க்கையையும் பளுவையும் வைக்கிறீர்கள். அதனால்தான் உங்களில் துறவிகள் என்று அழைக்கப்படுபவர்கள் எல்லாம் கவலையாகவே காணப்படுகின்றனர். அவர்கள் வாழ்க்கையில் இசை இல்லை, நடனம் இல்லை, கொண்டாட்டம் இல்லை. அழுதுகொண்டும், புலம்பிக்கொண்டும் வேறு எவரிடமோ கேட்ட ஒன்றைநோக்கித் தங்களை இழுத்துக்கொண்டு போகின்றனர். அவர்கள் நம்பிக்கை உடையவர்களாக இருக்க முடியாது, அது நடவாத காரியம். அனுபவத்தின் மூலமாகவே நம்பிக்கை எழுகின்றது. அவர்களால் அதிகபட்சம் மற்றதை நம்பமுடியும். இந்த நம்புவதும் சந்தேகத்தின் அடிப்படையில் தான். சந்தேகம் மீண்டும் மீண்டும் எழுவதால் உங்கள் துறவிகளும் தடம் மாறிப்போய் விடுவார்கள்.

அவர்களை சபலப்படுத்த எந்த சாத்தானும் இல்லை. உங்களின் துறவிகள் என்று அழைக்கப்படுவோரின் சபலங்கள் எல்லாம் அவர்களின் அடி ஆழத்திலிருந்தே எழுகின்றன. அடக்கி வைக்கப்பட்ட இயல்பு, சந்தேகம், ஆசைகள் அவர்கள் அச்சம் உடையவர்கள். மரங்களோடும் பட்சிகளோடும் பேசும் அளவிற்கு அறிவார்ந்த துறவிகள் பற்றி கேள்விப்பட்டு இருப்பீர்கள், ஆனால் அவர்கள் மனிதர்களோடு தொடர்பு கொள்ள பயம். அவர்கள் தொழு நோயாளிகளைத் தேடிப் போய் முத்தம் கொடுக்க விழைவர், ஆனால் ஒரு அழகான பெண்ணைத் தொடமாட்டார். இதில் உள்ள முட்டாள்தனம் தெரிகிறதல்லவா? தொழுநோயாளியை முத்தமிடத் தயார், ஆனால் பெண்ணை கண்டு ஏன் அச்சம்? என்ன மாதிரியான துறவறம் இது? என்ன மாதிரியான புனிதத் தன்மை இது? இது முழுமையானது அல்ல.

பெண்ணிடம் பயம்; அந்தப் பகுதியை அடக்கி வைத்துள்ளனர். உண்மையில் அந்தப் பகுதியை அடக்கிவைக்கும் பொருட்டு

அவர்கள் தொழுநோயாளியை முத்தமிடுகின்றனர். அழகைக் கண்டு பயம், அசிங்கத்தைத் தேடுகின்றனர். உடலின் ஈர்ப்பைக் கண்டு பயம், அதனால் வெறுப்பூட்டும் உடலைத் தேடுகின்றனர். அன்பினால் ஒன்றும் உங்கள் துறவிகள் தொழுநோயாளிகளை முத்தமிட்டுக் கொண்டிருக்கவில்லை. உடல் தங்களுக்கு வெறுப் பூட்டுவதாக இருக்க வேண்டும், அப்படியானால்தான் அழகான உடல் மீதான ஆசையை அடக்க முடியும். இது வெறும் அபத்தம், இந்த மக்களால் வந்தடைய முடியாது. அவர்கள் தொடங்கவே இல்லை. எவ்வாறு வந்தடைவது? பயணம் தொடங்கவே இல்லை.

நான் உங்களுக்கு வேறு வகையான பயணம் கற்றுத் தருகிறேன் - இலக்கு நோக்கிப் போகும் பயணம் அல்ல; ஆனால் அதீத சக்தியினால் வெளிவரும் ஓர் பயணம். இந்தப் பயணத்தில் ஒவ்வொரு கணமும் மகிழ்ச்சிகரமாக இருக்கும். ஏனென்றால், நீங்கள் எந்த இலக்கு பற்றியும் கவலை இல்லாமல் இருக்கிறீர்கள். இதில் உள்ள அழகும் முரண்பாடும் என்னவென்றால், இலக்கு பற்றிய கவலை இல்லாததினால் நீங்கள் வாழும் ஒவ்வொரு கணத்தையும் ரசிக்கின்றீர்கள். இலக்கையும் அடைகின்றீர்கள். உங்களால் பயணத்தை ரசிக்க முடியாதபோது உங்கள் இலக்கையும் அடைவதில்லை. நீங்கள் வழிப்பயணத்தின்போது ரசித்த அந்தக் கணங்கள் மகிழ்வுற்று, சேகரித்த அந்தக் கணங்களில்தான் உங்களை அந்த இறுதி உண்மையைத் தெரிந்துகொள்ளும் இறுதி ஆனந்தத்திற்கு திறன் பெறச் செய்கிறது.

உங்களையே ஏற்றுக் கொள்ளுங்கள். உங்களுக்குள்ளேயே நெகிழ்வாய் இருங்கள். ரசித்து மகிழுங்கள். உங்களையே நேசியுங்கள். நீங்கள் நன்றாய் உள்ளீர்கள். அழகாய் இருக்கின்றீர்கள். இந்த உணர்வு உங்களுக்குள்ளே எழட்டும். எல்லாவிதமான சச்சரவுகளும் காணக்கிடைக்காமல் போய்விடும். இனி சச்சரவுகள் இல்லை. நீங்கள் போராடுவதில்லை. சேமித்து வைத்த சக்தி வெகு அதிகம். விரைவில் நீங்கள் ஒரு பெரும் சேமிப்புக் களஞ்சியமாகி விடுவதைக் காண்பீர்கள். நீங்கள் இப்போது நகரத் தயாராகிறீர்கள். உண்மையில்

இனியும் உங்களால் தங்கி இருக்க முடியாது, சக்தி தானாகவே நகரத் தொடங்குகிறது. அது சமுத்திரத்தை அடைகிறது. அது நிச்சயமாக சமுத்திரத்தை அடைகிறது. ஆனால், பொங்கி வழியும் உயிருருவே அடைவதற்கான காரணம்.

நீங்கள் ஒரு புத்தர். உங்களையே மதியுங்கள். புத்தத்தன்மை மாறத் தொடங்கும். நீங்கள் ஒரு அமைதியற்ற புத்தரா? விரைவிலேயே அமைதியான புத்தராகிவிடுவீர்கள். ஆனால் நீங்கள் அமைதியாய் இருக்கிறீர்களோ இல்லையோ புத்தத் தன்மை இருக்கிறது. இப்போது நீங்கள் ஒரு குழம்பிப்போன புத்தர். பிறகு தெளிவான புத்தராகி விடுவீர்கள். ஆனால் புத்தத்தன்மை அப்படியே இருக்கும். உங்கள் அமைதியின்மையோ அல்லது குழப்பமோ புத்தத்தன்மையை எடுத்துவிட முடியாது. இப்போதைக்கு நீங்கள் ஒரு அஞ்ஞான புத்தராக இருக்கலாம். ஆனால் விரைவில் ஞானமுள்ள புத்தராகி விடுவீர்கள். ஆனால் புத்தத்தன்மை அப்படியேதான் இருக்கும்.

ஆக, இப்போது உங்களை நான் புத்தராக அறிவிக்கிறேன்! இந்த அறிவிப்பின்மூலமாக நீங்கள் வந்தடைவீர்கள். உங்கள் புத்தத்தன்மை மேலும் மேலும் அமைதியாகவும், சாந்தமாகவும் ஆகிவிடும். உங்களுக்குள் மேலும்மேலும் அழகு கூடும். மேலும் அதீத பிரகாசம் அடையும்.

ஆம், நீங்கள் ஒரு சிறையில் அடைக்கப்பட்ட பிரகாசம், அது விடுவிக்கப்பட வேண்டிய ஒன்று.

## இரண்டாவது கேள்வி

*பூமி வெறுமையான உள்துளை உள்ளதா? அங்கே மிகவும் முன்னேறிய நாகரீகம் வாழ்ந்துகொண்டிருக்கிறதா? மையத்தில் சூரியன் இருக்கிறதா? இந்த ஜீவன்கள் எல்லாம் சுரங்கங்கள் வழியே அவ்வப்போது குறிப்பிட்ட இடங்களுக்குப் பயணம் செய்து, ரகசியங்களைக் கூறுகின்றனரா? இங்கேயிருந்துதான் பறக்கும் தட்டுகள் (UFO) வருகின்றனவா?*

வில் ஷீட்ஸ், மனம் புனைவுகளால் வாழ்கிறது. மனம் புனைவுகளால் ஊட்டச்சத்துப் பெறுகிறது - சாதாரணமானது அல்லது மறைபொருளானது. மனம் எப்போதும் அழகான கதைகளுக்காக அலை பாய்கிறது. மனம் பொய்களின் மூலம் வாழ்கிறது. மனம் உண்மையைக் கண்டு அஞ்சுகிறது. ஆனால் பொய்களின்மீது பெரிய நேசம் கொண்டது. மனதை திருப்தி செய்யும் பொருட்டு காலங்காலமாய் ஆயிரக்கணக்கான பொய்கள் கண்டுபிடிக்கப்பட்டன. எப்போது ஒரு பொய் பழையதாகி, உளுத்துப் போய்விட்டதோ புதிய பொய் ஒன்று புகுத்தப்படும். உங்களின் மறைநூல்கள் என்று அழைக்கப்படுவதெல்லாம் இவைபோன்ற பொய்கள் நிறைந்தவை. மனிதன் அதீதமாய் புதிது புனையக்கூடியவன். ஆனால் இதுபோன்ற எல்லாப் புனைவுகளுமே உண்மையைத் தெரிந்துகொள்வதிலிருந்து உங்களைத் தடுக்கிறது. இதனால் உங்கள் சக்தி பயனற்ற பரிமாணங்களில் ஈடுபட்டு விரயமாகிறது.

> *''பூமி வெறுமையான உள்துளை உள்ளதா?'' என்று கேட்கிறீர்கள்.*

அப்படியே இருந்தாலும் அது ஒரு பொருட்டல்ல. ஏன் அதைப் பற்றிக் கவலைப்பட வேண்டும்? ஏன் அதற்காக நேரத்தை வீணடிக்க வேண்டும்? செய்துமுடிப்பதற்கு அதைவிட முக்கியமான விஷயங்கள் காத்துக்கொண்டிருக்கின்றன. உங்கள் முன்னுரிமைகளை சரியாக வைத்திடுங்கள். அதைவிட சிறப்பான கேள்வி, அதிக முக்கியத்துவம் வாய்ந்த கேள்வி என்னவாக இருக்கும் என்றால், மனிதன் வெறுமையானவனா? ஆம், மனிதன் வெறுமையானவன்தான்.

> *மேலும், ''அங்கே முன்னேறிய நாகரீகம் வாழ்ந்து கொண்டிருக்கிறதா?'' என்று கேட்டீர்கள்.*

ஆம், உங்களுக்குள் ஒரு முன்னேறிய உயிருரு வாழ்ந்து கொண்டிருக்கிறது என்று நான் சொல்கிறேன். கடவுள் வாழ்ந்துகொண்டிருக்கிறார். மிக உயர்ந்தது உங்களுக்குள் வாழ்ந்துகொண்டிருக்கிறது. ஏன் இந்த பூமியைப்பற்றி

கவலைப்பட வேண்டும்? அப்படியே மக்கள் அங்கே வாழ்ந்து கொண்டிருந்தாலும், மேல்பரப்பில் வாழும் மக்களைவிட பெரிதாய் வேறுபட மாட்டார்கள். இந்தமாதிரி மக்கள்மீது சலிப்பு உங்களுக்கு இன்னும் வரவில்லையா? ஒருக்கால் அவர்களுக்கு மூன்று கண்கள், நான்கு காதுகள். ஆறு கைகள் கூட இருக்கலாம். அதனால் என்ன வித்தியாசம் வந்துவிடப் போகிறது?

*''மையத்தில் சூரியன் இருக்கிறதா?''*

சூரியன் உங்களுடைய மையத்தில் இருக்கிறது. அதைத்தான் நான் 'புத்தன்' என்றழைக்கிறேன். - ஒளி என்கிறேன்.

*''இந்த ஜீவன்கள் எல்லாம் சுரங்கங்கள் வழியே அவ்வப் போது குறிப்பிட்ட இடங்களுக்குப் பயணம்செய்து ரகசியங்களை கூறுகின்றனரா?*

ஆமாம். பலமுறை உங்களுடைய அடி ஆழ மையச் செய்திகள் உங்களுடைய மேல்மட்ட உணர்வுநிலைக்கு வருகின்றன. பலமுறை ரகசியங்கள் மையத்திலிருந்து மேல்பரப்பிற்கு வெளிப்படுத்தப்படுகின்றன. ஆனால் இவற்றைத் தேடுவதற்குப் பதிலாக, நீங்கள் பூமி வெறுமையாக உள்ளதா என்று ஆர்வமாய் உள்ளீர்கள். அதற்குள் சூரியன் இருக்கிறதா? மக்கள் இருக்கின்றனரா என்றெல்லாம் கேள்வி எழுப்புகிறீர்கள். இத்தகைய புனைவுகள் மக்களை எந்நாளும் தொடர்ந்து ஈடுபடுத்திக் கொண்டேயிருக்கின்றன. இந்த விஷயங்கள் பற்றி ஆயிரக்கணக்கான புத்தகங்கள் எழுதப்பட்டுள்ளன. பல நூற்றாண்டுகளாய் சர்ச்சைகள் நடந்துகொண்டிருக்கின்றன. மக்களும் தொடர்ந்து இதுகுறித்து சண்டையிட்டுக் கொண்டும் வாதம் செய்துகொண்டும், தத்துவம் பேசியும், ஊகித்து, நிரூபித்துக்கொண்டும் இருக்கின்றனர். எல்லாம் வீண் செயல்!

மனதின் பொய்கள் புனையும் மற்றும் பொய்களை ஆதரிக்கும் போக்கின்மீது சற்று எச்சரிக்கையாக இருங்கள். இது உண்மையிலிருந்து தன்னைத் தற்காத்துக் கொள்ளும் மனதின் வழி.

உண்மை புனையப்படாது. நீங்கள் உண்மைக்கு உங்களை தயாராக வைத்துக் கொள்ள வேண்டும். உண்மை ஏற்கெனவே இருக்கிறது. நீங்கள் அமைதியாக இருந்து, புனைவுகளை எல்லாம் விடுத்து, பொய்களை விட்டுக் கொடுத்து, நிர்வாணமாய் இருந்தீர்களானால், அந்த நிர்வாணத்தில், அந்த அமைதியில் உண்மை வெளிப்படும். உண்மை வீடுபெறச் செய்யும்.

இந்தக் கதைகளிலிருந்து வெளியேறுங்கள். அவை உண்மையானது அல்லது பொய்யானது என்று நான் சொல்ல வில்லை. நான் அவற்றைப் பற்றி எதுவும் சொல்லப் போவதில்லை. சார்போ எதிர்ப்போ இன்றி நான் இருக்கிறேன். நான் வெறுமனே கூறுவது, அவை தொடர்பற்றவை. அது ஒரு விஷயமல்ல. இதுபோன்ற விஷயங்களில் ஆர்வம் கொள்வது குழந்தைத்தனமானது. அது குழந்தைகளுக்கு நல்லது - அவர்களுக்கு புனைவுகள் தேவை. தேவதை கதைகள் தேவை - ஆனால் பெரியவர்களுக்கு அல்ல.

ஒரு புத்திசாலி மனிதனுக்கு மிக முக்கியமான தேவை தான் யார் என்பதை அறிந்து கொள்வதாகும். எல்லாமே அதைப் பொறுத்துள்ளது. அதை அறியாமல் எல்லா அறிவும் புரியா பிதற்றல் மொழி. இதை அறிந்துகொள்ளாமல் நீங்கள் வாழ்ந்திருக்கின்றீர்கள். ஆனால் அது வீணான வாழ்க்கை. அதை அறிந்து கொள்ளாததினால் வாழ்க்கையின் முழு வாய்ப்பையும் தவற விடுகிறீர்கள். உங்களையே அறிந்துகொள்வதற்கான ஒரு வாய்ப்புதான் வாழ்க்கை. உங்களை அறிந்துகொள்வதென்பது ஒரு சவால். அது நீங்கள் உங்களையே அறிந்துகொள்ளத் தூண்டுகிறது. ஆனால் தாமே வேறு ஏதாவது ஆர்வங்களை உருவாக்கிக் கொண்டு அதில் ஈடுபட்டு உண்மையான கேள்வியை மறந்துவிடுகிறோம். உண்மையல்லாத ஆயிரக்கணக்கான கேள்விகள் உள்ளன. அந்தக் கூட்டத்தில் நீங்கள் தொலைந்து போகலாம்.

உண்மையான கேள்வி ஒன்றேதான்:

நான் யார்? மற்ற எல்லாக் கேள்விகளையும் விட்டுவிடுங்கள்! உங்கள் முழு சக்தியையும் இந்த ஒரே கேள்வியில் இடுங்கள்.

நான் யார்? இந்தக் கேள்வியானது உங்கள் உயிருருவின் அடி ஆழத்திற்குப் போகட்டும் - உங்கள் உடலின் உள் துளைக்குள் நுழையட்டும். உங்களுக்குள் இருக்கும் அந்த மகத்தான உணர்வு நிலைக்குள் அமிழ்ந்து போகட்டும். இந்த ஒற்றைக் கேள்விக்கு எவ்வளவு முடியுமோ அந்தளவிற்கு நேரம் கொடுங்கள். சமயம் முழுவதும் இதைச் சார்ந்துதான் இருக்கிறது. இந்த ஒரே கேள்விக்கான பதில்தான் சமயம்: நான் யார்? அது கடவுளைப் பற்றியது அல்ல. அது சொர்க்கம், நரகம் பற்றியது அல்ல. கடந்தகால, வருங்கால வாழ்க்கை பற்றியது அல்ல. அது மறுபிறப்பு அல்லது கர்மா கோட்பாடு பற்றியதும் அல்ல. சமயத்திற்கு ஒரே குறிக்கோள், ஒரே இலக்கு: நான் யார்?

ஆக, இதுபோன்ற வேண்டாத ஆர்வங்களில் உங்கள் சக்தியை வீணடிக்காதீர்கள். ஒருக்கால் அங்கே மக்கள் இருக்கிறார்கள், பறக்கும் தட்டுகள் வருகின்றன என்று உங்களுக்கு தெரிய வந்தாலும் கூட அது உங்களை மாற்றப் போவதில்லை. அது எந்த விதத்திலும் உங்களுக்கு உதவி செய்யாது.

'புதிராக' இருக்கும் உங்களுக்குள்ளே சொல்லுங்கள். அந்தப் புதிருக்குள் ஊடுருவிச் செல்லுங்கள். அது உங்கள் வாழ்க்கையில் ஒரே பணியாக இருக்கட்டும். அதை அறிந்து கொள்வதினால் அனைத்தும் அறிந்ததாகிவிடுகிறது. அதுவாக நீங்கள் இருப்பின், நீங்கள் வந்தடைந்து விட்டீர்கள்.

## மூன்றாவது கேள்வி:

*உங்கள் பொங்கி வழியும் அன்பினால் என்னை நிரப்புகிறீர்கள். எல்லாவற்றையும் உங்களுக்கு வழங்க விரும்புகிறேன். ஆனால் என்னிடம் எதுவும் இல்லை. இந்நாட்களில், ஆற்றல்மிக்க, திறமைமிக்க பல மனிதர்கள் வந்துள்ளார்கள். என்னிடம் எந்த ஆற்றலோ, தனித்திறமையோ இல்லை... பயனற்று உணர்கிறேன்.*

சுசேதா, பயனற்று இருப்பதின் பயன் உங்களுக்குத் தெரியாது. உண்மையில், பயனுள்ளது என்பது அதற்கென பயன்பாடு

இருக்கும்வரைதான் பயனுள்ளதாக இருக்கும். ஆனால் பயனற்றதிற்கு வரையறைகளே கிடையாது.

ஒரு ரோஜாப் பூவின் பயன் என்ன? பயன் இல்லை. ஆனால் ரோஜாக்கள் இன்றி வாழ்க்கையே வெறுமையாக இருக்கும். சிரிப்பின் பயன் என்ன? அது ஒன்றும் பொருள் அல்ல. அது மக்களுக்கு உணவு தராது. நீங்கள் பசியோடு இருந்தால் அது உதவாது. நோய்வாய்ப்பட்டிருந்தால் உதவாது. அது மருந்தல்ல. யாருடனாவது சண்டை போட்டுக்கொண்டிருந்தாலும் அது பயனில்லை. அது அணுகுண்டு இல்லை. சிரிப்பினால் என்ன பயன்? அதனால்தான் மக்கள் வாழ்க்கையை பயன்பாடு என்ற நோக்கிலேயே பார்க்கின்றனர், சிரிப்பதில்லை. அவர்கள் நேசிப்பது இல்லை. ஏனென்றால், அதன் பயன் என்ன? அவர்களுக்கு அது விரயம், சக்தி, நேரம் மற்றும் வாழ்க்கை விரயம். அது பயனற்ற ஒன்று என்பதால் அவர்களுக்கு அது முட்டாள்தனமானது. நேசிப்பதற்கு பதிலாக பணம் சம்பாதிக்கின்றனர். ஏனென்றால் பணம் பயனுள்ளது. நேசத்திற்கு பயன் ஒன்றும் இல்லை. ஆனால் நேசத்திற்கு ஒரு ஆடம்பரம் இருக்கிறது, ஒரு மகோன்னதம் இருக்கிறது. மேலும் நேசம் இல்லாத ஒரு வாழ்க்கை என்ன வாழ்க்கை?

தியானத்தினால் என்ன பயன்? சில சமயங்களில் என்னிடம் சிலர் கேட்பார்கள், ''தியானத்தினால் எங்களுக்கு என்ன கிடைக்கும்?'' அவர்கள் ஏதோ லாபம், பலன் எதிர்பார்க்கின்றனர். அவர்களுக்கு உறுதியாக தெரியவேண்டும். ஏனென்றால் அந்த அளவிற்கு அதில் தங்கள் சக்தியை முதலீடு செய்யப்போகின்றனர் - ஆக அதிலிருந்து என்ன கிடைக்கப் போகிறது. நான் அவர்களிடம் சொல்வது, ''அதிலிருந்து உங்களுக்கு எதுவும் கிடைக்காது.''

தியானம் ஏதோ ஒரு முடிவிற்கான வழிமுறையல்ல. மாறாக, அதுவே ஒரு முடிவுதான். - அதனால்தான் அதற்கு பயன்பாடு எதுவும் கிடையாது.

அதேபோல் கவிதைக்கு என்ன பயன் உள்ளது? அதனால்தான் பணத்தின் பின்னால் ஓடும் மக்கள் இருக்கும் நாடுகளில்

கவிதை காணாமல் போகத் தொடங்குகிறது. அமெரிக்காவில் அதுபோல நடப்பதைக் கவனிக்கிறீர்களா? அரசியல்வாதிகள், பணக்காரர்கள், தொழில் அதிபர்கள் - எல்லோரும் நீண்டநாள் வாழ்கின்றனர். கவிஞர்கள் விரைவில் இறந்து போகிறார்கள். விசித்திரமான புள்ளி விவரம்: கவிஞர்கள், கதாசிரியர்கள், ஓவியர்கள், படிப்படியாக அழிந்துபோகின்றனர். அவர்கள் நாற்பது வயது எட்டும்போதே தேய்ந்து போகத் தொடங்குகின்றனர். அரசியல்வாதிகள் இளமையோடும், உயிர்த்துடிப்போடும் நெடுநாள் வாழ்கின்றனர்.

பண்டைய கிரேக்கத்தில் அப்படியில்லை. கிரேக்கத்தில் தத்துவ ஞானிகள், கவிஞர்கள், மறைஞானிகள் யாவரும் நெடுநாள் வாழ்ந்தனர். இந்தியாவிலும், கடந்தகாலத்தில், யோகிகள், தியானிப்போர் எல்லோரும் நீண்டநாள் வாழ்ந்தனர். ஆனால் இப்போது அப்படியில்லை. இந்திய அரசியல்வாதிகளும் நடிகர்களும்தான் நெடுங்காலம் வாழ்கின்றனர். நடிகர்கள் மற்ற எவரையும் விட தங்கள் இளமையைத் தக்கவைத்துக் கொள்கின்றனர். அரசியல்வாதிகள் நீண்ட காலம் ஆரோக்கியமாக இருக்கின்றனர். நீங்கள் மொரார்ஜி தேசாயைப் பார்க்கிறீர்கள். என்னவாக இருக்க முடியும்? அவர் சொல்வது இல்லை. அவர் தன் சிறுநீரைக் குடிப்பதுதான் தன் ஆரோக்யத்திற்கும் இளமைக்கும் காரணம் என்கிறார். அது எல்லாம் அபத்தமானது. அது வெறும் அரசியல். இப்போது அரசியல் மதிக்கப்படுகிறது. எது மதிக்கப்படுகிறதோ, எவற்றையெல்லாம் மக்கள் கவனிக்கின்றனரோ அவை முக்கியமாகிறது. எல்லாம் அகங்கார நிறைவிற்காக, வெறும் அகங்கார நிறைவின் மூலமாகவே ஒருவர் வாழ முடியும். உயிர்த்துடிப்புடன் இருக்க முடியும்.

இது அறியப்பட்ட உண்மை. ஓய்வுபெற்ற மனிதர்கள் விரைவிலேயே இறந்துபோகின்றனர். என்ன நடக்கிறது? அவர்கள் பயனற்றதாக உணர்கின்றனர். யாரோ ஒருவர் மிக நன்றாக செயல்பட்டுக் கொண்டிருந்தார். அவருக்கு அறுபது வயதாகிறது, ஓய்வு பெறுகிறார். அவர் ஆரோக்கியமாக இருந்தார்,

என்றும் நோய்வாய்ப்பட்டதில்லை. எல்லாமே சுகமாய் இருந்தது. அவர் ஒரு கமிஷனராகவோ, கலெக்டராகவோ இருந்தார், மக்கள் எல்லோரும் அவரிடம் மரியாதையுடன் இருந்தனர். அவருக்கு மதிப்பளித்தனர். அவர் கௌரவிக்கப்பட்டார். அவரும் பயனுள்ள வேலைகளைச் செய்து வந்தார். இப்போது அவர் ஓய்வு பெற்றுவிட்டார், அவருடைய பயன்பாடு எல்லாம் நின்று விட்டது.

அவர் இனி பயனுடைய பொருள் அல்ல. அவர் திடீரென தான் பயனற்றவராக உணர்கின்றார். திடீரென நான் வாழ்வதற்கு சாக்கு ஒன்றுமில்லை என்று நினைக்கிறார். 'எதற்காக' என்று எண்ணுகிறார். அவரைப் பற்றி இப்போது யாரும் நினைப்பதில்லை. அவருடைய சொந்தக் குடும்பம்கூட அவரைப் புறக்கணிக்கிறது. உதாசீனம் செய்கிறது. வேண்டாத பழம்பொருட்களில் ஒரு பகுதியாகி விடுகிறார். மெல்ல மெல்ல சுருங்கத் தொடங்குகிறார். ''இனி மரணம் ஒன்றே இந்த பயனற்ற நிலையிலிருந்து என்னை விடுவிக்க முடியும்'' என்று நினைக்கத் தொடங்குகிறார்.

இதனால்தான் அமெரிக்காவில் கவிஞர்களும், கதாசிரியர்களும் இளமையிலேயே இறந்து போகின்றனர். கவிதைக்கு மரியாதை இல்லை. காசு எங்கே மதிக்கப்படுகிறதோ அங்கே கவிதையை மதிப்பதில்லை. பணம் பயனுள்ளது. கவிதைக்கு என்ன பயன்பாடு? யாராவது ஒருவர் கவிஞர் ஆகிவிட்டால் அவர் குடும்பம் துக்கம் கொண்டாடும்.

பல வருடங்கள் கழித்து என்னைப் பார்க்க ஒருவர் வருகிறார். நான் அவரிடம், ''என்ன நடக்கிறது? மூத்த மகன் எப்படியிருக்கிறார்?'' என்று கேட்டேன். அவர் மிக்க வருத்தத்துடன், ''அவன் கவிஞன் ஆகிவிட்டான்'' என்றார். ஏதோ அவர் மகன் இறந்துவிட்டான் என்பதுபோல. பாதிப்பில்லை. ''சரி இரண்டாவது மகன் என்ன செய்கிறார்?'' என்று கேட்டேன். ''அவன் ஏதும் சம்பாதிப்பதில்லை'' என்று சொன்னார். ஆக முதலாமவன் கவிஞன் ஆகிவிட்டான், இரண்டாமவன் சம்பாதிப்பதில்லை; இரண்டு பேரும் பயனற்றவர்கள்.

நாம் மக்களின் பயன்பாட்டைப் பொறுத்து அவர்களை அளவிடுகிறோம். மனிதர்களைப் பண்டங்களாகக் குறைத்து விடுகிறோம். பயனுள்ளதைச் செய்யாதீர்கள் என்று நான் சொல்ல வில்லை. நான் சொல்வது பயனுள்ளவற்றை செய்யுங்கள். ஆனால் நினைவில் வைத்துக் கொள்ளுங்கள். வாழ்க்கையின் உண்மையான, மிகப் பெரிய அனுபவம் மற்றும் கிளர்ச்சி பயனற்ற ஏதோ ஒன்றைச் செய்யும்போதுதான் கிடைக்கிறது. அது கவிதை மூலம் வருகிறது, ஓவியம் தீட்டுவதில் கிடைக்கிறது, நேசத்தின் மூலமாக வருகிறது, அது தியானத்தினால் கிடைக்கிறது. மிகப் பெரிய மகிழ்ச்சியானது நீங்கள் ஏதாவது பயனற்றதை, அதாவது உலகின் பார்வையில் பயனற்றதைச் செய்யும்போதுதான் வெள்ளமென உங்களிடம் வருகிறது. இவற்றை ஒரு பண்டமாகக் குறைக்க முடியாததினால் அவர்கள் அதைப் பயனற்றது என்று அழைக்கின்றனர்.

நீங்கள் ஒரு கருவியைக் கண்டுபிடித்தால், அதற்கு காப்புரிமை வாங்கலாம். அதை வைத்துப் பணம் சம்பாதிக்க முடியும். ஆனால் ஒரு அழகான கவிதை எழுதினால் அதிலிருந்து பணம் வராது. அது வீண். ''என்ன செய்துகொண்டிருக்கிறாய்? ஏன் உன் வாழ்க்கையை வீணடித்துக்கொண்டிருக்கிறாய்'' என்றுதான் மக்கள் சொல்வார்கள். கவிதை எழுதுவதின் மூலம் நீங்கள் உண்மையிலேயே அதனுள் ஆழ்ந்துபோயிருந்தால், அதுவே பெரிய மகிழ்ச்சிதான். வேறு எதுவும் தேவைப்படாது. ஏற்கெனவே உங்களுக்குக் கிடைத்துவிட்டது. வெளியிலிருந்து கிடைத்த எந்த வெகுமதியும் உங்களுக்கு எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்தாது. பரிசு உள்புறம் இருக்கிறது, உள்ளார்ந்தது. செயலின் காரணமாக அது எழுகின்றது. ஆகவே, கவிதை எழுதுவது, ஓவியம் தீட்டுவது அல்லது புல்லாங்குழல் வாசிப்பது - இவை எல்லாம் பயன்பாடுகள் அல்ல.

இது வருத்தப்பட வேண்டிய விஷயம். இந்தியாவில் கூட அரசியல்வாதிகளும், நடிகர்களும் நெடுநாள் வாழ்கின்றனர். கடந்த காலத்தில், தியானம் செய்வோர் நெடுநாள் வாழ்ந்தனர்.

ஏனென்றால், மக்கள் பயன்பாடு பற்றிய பயன் அறிந்திருந்தனர். இப்போது அரசியல்வாதிகள் நீண்டநாள் வாழ்கின்றனர். ஏன்? காரணம் அரசியல்வாதிகள் பயனுள்ளவர்களாகத் தோன்றுகின்றனர். அரசியல்வாதி ஒருவர் ஊருக்குள் வந்தால் பெரிய கூட்டம் திரள்கிறது. கவி வந்தால் யாரும் போவதில்லை. கவிஞர் பற்றி யாருக்கு அக்கறை? யார் அவரை சிறப்பானவராக நினைக்கிறார்கள். கவலைப்படுகிறார்கள்? இயல்பாகவே கவிஞர் தனக்குள் நினைப்பது, ''நான் பயனற்றவன். நான் ஏதோ சரியில்லாத ஒன்றை செய்கிறேன். நான் குற்றமுள்ளவன், பூமிக்கு பாரமானவன்''

மொரார்ஜி தேசாய் எண்பத்துமூன்று வயதில் ஆரோக்கியமாக இருக்கிறார். அவர் சிறுநீரைக் குடிப்பதால் அல்ல. ஆனால் இந்தியாவில் இந்தப் பேரிடர் நடந்து விட்டது; அரசியல்வாதி மட்டுமே மதிக்கப்படுகிறார். மறைஞானிக்கு மரியாதை இல்லை. தியானம் செய்வோருக்கு இனி மதிப்புக் கிடையாது. உண்மையில் ஒரு விசித்திரமான இயல் நிகழ்வு அரங்கேறிக் கொண்டிருக்கிறது. தியானம் செய்யாத ஒரு அமெரிக்கரைக் கண்டு பிடிப்பது கடினம். ஆனால் தியானம் செய்யும் ஒரு இந்தியரைக் கண்டுபிடிப்பது துர்பலம். தியானம் பயனற்ற வேலை.

ஆனால், நியாயம் கற்பிப்பதில் மக்களுக்கு சாமர்த்தியம் அதிகம். இப்போது மொரார்ஜி, தான் ஆரோக்கியமாக இருப்பதற்கு அவர் தன் சிறுநீரை குடிப்பதே காரணம் என்கிறார்.

இது ஒரு கதையை எனக்கு நினைவுப்படுத்துகிறது....

ஒரு மனிதனுக்கு நூறு வயதாகிறது. பத்திரிகை, தொலைக் காட்சி, வானொலி என்று எல்லோரும் பேட்டி காண வருகின்றனர். ''நீண்ட வாழ்க்கையின் ரகசியம் என்ன? இன்றளவும் ஆரோக்கியமாக, இளமையாக இருப்பது எப்படி? ஐம்பது வயதுக்காரர் போல் இருக்கின்றீர்களே!...'' என்று கேள்வி கேட்டனர்.

அந்த மனிதருக்கு ஏக சந்தோஷம். ''ஒரு ரகசியம் இருக்கிறது - என் வாழ்க்கையில் நான் மாமிசம் சாப்பிட்டதேயில்லை, புகை பிடித்ததில்லை, மது அருந்தியது இல்லை, பெண்களோடு கூத்தடித்ததில்லை. இதுதான் என் ரகசியம்'' என்றார் நூற்றாண்டைத் தொட்ட மனிதர். வந்தவர்கள் எல்லோருக்கும் திருப்தி. பேட்டியை எழுதிக் கொண்டிருக்கும்போது அறையின் பின்புறத்தில் யாரோ விழுந்து கூச்சலிட்டு சிரிக்கும் சப்தம் கேட்டது.

வந்தவர்கள், ''என்ன விஷயம், என்ன நடந்தது?'' என்று கேட்டார்கள்.

நூறு வயதுக்காரர் சொன்னார். ''அதைப் பற்றி கவலைப் படாதீர்கள். அது என் அப்பா, அவர் மறுபடியும் மது அருந்திவிட்டு, வேலைக்காரியுடன் கூத்தடித்துக் கொண்டிருக்கிறார்''

பேட்டி எடுப்பவர்கள், ''அப்படியா, அவருக்கென்ன வயதாகிறது''

இவர் சொன்னார்: ''நூற்றி இருபதுதான்''

எவ்வளவு காலம் வாழ்ந்தீர்கள் என்று நீங்கள் கண்டுபிடிக்க முடியும். இதைச் சாப்பிட்டேன், அந்த யோகப் பயிற்சி செய்தேன் என்று சொல்ல முடியும். ஆனால் மெய்யான விஷயம் முற்றிலும் வேறானது. நீங்கள் செய்து கொண்டிருப்பதை மகிழ்ச்சியோடு செய்வது, செய்யும் வேலைக்கு மரியாதை கொடுப்பது, அது பயனுள்ளது அல்லது பயனற்றதாகவே இருக்கட்டும் - உங்கள் வாழ்க்கையில் அர்த்தம் இருப்பதை உணர்வது - இதனால் நீங்கள் நீண்டகாலம் உயிர்வாழ முடியும். ஏனென்றால் அர்த்தத்தோடு வாழ்கிறோம் என்ற உணர்வு இருந்தால்தான் ஒருவர் நீண்டகாலம் வாழ முடியும்.

பல சமூகங்களில் பல்வேறு வகையான மனிதர்கள் நெடுநாள் வாழ்கின்றனர். பழங்குடியினரில் மந்திரவாதிதான் நீண்ட நாட்கள் வாழ்கிறான். ஏனென்றால் மிகவும் மதிக்கப்பட்ட மனிதன் அவனே. நான் ஒரு சமுதாயத்தை மிக உயர்ந்த மற்றும்

நாகரிகமடைந்த ஒன்று என்று அழைப்பதற்கு ஒரு அளவை வைத்திருக்கிறேன். அதில் கவிஞர், ஓவியர், இசைக்கலைஞர், நேசிப்பவர், தியானம் செய்வோர் எல்லாம் நீண்ட வாழ்க்கை வாழ்வர். அதுதான் மிக உயர்ந்த சமுதாயமாகும். ஏன்? ஏனென்றால் பயனற்ற தன்மை மதிக்கப்படுகிறது.

லாவோட்சு பற்றிய ஒரு கதை உண்டு.

அவர் தன் சீடர்களுடன் மலைக்குச் சென்றார். மரங்கள் வெட்டப்படும் காட்டிற்குள் சென்றனர். ஆயிரக்கணக்கான மனிதர்கள் மரங்களை வெட்டிக்கொண்டிருந்தனர். முழுக் காடுமே அழிந்துகொண்டிருந்தது. ஆனால் ஒரே ஒரு பெரிய மரம் மட்டும் இருந்தது. அதன் அடியில், அதன் நிழலில் ஓராயிரம் பேர் உட்காரும் அளவிற்கு பெரிய மரம். அவ்வளவு பசுமை, அவ்வளவு பெரிய மரம். இவ்வளவு பெரிய மரத்தை அவர்கள் கண்டதேயில்லை. யாரும் அந்த மரத்தை வெட்டவும் இல்லை.

ஆக, லாவோட்சு தன் சீடர்களிடம் சொன்னார். ''போய் விசாரியுங்கள். முழுக்காட்டையே அழித்துவிட்டார்கள். இந்த மரத்தை மட்டும் ஏன் வெட்டவில்லை?''

சீடர்களும் போய்க் கேட்டனர். அந்த மனிதர்கள் பதில் சொன்னார்கள். ''அந்த மரம் பயனற்றது! அதன் கட்டையிலிருந்து எந்த மரச்சாமான்களையும் செய்யமுடியாது. அடுத்து அது அடுப்பெரிக்கவும் உதவாது, அதிகளவு புகை கக்கும். அதுவும் கரும்புகை, கண்ணீர் வரவழைக்கும் புகை. மேலும் அதன் இலைகள் அவ்வளவு கசப்பாக இருப்பதினால், எந்த விலங்கும் அதைத் தின்னாது. அது ஒரு பயனற்ற மரம். அதனால்தான் அது வெட்டப்படவில்லை'' என்றார்கள்.

சீடர்கள் தாங்கள் கேட்டதை லாவோட்சுவிடம் கூற, அவர் சிரித்தார். ''பாருங்கள்! நான் எப்போதும் உங்களுக்கு பயனற்றதின் பயன் பற்றி கற்றுத் தருகிறேன்! இந்த மரத்தின் அழகைப் பாருங்கள். அதன் பயனற்றத் தன்மையினால்

இன்று அது காப்பாற்றப்பட்டது. நீங்களும் காப்பாற்றப்பட வேண்டுமென்றால், பயனற்றதாய் இருங்கள். இல்லையென்றால் விரைவில் வெட்டப்படுவீர்கள். எப்போதும் பயனுடையவராக இருக்காதீர்கள். இல்லையென்றால் சிக்கலில் இருப்பீர்கள். இந்த மரம் போன்று பயனற்று இருங்கள். நீங்கள் நீண்டநாள் வாழ்வீர்கள். உங்கள் பசுமையும் மகத்தானதாக இருக்கும்'' என்று சீடர்களிடம் சொன்னார்.

இந்தச் செய்தியில் மிக முக்கியமான ஒன்றைக் குறிப்பிடுகிறார் லாவோட்சு. அது என் சொந்த அனுபவமும் கூட. உங்கள் அடியாழ மையத்தில் நிலைத்திருங்கள். பயன்பாடு மேற்பரப்பில் மட்டும்தான். ஆம் ஒரு பிழைப்பிற்காக ஏதாவது செய்தாக வேண்டும். உணவு, உறைவிடம் வேண்டும், உண்மைதான். வாழ்வதற்கு ஏதோ செய்தாக வேண்டும். சரிதான், ஆனால் அதுதான் உங்கள் வாழ்க்கையே என்று எண்ணி விடாதீர்கள். வயிற்றுப் பிழைப்பே உங்கள் வாழ்க்கையாகிவிடாது. வாழ்க்கைத்தரம் என்பது பயன்பாட்டிலிருந்து வருகிறது. பயன்தரும் செயல்களிலிருந்து வருகிறது. ஆனால் ''வாழ்வின் தரம்'' பயனற்ற செயல்களிலிருந்து எழுகின்றது - இசை, கவிதை, ஓவியம், தியானம், நேசம் போன்றவை.

ஆக சுசேதா, கவலைப்பட வேண்டாம். என்னைச் சுற்றி எல்லாவிதமான மனிதர்களும் எனக்குத் தேவை - பயனுள்ளவர்கள், பயனற்றவர்கள். இந்த மக்கள் மன்றத்தை அதிக வளமுடையதாக்குவது என் விருப்பம். பயன்பாடு ஒரு மன்றத்தை எப்போதும் வளமாக்காது. ஆம் பொருளாதார ரீதியாக ஆக்கலாம். ஆன்மிக ரீதியாக ஆக்க முடியாது. அதனால் பயனற்றதாக உணர்ந்தீர்கள் என்றால் கவலைப்பட வேண்டாம். உங்களுடைய பயனற்றத் தன்மையை நான் பயன்படுத்திக் கொள்கிறேன். உங்களை பசுமை மிகுந்த பெரிய மரமாக்குகிறேன். பல பயனுள்ள வேலைகளைச் செய்யும் மனிதர்களுக்கு ஓய்வெடுக்க நிழல் தரும் மரம் தேவை. நமக்கு கவிஞர்கள், ஓவியர்கள், இசைக் கலைஞர்கள் தேவை.

எல்லாவிதமான பித்தர்களும் இங்கே தேவைப்படுகிறார்கள். ஆக, சுசேதா கவலை வேண்டாம்.

## நான்காவது கேள்வி?

*நீங்கள் ஏன் தாடி வைத்திருக்கிறீர்கள்?*

அசோகா, யார் உனக்குச் சொன்னார்கள்? யாராவது வதந்தி பரப்பிக் கொண்டிருப்பார்கள். எனக்குத் தாடி கிடையாது. என்னை மறுபடியும் பார்க்க வேண்டும். உண்மையில் சரியான கேள்வி என்னவென்றால், நீங்கள் ஏன் தாடி வைத்துக் கொள்ளக்கூடாது?

இது ஜென்னில் இருக்கும் கோவன்களில் ஒன்று!

போதிதர்மருக்கு பெரிய தாடி இருந்தது. ஜென் குருக்கள் தங்கள் சீடர்களுக்கு தியானம் செய்வதற்காக இந்த 'கோவன்னை' கொடுத்தார்கள்: ஏன் போதிதர்மருக்கு தாடி இல்லை?

இப்போது சீடர்கள் தலையில் அடித்துக்கொண்டார்கள். ஏனென்றால் கோவன் கொடுத்ததோடு அல்லாமல் போதி தர்மரின் படத்தையும் கொடுத்திருந்தனர். படத்தில் அவருக்கு பெரிய தாடி இருந்தது. உண்மையில் அவர் முகமே தாடியினால் மூடியிருந்தது. அதனால்தான் சீனாவில் அவரை 'காட்டுமிராண்டி புத்தர்' என்று அழைத்தனர்.

சீனர்களுக்கு பெரிய தாடி கிடையாது. ஆட்டுத்தாடி போன்று வைத்திருப்பார்கள். அந்த நாட்டில் போதிதர்மர் விசித்திரமாகத் தோன்றினார். சீனர்களுக்கு உண்மையிலேயே முடி மிகக் குறைவு. விரல் விட்டு எண்ணிவிடலாம் - தாடியும் அவ்வளவாக இல்லை. அதனால் போதிதர்மர் பார்ப்பதற்கு காட்டுமிராண்டி போல் இருந்திருப்பார்.

போதிதர்மரின் படம் கொடுக்கப்பட்டது. தியானக் கூடத்தில் படம் மாட்டிவைக்கப்பட்டு இருக்கும். படத்தைப் பார்த்தவாறு இந்தப் பிரச்சினையைப் பற்றி யோசிக்க வேண்டும்.

போதிதர்மருக்கு தாடி இல்லை. அதையே என் விஷயத்தில் செய்யுங்கள். என் படத்தை மாட்டி யோசியுங்கள். ''பகவானுக்கு ஏன் தாடி இல்லை? பெரிய வெளிப்படுத்துகை அதன்மூலம் ஏற்படும். அது கடினமாக இருக்கும். ஆனால் ஒரு குறிப்பிட்ட கணம் வரும்போது, பகவானுக்கு தாடி இல்லை என்பதைக் காண்பீர்கள். அதுதான் 'சடோரி' வீடு பெறுதல் - கட்புலனாகிற ஒன்று மறைந்து, கட்புலனாகாதது தோன்றும்.

நான் எப்படி தாடி வைத்திருக்க முடியும்? தாடி உடலைச் சேர்ந்தது. நீங்கள் உடல் இல்லை. நீங்கள் உடலைச் சுற்றி இருக்கும் உணர்வு நிலை. அதற்கு தாடி இருக்க முடியாது.

## ஐந்தாவது கேள்வி:

*யாரையும் மாற்றக் கூடாது என்று நீங்கள் சொல்கிறீர்கள். மேலும் கண்டுபிடித்து விட்டோம் என்று சொல்லாதீர்கள் என்றும் சொல்கிறீர்கள். ஆனால் பகவான் நீங்கள் என்ன செய்கிறீர்கள்? மேலும் என் அன்புக்குரியவரும் ஒரு சன்னியாசி ஆவதைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்?*

பிரித்தா, நான் உங்களுக்கு என்ன சொல்கிறேனோ அதைச் செய்யுங்கள். நான் என்ன செய்கிறேனோ அதைச் செய்யாதீர்கள்! ஏனென்றால் நீங்கள் சிக்கலில் மாட்டிக் கொள்வீர்கள். ஒருநாள் வரும், அன்று நான் செய்வதை நீங்களும் செய்ய முடியும். ஆனால் காத்திருக்கவும், கொஞ்சம் பொறுமை கொள்ளவும்.

கேள்வி பொருத்தமானதுதான், ஏனென்றால் அதைத்தான் நான் செய்து கொண்டேயிருக்கிறேன். ஆனால் அது உங்களுக்கு மாற்றுவது போலத் தோன்றுகிறது. அது மாற்றுவது இல்லை. அது கவர்ந்திழுப்பது. அதற்கு தருக்க முறை ஏதும் கிடையாது. மாற்றம் தர்க்கரீதியானது. இரண்டிற்கும் உள்ள வேறுபாடு பெரிது.

யாரோ ஒருவர் என்னிடம் கேட்கிறார், ''சன்யாசம் என்றால் என்ன?'' நான் ''எனக்குத் தெரியாது, சன்னியாசி ஆகிப் பாருங்கள்'' என்கிறேன். ஏதோ ஆகிறது, அவரும் சன்யாசியாகி

விடுகிறார். இதை நீங்கள் மாற்றம் என்று சொல்வீர்களா? நான் வாதம் செய்யவில்லை. உள்ளார்ந்த காரணம் விளக்கவில்லை. இந்தக் கவர்ச்சி தூய்மையானது மற்றும் எளிமையானது. இது மாற்றுதல் அல்ல தொற்றுதல்.

நான் தொற்றிக் கொள்ளும் தன்மையுடையவன். ஒரு மனிதர் கிடைப்பதற்குரிய வகையில் இருந்தால், என்னுடன் சில கணங்கள் இருந்தால் போதுமானது, அவர் பித்துப் பிடித்துப் போகிறார். ஆக, அது மாற்றம் அல்ல, அது நேசம். என்னுடன் இருப்பதை உணர்கிறார், அது என்னவாக இருந்தாலும் சரி. என்ன என்பதைப் பற்றிய அக்கறை அவருக்கு இல்லை.

கிறிஸ்துவ மிஷினரிகள் இந்த 'மாற்றும்' பணியைச் செய்கிறார்கள். அவர்கள் வாதம் செய்கின்றனர் நிரூபிக் கின்றனர். உங்களுக்குப் புத்தகங்கள் தருகின்றனர். நீங்கள் காப்பாற்றப்பட வேண்டுமென்றால் கிறிஸ்தவம்தான் ஒரே வழி என்று வலுக்கட்டாயமாகத் திணிக்கின்றனர். உங்களுக்கு அச்சமூட்டுகின்றனர். ஏனென்றால், அவர்கள் நரகம், நரகத் தீ, முடிவில்லா தண்டனை மற்றும் சொர்க்கத்தில் காத்திருக்கும் வெகுமதிகள் எல்லாவற்றையும் அவர்கள் உருவாக்கியுள்ளனர். நரகம்பற்றிய பயத்தை உங்களுக்கு ஊட்டுகின்றனர். அப்படியானால்தான் அவர்கள் உங்களைக் காப்பாற்ற முடியும், உங்களை சொர்க்கத்திற்காக பேராசைப்பட வைக்கின்றனர்.

மேலும் அவர்களால் மட்டுமே இவற்றை வழங்க முடியும். வேறு யாராலும் தர முடியாது. ஆயிரத்தோரு வழிகளில் ஏசு மட்டுமே உண்மையான கடவுள் என்று நிரூபணம் செய்வார்கள். அதுதான் மாற்றுவது என்று சொல்லலாம்.

நான் செய்வது மாற்றமல்ல. ஏசு செய்ததும் மாற்றம் அல்ல; கவர்ந்திழுப்பதுதான். புத்தர் செய்ததும் கவர்ந்திழுப்பதுதான். தூய்மையான, எளிமையான வழி. ஏசுவோடு இருத்தலே நேசம் கொள்வதாகும். இப்படிப்பட்ட அழகான ஒரு மனிதர் மீது நேசம் கொள்ளாமல் இருப்பது சாத்தியமே இல்லை.

ரோமானியச் சக்கரவர்த்திக்கு பான்டியஸ் பைலேட் எழுதிய கடிதம் ஒன்று கிடைத்திருக்கிறது. அதில், ''இந்த மனிதர் அவ்வளவு அழகானவர். இது என்னைக் குற்ற உணர்விற்கு உள்ளாக்குகிறது'' என்று குறிப்பிட்டிருந்தார். உண்மையில் பான்டியஸ் பைலேட் ஏசு மீது பிரேமை கொண்டு இருந்தார். ''உண்மை என்ன?'' என்று ஏசுவிடம் பான்டியஸ் கேட்டபோது, ஏசு எதுவும் பேசாது மௌனமாயிருந்தார். அந்தக் கணமே பான்டியஸ் ஏசு மீது பாசமாகிவிட்டார். அந்த மௌனத்தால் பான்டியஸ் ஆட்கொள்ளப்பட்டார்.

அந்தக் கடிதம் வாடிக்கனில் இருக்கின்றது; அதைப் பிரசுரிக்க மாட்டார்கள். அதை வெளியிட மாட்டார்கள். ஏனென்றால், அவர்கள் மக்களிடம் கூறிவந்த கதை மீது அது பெரிய தாக்கம் ஏற்படுத்தும். அந்தக் கடிதத்தில் சொல்லியிருப்பது. ''நான் இந்த மனிதர்மீது நேசம் கொண்டு விட்டேன். இந்த மனிதர் அவ்வளவு அழகானவர். இவரைப் போன்ற நயமுள்ள மனிதரை நான் கண்டேயில்லை. அவரால் எந்தத் தீங்கும் இழைக்க முடியாது. அது நடவாத காரியம். அவர் மக்களிடம் பேசுவதை நான் கேட்டிருக்கிறேன், உன்னிப்பாகக் கவனித்திருக்கிறேன். மக்களோடுமக்களாக மறைந்திருந்து அவர்களுக்கு என்னவாகிறது என்று பார்த்திருக்கிறேன். எப்போதும் அவரால் ஆட்கொள்ளப்பட்ட ஒருவனாக திரும்பியிருக்கிறேன். அவர் ஒரு மந்திரவாதி. அவரோடு சும்மா இருப்பதினாலேயே ஏதோ நடக்கிறது. அவர் இந்த பூமியைச் சார்ந்தவர் அல்லர்''

இவை பான்டியஸ் பைலேட்டின் வார்த்தைகள். நீங்கள் ஏசுவோடு நெருங்கிய தொடர்பில் இருக்கும்போது, எப்படி உங்களால் மனது இறங்காமல், தொடப்படாமல் இருக்கமுடியும். அந்த நகர்வு உங்கள் சக்தியில் ஏற்படுகிறது. வெளியிலிருந்து பார்க்கும்போது நான் மக்களை மாற்றிக் கொண்டு இருப்பதுபோலத் தோன்றும். ஆனால் அது உண்மையல்ல. அல்லது மேலோட்டமான உண்மை. நான் யாரையும் மாற்றவில்லை. நான் உங்களுக்காக இருக்கிறேன்.

நீங்களும் கிடைக்கப் பெறுவீர்களானால் விஷயங்கள் தானாகவே நடக்கும்.

> *''யாரையும் மாற்றக் கூடாது என்று சொல்கிறீர்கள். மேலும் கண்டுபிடித்து விட்டோம் என்று சொல்லாதீர்கள் என்றும் சொல்கிறீர்கள்.''*

ஆம், நீங்கள் கண்டுபிடித்து விட்டேன் என்று சொல்லாதீர்கள் என்று நான் கூறுகிறேன். ஏனென்றால் அதன் பொருள் என்னவென்றால், நீங்கள் கண்டுபிடிக்கவில்லை என்பதே. ஆனால் உங்கள் புதிர் எனக்குப் புரிகிறது. ஏனென்றால், நான் கண்டுபிடித்து விட்டேன் என்று அறிவிக்கிறேன். இதனால் உங்கள் மனதில் நான் கண்டுபிடித்து விட்டேனா இல்லையா என்ற பிரச்சினை எழுகிறது. ஏனென்றால் நான் கண்டுபிடித்து விட்டேன் என்கிறேன். மீண்டும் சொல்கிறேன், வெளியிலிருந்து அது ஒரு வகை. உள்ளிருந்து வேறு ஒரு வகை.

நான் 'அதைக்' கண்டுபிடித்துவிட்டேன் என்று சொல்லவில்லை. 'அது' அவ்வாறு சொல்கிறது. இதில் பெரிய வேறுபாடு உள்ளது. கண்டுபிடித்துவிட்டேன் என்று சொல்லும்போது, நீங்கள் உண்மையில் கண்டுபிடிக்கவில்லை. ஆனால் 'அது' சொல்லும்போது நீங்கள் செய்வதற்கு ஒன்றுமில்லை, 'அது' உறுதிப்படுத்தப்படுகிறது. நினைவில் கொள்ளுங்கள். 'அது', நீங்கள் அல்ல. உங்கள் 'ஞானம்' சொல்கிறது நீங்கள் அல்ல; உங்கள் உள்ளொளி தன்னைத்தானே அறிவித்துக் கொள்ளும்போது, நீங்கள் என்ன செய்ய முடியும்? நீங்கள் எங்கே இருக்கின்றீர்கள்? இனி நீங்கள் அங்கே இல்லை. அறிவிப்பு வெளிவருவதையும் உங்களால் தடுக்கக் கூட முடியாது. கவனமாகக் கேளுங்கள்; உங்களால் அறிவிக்கமுடியாது, அறிவிக்கப்படுவதை உங்களால் தடுக்க முடியாது. நான் உங்களிடம் சொல்லாதீர்கள் என்றால், நான் வெறுமனே குறிப்பது என்னவென்றால் 'அது' சொல்லும்வரை வரை காத்திருங்கள். நீங்கள் சொன்னால் அது உண்மையாகாது; அப்படியானால் நீங்கள் கண்டுபிடிக்கவில்லை. ஆனால் என்றாவது ஒருநாள், திடீரென 'அது' உங்களுக்குள்

அறிவிப்பதைத் தெரிந்து கொள்வீர்கள். அந்த வேறுபாடு ரொம்பத் தெளிவாக இருக்கும். அது உங்களின் அடியாழ மையத்திலிருந்து வரும். உங்கள் மனம் வெறும் மேல்மட்டத்தில் இருக்கும். உங்கள் மனம் ஒரு பார்வையாளராக மட்டுமே இருக்கும் - மனம் அறிவிக்கப்படுவதை வெறுமனே கேட்டுக்கொண்டிருக்கும். ஆனால் அதற்கு அதில் பங்கேற்பு எதுவும் கிடையாது. ஆனால் இது ஒரு அக நிகழ்வு. நீங்கள் இதை அனுபவித்திருந்தால் ஒழிய உங்களால் புரிந்துகொள்ள முடியாது.

ஆனால், இதற்கு இணையான அனுபவங்கள் இருக்கின்றன. அவை உங்களுக்கு உதவக்கூடும். நீங்கள் ஒரு பெண்ணிடம் ''உன்னைக் காதலிக்கிறேன்'' என்று சொல்கிறீர்கள். ஆனால் உண்மை அதுவல்ல. உங்களுக்கு வெறுமனே அவளுடன் ஓரிரவைக் கழிக்க வேண்டும். அவளுடன் படுக்கைக்குச் செல்ல வேண்டும். ''நான் உன்னைக் காதலிக்கிறேன்'' என்று நீங்கள் சொல்வதில் எந்த அர்த்தமும் கிடையாது. அது வெறும் பண்பு முறை அவ்வளவே. ஒரு கணவானைப் போன்று ஏதாவது பணிவோடு சொல்ல வேண்டும். ஏதாவது அறிமுகம் தேவை. எந்தவித அறிமுகமும் இல்லாமல் நீங்கள் படுக்கைக்குள் தாவ முடியாது. அந்தப் பெண்ணிற்கு கோபம் வந்து போலீசைக் கூப்பிடலாம். அல்லது கூட்டம் கூடி உங்களை மொத்தலாம். நீங்கள் வெறுமனே அவளை இணங்கவைக்கின்றீர்கள். காதலிக்கிறேன் என்ற சொல் உங்கள் இதயத்திலிருந்து வரவில்லை. அது தலையிலிருந்து வருகிறது. மூளை சார்ந்தது.

பிறகு என்றாவது ஒருநாள் நீங்கள் உண்மையிலேயே ஒரு பெண்மீது காதல் கொள்வீர்கள். அந்த வேறுபாடு தெளிவாகத் தெரியும். இப்போது மொத்த இதயமே ''நான் உன்னைக் காதலிக்கிறேன்'' என்று சொல்லும். நீங்கள் சொல்வதில்லை. இதயம் சொல்கிறது, நீங்கள் அங்கு இல்லவே இல்லை. நீங்கள் ஒரு மனம் என்ற வகையில் இல்லை. மனம் வெறும் கேட்பவராகிறது; இதயம் ''நான் உன்னைக் காதலிக்கிறேன்'' என்று சொல்கிறது. ஆனால், வித்தியாசம் என்னவென்றால்,

நீங்கள் மட்டுமே அறிந்துகொள்ளக்கூடியது. இது எப்போது, சம்பிரதாயமாக இருக்கிறீர்கள், எப்போது உண்மையாக இருக்கிறீர்கள் என்று.

நான் உண்மையைக் கண்டுபிடித்துவிட்டேன் என்று அறிவித்தீர்களானாலும் அது தவறாக இருக்கும். ஆனால் 'அதுவே' அறிவிப்பு கொடுத்ததென்றால் பிரச்சினை இல்லை. நீங்கள் என்ன செய்ய முடியும்? நீங்களே தடுக்க நினைத்தாலும்கூட தடுக்க முடியாது.

இது மன்சூரின் விஷயத்தில் நடந்தது. அல்-ஹில்லாஜ் மன்சூர் மிகப்பெரிய சூஃபிக்களில் ஒருவர். ஒருநாள் அவர் அமைதியாக தன் குருவின் முன்னே அமர்ந்திருந்தார். அவருடைய குரு ஜீனத்தும் பெரிய மறைஞானி. மன்சூர் வெறுமனே அறிவித்தார். ''அனா-இல்-ஹக்!'' நான் கடவுள்! நான் மெய் என்று பொருள்.

குரு சொன்னார், ''அமைதியாய் இரு! அதைத் திருப்பிச் சொல்லாதே. உனக்குள் வைத்துக்கொள். நீ அதை வெளியில் சொல்லலாகாது. உனக்கு நன்றாகவே தெரியும். நாம் மொகமதியர் நாட்டில் வாழ்கிறோம். நாமும் மொகமதியர்கள். இதை மக்கள் கேட்பார்களானால் உன்னைக் கொன்றுவிடுவார்கள்.''

மன்சூர் சில கணங்கள் வாளாயிருந்துவிட்டு பின்னர் மன்சூர் மறுபடியும் அறிவித்தார். 'அனா-இல்- ஹக்! நான் கடவுள்''

''மன்சூர்! நான் சொல்வதைக் கேட்டாயா இல்லையா'' என்றார் ஜீனத்.

உடனே மன்சூர், ''நீங்கள் சொல்வதைக் கேட்டேன். ஆனால் 'அது' சொல்கிறது. இப்போது சாவோ, இல்லையோ, 'அது' அறிவிக்கின்றது. நீங்கள் சொன்னதைக் கேட்டுக் கொண்டேன். ஆனால் அறிவிப்பது 'அது' நான் இல்லை'' என்றார். அந்த பேரார்வமிக்க கண்கள், அந்த பரவசம் மிகுந்த சக்தி, இதைக் கண்ட ஜீனத்திற்கு தெரிந்தது. இனி மன்சூரைத் தடுக்க முடியாது. ஆக அவர் சொன்னார். ''நீ புனித யாத்திரை செல், காபாவிற்குப்

போ. ஆனால் உனக்குள்ளேயே வைத்துக்கொள். அடக்கி வை. வெளியில் விடவேண்டாம். ஆபத்து இருக்கிறது'' மன்சூர் காபாவிற்குச் சென்றார்.

சூஃபிக்களின் பண்டைய பழக்க வழக்கங்களில் ஒன்று, யாரேனும் ஞானம் அடைந்துவிட்டால் அதை அறிவிக்க காபாவிற்கு அனுப்பி வைப்பார்கள். பயணம் அவரை நிதானம் கொள்ளச் செய்யும். அவரின் பரவசம் குளிர்ச்சியடையும். அடுத்து காபாவின் தாக்கம். காரணம் அங்கிருக்கும் கல் வெறும் கல் அல்ல! உண்மையில் எந்தக் கல்லும் வெறும் கல்லல்ல. அது உலகின் மிக அரிய கற்களில் ஒன்று. ஏனென்றால் கடவுளை அறிந்த லட்சக்கணக்கானோர் அந்தக் கல்லை முத்தமிட்டுள்ளார்கள். இந்தக் கல்லிற்கு வேறுவிதமான அதிர்வு இருக்கின்றது. வேறு எந்தக் கல்லிற்கும் இதைப்போன்ற ஓர் இதயத்துடிப்பு கிடையாது. ஆக பழங்கால சூஃபி வழக்கப்படி யாராவது அறிவிப்பு செய்தால், அவர் போய் அந்தக் கல்லை முத்தமிட வேண்டும். அந்தக் கல்லை முத்தமிடுவதால் ஏதோ ஒன்று நடக்கிறது. பல அறிவிப்புகள், அந்தக் கல்லே ''நான் கடவுள்'' என்று அழுது சப்தமிடுகிறது. அதில் உங்கள் சிறிய குரல் தொலைந்து போகிறது - குளிர்ச்சி ஏற்படுகிறது. அதன் பிறகு பலர் 'அறிந்திருக்கின்றனர்' என்பது உங்களுக்கு தெரிய வருகிறது. அறிவிப்பதற்கு ஒன்றும் இல்லை. லட்சக்கணக்கானோர் அறிந்து இருக்கின்றனர். ''நான் ஒன்றும் புதியவன் அல்ல; நான் முதலாமவன் அல்ல; நான் முன்னோடி அல்ல''.

மன்சூர் அனுப்பப்பட்டார். ஆனால் அவரால் சென்றடைய முடியவில்லை. இடையிலேயே பிடிபட்டுவிட்டார். அவர் அறிவித்துக்கொண்டிருந்தார். அவர் தனியாகவே சென்று கொண்டிருந்தாலும் திடீரென இது நடக்கும். அவர் அறிவித்து விடுவார். ஆக, அவர் பிடிபட்டு நீதிமன்றத்திற்குக் கொண்டு வரப்பட்டு, கொல்லப்பட்டார்.

ஆனால் அவர் கொல்லப்படும்போதுகூட அவர் அறிவித்துக் கொண்டு இருந்தார். அவர் அறிவித்தார் என்று சொல்வது

சரியல்ல. அது அறிவித்தது, அவர் மூலமாக அறிவித்துக் கொண்டிருந்தது என்பதே சரியாகும்.

நீங்கள் அறிந்து கொள்ளும் பட்சத்தில் , 'அது' அறிவிக்கிறது. சில சமயங்களில் அது அறிவிக்கும், சில சமயங்களில் அறிவிக்காது. ஜீனைத்தின் விஷயத்தில் அது அறிவிக்கவில்லை, அது வெறுமனே இருந்தது. அது ஒருவரைப் பொறுத்தது. ஜீனைத்தால் அமைதியாக இருக்க முடிந்தது. ஆனால் மன்சூர் அடக்கமாட்டாதவர். ஆனால் நினைவில் கொள்ளவேண்டியது ஒன்று. நீங்கள் அதை அறிவிக்கக் கூடாது. அதை மனதில் கொள்ள வேண்டும் — தொடர்ந்து மனதில் இருக்க வேண்டும். அறிவித்தீர்கள் என்றால், நீங்கள் ஏதோ தவறானதை செய்து விட்டீர்கள், அவச்செயலாகும்.

> *நீங்கள் கேட்பது, ''யாரையும் மாற்றக் கூடாது என்று நீங்கள் சொல்கிறீர்கள், மேலும் கண்டுபிடித்து விட்டேன் என்று சொல்லாதீர்கள் என்றும் சொல்கிறீர்கள். ஆனால் பகவான் நீங்கள் என்ன செய்கிறீர்கள்?''*

நான் பித்துப்பிடித்தவன், என்னைத் தனியாக விட்டு விடுங்கள். நான் என்ன சொல்கிறேனோ அதைச் செய்யுங்கள். நான் என்ன செய்கிறேனோ அதைச் செய்யாதீர்கள். அந்தத் தருணத்திற்காக நீங்கள் காத்திருக்கவேண்டும். அந்தத் தருணம் வரும். அது வரும்போது அப்படியொரு விடுதலை கிடைக்கும். ஆனால் அது வருமுன்னே நீங்கள் பாசாங்கு செய்யத் தொடங்கினால், நீங்கள் வருவதைத் தடுத்துக் கொண்டிருப்பீர்கள். பிறகு அது வரவே வராது. அது பகடிகளுக்கு எப்போதும் வராது.

> *மேலும், என் அன்பிற்குரியவரும் ஒரு சன்னியாசி ஆவதைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்?*

பிரீத்தா... எனக்குப் புரிகிறது. நீங்கள் ஒன்றை அனுபவித்துக் கொண்டு இருக்கையில், சன்யாசம் போன்று ஏதோ ஒன்றை, உங்கள் அன்புக்குரியவருடன் அதைப் பகிர்ந்துகொள்ள

விரும்புகிறீர்கள். யார்தான் அதை விரும்ப மாட்டார்? ஆனால் அதில் ஒரு ஆபத்து இருக்கிறது. எதிர்க்கும் தன்மை கொண்டு விடாதீர்கள். ஏனென்றால் நீங்கள் நினைப்பதற்கு மாறானதை செய்வீர்கள். யாரும் இழுத்த இழுப்பிற்குப் போவதை அல்லது மற்றவரால் கையாளப்படவோ விரும்ப மாட்டார். யாருக்கும் தன் மீது மற்றவர் ஆதிக்கம் செலுத்துவதை விரும்புவதில்லை. நிச்சயமாக ஆண்கள் கிடையாது. எந்த ஆணும் தன் வாழ்க்கைத் துணையைப் பின்பற்ற விரும்பமாட்டான். அவன் அகங்காரம் ரொம்ப வலுவானது. ஆண் அகங்காரம் அதிக ஆளுமை உணர்வு கொண்டது. ஒரு பெண் இதற்குள் கற்றுக்கொண்டு இருக்கவேண்டிய மிகப்பெரிய அனுபவம் இது.

எனக்குத் தெரிந்த ஒரு தம்பதியர் உள்ளனர். அந்த மனிதர் முப்பது வருடங்களாக குடித்து தன் ஆரோக்கியத்தை கெடுத்துக் கொண்டிருந்தார். அவரால் அதை நிறுத்தமுடியவில்லை, ஏனென்றால் அவருடைய மனைவி அதற்கு எதிராக இருந்தார். நான் அவர் மனைவியிடம் சொன்னேன், ''அவருடன் சண்டை போடாதே, அவரை குடிக்க அனுமதி. அதுமட்டுமல்ல, அவருக்கு தேவையானதெல்லாம் கொடு. அவர் வீட்டிற்கு வரும்போது,''மது அருந்த வேண்டுமா?'' என்று கேள்.

''என்ன சொல்கிறீர்கள்? முப்பது வருடமாக நான் முயற்சி செய்கிறேன், அவர் நிறுத்தவில்லை. இப்போது அவர் குடிப்பதற்கு நான் உதவி செய்ய வேண்டுமா?''

''சும்மா, முயற்சி செய்துபார். ஒருக்கால் அவர் குடியை நிறுத்துவதை நீங்களே தடுத்து இருக்கலாம். ஏனென்றால் அவரை எனக்குத் தெரியும். அவர் என் மீது பாசம் உள்ளவர். என்னிடம் வந்து அழுகிறார். ''இது தவறு என்று எனக்குத் தெரியும். என்னையும் என் குடும்பத்தையும், எல்லாவற்றையும் அழிக்கிறேன் என்று எனக்குத் தெரியும்'' என்று என்னிடம் சொன்னார்.

மனைவி சொன்னாள், ''அவர் உங்கள்மீது பாசமாக இருக்கிறார் என்று எனக்கும் தெரியும். ஏனென்றால் அதிகமாக

குடித்துவிட்டாரென்றால், உங்களைப் போலவே பேசுகிறார். ரொம்ப அதிகமாகப் போய்விட்டது. இரவு இரண்டு மணிக்கு எழுந்து பிரசங்கம் செய்யத் தொடங்கிவிடுவார். அதுவும் சரியாக தொன்னூறு நிமிடங்கள். அதுவும் வார்த்தைக்கு வார்த்தை திருப்பிச் சொல்கிறார்.''

ஆனால் அவர் மனைவி நான் சொன்னதைக் கேட்டு தன் கணவரிடம் குடி பற்றி சண்டை போடுவதை நிறுத்திவிட்டாள். கடினமாகத்தான் இருந்தது, கடந்த முப்பது வருடங்களாக நச்சரித்துக் கொண்டிருந்த பழைய பழக்கம். கணவனுக்கு ஒரே புதிராக இருந்தது. தன் மனைவியே தனக்காக மது கொண்டு வந்து தருவதை அவனால் நம்ப முடியவில்லை. ஒரு வாரம் கழித்து என்னிடம் வந்தவர், ''என்ன செய்தீர்கள், என் மனைவியின் போக்கே விசித்திரமாக இருக்கிறது. ஆனால் திடீரென எனக்கு ஒரு எண்ணம், இந்தப் பழக்கத்தைவிட வேண்டிய காலம் வந்துவிட்டது.''

ஆணின் அகங்காரம்... நீங்கள் புகை பிடிப்பதற்கு எதிராக உள்ளீர்கள், அப்படியானால் உங்கள் கணவர் புகை பிடிப்பார். நீங்கள் இதை எதிர்த்தால் அதைச் செய்வார். தன்னைத் தற்காத்துக் கொள்ள வேண்டும். உங்களிடம் அவருக்கு அவ்வளவு பயம், தன்னை தற்காத்துக் கொள்ளவில்லை என்றால் நீங்கள் அவரை விழுங்கிவிடுவீர்கள். அவரை அப்படியே உள்வாங்கிக் கொள்வீர்கள். அதற்குரிய திறன் உங்களுக்கு இருக்கிறது என்று அவர் அறிவார். ஒரு பெண்ணின் கருவறையில் வாழ்ந்திருக்கிறார், அவர் அதிக பயத்தில் இருக்கிறார். ''இதைச் செய்யாதே, அதைச் செய்யாதே'' என்று சொல்லிக் கொண்டிருந்த தன் தாயின் பிடியிலிருந்து எப்படியோ தப்பித்துக் கொண்டார். நான் எப்படியோ என்று சொல்வதற்கு காரணம், யாரும் உண்மையிலேயே அம்மாவிடமிருந்து தப்பிப்பதில்லை. அம்மா எப்போதும் உங்களைப் பின்தொடர்ந்து கொண்டு இருப்பாள். அடுத்து நீங்கள் ஒரு மனைவியைத் தேர்ந்து எடுப்பீர்கள். மனைவி உங்களுக்கு 'அம்மா' ஆகிவிடுவாள். மீண்டும்

தொடக்கத்திலிருந்து அதே விஷயம், மனைவி நச்சரிக்கத் தொடங்குகிறாள். ''இதைச் செய்யாதே, அதைச் செய்'' சின்ன விஷயங்களிலிருந்து பெரிய விஷயங்கள் வரை உங்களுக்கு வழிகாட்டிக் கொண்டேயிருப்பாள். ஆனால் அவள் பாசத்தால் அவ்வாறு செய்கிறாள். பாசத்தின்மீது சந்தேகம் கிடையாது, ஆனால் ஒருவருக்கு சுதந்திரமும் வேண்டுமே.

*மேலும் என் அன்பிற்குரியவரும் ஒரு சன்னியாசி ஆவதைப் பற்றி என்ன சொல்கிறீர்கள்?*

விரும்புவது சரிதான், ஆனால் அது உங்களுக்குள்ளேயே இருக்கட்டும். அவரை நச்சரிக்கத் தொடங்கிவிடாதீர்கள். இல்லையென்றால் எனக்கு இழப்பு ஒரு சன்னியாசி! அவர் அப்படியே இருக்கட்டும். நீங்கள் சன்னியாசியாக இருங்கள். உங்கள் சன்னியாசத்தை அனுபவியுங்கள். நீங்கள் அதிக நேசமாகவும், அமைதியாகவும் ஆகிடுங்கள். அதிகம் பரவசம் அடையுங்கள், ஆனால் அவரை தனியே விட்டுவிடுங்கள். ஒரு முறை கூட ''நீயும் ஒரு சன்னியாசி ஆகிவிடு''என்று சொல்ல வேண்டாம். அவரே யோசிக்கட்டும், உங்களை உணரட்டும், உங்களுக்கு என்னவாயிற்று என்று பார்த்து தெரிந்துகொள்ளட்டும். சன்னியாசி ஆகியதால் நீங்கள் மாற்றம் பெற்றீர்கள் என்றால், அவருக்கும் இப்போது ஏதாவது செய்ய வேண்டும் என்று தோன்றும். உங்களுக்குள் மலர்கள் மலர்வதை அவர் கண்டால், அந்த சுகந்தம் அவரை மாற்றும், நீங்கள் அல்ல, அந்த சுகந்தம் உருமாற்றும்போது, எதிர்ப்பு இருக்காது, ஏனென்றால், சுகந்தம் கண்ணுக்குத் தெரியாமல், சப்தமில்லாமல் வரும். யாரும் அதைத் தடுக்க முடியாது. ஏனென்றால் யாருக்கும் எப்போது தங்கள் உயிருருக்குள் நுழைந்தது என்று தெரியாது.

உங்கள் அன்புக்குரியவரும் சன்னியாசி ஆக வேண்டும் என்று விரும்புகிறீர்கள் என்றால் உங்களுக்கு என்னவாயிற்று என்று அவரைப் பார்க்க அனுமதியுங்கள். உங்களுடைய நடனத்தையும் ஆனந்தக்கொண்டாட்டத்தையும் அவர் பார்க்கட்டும். அது

அவரை மாற்றியதென்றால் நல்லது, ஆனால் ஒரு கிறிஸ்தவ மிஷனரி ஆகிவிடாதீர்கள். அவரைப் போட்டு இடித்துக் கொண்டேயிருக்காதீர்கள். அவருடன் எப்போதும் வாதம் செய்துகொண்டிருக்காதீர்கள். அவரை கையாள நினைப்பது, கட்டுப்படுத்துவது வேண்டாம். ஏனென்றால் நீங்கள் எதிர்ப்பை உண்டாக்குவீர்கள். எதிர்ப்பு உருவாகிவிட்டதென்றால் மேலும் மேலும் கடினமாகிவிடும். என்றாவது ஒருநாள் அவர் சன்னியாசி ஆகிவிட்டால் கூட அது உங்கள் நச்சரிப்பு தாங்க முடியாமல், ''சரி இந்த பெண்ணின் வாயை மூடுவதற்காகவது நாம் சன்னியாசி ஆகி விடுவோம்'' என்ற கதையாகிவிடும். அவர் வெறுமனே வெளியில் சன்னியாசியாக இருப்பார். அவர் என்னை எதிர்த்துக்கொண்டேயிருப்பார்.

ஆக இது நினைவில் இருக்க வேண்டும், பிரீத்தா மட்டுமல்ல எல்லோரும். நாம் நேசிக்கிறோம், இயல்பாகவே அதை நாம் பகிர்ந்துகொள்ள விரும்புகிறோம், ஆனால் நேசம் விழிப்புடன் இருக்க வேண்டும், இந்த விழிப்புணர்வு எப்போதும் உயிருடன் இருக்க வேண்டும். யாருடைய சுதந்திரத்திற்குள்ளும் தலையிடக் கூடாது, நேசியுங்கள். ஆனால் ஒரு இடைவெளி இருக்கட்டும். நேசியுங்கள், ஆனால் தனியாக இருங்கள், மற்றவரையும் தனியாக இருக்க விடுங்கள். மற்றவரைத் தனியாக இருக்க உங்களால் அனுமதிக்க முடியுமானால், உங்கள் நேசம் விழிப்புணர்வுடையது. நீங்கள் மற்றவரின் இடைவெளியை ஆக்கிரமிக்கத் தொடங்கினால், மற்றவரை உரிமை கொண்டாடி, அதிகாரம் செலுத்தத் தொடங்கினால் உங்கள் நேசத்தை அழிக்கின்றீர்கள். உங்கள் அன்பு உணர்வு நிலையற்றது என்றாகிவிடும். உணர்வு நிலையற்ற நேசம் எப்போதும் விஷம் போன்றது. உணர்வுநிலை இல்லாததினால் நேசம் மரணமடையும்.

அதனால்தான் பல மனிதர்கள் நேசித்தாலும் கூட, நேசம் ஏற்படுவதாகத் தெரியவில்லை. பலர் காதலில் வீழ்ந்து பிறகு எழுந்து போய்விடுகின்றனர். யாரும் நேசத்தில் நிலைத்து

இருப்பதில்லை. ஏன் நேசத்தை விட்டுப் போகின்றனர்? காரணம் உணர்வு நிலை அங்கே இல்லை. ஒரு இயந்திரத்தனமான பழக்க வழக்கங்கள். அதைத் தவிர்த்திடுங்கள்.

உங்கள் நேசம் ஆழமானதாக இருந்தால், உங்கள் சன்னியாசம் மகிழ்ச்சிகரமாக இருப்பது உண்மை என்றால் அது போதுமானது, அது உங்கள் அன்புக்குரியவரை உருமாற்றும்.

## கடைசி கேள்வி

*அன்புக்குரிய பகவான், என் கரங்களை நான் உங்களுக்கு தருகிறேன். நான் உங்கள் கரங்களாகிறேன். என் தலையையும் எடுத்துக் கொள்கிறீர்கள். நான் எவ்வாறு உங்களை ஏற்றுக் கொள்ளும் வகையில் இருப்பது, எப்படி உங்களுடன் நெருக்கமாவது? இதுதான் எனக்கு தேவை.*

கருணா, ஒவ்வொரு கணமும் நீங்கள் எனக்கருகில் வந்துகொண்டேயிருக்கிறீர்கள். இதற்கு செய்முறை விளக்கம் எல்லாம் கிடையாது. 'எப்படி' என்ற கேள்வி வரும்போது நீங்கள் மேலும் விலகிப்போய் விடுவீர்கள். செய்வதற்கு சில விஷயங்கள் உள்ளன, சில விஷயங்கள் அனுமதிக்கப்பட மட்டுமே முடியும்.

என் அருகில் வருவது என்பது நீங்கள் செய்யக்கூடிய காரியம் அல்ல. அதில் செய்வதற்கு எதுவும் கிடையாது. நீங்கள் அது நடப்பதற்குமட்டுமே அனுமதி கொடுக்க முடியும். அது *'வே-வு-வே'* போன்றது. அதாவது செயலின்மை மூலம் செயல் என்று பொருள். எப்படி என்று கேட்காதீர்கள்.

இந்தக் கேள்வி எழுவது இயற்கைதான், அது எனக்குத் தெரியும். ஏனென்றால் நீங்கள் என்னிடம் நெருக்கமாக, மேலும் நெருக்கமாக இருக்க விரும்புவீர்கள்.

ஆனால் அதைப்பற்றி நீங்கள் செய்வதற்கு ஒன்றுமில்லை. ஏதாவது செய்தீர்கள் என்றால் நீங்கள் இறுகிப்போய் விடுவீர்கள். செய்வதினால் அகங்காரம் இறுகுகிறது. செயலின்மையால்

நீங்கள் இளகுகிறீர்கள், அந்த இளகுதலில் என் அருகில் வருகிறீர்கள். நீங்கள் ஏதாவது செய்யத் தொடங்கும் தருணமே மறுபடியும் அகங்காரம் வந்துவிடுகிறது- அகங்காரம் உங்களை மேலும் மேலும் விலக்கி வைத்துக்கொண்டேயிருக்கும்.

அது ஏற்கனவே நடந்துவிட்டது. நான் உங்களைக் கவனித்துக் கொண்டு இருக்கிறேன். ஒவ்வொரு கணமும் நீங்கள் எனக்கருகே வந்துகொண்டேயிருக்கிறீர்கள்.

> *''என் கரங்களை உங்களுக்குத் தருகிறேன்'' என்று சொல் கிறீர்கள்.*

உண்மையில் நான் அதை ஏற்கனவே எடுத்துக் கொண்டாகி விட்டது. அதற்கு உங்கள் அனுமதிகூட கேட்கவில்லை. நான் கேட்டுப் பெறுவதெல்லாம் இல்லை. நான் திருடுவேன். உங்களுக்கு ஆச்சரியமாக இருக்கலாம். இந்தியாவில் கடவுளுக்கு ஆயிரக்கணக்கான பெயர்கள் இருக்கின்றனர். அதில் மிகவும் அழகான ஒன்று *'ஹரே'* என்ற பெயர். 'ஹரே' என்றால் 'திருடன்' என்று பொருளாகும்.

நான் உங்கள் அனுமதி எல்லாம் கேட்டதில்லை. உங்கள் கதவையும் தட்டுவதில்லை. ''ஐயா, உள்ளே வரலாமா? அம்மா உள்ளே வரலாமா?'' என்றெல்லாம் சொல்வது கிடையாது. நான் பாட்டிற்கு உள்ளே வருவேன். என்னைப்பற்றிப் பிறகுதான் தெரிந்துகொள்வீர்கள். கெடுதி ஏற்பட்ட பிறகு, திரும்ப முடியாத நிலையை எட்டியபிறகு, எல்லைகடந்து தப்பிக்க இல்லாத போது, அறிந்துகொள்வீர்கள்.

பண்டைய எகிப்திய வழிமுறை சொல்வது, குரு சீடனைத் தேர்ந்து எடுப்பார், நேர்மாறாக அல்ல. இது முற்றிலும் உண்மை என்று நான் உங்களுக்குச் சொல்கிறேன். நீங்கள் எப்போது என்னைத் தேர்வுசெய்கிறீர்கள் என்பது இரண்டாம் பட்சம். நான் உங்களை ஏற்கனவே தேர்வுசெய்துவிட்டேன். நான் உங்களைத் தேர்வுசெய்யாவிட்டால், என்னை நீங்கள் தேர்வு செய்ய மாட்டீர்கள். உங்கள் தேர்வு என்பது, நீங்கள் தேர்ந்து

எடுக்கப் பட்டீர்கள் என்பதற்கான அடையாளம் மட்டுமே தவிர வேறு ஒன்றுமில்லை.

நான் கருணாவின் கைகளை அவர் அறியாமலே ஏற்கனவே எடுத்துகொண்டுவிட்டேன், மன்னியுங்கள்.

இரண்டாவது விஷயமும் உண்மைதான். நான் அவர் அறிவையும் எடுத்துக்கொள்கிறேன்.

அடுத்து கருணாவிற்கு தெரியாத மூன்றாவது விஷயம், இறுதியாக நான் அவர் உயிருருவையும் எடுத்துக் கொள்ளப் போகிறேன். 'தலை' என்கிறபோது உங்கள் சிந்தனை, கரங்கள் என்றால் உங்கள் செயல் என்றும் அர்த்தமாகும். ஆனால் நீங்கள் இரண்டிற்கும் அப்பால் உள்ளவர். நீங்கள் ஒரு உயிருரு. உங்கள் உயிருரு என் உயிருருவோடு ஒன்றாகும்போது, உங்கள் வெறுமை என் வெறுமையின் ஒரு அங்கமாகும்போது, இந்த இரண்டு சூன்யங்களும் ஒன்றாகி விடும்போது வேலை முழுமையாகிறது. ஆனால் அது நடந்துகொண்டிருக்கிறது.

இங்கே புரிந்துகொள்ள வேண்டிய அடிப்படையான விஷயம் இதுதான். சன்யாசம் என்பது, நீங்கள் தடுக்க மாட்டீர்கள் என்ற ஒரு அறிவிப்பு, அவ்வளவுதான், அதாவது உங்கள் கதவுகள் திறந்திருக்கும். நான் வந்தால் வேண்டாம் என்று சொல்ல மாட்டீர்கள். நான் உங்களிடமிருந்து பொருட்களை எடுக்கத் தொடங்கினால் நீங்கள் எந்தத் தடங்கலையும் உருவாக்க மாட்டீர்கள். உங்கள் கைகள், உங்கள் தலை, உங்கள் உயிருரு, என்று உங்களிடமிருந்து எடுப்பதற்கு ஏதோ ஒன்றைத் தேர்வு செய்திருக்கிறேன் என்று நீங்கள் மகிழ்ச்சியாய் இருப்பீர்கள்.

சீடர் குருவிற்குள் மறைந்துபோக வேண்டும். அப்படி யானால்தான் குரு சீடருக்குள் மறைந்துபோக முடியும். அப்போது குரு என்பவர் இல்லை என்பதுபோலவே, சீடர் என்பவர் இல்லை என்ற ஒரு தருணம் வரும். 'குரு' என்றால் வெறுமை, நீங்கள் வெறுமையைநோக்கி நெருங்கிக்கொண்டே வருகிறீர்கள். இதை நீங்கள் செய்வதற்கு ஒரு வழியும் கிடையாது. ஏனென்றால்

நீங்கள் ஏதாவது செய்ய முனைந்தால் அந்தச் செய்தலே உங்களை வெறுமையாக்க அனுமதிக்காது. செய்தல் உங்களை நிரப்பிவிடும். செய்யாமைதான் நீங்கள் வெறுமையாவதற்கு உதவும்.

அனுபவியுங்கள், நடனமாடுங்கள். இங்கே என்னவெல்லாம் நடக்கிறதோ, நன்றியுடன் இருங்கள். மேலும் அதிகம் வர உள்ளது. மேலும் அதிகம். ஒவ்வொரு நாளும், மேலும் அதிகம். ஒவ்வொரு கணமும் இது ஆனந்தத்திற்குள் ஒரு முடிவில்லா பயணம்.

## முதல் கேள்வி

*உங்கள் பிரசங்கங்கள் எனக்குப் பிடித்திருக்கிறது, ஒரு மனிதனாக உங்களைப் பிடித்திருக்கிறது. ஒரு குருவாகவும் உங்களைப் பிடித்திருக்கிறது. ஆனால் நீங்களோ அல்லது வேறு எவரோ என் குருவாக இருப்பதற்கும் மற்றும் நான் உங்கள் சிஷ்யையாக இருப்பதற்கும் என்ன காரணம் இருக்க முடியும் என்று எனக்குத் தெரியவில்லை. தயவுசெய்து எனக்குக் காரணம் சொல்லமுடியுமா?*

லிடா கிரொசோவா, எனக்கே அதற்குக் காரணம் இருப்பதாக தெரியவில்லை. நீங்கள் ஏன் சிஷ்யையாக இருக்கவேண்டும், நான் ஏன் உங்கள் குருவாக இருக்க வேண்டும்? ஏன் என்பது இல்லை? அது தர்க்கமுரணானது, அபத்தமானது. *''கிரிடோ குய்யா அப்சுர்டம்''* என்பார்கள். அது அபத்தமானது என்பதால் நான் நம்புகிறேன். வாழ்க்கையில் மிக அபத்தமானது இதுதான். எந்தக் காரணமும் கொடுக்க இயலாது. ஏனென்றால் எதுவும் இல்லை. எல்லா காரணங்களும் மனதின் தொடர் ஆர்வத்தைத் தணிப்பதற்குத்தான்.

ஒரு குருவுடன் இருப்பது, ஒரு சீடராக இருப்பது என்பது நேசம் பற்றிய விவகாரமாகும். துல்லியமாக அதுதான். ஏன் ஒருவர் காதல் கொள்ள வேண்டும் என்று எப்போதாவது கேட்டிருக்கிறீர்களா? ஏன் சூரிய அஸ்தமனம் இவ்வளவு அழகாக இருக்கிறது, கடல் பறவையின் சிறகுகள் ஏன் இவ்வளவு பிரம்மாண்டமாய் இருக்கின்றன, ஏன் ரோஜா மலர் இருக்கிறது என்று கேள்விகள் கேட்டிருக்கிறீர்களா?

ஏன் என்று கேள்வி கேட்கத் தொடங்கினால், அர்த்தமற்றவைக்கு மட்டுமே பொருள் காணமுடியும், அர்த்தமுள்ளவை யாவும் அர்த்தமற்றவைக்குள் காணாமல் போய்விடும். பணத்திற்கு

அர்த்தமிருக்கும், நேசத்திற்கு இருக்காது. இயந்திரங்கள் அர்த்தமுள்ளவையாக இருக்கும். இளங்காலையில் இலைகளின் மீது படிந்து இருக்கும் பனித்துளிகளுக்கு இருக்காது. ஆயுதங்கள் அர்த்தமாகும், ஒரு மனிதனை அரவணைப்பது அர்த்தமாகாது.

ஏன் என்ற கேள்வி எழுந்தவுடனே நீங்கள் அழகானவற்றை எல்லாம் அழிக்கத் தொடங்குவீர்கள். ஏனென்றால்? காரணம் எதுவும் இல்லாமல் அழகு இருக்கிறது. அதனால்தான் அது அழகாக இருக்கிறது! அதன் அழகு புரிந்துகொள்ள முடியாதது, அதனால்தான் பதில் கூறவும் முடியாது. அதன் அழகு புதிரானது, ஏனென்றால் எந்தக் காரணத்தைக் கொண்டும் அதை அளக்க முடியாது. எந்தத் தருக்கமும் அதை அளவிட முடியாது. எந்தக் கணிதமும் செல்லுபடியாகாது. அது வெறுமனே அங்கே இருக்கிறது. முற்றிலும் புதிர்மயமாக, முற்றிலும் அறியா வகையில் உள்ளது.

தற்கொலை ஒன்றுதான் குறிப்பிடத்தக்க தத்துவ ரீதியான பிரச்சினை என்று ஆல்பர்ட் கேம்ஸ் சொன்னது சரிதான். ஒரே குறிப்பிடத்தக்க தத்துவம்சார்ந்த பிரச்சினையா? அதுவும் தற்கொலை? ஆம், நான் அவருடன் ஒத்துப்போகிறேன். நீங்கள் 'ஏன் ' என்று கேள்வி கேட்டால், இறுதியில் நீங்கள் ஒரே ஒரு கேள்வியில் வந்து நிற்பீர்கள். ஏன் வாழவேண்டும்? எதற்காக? உயிரோடு இருப்பதின் அர்த்தம் என்ன? ஏன் சுவாசித்துக் கொண்டேயிருக்க வேண்டும்? ஆம் அதுதான் இறுதி தத்துவக் கேள்வி. ஒரு உண்மையான தத்துவ ஞானி சுவாசிப்பதை நிறுத்தவேண்டும், ஏனென்றால் ஏன் என்பதற்கு அவரால் விடை கண்டுபிடிக்க முடியாது. முதலில் ஏன் என்பதை முடிவு செய்துவிட்டு பிறகு அடுத்த மூச்சை உள் இழுக்க வேண்டும். முடிவிற்கு வர முடியாவிட்டால் சுவாசிப்பதை நிறுத்த வேண்டும். அது அவ்வளவு முட்டாள்தனமாக உள்ளது. சுவாசித்துக் கொண்டேயிருப்பது, ஆனால் ஏன் என்று தெரியாது. நேசிப்பதை நிறுத்துங்கள். ஏனென்றால் அதற்கு ஏன் என்பது கிடையாது. சிரிப்பதை நிறுத்துங்கள். அதற்கும் ஏன் என்பது இல்லை.

ஒரு சீடராக இருப்பது என்பது இருப்பின் இறுதிப் புதிராகும். அது ஓர் அபத்தம். அதனால் ஏன் ஒருவர் சீடராக இருக்க வேண்டும் என்பதற்கு காரணம் கூற முடியாது.

ஆனால் கிரசோவா, உங்களுக்கு நான் ஒன்றைச் சொல்ல விரும்புகிறேன். சீடராக வேண்டும் என்ற ஆசை உங்களுக்குள் எழுந்துள்ளது. இல்லையென்றால் எங்கிருந்து இந்தக் கேள்வி? இந்தக் கேள்வியே ஏன் முதலில் எழுந்தது? ஆசை எழுந்துள்ளது. இந்த ஆசையை பகுத்தறிவிற்கு உட்படுத்த வேண்டும், ஆதலினால் இந்தக் கேள்வி. உங்கள் அறிவாற்றலை நிறைவு செய்ய வேண்டும். அதாவது சீடராக இருப்பதற்கு ஒரு காரணம் உள்ளது என்று. ''நான் ஒரு முட்டாள் இல்லை, நான் பைத்திய மல்ல. நான் சீடர் நிலைக்குப் போவதற்குக் காரணம் உள்ளது.''

எதுவும் கிடையாது, எல்லாக் காரணங்களும் புனையப் பட்டவையே. நீங்கள் புனையலாம், கோடிக்கணக்கான காரணங்களைக் கண்டுபிடிக்கலாம். மனம் அவ்வளவு கண்டு பிடிக்கும் தன்மை உடையது. எவ்வளவு புனைவுகளையும் உருவாக்கவல்லது. அதுவும் மிக எளிதாகவும், மலிவாகவும். யாரும் உங்களைத் தடுக்கவில்லை. ''நான் கடவுளை அறிவதற்காக சீடராகிறேன்'' என்று நீங்கள் சொல்வதெல்லாம் அபத்தக் களஞ்சியம். அதெல்லாம் காரணமற்ற காரியங்களுக்கு காரணம் கண்டுபிடிக்கும் முயற்சிகள். உங்கள் மனம் குற்ற உணர்வு கொள்கிறது. ''என்ன செய்துகொண்டிருக்கிறாய்? முதலில் எனக்கு ஒரு பதில் வேண்டும்'' என்கிறது மனம். நீங்கள் உடனே, ''நான் கடவுளை நாடுகிறேன்'' என்று சமாதானம் சொல்வீர்கள்.

ஆனால் உங்களுக்குக் கடவுளைப் பற்றி ஏதும் தெரியாது — நீங்கள் எப்படி அவரைத் தேடுவீர்கள்? அவரைச் சந்தித்ததே இல்லை. நீங்கள் கடவுளைப் பார்த்ததும் இல்லை, தெய்வீக அனுபவமும் உங்களுக்குக் கிடையாது. பின் எவ்வாறு நீங்கள் அவரைத் தேட முடியும். ஒரு குறிப்பிட்ட சுவை உணர்ந்தால்தான் தேடுதல் எழும், அந்தச் சுவை உங்களுக்கு

இதுவரை ஏற்படவில்லை. பிறகு ''நான் உண்மையைத் தேடிக் கொண்டிருக்கிறேன்'' என்பீர்கள். உண்மை என்று எதைச் சொல்கிறீர்கள்? அதன் பொருள் என்ன? எவரும் இதுவரை அதை விளக்கியதில்லை. ஆம், ஆயிரமாயிரம் சிந்தனையாளர்கள் முயன்று தோற்று இருக்கின்றனர். அதைப்பற்றி சொன்ன தெல்லாம் உண்மையற்றதாகிறது. ''நான் உண்மையை நாடுபவன்'' என்று நீங்கள் சொல்ல முடியாது. இவையெல்லாம் மனதை சமாதானப்படுத்துவதற்கான வழிகள். ''நான் என்னை அறிய விரும்புகிறேன்'', ''இந்த இருப்பின் ரகசியம் அறிய விரும்புகிறேன்.''

நான் உங்களுக்கு மீண்டும் மீண்டும் சொல்வது, சீடராவதற்கும் இந்த விஷயங்களுக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. சீடராவது என்பது வெறுமனே நேசம் கொள்வது. அது அடி முட்டாள்தனம். ஆனால் முட்டாள்களே துணிவுடையவர்கள்.

அன்று நாம் பேசிக்கொண்டிருந்த கதை ஞாபகம் இருக்கிறதா? ''இப்படியாக அந்த அறிவார்ந்த மனிதன் 'முட்டாள்' என்று அழைக்கப்பட்டான்.'' சீடராக வேண்டும் என்று அபத்தமான ஆசையை ஏற்றுக்கொள்ளும் துணிவு உங்களுக்கு இருந்தால்தான் நீங்கள் உருவாக முடியும். உங்களை நம்ப வைப்பதற்கு நான் இங்கே இல்லை. உங்கள் மனம் வேண்டும் காரணங்களைத் தருவதற்கும் நான் இங்கே இல்லை, எல்லாக் காரணங்களும் பொய்யானவை. இதயத்திற்கு சொந்தமான காரணங்கள் உண்டு. அவற்றை மனம் அறியாது. ஆனால் அந்தக் காரணங்கள் விளக்க முடியாதவை, வருணனைக்கு அடங்காதவை. நழுவிப்போனவை. விளக்க முயன்றால் அபத்தமாக இருக்கும்.

யாரோ ஒருவர் உங்களிடம் கேட்கிறார், ''ஏன் இந்தப் பெண்ணைக் காதலிக்கிறீர்கள்?'' நீங்களும், ''ஏனென்றால் அவளுக்கு அவ்வளவு அழகான மூக்கு இருக்கிறது'' என்று சொல்லும் போது, எவ்வளவு அபத்தமாக இருக்கும். ஆக அந்த நீண்ட மூக்கின்மீதுதான் காதல்கொண்டீர்களா? அல்லது ''அவளுக்கு அழகான முடி இருக்கிறது'' என்பீர்களா? எவ்வாறு

ஒருவர் முடி, மூக்கு, நிறம், அல்லது வடிவின் மீது காதல் கொள்ள முடியும்? இவையெல்லாம் வளர்பிராயத்திற்கு உரியவை. ஆனால் மனம் ஏதோ ஒரு காரணத்திற்கு அலைகிறது. மனம் ஏன் என்று அறிய விரும்புகிறது. ஆனால் எதையும் கண்டுபிடிக்க முடியவில்லை. தன் சொந்தக் காரணங்களைத் தானாகவே உருவாக்கிக் கொள்கிறது.

இந்தப் பெண் அழகாக இருப்பதினால் நீங்கள் அவளைக் காதலிக்கவில்லை. உண்மை இதற்கு நேர் எதிரானது. நீங்கள் அவளைக் காதலிப்பதால் அவள் உங்களுக்கு அழகாகத் தோன்றுகிறாள். காதல் முதலில் வருகிறது. அடுத்துதான் அழகு. அழகு என்பது வெறும் நிழல் அனுபவம், ஏனென்றால் அதே பெண் மற்றவர்களுக்கு அழகாகத் தோன்றுவதில்லை. சில சமயங்களில் மற்றவர் உங்களைப் பார்த்து சிரிக்கக் கூடும். ''இந்தப் பெண்ணிடம் என்ன இருக்கிறது? எதுவும் இல்லையே, பார்க்கவே சகிக்கவில்லையே என்றும், வேறு ஒருவர் ஒரு பைத்தியம்'' என்றும் கூறுவார்கள்.

எங்கே நேசம் இருக்கிறதோ அங்கே அழகு வரும். நேச உறவுமுறையின் அனுபவமே அழகு. எப்போதெல்லாம் நீங்கள் நேசம் கொள்கிறீர்களோ, அப்போது அழகான ஒன்று நடப்பதை உணர்வீர்கள். மரங்கள் மீது காதல் கொள்ளுங்களேன். அவை அழகாகி விடும். அப்படித்தான் அவை ஒரு ஓவியனுக்கு அழகாகத் தெரிகின்றன. எதன் மீது காதல், நேசம் கொண்டாலும் அவை அழகாகத் தெரியும். அதேபோல் பணம், பணத்தின் மீது பாசமானால் பணம் அழகாகி விடும். மனிதர்கள் அத்தனை அன்போடும் வாஞ்சையோடும் பணத்தையும் ரூபாய் நோட்டுகளையும் தொடுவதை நீங்கள் பார்த்ததில்லையா, கிட்டத்தட்ட வருடிக் கொடுத்து, முத்தமிட்டு என்று....?

நான் கேள்விப்பட்டது...

ஒரு முறை யூதரான கோல்ட் ஸ்டீன் சுறுசுறுப்பான ஒரு நெடுஞ்சாலையில் நடந்துபோய்க் கொண்டிருந்தார். போகும் வழியில் வாகன விபத்து ஏற்பட்ட இடத்தைக் கண்டார். அடிபட்ட பலர் சாலையில் கிடந்தனர்.

யூதர் அடிபட்டுக் கிடந்த ஒருவரிடம், ''இன்சூரன்ஸ் ஆட்கள் வந்தார்களா?'' என்று கேட்டார். ''இல்லை'' என்றார் அவர். யூதர் உடனே ''சரி, அப்படியானால் நானும் உன் அருகில் படுத்துக் கொள்கிறேன்'' என்று சொல்லிப் படுத்துக் கொண்டார்.

இந்த மனிதரால் மக்களின் துயரத்தைப் பார்க்க முடியவில்லை. மக்கள் மடிந்துகொண்டிருப்பதைப் பார்க்க முடியவில்லை... அவரால் பணம் ஒன்றையே பார்க்க முடிந்தது.

அதே கோல்ட் ஸ்டீன் பற்றி மற்றொரு கதை.

கோல்ட் ஸ்டீன் கோர்ட்டில் ஆஜராகியிருந்தார். அவர் தன் மனைவி வேறு ஒருவருடன் படுக்கையில் இருந்தபோது பிடித்துவிட்டார்....

நீதிபதி அவரிடம், ''கோல்ட் ஸ்டீன் சொல்லுங்கள், எழுதப்படாத, சட்டப்படி, நீங்கள் மிஸ்டர் கோஹனைக் கொன்று இருந்தால் கூட நியாயப்படுத்தப்பட்டிருக்கும். நீங்கள் அவரை நோக்கி துப்பாக்கியை வேறு நீட்டி வைத்திருந்தீர்கள். ஆனாலும் சுடவில்லை. ஏன்?''

கோல்ட் ஸ்டீன் சொன்னார், ''நல்லது, நீதிபதி அவர்களே, நான் அவனைநோக்கித் துப்பாக்கியைக் காட்டியபோது, அவன் 'உன் துப்பாக்கிக்கு என்ன விலை வேண்டும்?' என்று கேட்டான். நீதிபதி அவர்களே. நான் உங்களைக் கேட்கிறேன். ஒரு மனிதன் வாணிகம் பேசும்போது, நான் அவனைக் கொல்ல முடியுமா?''

நீங்கள் பணம் மீது காதல் கொண்டிருந்தால் யாருமே பார்க்க முடியாத ஒன்று அதில் இருக்கும். எல்லோரும் உங்களைப் பார்த்து சிரிப்பார்கள், ஆனால் உங்களால் அதைப்பார்க்க முடியும். ஆக, எதன் மீதாவது நேசம் வைத்திடுங்கள். மற்றவர்களுக்கு காணக் கிடைக்காதது உங்களுக்கு கிடைக்கும்.

நேசம் அழகை உருவாக்கும். நேசம் படைப்பாற்றல் மிக்கது. நேசம் மட்டுமே இருப்பதில் படைப்பாற்றல் சக்தி உடையது. ஆக, பணம் போன்ற விஷயங்கள் கூட அர்த்தமுள்ளதாகும். இல்லாத

ஒரு மாட்சிமையை உண்டாக்கும். ஆகவே நீங்கள் ஒரு கிறிஸ்து, அல்லது கபீர் அல்லது ஒரு புத்தரை எதிர்கொள்ளும்போது, நீங்கள் முற்றிலும் மந்தமான, உணர்வற்று உண்மையிலேயே மத்தியத்தரமான அறிவனைத்தையும்தொலைத்தவராய், ஒரு கல் போன்று மூடிய நிலையில், ஒரு ஜன்னல் கூட திறவாமல், உங்களுக்குள் எந்தக் காற்றோ, சூரிய ஒளியோ நுழையாமல் இருக்கும் பட்சத்தில், இப்படிப்பட்டவர்கள் உங்களைக் கடந்து போகும்போது நீங்கள் நேசம் கொள்ளாமல் இருக்க முடியும். இல்லையென்றால் அது நடவாத காரியம். சீடர் தன்மை என்பது நேசத்திலிருந்து எழுவது.

மேலும் குரு என்பவர் ஒரு தனி மனிதர் அல்ல. ஒரு குரு தனிமனிதராக இல்லாதபோதுதான் அவர் குருவாகிறார். ஏதோ ஒரு உயிருருக்குள் நீங்கள் பார்க்கையில், அங்கே ஒரு மனிதரைக் காணாது வெறுமை இருந்ததென்றால், ஒரு இருப்பு, ஒரு சன்னிதானம். ஆனால் உறுதியாக ஒரு மனிதர் இல்லாதபோது, மையமில்லாத ஓர் உணர்வுநிலையைக் காணும்போது, ஒரு ஜோதி, ஒரு கதவு உங்களை அழைக்கையில், அப்போது துணிவுள்ளவர்கள், உண்மையான அறிவுடையோர் அறிவர்.

அடுத்து, நான் உண்மையான அறிவு என்று எதைச் சொல்கிறேன்? ஏன் என்று கேள்வி கேட்காமல், உங்களை வாழ அனுமதிக்கும் உங்களுக்குள் இருக்கும் ஒரு பண்பை உண்மையான அறிவு என்று சொல்கிறேன். ஒரு அறிவுள்ள மனிதன் வாழ்கிறான், மகிழ்கிறான், கொண்டாடுகிறான். ஒரு அறிவிலி ஏன்? ஏன்? என்று கேட்டுக்கொண்டே தன் வாழ்க்கையை வீணடிக்கிறான்.

> *கிரசோவா, நீங்கள் சொல்வது. ''உங்கள் பிரசங்கங்கள் எனக்குப் பிடித்திருக்கின்றன..,...''*

அது பெரிதாக உதவாது. அது உங்களை மேலும் அறிவுடையவராக்கும். அது உங்களுக்குள் எந்த உயிருருவையும் ஊட்டாது. சற்றே அதிக தகவல் அறிவுள்ளவராக்கும். உங்கள் மனதிற்கு இன்னும் கொஞ்சம் உடைமை கூடும், அகங்காரம் சுகப்படும்

அவ்வளவே. என் பிரசங்கங்களை விரும்புவது பெரிதாக உதவப் போவதில்லை. கெடுதி செய்யலாம், ஏனென்றால் இவை ஒன்றும் உங்களுக்கு நான் செய்யும் அறிவுப் புகட்டல் கிடையாது. இந்தப் பிரசங்கங்கள் எல்லாம் நான் உங்களுக்குக் கிடைக்கப் பெறுவதற்கும், நீங்கள் எனக்குக் கிடைக்கப் பெறுவதற்கும் உதவும் கருவிகள்.

நான் உங்களுடன் பேசுவதால், பேசுவதைவிட அதிக ஆழமான ஒரு உறவுமுறை எழக் காரணமாகும். நீங்கள் என்னிடம் மேலும் நெருங்கி வருவதற்கு ஒரு சந்தர்ப்பம். எப்போதும் சலசலத்துக் கொண்டிருக்கும் உங்கள் மனதை ஈடுபடுத்துவதற்கான வழிகள்.

இதனால் மனம் பேச்சுக்களில் ஈடுபட்டு இருக்கையில் இதயம் என்னை நோக்கித் தாவ முடியும். ஆனால் அதுவே போதும் என்று நீங்கள் நினைத்தால், வெளிப்புற ஓடே உங்களுக்கு நிறைவு தருமானால் நீங்கள் உண்மையானதை இழக்கின்றீர்கள்.

> *''உங்கள் பிரசங்கங்கள் எனக்குப் பிடித்திருக்கின்றது. ஒரு மனிதனாக உங்களை எனக்குப் பிடித்திருக்கிறது'' என்று சொல்கிறீர்கள்.*

நான் ஒரு தனி மனிதன் அல்ல. ஒரு மனிதனாக என்னை உங்களுக்குப் பிடித்திருந்தால் என்னைத் தவறவிடுகிறீர்கள். இங்கே இருக்கும் ஆட்சார்பற்றதைத் தவறவிடுகிறீர்கள். நான் வெறும் திறப்பு, தொடக்கம் மட்டும்தான். என்னிடம் நெருங்கி வாருங்கள். நீங்கள் ஆட்சார்பற்று உருவாக உங்களுக்கு உதவி செய்கிறேன். தனி நபர் என்பது ஓர் முகப்பு. அது ஓர் உருமறைப்பு. தனிநபர் ஒரு போலி - தோற்றப்பாடு. அது புனையப்பட்ட ஒன்று. ஆளுமை என்பது நீங்கள் எப்படி செயல்படுவது, எவ்வாறு இருக்க வேண்டும் என்று உங்களுக்குக் கற்றுக்கொடுக்கப்பட்ட ஒன்று. சமுதாயத்தால் உங்களுக்கு வழங்கப்பட்டதுதான் ஆளுமை. அது உங்களின் சாரம் அல்ல. அது வெளிப்பிரிவு, உடைகள் போன்றது. தனிநபர் கடந்து போக

வேண்டும்; அப்படியானால்தான் ஒருவர் யார் என்று அறிந்து கொள்ள முடியும்.

*நீங்கள் சொல்வது, ''ஒரு தனிநபராக உங்களை நான் விரும்புகிறேன். மேலும் ஒரு குருவாக உங்களை விரும்புகிறேன்.''*

நீங்கள் என்ன சொல்கிறீர்கள் என்று உங்களுக்குப் புரிய வில்லை. ''ஒரு குருவாக' - ஏனென்றால் குரு சீடரிடம் தான் இருக்கிறார். சீடர் இல்லாமல் குரு இருக்க முடியாது. யார் சீடர்களாக இருக்கிறார்களோ அவர்களுக்குமட்டுமே நான் குரு. மற்றவர்களுக்கு நான் குரு இல்லை. அவர்களுக்கு நான் ஓர் ஆசிரியர் அவ்வளவே. இந்த இரண்டு வார்த்தைகளையும் நீங்கள் குழப்பிக் கொள்கிறீர்கள். என் பிரசங்கங்கள் உங்களுக்குப் பிடித்திருக்கலாம்; அப்படியானால் நான் ஓர் ஆசிரியர். தனிநபராக என்னை விரும்பலாம்; அப்போது நான் ஆசிரியர். பிரசங்கங்கள் இருந்தாலும், இல்லாவிட்டாலும் என் மீது அபத்தமான நேசம் வரும்போது, ஏனென்றால் என்றாவது ஒருநாள் நான் பேசுவதை நிறுத்திவிடலாம். அதன்பிறகு? அது எப்போது வேண்டுமானாலும் நடக்கலாம். என்மீது நேசமுள்ளவர்கள் மட்டுமே இங்கிருப்பார்கள். வார்த்தைகளுக்காகமட்டும் இருப்பவர்கள் போய்விடுவார்கள். ''இனி என்ன பிரயோஜனம்?'' என்று சொல்வார்கள். அவர்களுக்கு நான் ஆசிரியர், குருவல்ல; நான் மௌனமாகி விட்டால், எந்தக் காரணமும் இன்றி என்மீது நேசம் உள்ளவர்கள் மட்டும்தான் என்னுடன் இருக்கமுடியும். ஏதோ காரணங்களுக்காக இருப்பவர்கள் போய்விடுவார்கள்.

யார் ஒருவரிடமிருந்து நீங்கள் அறிவு பெறுகின்றீர்களோ அவர் ஆசிரியர். அவர் உங்களுக்கு கற்றுக் கொடுப்பதால் ஆசிரியர். குரு உங்கள் அறிவை அழிக்கிறார்; செயல்பாடு நேர் எதிரானது. நீங்கள் கற்றதை மறக்க குரு உதவி செய்கிறார். அவர் உங்களுக்கு அறிவு புகட்டுவதில்லை. கடந்த காலத்தில் நீங்கள் கற்றுக்கொண்டதை எல்லாம் அவர் தகர்க்கிறார். தலையில் சம்மட்டியடித்துக் கொண்டே இருக்கிறார். மெதுவாக, பாறாங்கல்

போன்ற தலை மணலாக மாறி, காணாமல் போய்விடுகிறது. குரு சீடர்களுக்காகவே இருக்கிறார். அது ஒரு சார்பு செயற்பாடு.

நீங்கள் சீடராக இருந்தால் மட்டுமே நான் குருவாவேன். அப்படியானால் மட்டுமே அதன் பொருள் உங்களுக்குத் தெரியும்.

ஆக, கிரசோவா, குரு என்ற பதத்தை நீங்கள் பயன்படுத்தியது குழப்பத்தில். என்னை ஒரு ஆசிரியராக விரும்புவதாகச் சொல்கிறீர்கள். ஆனால், நான் ஆசிரியர் அல்ல. நான் எல்லாக் கற்பித்தலுக்கும் எதிரானவன்! இங்கே நடந்துகொண்டிருக்கும் வேலை எல்லா ஆசிரியர்களுக்கும் எதிரானது. அது குருக்களுக்கு எதிரானது அல்ல. ஆனால் ஆசிரியர்களுக்கு எதிரானது. தனக்கே தெரியாததை ஆசிரியர் உங்களுக்கு கற்றுக் கொடுத்துக் கொண்டேயிருக்கிறார். ஆசிரியரே கடன் வாங்கிய அறிவைச் சுமந்துகொண்டிருக்கிறார். நீங்கள் விழிப்போடு இருந்தால் உங்களால் அதைப் பார்க்கமுடியும்; யார் ஆசிரியர், யார் குரு என்று உங்களால் எளிதாக இனம்காண முடியும்.

ஆசிரியர் தன் நினைவிலிருந்து பேசுகிறார். அதில் ஆழம் கிடையாது. இதயத்திலிருந்து வருவதில்லை. அவருடைய உயிருருவிலிருந்து அது எழுவதில்லை. அவருடைய பயோ - கம்ப்யூட்டரான மனதில் சேர்த்து வைக்கப்பட்டவை. இயந்திரங்களும் இதைச் செய்ய முடியும். கூடிய விரைவில் கம்ப்யூட்டர்கள் இதைச் செய்யப் போகின்றன. அவை இந்த வேலையை அதிக திறம்படச் செய்யும். ஏனென்றால், அவை வேகமானவை, திறன் மிக்கவை. பிழை செய்யாதவை - ஆனால் எந்தக் கம்ப்யூட்டரும் ஒரு குருவாக முடியாது. ஆசிரியர்கள் கம்ப்யூட்டர்களால் மாற்றி வைக்கப்படுவார்கள். ஆனால் புத்தர்கள் அல்ல. ஆசிரியர்கள் தங்களுக்கு கொடுக்கப்பட்டதை திருப்பித் தருகின்றனர். கம்ப்யூட்டருக்கு உள்ளீடுகள் தருவதுபோல் ஆசிரியர்களுக்கும் தருகிறீர்கள். அறிவு, ஆசிரியரின் நினைவில் இடப்படுகிறது. அதன் பிறகு அவர் உங்களுக்கே அதைத் திருப்பித் தருகிறார்.

புத்தர் உங்களுக்குத் தருவது, அவருக்கு வெளியிலிருந்து கிடைத்தது அல்ல. அது அவருள் ஒரு சுகந்தமாக எழுந்து அவருக்குள்ளேயே பூத்த ஒன்று. அதுதான் ஆசிரியருக்கும் குருவிற்கும் உண்டான வேறுபாடு. நீங்கள் கூர் உணர்வோடு, விழிப்போடு, அறிவுத்திறனோடு, இருந்தால் உங்களால் அதைப் புரிந்து கொள்ள முடியும். குரு பேசுவதில் ஒரு ஜூவாலை தெரியும். அவர் சொல்வதில் அவர் முழுமையாக இருப்பார். அவருடைய உறுதிப்படுத்துதல் உணர்ச்சிக்குட்பட்டதாக இருக்கும். தன் சொல்லுக்குப் பின்னால் நிற்பார். அவற்றின் வாய்மை உறுதிப்பாடாக இருப்பார்.

ஆசிரியர் திருப்பிக் கூறும்போது, அவர் தயங்குவார். அவருக்கு அச்சம் இருக்கும். ''இது சரியாக இருக்கலாம். அல்லது தவறாக, இருக்கலாம்'' சந்தேகம் இருக்கும். அவர் கூறும் விஷயங்களை பின்னிருந்து தாங்கமாட்டார். தான் ஒரு சாட்சி என்று அவரால் சொல்ல முடியாது. ஏதாவது நிச்சயமாக தவறாகும். ஏதோ ஒன்று நிச்சயமாக மக்கிப்போய் மரணிக்கும். ஆசிரியர் கட்டாயம் தவறுகள் செய்வார். ஏனென்றால் அவை ஆசிரியருடைய சொந்த தரிசனம் அல்ல. அவருடைய சந்தேகங்கள் உள்ளே கசியத் தொடங்கும். அவர் பாசாங்கு செய்பவர். ஒன்று இல்லாவிட்டால் மற்றொன்று அவரை காட்டிக் கொடுத்துவிடும்.

நீங்கள் பாசாங்கு செய்யலாம், ஆனால் அது தெரியவரும். நீங்கள் யார், எங்கே இருக்கிறீர்கள் என்பதை வெளிப்படுத்தும். ஓரளவிற்குதான் ஆசிரியரால் போலி பேச முடியும். ஒருக்கால், அறிவிலிகளும், அடி முட்டாள்களும் ஏமாறலாம். ஆனால் ஆசிரியர் குருவாக மாட்டார்.

குருவானவர் மெய்மையை சாட்சியாகக் கண்டவர், மற்றவரின் சாட்சியத்தைக் கொண்டு எதையும் குரு எடுத்துக் கூறமாட்டார். அவரே சாட்சியம் கூறுவார். ஆனால் இதை அறிந்து கொள்ள நீங்கள் ஒரு சீடராக வேண்டும்.

சீடர் என்பவர் கற்றுக்கொள்ளும் திறம் உடையவர். நீங்கள் கிறிஸ்துவை எதிர்கொண்டால், அவரிடம் மேலும் மேலும்

நெருங்கி ஏதாவது கற்றுக்கொள்ள, கண்டறிய அவரைப் போல் சிறிதாவது உருவாகிட விருப்பம் கொள்ளமாட்டீர்களா? அவர் பூத்துக் குலுங்கும் மரம். நீங்கள் ஓர் விதையைப் போன்றவர். அந்த மரத்தின் கதை மற்றும் அதன் போராட்டத்தைக் கேட்டறிய விரும்ப மாட்டீர்களா? அந்தப் பருவகாலங்கள் அனைத்தும், கோடை, பனி, மழை காலங்கள், அந்த கடின முயற்சிகள், பிழைத்து இருப்பதே பெரிய அதிசயமாகும். அந்த மரம் பிழைத்துத் தழைத்தோங்குகிறது. விதை மலர்ச்சி அடைந்துள்ளது. விதை மரத்திற்கு மிக நெருங்கி வரவேண்டும். அதுதான் சீடராக இருப்பதின் பொருள்.

ஆனால் நான் எந்தக் காரணத்தையும் வழங்கவில்லை. நான் வெறுமனே பொருளை, விஸ்தாரமாக்குகிறேன். சீடராக வேண்டும் என்று நான் சொல்லவில்லை. யாரும் சீடராக முடியாது. அது தானாகவே நடக்கும். திடீரென அந்த அவா எழும். அது அவ்வளவு ஆற்றல் மிக்கதாக இருக்கும். எந்தளவு ஆற்றல் மிக்கது என்றால் அது உங்கள் முழு மனதையும் விலக்கி வைத்துவிடும். அந்த அவா, வந்திருக்க வேண்டும். அதனால்தான் இந்தக் கேள்வி.

வெளியிலிருந்து கொண்டு எந்தக் கேள்வியும் கேட்காதீர்கள். உங்கள் ஆசைக்கு செவி மடுங்கள், உங்கள் இதயத்தின் ஆசை. உங்கள் ஏக்கம் சொல்வதைக் கேளுங்கள். என்னுடன் ஒரு நெருங்கிய உறவு வேண்டுமென்று நீங்கள் உணர்ந்தால், என்னிடம் மிக நெருக்கமாக வரவேண்டுமென்று உணர்ந்தால், அது போதுமானது. அந்த ஆசை போதுமானது. வேறு எந்தக் காரணமும் தேவையில்லை. நீங்கள் நேசத்தில் வீழ்வீர்கள்.

ஒரு மனிதனால் முடிந்ததெல்லாம் தான் விழாமல் பார்த்துக் கொள்வது, அவ்வளவுதான். யாருமே நேசத்தில் வீழ்வதில்லை. ஆனால் ஒருவரால் தடுக்க முடியும். மனிதனுக்கு ஏற்றுக்கொள்ளும் சக்தியை விட மறுதலிக்கும் சக்தி அதிகம். உங்களால் நேசத்தை உருவாக்கமுடியாது. ஆனால் தடுக்க முடியும். மறுக்கும் திறனை, நினைவில் கொள்ளுங்கள்.

உங்களால் கடவுளை உங்கள் வாழ்க்கையில் கொண்டு வர முடியாது. ஆனால் நீங்கள் உங்கள் கதவுகளை மூடி அவர் வரவைத் தடுக்க முடியும். உங்களால் சூரியனை அறைக்குள் கொண்டுவர முடியாது. ஆனால் நீங்கள் கதவுகளை மூடி, திரைச்சீலைகளை இழுத்து, சூரியன் உள்ளே வராமல் தடுக்க முடியும். உங்களால் காற்றை உருவாக்க முடியாது. பாறைக்குப் பின்னால் ஒதுங்கி காற்று உங்களை அடையாமல் பாதுகாத்துக் கொள்ள முடியும்.

மனிதனின் மறுப்பதற்கான திறன் வரம்பில்லாதது. நீங்கள் மறுக்கவில்லை என்றால், எல்லாம் முடிந்தது. ஒரு சீடராக வேண்டும் என்ற ஆசை உங்களுக்குள் எழுகிறதென்றால், அதை மறுக்காதீர்கள். காத்திருங்கள், அதை அனுமதியுங்கள். திடீரென ஏதோ ஒன்று உங்கள் உயிருருக்குள் ஊடுருவியதை உணர்வீர்கள். அதன்பிறகு நீங்கள் பழைய மாதிரி இருக்கமாட்டீர்கள்.

## இரண்டாவது கேள்வி:

> *உபநிஷத்துக்களில் வரும் இந்த வாக்கியத்தைப் பற்றி விளக்க முடியுமா? ''உங்களுக்குள் இருக்கும் தனிமைதான் அவர்... அந்தப் புனிதமான சுடரின் முன் நீங்கள் தன்னந்தனியாக நிற்கின்றீர்கள். இப்போதிலிருந்து உங்களுக்கு தரப்படும் தீச்சுடர் தனியானதாக இருக்கும். நீங்கள் அதனுடன் தனியாக இருப்பீர்கள். இந்தத் தனித்தன்மையை ஏற்றுக் கொள்ள நீங்கள் தயாரா?''*

நான்தான் உபநிடதம். நீங்கள் ஏதோ ஒரு உளுத்துப்போன உபநிடதம் பற்றி கேட்கிறீர்கள். நானே சுடர்! நான் உங்களை அழைக்கின்றேன்! நீங்களோ ஒரு மூவாயிரம், நான்காயிரம் ஆண்டுகளான மறைநூலைப் பற்றி பேசுகிறீர்கள். அந்த நூலின் சுடர் அணைந்துபோய்விட்டது. அதில் 'தீ' எதுவும் இல்லை. 'தீ' என்ற வார்த்தை தீயைக் குறிக்கவில்லை என்பதைப் புரிந்து கொள்ளுங்கள். அந்த வார்த்தையைக் கண்டு ஏமாந்துபோக வேண்டாம்.

நான் உங்களுக்குச் சொல்கிறேன். உபநிடதத்தை மறந்து விடுங்கள். நான் சொல்வது, அவர்தான் உங்களுக்குள் இருக்கும் தனிமை. கடவுள்தான் உங்களுக்குள் இருக்கும் தனிமை. நீங்கள் தனிமையில் இருக்கும்போது, நீங்கள் கடவுளாகிறீர்கள். ஆனால் தனிமை என்பது, துணையற்ற என்ற அர்த்தத்தில் பார்க்கக் கூடாது. நீங்கள் துணையில்லாமல் தனித்துவிடப்படும்போது, நீங்கள் துயர் மிகுந்து இருப்பீர்கள். கடவுளாக இல்லை. துணையற்று தனித்து இருக்கையில் மற்றது இல்லாமல் ஏங்குகிறீர்கள். மற்றதை நீங்கள் இன்னும் கடந்து வரவில்லை. நீங்கள் தனித்து விடப்பட்டால் அழுதுகொண்டு இருப்பீர்கள். மற்றதோடு சேர்ந்து இருக்க விரும்புவீர்கள்.

அதுதான் நடக்கிறது. உலக வாழ்க்கையிலிருந்து தப்பித்து மடாலயங்களுக்கு போகும் மனிதர்கள் 'தனித்து' இருப்பதில்லை. தனிப்பட்டு, துணையற்று போகின்றனர். இது எதிர்மறையானது, வெறுமை நிறைந்தது. இதில் நேர்மறை ஏதும் இல்லை. வெறும் தப்பித்தல்தான். மனம் தொடர்ந்து மற்றதைப் பற்றியே நினைத்துக்கொண்டிருக்கும். ஏனென்றால் மற்றது வாழ்ந்து பார்க்கப்படவில்லை. பழுக்காமலேயே தப்பித்துவிட்டீர்கள். பழம் கனிந்தது என்றால் தானாகவே விழும்.

வாழ்க்கையில் கனிந்திடுங்கள். ஏனென்றால், வாழ்க்கையும் அதன் சூடும்தான் உங்களை கனிய வைக்க முடியும். கனிந்து இருங்கள்! மற்றதைக் கடந்து போகவும்! நீங்கள் மற்றதின் ஊடே பலமுறை கடந்துபோக வேண்டியிருக்கும். நீங்கள் மற்றதை பற்பல வகைகளில் அனுபவிக்கவேண்டியிருக்கும் - ஒரு நண்பராக, பகைவனாக, காதலராக, வெறுப்பவராக, சகோதரனாக, சகோதரியாக, மனைவியாக, தந்தையாக தாயாக, மகனாக, மகளாக, நீங்கள் பற்பல வழிகளில் மற்றதை அனுபவிக்க வேண்டியிருக்கும். எல்லாப் பரிமாணங்களிலும் நீங்கள் மற்றதை அனுபவித்தபிறகு, நீங்கள் மற்றதோடு இருக்கும் அதேவேளையில் நீங்கள் தனிமையோடும் இருக்க முடியும் என்ற கருத்தைப் புரிந்து கொள்வீர்கள். உங்கள் தனிமை அழிக்க முடியாது. உங்கள் அன்புக்குரியவரிடம் புணர்ச்சியில்

ஈடுபடும்போதுகூட நீங்கள் தனிமையில் நிலைத்திருப்பீர்கள். உங்கள் துணைவரும் அவருடைய தனிமையில் இருப்பார்.

இரண்டு தனிமைகள் சந்திக்கின்றன. ஆனால் தனித்தன்மைகள் மாறாமல் இருக்கின்றன, தீண்டப்படாமல் இருக்கின்றன. அதுதான் அதன் மகத்துவம், அழகு, மரியாதையாகும். காரணம் அதுதான் சுதந்திரம். இல்லையென்றால் உங்கள் சுதந்திரம் போய்விடும்.

உங்கள் அகவெளி யாராலும் ஆக்கிரமிக்கப்படலாகாது. உங்களைச் சிறைக்குள் அடைக்கலாம். ஆனால் உங்கள் அடி ஆழ தனிமை சுதந்திரமாக இருக்கிறது. யாரோ ஒருவர் உங்கள் நெஞ்சில் வாளைப் பாய்ச்சி உங்களைக் கொல்லலாம். ஆனால் உங்கள் தனிமை அந்த வாளினால் தொடப்படாமல் இருக்கிறது. நீங்கள் நெருப்பில் தூக்கி வீசப்படலாம், எல்லாம் எரிந்து போகும். ஆனால் அந்தத் தனிமை எரியாது, அந்தத் தனிமைதான் கடவுள்.

கடவுள் வெளியே இல்லை. உங்கள் அடி ஆழ மையம்தான் கடவுள். உங்களின் இன்றியமையாத உயிருருவில் இருக்கும் நீங்களே கடவுளாவீர். உங்களின் உள்ளத்தில் இருக்கும் தனிமைதான் கடவுள். கடவுள் உங்களுக்குள் இருக்கிறார். வெளியே அல்ல, உண்மையில் உங்களுக்குள்ளே என்று சொல்வதே தவறு. அவர்தான் உங்களின் அகம். அந்த அகம்தான் கடவுள். இந்த அகத்தை நீங்கள் ஒரு முறை அறிந்துகொண்டீர்களானால், அந்த அகமானது, புறத்தையும் உள்ளடக்கி வைத்திருக்கிறது என்பதை அறிந்து ஆச்சரியப்படுவீர்கள். உங்களின் அடியாழத் தனிமையைத் தெரிந்துகொண்டீர்களானால் தனிமை என்பதில் எல்லாமே அடங்கியுள்ளது என்பதைப் புரிந்து கொள்வீர்கள், எல்லாமே ஒன்றுதான் என்பதை அறிந்து ஆச்சரியப்படுவீர்கள். அந்த ஒருமையிடம் நீங்கள் வந்தடைந்து விட்டீர்கள்.

> *'உங்களுக்குள் இருக்கும் தனிமைதான் அவர். அந்தப் புனிதமான சுடரின்முன் நீங்கள் தன்னந்தனியாக நிற்கின்றீர்கள்.*

புனிதமான சுடர் என்பது குரு. ஏனென்றால் குரு மட்டுமே தீச்சுடராகி அதனால் உங்களுக்குள் இருக்கும் பயனற்றவை எல்லாம் எரிந்து போகும். குரு எனும் தீயினுள் சென்று கடந்து வந்தால்தான் நீங்கள் சுத்தமான தங்கமாக முடியும். மாசுகள் எல்லாம் எரிக்கப்படும். வழக்கமாக உள்ள தீயிற்கும் இதற்கும் எந்தத் தொடர்பும் கிடையாது. சாதாரணத் தீயிலிருந்து உங்களைக் காப்பாற்றிக் கொள்ள நீங்கள் பல வழிகளைக் கண்டுபிடிக்க முடியும். உங்களைக் காப்பாற்றிக் கொள்ள முடியாதது குருவிடமிருந்துதான். 'உபநிஷத்' என்ற வார்த்தை குறிப்பிடத்தக்கது. அது குரு-சிஷ்ய உறவு முறையிலிருந்து வருகிறது. 'உபநிஷத்' என்றால் குருவின் அருகில் அமர்ந்திருப்பது என்று அர்த்தமாகும்- வெறுமனே உட்கார்ந்திருத்தல், வேறு எதுவும் தேவையில்லை. காரணம் நீங்கள் வெறுமனே உட்கார்ந்திருக்கும்போது, நீங்கள் நெருங்கி நெருங்கி வருகின்றீர்கள். உங்கள் செயல்பாடுகள் காணாமல் போகும்போது, நீங்கள் மிக நெருக்கத்தில் வந்துவிட்டீர்கள். உங்கள் செயல்களோடு சேர்ந்து உங்கள் அகங்காரமும் காணாமல் போய்விடுகிறது. குரு உங்களை சுத்தமாக்குகிறார். தீச்சுடர் என்பது வெறுமனே குருவின் வெளிப்புற அடையாளம்தான். அதனால்தான் காலங்காலமாய் காவி நிறம் சன்னியாசத்திற்குத் தேர்ந்து எடுக்கப்பட்டது. அது தீயின் நிறம். நீங்கள் சன்னியாசி ஆவதின் மூலம் நீங்கள் தீக்குள் நுழைகிறீர்கள், குருவின் தீக்குள் நுழைகிறீர்கள்.

> *''அந்தப் புனிதமான சுடரின் முன் நீங்கள் தன்னந்தனியாக நிற்கின்றீர்கள். இப்போதிலிருந்து உங்களுக்குத் தரப்படும் தீச்சுடர் தனியானதாக இருக்கும். நீங்கள் அதனுடன் தனியாக இருப்பீர்கள்.''*

யாரோ ஒருவர் தவறாக மொழிபெயர்த்திருக்க வேண்டும். தனியாக என்று இருக்க முடியாது. அது தனிமை என்றிருக்க வேண்டும். ஆனால் மக்கள் வெறும் எழுத்துசார்பாக மொழி பெயர்க்கின்றனர். 'ஆசிரியர்' என்று குறிப்பிடும்போது இந்த அர்த்தத்தில்தான் சொல்கிறேன். இந்த ஏட்டுரைப் பகுதியை

மொழிபெயர்த்தவர் யாராக இருந்தாலும் அவருக்கு உபநிடதங்கள் பற்றி ஏதும் தெரியாது. அவர் மொழி அறிந்திருக்கிறார். அவருக்கு சமஸ்கிருதம் தெரியும், ஆங்கிலம் தெரியும், ஒருக்கால் அவர் ஒரு பண்டிதராய் இருக்கலாம். மொழிபெயர்ப்பு எழுத்து சார்ந்ததாக இருக்கிறதே தவிர, ஆன்மிகமாக இல்லை. இது போன்ற எழுத்து சார்புள்ள மொழியாக்கங்கள் எல்லாம் அதிகத் தீங்கு விளைவித்திருக்கின்றன. பண்டைய ஆய்வுகளை எல்லாம் மக்கள் மொழிபெயர்த்துக் கொண்டே இருக்கின்றனர். அவை உண்மையில் ஒரு குருவால் மட்டுமே முடியும். ஏனென்றால் அந்த வார்த்தைகள் சாதாரண பொருள்படும் வகையில் பயன்படுத்தப்படவில்லை. அந்த வார்த்தைகளை அகராதியில் நீங்கள் காணமுடியாது. அவை உள் அனுபவத்தில்தான் கண்டுபிடிக்க முடியும். நிச்சயமாக வெளிப்புற வார்த்தைகள் பயன்படுத்தப்பட வேண்டும். ஆனால் குரு அவற்றிற்கு புதிய அர்த்தங்கள் கொடுத்துக் கொண்டேயிருப்பார்.

பிரதீபாவின் ஆலோசனை எனக்குப் பிடித்திருக்கிறது. அவருக்கு என் வார்த்தைகளைக் கொண்டு ஒரு அகராதி உருவாக்க விருப்பம். நான் என் சொந்த மொழியைப் பேசு கிறேன். நான் இலக்கணம் பற்றிக் கவலைப்படுவதில்லை. வடிவு பற்றி எனக்கு அக்கறையில்லை. என் அக்கறை எல்லாம், நான் சொல்வதெல்லாம், நான் அறிந்து கொண்ட அனுபவத்திற்கு எவ்வளவு முடியுமோ அந்தளவு ஒத்து இருக்க வேண்டும். ஒரு முறை நீங்கள் குருவின் தீயினுள் நுழைந்துவிட்டால், இருமை கைவிடப்படுகிறது. குருவும் சீடனும் ஒன்றாகிவிடுவர். ஒரு புதிய வகையான தனிமை எழுகிறது.

குறிப்பிடத்தக்க ஒரு திபெத்திய சொல் வழக்கு இருக்கிறது. ''குருவுடன் இருப்பது என்பது தனித்து இருப்பது'' விசித்திர மானது. மேலும் அது குறிப்பது, நீங்கள் யாருடனாவது இருக்கும்போது, அதுவும் முற்றிலும் தனித்து இருக்க முடியுமானால்தான். நீங்கள் ஒரு குருவுடன் இருப்பதாக உறுதியாகச் சொல்லமுடியும். அந்த அளவிற்கு உள்ளார்ந்த

பொருள் உடையது. உங்கள் குருவுடன் இருக்கும்போது, முற்றிலும் தனித்து, நிர்வாணமாக இருக்கமுடியுமானால், நீங்கள் குருவுடன் இருக்கிறீர்கள். அப்படியானால்தான் நீங்கள் நம்பிக்கை கொண்டுள்ளீர்கள். குருவிடமிருந்து எதையாவது மறைத்துக் கொண்டேயிருந்தால், நீங்கள் விலகி இருப்பீர்கள்.

'சரணாகதி' என்பதன் அர்த்தம் இதுதான். சரணாகதி என்றால் இந்த கணத்திலிருந்து நீங்கள் மறைக்க மாட்டீர்கள். உங்களுக்கென எந்த ரகசியமும் இருக்காது. சரணாகதி என்றால் உங்கள் ரகசியங்களைத் துறப்பது. தனிமறைவுகளை ஒப்புவிப்பது. சரணாகதி எனில் நீங்கள் எந்த விதத்திலும் உங்களைத் தற்காத்துக் கொள்ளமாட்டீர்கள்.

ஏன் ரகசியங்களை வைத்திருக்கிறீர்கள்? ஏனென்றால், உங்களுக்குப் பயம். மற்றவர்கள் அந்த ரகசியங்களை அறிந்தால் உங்களை அவர்கள் விருப்பத்திற்கு ஏற்ப கையாளலாம். உங்களை மிரட்டலாம். அல்லது ரகசியங்கள் காரணமாக உங்களை அவர்கள் தங்கள் சுயநலத்திற்காகப் பயன்படுத்தக்கூடும் என்ற பயம் உங்களுக்கு. உங்களுக்கு அச்சம், பாதிக்கப்படுவோம் என்ற எண்ணம். நம்பிக்கை இருந்தால்தான் நீங்கள் சரணடைய முடியும். எந்தத் தீங்கும் ஏற்படாது என்று உங்களுக்குத் தெரிந்து இருக்க வேண்டும்.

குருவுடன் இருப்பது என்பது அப்படிப்பட்ட ஓர் இடைவெளியில் இருப்பதாகும். அங்கு நீங்கள் குளித்து இருப்பீர்கள். குருவிற்கு அருகே நீங்கள் மேலும் மேலும் நெருங்கி வரும்போது, குருவும் சீடரும் ஒன்றாகி கரைந்துவிடுவர். தனித்து இருப்பதை உணர முடியும். அதுவே பரிசுத்தம், அதுவே மௌனம், சுதந்திரம்.

*இந்தத் தனிமையை ஏற்றுக்கொள்ளத் தயாரா?*

*நீங்கள் ஒரு சீடராகத் தயாரா? தீச் சுடரின் ஆலயத்திற்குள் நுழையத் தயாரா?*

*கேள்வி கேட்பவர் டாடி சி.டாடி.*

நீங்கள் இங்கே தீச்சுடரை எதிர்நோக்கியிருக்கிறீர்கள். ஆனால் பழைய மறைநூல்கள் பற்றிப் பேசிக் கொண்டிருக்கிறீர்கள். நான் உங்களைக் கேட்கிறேன். தனிமையை ஏற்றுக்கொள்ள நீங்கள் தயாரா? தீயை ஏற்றுக்கொள்ள நீங்கள் தயாரா? தீ உங்களுக்குக் கிடைக்கும் நிலையில் உள்ளது. ஆனால் எவ்வளவு காலம் கிடைக்கப்பெறும் என்று யாரும் சொல்வதற்கில்லை. நாளை அது இல்லாமல் போகலாம். இப்போது அல்லது என்றும் இல்லை. புலமைசார்ந்த கேள்விகள் கேட்டு உங்கள் நேரத்தை வீணடித்துக் கொள்ளாதீர்கள். உங்கள் இருப்பை, ஜீவனை எனக்காகத் திறந்திடுங்கள். நான் விமர்சகன் அல்ல. நான் கண்டதை மட்டுமே சொல்கிறேன். நான் எந்த உபநிடதம், குரான், அல்லது பைபிளையும் ஆதரிக்கவில்லை. உபநிடதங்கள் தோன்றிய அதே மூலத்திலிருந்து, எங்கிருந்து குரான், பைபிள் வந்ததோ அதே மூலத்திலிருந்து நான் பேசுகிறேன். நான் அந்தத் தோற்றுவாயில் இருக்கிறேன்.

இதுபோன்ற கேள்விகளை என்னிடம் கேட்பது முட்டாள்தனம். நீங்கள் இன்னும் புத்திசாலித்தனமாக இருக்க வேண்டும். மறைநூல்கள் சார்ந்த கேள்விகள் கேட்பதினால் பெரிய கேள்விகள் கேட்பதாக மக்கள் நினைக்கின்றனர். வாழ்வியல் சார்ந்து இருங்கள். உங்களுக்கு பிரச்சினையான கேள்விகள் கேளுங்கள். உங்கள் வளர்ச்சிக்கு தடையாய் உள்ள கேள்விகளைக் கேளுங்கள். உங்களைப் பற்றி கேளுங்கள். இந்த ஏட்டுரைப் பகுதி எந்த வகையில் உங்களுக்கு உதவப்போகிறது? காலங்காலமாய் இது நடந்துகொண்டிருக்கிறது. நான் உங்களுக்குச் சொல்கிறேன். டாடி சி. டாடி, உபநிடதங்கள் எழுதப்பட்டபோது நீங்கள் இருந்திருக்கலாம். அப்போது நீங்கள் ஆசான்களையும், மறைஞானிகளையும், குருக்களையும் வேதங்கள் பற்றி ஏதாவது கேள்வி கேட்டிருக்கலாம். வேதங்கள் எழுதப்பட்டபோது நீங்கள் இருந்திருக்கலாம். அப்போது அதற்கும் முந்தைய நூல்களைப் பற்றி நீங்கள் கேள்வி எழுப்பி இருக்கலாம். இப்போது உபநிடதங்கள் பற்றிக் கேட்கிறீர்கள். நான் போன பிறகு என்னைப் பற்றி கேட்பீர்கள்.

என்னுடன் தொடர்புபடுத்திக் கொள்வது நல்லது.

## மூன்றாவது கேள்வி:

*ஒருக்கால் ஒரே நிமிடத்திற்கு காலைப் பிரசங்கத்தின்போது நான் உங்கள் கண்ணுக்குப் பின்னிருந்து பார்த்தால் நாங்கள் எவ்வாறு உங்களுக்குத் தோன்றுவோம்?*

நீங்கள் எல்லோரும் புத்தர் அல்லாதது போன்று, பாசாங்கு செய்யும் புத்தர்களாக தோன்றுவீர்கள். ஒரு சிலர் மட்டும் விதிவிலக்கு. தாங்கள் புத்தர்கள் அல்ல என்று அறியாததால் ஒரு சிலர் மட்டும் புத்தர்களாக பாசாங்கு செய்கின்றனர்.

என் கண்களைக் கொண்டு நீங்கள் பார்த்தீர்களானால் ஆச்சரியப்படுவீர்கள். இரண்டு வகையான மனிதர்கள் இங்கே இருக்கின்றனர். முதல் வகை பெரும்பான்மையினர். அவர்கள் எல்லோரும் நாங்கள் புத்தர்கள் அல்லாதது போல பாசாங்கு செய்து கொண்டிருக்கின்றனர். அந்தச் சிறுபான்மையினர் தாங்கள் புத்தர்களைப் போலப் பாசாங்கு செய்து கொண்டிருக்கின்றனர். இரண்டுமே தவறு! ஏனென்றால் நீங்கள் எல்லோருமே புத்தர்கள்தாம். எப்படிப் பாசாங்கு செய்தாலும் அது எந்த வித்தியாசத்தையும் ஏற்படுத்துவது இல்லை. இரண்டு மனப்பான்மைகளும் அறியாமையிலிருந்து வருபவைதான்.

ஜென் குருவிடம் ஒரு சீடன் வந்தான். ''நான் உணர்ந்து கொண்டு விட்டேன். நான் ஒரு புத்தர் என்று அறிந்துகொண்டேன்'' என்று சொன்னான்.

குருவிற்கு மகா கோபம். ''போ வெளியே'' என்றார்.

குரு தன்னைப் பாராட்டுவார், ஏற்றுக்கொள்வார் என்று பெரும் நம்பிக்கையுடன் சீடன் வந்திருந்தான். குருவோ கோபப்பட்டு விட்டார். குரு முன்னரும் கோபம் கொண்டு இருக்கிறார், ஆனால் இந்தளவிற்கு இல்லை. சீடன் கேட்டான், ''என்ன விஷயம்? ஏன் இவ்வளவு கோபப்படுகிறீர்கள்? 'நீங்கள் எப்போதும் புத்தர்கள். இப்போதே நீங்கள் புத்தராகலாம்'

என்று எப்போதும் சொல்லிக் கொண்டிருப்பீர்களே, நான் புத்தன் ஆகிவிட்டேன் என்று உங்களிடம் சொல்ல வந்தால் மகிழ்ச்சியடைவதற்குப் பதிலாக கோபப்படுகிறீர்களே, ஏன்?''

குரு கழியைக் கையில் எடுத்தார். ''உனக்குள் இருக்கும் புத்தரை அடித்து வெளியேற்றுவேன். முதலில் அந்த புத்தரை வெளியே வீசு!'' என்றார். நீ புத்தர் அல்ல என்று நினைப்பதும் தவறு. புத்தர் ஆகிவிட்டேன் என்று நினைத்துக் கொண்டிருப்பதும் தவறு.

ஆக, நீங்கள் ஒரு புத்தர், ஆகையால் நீங்கள் ஒரு புத்தர் என்று எப்போதும் நினைத்துக் கொண்டு இருக்க வேண்டாம். அந்த சிந்தனையே மறுபடியும் நீங்கள் தவற விட்டுவிட்டீர்கள் என்பதைக் காட்டுகிறது. ஒருவருக்குப் புரிந்துவிட்டால், அவர் நெகிழ்வாய், சாதாரணமாகி விடுவார். அதன் பிறகு புத்தர்களைப் பற்றி பேசிப் பயனனில்லை.

> *நீங்கள் கேட்பது, ''ஒருக்கால் ஒரே நிமிடத்திற்கு காலை பிரசங்கத்தின்போது உங்கள் கண்ணுக்குப் பின்னிருந்து பார்த்தால் நாங்கள் எவ்வாறு உங்களுக்குத் தோன்றுவோம்?''*

*நீங்கள் பிரமாதமாய் தோன்றுவீர்கள்!*

ஆயிரத்தோரு ஆட்டங்கள் ஆடிக்கொண்டு, மறைந்து கொண்டு, எல்லாம் வீண். ஏனென்றால் நீங்கள் என்ன செய்தாலும் அது உங்களுக்கு உதவப்போவதில்லை. நீங்கள் புத்தர்கள்தான், நீங்கள் புத்தர்களாவே இருப்பீர்கள்.

## நான்காவது கேள்வி:

> *ஒருவர் எதைத் தேர்ந்தெடுக்க வேண்டும், சுயநலமா அல்லது பொதுநலப் பண்பா?*

ஒருவர் தேர்வே செய்யக்கூடாது. தேர்வு செய்தால் தவறாகப் போகும். விருப்பப்பட்டால் தவறாகிவிடும். தேர்வின்மை, தேர்வற்ற நிலை...

சுயநலமாக இருப்பதா அல்லது பொதுநலப் பண்புகளோடு இருப்பதா? என்று நீங்கள் கேட்கிறீர்கள்.

இவையெல்லாம் மொழியால் மட்டுமே வேறுபடுகின்றன. அதனால்தான் பெரிய கவலை ஏற்படுகிறது. ஆனால் வாழ்க்கையில் அவை தனியானவை அல்ல. பொதுநலப்பண்பு கொண்டு இருப்பதுதான் சுயநலத்தோடு இருப்பதற்கான ஒரே வழி. சுயநலம் கொண்டு இருப்பதுதான் பொதுநலப் பண்போடு இருப்பதற்கான வழி. இது முரண்பாடானது போல் தோன்றலாம். ஆனால் இதைப்பற்றித் தியானம் செய்யுங்கள். நீங்கள் ஆச்சரியப்படுவீர்கள். வாழ்க்கையின் எல்லா முரண்பாடுகளும், புரியாத புதிர்களும் அவ்வாறே!

உங்களுக்கு மகிழ்ச்சியாக இருக்கவேண்டும். உண்மை யிலேயே மகிழ்ச்சியாக இருக்கவேண்டும். அப்படியானால் நீங்கள் ஒரு மகிழ்ச்சியற்ற உலகில் மகிழ்ச்சியாக இருக்க முடியுமா? மகிழ்ச்சியில்லாத ஒரு குடும்பத்தில் நீங்கள் மகிழ்ச்சியோடு இருக்க முடியுமா? மகிழ்ச்சியற்ற மனிதர்களுக்கு இடையே நீங்கள்மட்டும் மகிழ்ந்திருக்கமுடியுமா? அது அர்த்தமில்லை, இது எப்படியென்றால் எல்லோரும் நோய்வாய்ப்பட்டு ஆரோக்கியமில்லாமல் இருக்கும்போது நீங்கள் மட்டும் ஆரோக்கியமாக இருக்க முடியாததுபோல எவ்வளவு காலம் உங்களால் உங்களைத் தற்காத்துக் கொள்ள முடியும்? உங்கள் ஆரோக்கியம் மற்றவரின் ஆரோக்கியத்தைப் பொறுத்தது. எல்லோரும் ஆரோக்கியமாக இருந்தால் நீங்களும் ஆரோக்கியமாக இருக்கக் கூடிய சாத்தியக் கூறுகள் அதிகமாகிறது. எல்லோரும் நோய்வாய்ப்பட்டு இருந்தால் கூடிய விரைவில் நீங்களும் நோயுறுவீர்கள். உங்கள் வியாதியிலிருந்து அதிகமாக தற்காத்துக் கொள்ள முனைந்தீர்கள் என்றால், அந்தத் தற்காப்பே நோயாகிவிடும். எப்போதும் தற்காப்பு பற்றியே கவலைப்பட்டுக் கொண்டிருப்பீர்கள். அது மன அழுத்தத்தை உண்டு பண்ணும். அது உங்களை வாழவே விடாது.

நாம் பிரிந்து இருப்பதில்லை. நாம் ஒன்றாயிருக்கிறோம். நாம் அந்தளவிற்கு ஒன்றாயிருப்பதினால் நாம் ஒருவருக்கொருவர்

அங்கத்தினராய் உள்ளோம். நான் உங்களை ஊடுருவுகிறேன். நீங்கள் என்னை ஊடுருவுகிறீர்கள். ஆகவே இந்த சுயநலம் மற்றும் பொதுநலம் ஆகிய பகுப்புகள் போலியானவை. ஒரு மனிதர் உண்மையிலேயே சுயநலவாதியாக இருந்தால், அவரால் மகிழ்ச்சியாக இருக்க முடியும் என்று நினைக்கிறீர்களா? அவர் தன் மனைவியைப் பற்றி நினைக்கமாட்டார். தன் குழந்தைகள் பற்றி, அண்டை வீட்டார் பற்றி நினைக்கமாட்டார். வேறு எவரைப்பற்றியும் நினைக்கமாட்டார். அவர் மகிழ்ச்சியாக இருப்பார் என்று நினைக்கிறீர்களா? அவர் ஒரு புற்றுநோயின் உயிரணு போல இருப்பார்.

மற்ற உயிரணுக்களுக்கும் புற்றுநோய் உயிரணுக்களுக்கும் உள்ள வித்தியாசம் இதுதான். புற்றுநோய் உயிரணு முற்றிலும் சுயநலமானது. அது தன்னைப்பற்றி மட்டுமே நினைக்கும். ஆகவே ஒரு புற்றுநோய் உயிரணு உங்கள் உடம்பில் நுழைந்தது என்றால், அதற்கு உங்கள் உடல் அடைக்கலம் கொடுத்தது என்றால், அது உங்களைத் தின்னத் தொடங்கும். அது தின்று கொண்டேயிருக்கும். எதையும் திருப்பிக் கொடுக்காது. அது உடலின் மற்ற உயிரணுக்கள் பற்றி கவலைப்படாது. கூடிய விரைவில் இடம் கொடுத்தவரையே தின்றுவிடும். விருந்தினராக புற்றுநோய் உயிரணுவும் இடம் கொடுத்தவரோடு சேர்ந்து இறந்து போய்விடும். உடல் மரணம் அடைந்தவுடன் விருந்தினரும் இறந்து போக வேண்டியதுதான். ஏனென்றால் இடம் கொடுத்தது இல்லாமல் தனியாக அதனால் உயிர் வாழ முடியாது. ஆகவே, சுயநலமாக இருந்ததினால் அது தற்கொலை செய்து கொண்டது. புற்றுநோய் உயிர் அணு ஒரு முட்டாள். அதற்குப் புத்தியே கிடையாது. மற்ற உயிரணுக்கள் அதிகளவு புத்தியுடையவை: அவை தின்கின்றன, கொடுக்கின்றன. ஒரு சமச்சீர் பராமரிக்கப்படுகிறது. அகங்காரம் கொண்டவர் புற்றுநோய் உயிரணு போன்றவர்.

மேலும் மற்றவரைப் பற்றி என்ன கூறுவது? நேர் எதிர்புறத்தில் உள்ளவர் - பொதுச் சேவகர். தன்னையே தியாகியாக்கி கொள்ள தயாராய் உள்ளவர். தன்னையே தியாகம் செய்ய எப்போதும் ஒரு

சந்தர்ப்பத்தைத் தேடுபவர். அவரும் ஆரோக்கியமாக இல்லை. ஏனென்றால், அவர் எப்போதும் தன்னை பலி கொடுத்துக் கொண்டேயிருப்பார். மேலும் மேலும் தியாகம் செய்யும்போது, அவர் அடி மனதில் அதிக துயர் மிக்கவராகவும், மகிழ்ச்சியற்றும் இருப்பார். அவர் தன்னைச் சுற்றி துன்பத்தையே அதிர்வுறச் செய்கிறார்.

நீங்கள் கவனித்திருப்பீர்கள். உங்கள் தாயார் அதிக தியாக குணம் படைத்தவரென்றால் — அம்மாக்கள் அப்படித்தான் இருப்பார்கள் — உண்மையைச் சொல்வதானால் எல்லா தாயார்களும் யூதர்கள்தாம். யூதரல்லாத ஒரு தாயை நான் இதுவரை எதிர்கொண்டதில்லை. அவர்கள் அளவிற்கதிகமாய் தியாகம் செய்கின்றனர்! பெரிய தியாகிகள்தாம். ஆனால் வஞ்சம் தீர்த்துக் கொள்வார்கள். அது இயற்கைதான். யாரேனும் அதிகமாய் தியாகம் செய்தால், அந்த இடத்திலிருந்து தப்பித்துப் போய்விடுங்கள். ஏனென்றால், கூடிய விரைவில் உங்களை ஓர் சிறைபோல சூழ்ந்து கொள்வார். பிறகு கோரிக்கை வைப்பார். ''நான் இவ்வளவு தியாகம் செய்திருக்கிறேன்.'' உங்கள் வாழ்க்கையின் ஒவ்வொரு கணமும் நீங்கள் குற்ற உணர்வு கொண்டு இருக்குமாறு செய்திடுவார்.

லட்சக்கணக்கான மக்கள் தங்கள் தாயார்கள் காரணமாக குற்ற உணர்வு கொள்கிறார்கள். ஏனென்றால், அவர்கள் அந்தளவு தியாகம் செய்துள்ளார்கள். பின்நாட்களில் ஒவ்வொரு மனிதனும் ''நான் ஏதும் செய்யவில்லை; நான் என் அம்மாவிற்கு எதையும் திருப்பிக் கொடுத்ததில்லை. அவர் எவ்வளவு தியாகம் செய்திருக்கிறார்'' என்பார்.

இந்தத் தியாகத்தினால் எந்தக் குழந்தையாலும் தன் தாயை மன்னிக்க முடிவதில்லை. மறப்பதோ, மன்னிப்பதோ இரண்டும் சாத்தியமில்லை. உண்மையில் இதனால்தான் நீங்கள் பெற்றோருக்கு இந்தளவிற்கு எதிராக உள்ளீர்கள். ஏன் பெற்றோர் உங்களுக்குள் இவ்வளவு இறுக்கத்தை உண்டு பண்ணுகிறார்கள்? ஏன் பெற்றோருடன் இருப்பது ஓர் அழகான அனுபவமாக இருப்பதில்லை? இங்கே தினமும் நடக்கிறது.

எப்போதெல்லாம் ஒரு தாயார் வருகின்றாரோ சன்யாசி அச்சம் கொள்கிறார். தந்தை வந்தாலும் பயம் வருகிறது. என்ன பயம்? பயம் என்னவென்றால் தந்தை உங்களைக் குற்ற உணர்வு கொள்ள வைக்கிறார். ''நான் உனக்கு இவ்வளவு செய்திருக்கிறேன். நீ என்ன செய்தாய்? எனக்கு வயசாகிக் கொண்டு வருகிறது. நீயானால் இங்கே குண்டலினி யோகம் செய்துகொண்டிருக்கிறாய், மேலும் அனுபவித்துக் கொண்டிருக்கிறாய்? என்னைப் பற்றி, உன் அம்மாவைப்பற்றி யோசி! எங்கள் வாழ்க்கையை தியாகம் செய்தோம், உன்னைப் படிக்க வைத்தோம். நாங்கள் ஏழைகள், ஆனாலும் இதைச் செய்தோம். அதைச் செய்தோம். நீ எதையும் இழக்கவில்லை. எல்லாவற்றையும் மறந்துவிட்டாயா?'' பெற்றோரின் அமைதி குலைகிறது. உறவுமுறை ஆரோக்கியமாக இருப்பதில்லை. ஏன் ஆரோக்கியமாக இல்லை என்றால், அவர்கள் அதீத பொதுநலப் பண்போடு இருப்பதுதான்.

சுயநலத்தோடு இருங்கள், நீங்கள் தற்கொலை செய்து கொள்கிறீர்கள். அதிக பொதுநலம் கொண்டு இருந்தால் நீங்கள் கொலை செய்கிறீர்கள்.

தேர்வு செய்யாதீர்கள். இந்த இரண்டிற்கும் இடையே தேர்வு செய்ய வேண்டிய அவசியமில்லை. இயல்பாக இருங்கள். அகத்தூண்டுதலோடு செயல்படுங்கள். முற்சாய்வுகள் இல்லாமல், உத்தேசமாக கருத்துக்கள் இல்லாமல் வாழ்க்கையின் ஒவ்வொரு கணத்திற்கும் எதிர்வினையாற்றுங்கள். பொதுநலப் பண்பும் வேண்டாம், சுயநலவாதியாகிடவும் வேண்டாம். நெகிழ்வாய் இருங்கள். வாழ்க்கையின் சில சமயங்களில் சுயநலமாக இருக்க வேண்டிய தருணங்கள் வரும். ஆனால் அது தானாக நடக்கும். அதேபோல் பொதுநலத்தோடு இயங்குகின்ற தருணங்களும் வரும். அதுவும் இயல்பாக நடக்கும். இறுகிய நடைமுறை வேண்டாம். நெகிழ்ச்சியுடன் இருங்கள். தேர்வு என்ற பிரச்சினைக்கு இதுதான் என் அணுகுமுறை.

ஒருமுறை தேர்வு என்று ஆகிவிட்டால் நீங்கள் பிரச்சினைக்கு உள்ளாவீர்கள். நீங்கள் தொடர்ந்து உங்கள் தேர்ந்தெடுத்த

பங்கிற்கேற்ப எதிர்வினையாற்றிக் கொண்டிருக்க வேண்டும். சுயநலத்தை உங்கள் தத்துவமாகக் கொண்டிருந்தீர்களானால், பகிர்தலில்தான் மகிழ்ச்சி என்ற தருணம் வரும். உங்களால் பகிர்ந்து கொள்ள முடியாது. ஏனென்றால் அது பொதுநலப் பண்பாகத் தெரியும். எனவே நீங்கள் சுயநலத்தோடு இருப்பீர்கள். மகிழ்வைத் தவறவிடுவீர்கள். தொடர்ந்து மகிழ்ச்சியை இழக்கக் காரணமான சுயநலம் என்ன வகையானது? இது வெறும் மதியின்மை, வேறொன்றுமில்லை.

அல்லது, பொதுநலப் பண்பை தேர்ந்தெடுக்கிறீர்கள். ஒருவர் உங்களை தவறாகப் பயன்படுத்திக்கொள்வதை உணர்கிறீர்கள். நீங்களும் உங்கள் பொதுநலப் பண்பின் காரணமாக அதை அனுமதித்துக்கொண்டே போகிறீர்கள். யாரோ உங்களை அழிக்கிறார்கள். நீங்களும் அழிக்கப்பட்டு வருகிறீர்கள். உண்மையில் ஒரு தியாகிபோல உணர்கிறீர்கள். பாருங்கள்! ''விரைவில் சர்ச் என்னைத் துறவியாக அறிவிக்கும்'' ஆனால், உங்களை அவர் அழிக்க அனுமதிப்பதின் மூலம் நீங்கள் அந்த நபரையும் அழித்துக் கொண்டிருக்கிறீர்கள். அவரை வன்முறையாளராக்குகிறீர்கள். அசிங்கமானதை அவருக்கு கற்றுக் கொடுக்கிறீர்கள். அவர் இதையே மற்றவர்களுக்கும் செய்யப் போகிறார்.

ஆகவே எந்தக் கருத்தும் இல்லாமல் வாழ்க்கையில் நகருங்கள். ஒவ்வொரு கணமும் தானாகவே முடிவாகட்டும். ஒரு கட்டுப்பாடு என்பதில்லாமல் நீங்கள் சுமந்து கொண்டிருக்கும் கருத்தாக்கம் இல்லாமல் முடிவாகட்டும். உங்கள் தத்துவங்களின் அடிப்படையில் எப்போதும் செயல்படாதீர்கள். மெய்மைக்கு எதிர் வினையாற்றுங்கள். சில சமயங்களில் உங்களை சுயநலவாதியாக காண்பீர்கள். மற்ற சமயங்களில் உங்கள் பொதுநலப் பண்பு தெரிய வரும். அதுவே நல்லது. நீங்கள் ஒரு பாய்வு.

சுயநலமாக இருப்பதுபற்றி குற்றஉணர்வு கொள்ள வேண்டாம். ஏனென்றால் சுயநலம் இயற்கையானது — இல்லையென்றால் உங்களால் பிழைத்து இருக்க முடியாது.

அதேபோல் நீங்கள் பொதுநலத்தோடு செயல்பட்டால் பெரிதாக ஒன்றும் நினைத்துக்கொள்ள வேண்டாம். ஏனென்றால் அதுவும் இயற்கையானதுதான். இல்லையெனில், உங்களால் நேசிக்கவே முடியாது. நேசம் இல்லாமல் மகிழ்ச்சி என்பதும் இல்லை.

## ஐந்தாவது கேள்வி

*நான் உங்கள் வார்த்தைகளைப் படிக்கும்போது, உங்கள் பிரசங்கங்களை ஒலிநாடாக்களில் கேட்கும்போது, இப்போது இங்கே இருக்கையில், நான் முற்றிலுமாக ஈடுபட்டு இருக்கிறேன். ஆனால், இதற்கு இடைப்பட்ட காலங்களில் இவை மனதின் பின்னுக்குத் தள்ளப்பட்டு நான் வாழ்க்கையின் அற்பவிஷயங்களில் மூழ்கி விடுகிறேன். நான் எவ்வாறு பாய்வை தொடர்ச்சியாக வைத்துக் கொள்வது?*

டினாஸ் வாடியா, உங்களுக்கான என் செய்தி இதுதான்: நான் எதையும் அற்பமானதாக பார்ப்பதில்லை. நீங்கள் நேசத்தோடும், தியானத்தோடும் இருப்பீர்களானால், நீங்கள் அந்த அற்பங்களையும் ஆழமானவையாக்க முடியும். அபசாரமானது, ஆசாரமாகும், சந்தையும் ஆலயமாகும். அது உங்களைப் பொறுத்தது. எனக்கு எதுவும் அற்பமானதல்ல. நான் அற்பமான எதையும் எதிர்கொள்ளவில்லை.

பல் துலக்குவது மற்ற எதையும் போல தியானமிக்கது. அதேபோல் குளிப்பதும், உண்பதும், உறங்குவதும் தியானிப்பதே. கடவுள் எங்கும் இருக்கிறார். ஒவ்வொரு செயலிலும் இருக்கிறார். ஒவ்வொரு சிறிய விஷயத்திலும் இருக்கிறார்.

இந்த இயல் உலகு ஒரு ஹோலோகிராம் போன்றது என்பதை நினைவில் கொள்ளவும். ஹோலோகிராம் என்றால் ஒவ்வொரு பகுதியும் முழுவதையும் உள்ளடக்கியிருக்கிறது. பகுதி என்பது வெறும் பகுதி என்று இல்லை. பகுதியானது சிறிய அளவில் இருக்கலாம். ஆனால் அது முழுவதையும் உள்ளடக்கி வைத்திருக்கிறது. உதாரணமாக, கடல் நீரின் ஒரு

துளி ஓர் ஹோலோகிராம். அது மிகச்சிறியதுதான், அது கடல் அல்ல. ஆனால் அது கடல் முழுவதையும் கொண்டிருக்கிறது. கடலின் எல்லா ரகசியங்களும் அதற்குள் இருக்கிறது. கடல் நீரின் ஒரு துளியை நீங்கள் புரிந்துகொண்டால், இதுவரை இருந்த மற்றும் இருக்கப்போகும் கடல்கள் அனைத்தையும் நீங்கள் புரிந்துகொண்டார்போல. அது ஒரு ஹோலோகிராம்.

ஒவ்வொரு சிறிய செயலும் ஒரு ஹோலோகிராம்தான். அது முழுமையை உள்ளடக்கியிருக்கிறது. அது உங்களைச் சார்ந்தது. நீங்கள் அதை எப்படிப் பார்க்கிறீர்கள் என்பதைப் பொறுத்தது. இப்போது நீங்கள் ஒரு தேவையற்ற பிரச்சினையை உருவாக்குகிறீர்கள். நான் சொல்வதைக் கேட்டு மயங்கிப்போய், அதில் மூழ்கி விட்டீர்கள். இந்த மயக்கத்தையும் ரசிக்கின்றீர்கள். நீங்கள் அலுவலகம் போனால் அங்கே உங்களால் அந்தளவு வேலையில் ஊன்றிப்போக முடியவில்லை. ஆனால் இது என் செய்தியை முழுவதுமாக தவறவிடுவதற்கு சமம். அலுவலகத்தில் மனதளவில் என்னைப் பின்னுக்குத் தள்ளவேண்டும். அதுதான் இயற்கையானது. இல்லையென்றால், அலுவலகத்தில் சரியாக இயங்க முடியாது. அலுவலகத்தில் என் குரலைக் கேட்டுக் கொண்டே இருக்கமுடியாது. அப்படிச் செய்யவும் கூடாது. வாகனம் ஓட்டும்போது என் சிந்தனையிலேயே இருந்தால், விபத்து ஏற்பட வாய்ப்பு உண்டு. ஓட்டும் போது ஓட்டுதல்தான் கருத்தாக இருக்க வேண்டும் மற்றவை பின்னணியில். என் பேச்சைக் கேட்கும்போது நான் பிரதானமாக வேண்டும். மற்றவை பின்னால் இருக்க வேண்டும். என் பேச்சைக் கேட்கையில் கணக்குப் போடுவது, அலுவலகம் அல்லது பணத்தைப் பற்றி எண்ணுவது என்றிருந்தால் என்னைத் தவற விடுகிறீர்கள்.

மேலும் உங்களுக்குள் எழும் மகிழ்ச்சிக்குக் காரணம் நான் அல்ல. அது எழுவதற்குக் காரணம், இங்கே எல்லாம் பின்னால் தள்ளப்படுகின்றன. நீங்கள் அதை அனுமதிக்கின்றீர்கள். நீங்கள் இந்தக் கணத்தில் முற்றிலுமாக மூழ்கிப்போய் விடுகிறீர்கள். நீங்கள் வீட்டிற்குச் செல்லும்போது, அதேபோல் ஒவ்வொரு கணமும் ஈடுபாட்டோடு இருக்கவேண்டும்.

சாப்பிடும்போது சாப்பிடுங்கள், மற்றவை எல்லாம் பின்னணியில் போய்விடவேண்டும். ஒருவர் தொடர்ந்து தன் உள்படிவத்தை மாற்றியமைத்துக் கொண்டேயிருக்க வேண்டும். ஏனென்றால் ஒவ்வொரு கணத்தின்போதும் வேறு ஒன்றிற்கு கவனம் செலுத்த வேண்டிவரும்.

மகிழ்ச்சியின் ரகசியம் என்பது நீங்கள் செய்யும் ஒவ்வொரு செயலிலும் ஊன்றிப்போய்விட வேண்டும். நீங்கள் உங்களுக்குள் பாய்வதைக் காணலாம். இங்கே உணரும் அந்த அமைதி உங்களுக்குள் பாய்வதை காணலாம். இதற்கும் எனக்கும் எந்தத் தொடர்பும் இல்லை. இது நீங்கள் முழுவதுமாக ஊன்றிப் போவ தோடு தொடர்புடையது.

ஆனால் இது கடினம்தான். ஏனென்றால் மற்றவை அனைத்தையும் அற்பமானவை என்று அழைக்கின்றீர்கள். அவற்றைக் கண்டனம் செய்கிறீர்கள். இந்தக் கண்டனத்தினால் உள்ளீர்ப்பு கடினமாகிறது. சிறியதிலிருந்து மிகப்பெரியது வரை எல்லாவற்றிற்கும் மதிப்பளியுங்கள். ஏனென்றால், சிறியதென்றும், பெரியதென்றும் ஏதும் இல்லை. பெரியது சிறியதைச் சார்ந்துள்ளது. சிறியது பெரியதை உள்ளடக்கி இருக்கிறது. வாழ்க்கை ஒரு ஹோலோகிராம். விதை தன்னுள் முழு மரத்தையும் உள்ளடக்கி வைத்துள்ளது. முழு வரைபடமும் விதைக்குள் ஒளிந்திருக்கிறது. ஒவ்வொரு சிறிய செயலும் முழு வாழ்க்கையையும் உள்ளடக்கியிருக்கிறது. அதன் முழு ஆழம், அதன் அனைத்துப் பரிமாணங்கள் ஒவ்வொரு செயலிலும் உள்ளது.

> *''நான் எவ்வாறு பாய்வை தொடர்ச்சியாக வைத்துக் கொள்வது?'' என்று கேட்கிறீர்கள்.*

முதலில் இந்தக் கண்டனம் செய்யும் மனப்போக்கை கை விடுங்கள். பாய்வு தொய்வில்லாமல் இருக்கும். நீங்கள்தான் பாய்வை குலைக்கிறீர்கள். அற்பங்கள் அல்ல. ஏனென்றால் அப்படி ஏதும் இல்லை. ஏனென்றால் நீங்கள் அரை மனதுடன் செய்கிறீர்கள்.

ஜென் குரு சொன்னது: யாரோ ஒருவர் கேட்டார். ''நீங்கள் ஞானம் அடைந்துவிட்டீர்கள், இப்போது என்ன செய்கிறீர்கள்?'' குரு பதில் சொன்னார். ''நான் மரம் வெட்டு கிறேன், கிணற்றிலிருந்து தண்ணீர் சுமந்து செல்கிறேன். எவ்வளவு அற்புதமாய் இருக்கிறது, எவ்வளவு விந்தையாய் உள்ளது'' அந்த மனிதர், ''மரம் வெட்டுவது, தண்ணீர் கொண்டு செல்வது, இவையெல்லாம் அற்பமான விஷயங்களாயிற்றே. நானும் இதைச் செய்கிறேன். பிறகு என்ன வித்தியாசம்'' என்று கேட்டார். குரு பதில் சொன்னார். ''நானும் இந்த வேலைகளை முன்னர் செய்வேன். ஆனால் வித்தியாசம் மிகப் பெரியது. முன்னர் இவையெல்லாம் அற்பமானவை என்று நினைத்தேன். இப்பொழுது அவ்வாறு அல்ல. இது என் பிரார்த்தனையாகி விட்டது. இதுவே என் தியானம். மரம் வெட்டும்போது, நான் புத்தரை வணங்குகிறேன். தண்ணீர் கொண்டு வருவதில் நான் புத்தரை வழிபடுகிறேன்.''

இந்த மனப்பான்மை உங்களுக்குள் எழுந்ததென்றால் பாய்வு தொய்வு இல்லாமல் தொடர்ச்சியாக இருக்கும்.

## ஆறாவது கேள்வி:

*ஒரு குழந்தைக்கும் புத்தருக்கும் உள்ள வேறுபாடு என்ன?*

பெரிய ஒற்றுமைகள் உள்ளன. பெரிய வேறுபாடுகளும் உள்ளன.

குழந்தை புத்தரைப் போன்று களங்கமில்லாதது. அவர்கள் வியப்புணர்ச்சியால் நிரம்பியவர்கள்... எந்தக் குழந்தையைப் போலவும் புத்தர்களும் வியப்புணர்ச்சி மிக்கவர்கள். குழந்தை யானது, 'அறியாதது' என்ற நிலையிலிருந்து இயங்குகிறது. ஒரு புத்தரும் அவ்வாறே இயங்குகிறார். ஆனால் வித்தியாசம் இருக்கிறது. பெரிய அளவில் வித்தியாசம் இருக்கிறது.

குழந்தையின் களங்கமின்மை, வெகுளித்தனம் இயற்கையானது - அது தொலைந்து போகும், அது திரும்பப் பெற வேண்டிய

ஒன்று. குழந்தையின் களங்கமின்மை அனுபவப்படாததினால் வருவது, அது தானாகவே ஈட்டியதல்ல. முதலில் தோன்றும் பால் பற்கள் போன்றது. அவை விழுந்துவிடும். குழந்தை திசைமாறிப் போகும். போக வேண்டும். அது தன் வெகுளித்தனத்திலிருந்து விழவேண்டும். அதுதான் விவிலியக் கதையான ஆதாமின் வீழ்வின் பொருளாகும். ஆதாம் என்றால் ஒவ்வொரு குழந்தையும் என்று பொருள் கொள்ள வேண்டும். கடந்த காலத்தில் நடந்த ஒரு பழங்கதை என்று நினைக்க வேண்டாம். அது ஒவ்வொரு நாளும் நடக்கிறது. எப்பொதெல்லாம் ஒரு குழந்தை பிறக்கின்றதோ அது மறுபடியும் நடக்கிறது. மீண்டும் மீண்டும் அது அரங்கேறுகிறது. மனிதன் கண்டுபிடித்ததிலேயே மிகவும் குறிப்பிடத்தக்க நீதிக்கதைகளில் இதுவும் ஒன்று. இதற்கு ஒப்பீடே கிடையாது.

ஒவ்வொரு குழந்தையும் ஏடன் தோட்டத்திலே பிறக்கிறது. அது வெகுளியானது. நிர்வாணமானது, எதுவும் அறியாமல் வியப்புணர்ச்சி நிறைந்து இருக்கிறது. அந்தக் கணத்திற்கேற்ப வாழ்கின்றது. ஒரு குழந்தை கோபமாக இருந்தால், அது வெறுமனே கோபம் மட்டுமே கொள்கிறது. அதுவே கோபமாகிறது. அதேபோல் குழந்தை நேசமாக இருந்தால், அது நேசமாகவே மாறிவிடுகிறது. அது ஒரு நிலையிலிருந்து மற்றோர் நிலைக்கு எந்தச் சிக்கலும் இல்லாமல், தயக்கம் இல்லாமல் நகர்கிறது. ஒரு கணம் முன்னர் கோபமாக இருந்த குழந்தை, உன்னைப் பார்க்கவே மாட்டேன் என்று சொன்ன குழந்தை, அடுத்த கணமே உங்கள் மடியில் அமர்ந்து, கதை சொல், பாட்டு பாடு என்கிறது. அது கடந்த காலத்தை சுமப்பது இல்லை. ஆனால் அது விழும். களங்கமின்மை நீடிக்காது. வீழ்வு உள்ளார்ந்தது. அது முக்கியமானதும் கூட. இந்த வெகுளி நிலையிலிருந்து வீழ்ந்தால்தான் அது அடுத்த களங்கமற்ற நிலையை எட்ட முடியும். அதைத்தான் புத்தத்தன்மை என்று அழைக்கின்றனர். அது வழிதவறிப் போக வேண்டும். தடயம் தொலைக்க வேண்டும்.

அது அடர்ந்த நரகத்திற்குள், துயரத்திற்குள், துன்பத்தினுள் செல்ல வேண்டும். அதன்பிறகு வாழ்க்கை தரும் அனுபவத்தின்

மூலம் அது பின்னோக்கி நகரத் தொடங்கும். அந்தக் களங்கமற்ற நாட்களைத் தேடத் தொடங்கும். பழைய நினைவுகள் அதை ஆட்கொள்ளும்.

பாலைவனத்தை எதிர்கொண்ட நீரோடைக்கு அதுதான் நடந்தது. ''காற்றினில் கரைந்து போ'' என்று பாலைவனம் சொன்னபோது, நீரோடைக்கு சில ஞாபகங்கள் எழத்தொடங்கின. ''ஆம். அப்படித்தான் இருந்தது'' என்று எண்ணிப் பார்த்தது.

நீங்கள் ஒரு புத்தரை எதிர்கொள்ளும்போது, சில நினைவுகள் எழத் தொடங்கும். ''ஆம். இதைப்போன்று ஏதோ ஒன்றை ருசித்திருக்கிறேன்'' என்று உணர்வீர்கள். அந்த ருசி மறக்கப்பட்டது. மறந்துவிட்டோம் என்ற ஞாபகம் கொள்ளும் அளவிற்குத்தான் மறக்கப்பட்டது. முற்றிலுமாக அழிக்கப்படவில்லை. அழிக்கப் படவும் முடியாது. குழந்தைப் பருவம் என்ற வியப்பில் நீங்கள் வாழ்ந்து இருக்கிறீர்கள். ஒரு புத்தருக்கு அருகில் வரும்போது அந்த நினைவுகள் மறுபடியும் வெளிவரத் தொடங்குகின்றன. மீண்டும் குழந்தையாகும் உணர்வு ஏற்படுகிறது. இரண்டாம் பிறப்பு. நீங்கள் இருமுறை பிறந்தவராகின்றீர்கள்.

புத்தர் இப்போது மீண்டும் குழந்தையாகி விட்டார். ஆனால் இந்த குழந்தைப் பருவம் என்றும் தொலைந்து போகாது. அது ஈடுபட்ட ஒன்று. அது அனுபவங்கள்மூலமாக கிடைக்கப் பெற்றது. சுவையான, கசப்பான, மற்றும் பற்பல.

புத்தத்தன்மை குழந்தைப் பிராயத்திற்கு ஒப்பானதுதான். ஆயினும் அதே போன்றது அல்ல.

இந்த அறிந்திராத நிலை என்பது அழகான ஒரு அறியாமை எனலாம். குழந்தை மர்மங்களுக்கு தயாராக இருக்கும். முழு வாழ்க்கையும் ஒரு விளங்கா உலகமாக இருக்கும். ஒரு விந்தையுலகமாக இருக்கும். எல்லாமே அலாதியாக இருக்கும். மருட்சித் தோற்றமாக இருக்கும். வண்ணமயமாக இருக்கும். கடற்கரையில் கிடைக்கும் சிறிய சிப்பிகள்கூட குழந்தைக்கு பொக்கிஷமாகத் தோன்றும். வண்ணக்கற்கள் கோஹினூர்களாகத்

தெரியும். குழந்தை முற்றிலும் வேறோர் உலகில் வாழ்கிறது; அது கவித்துவமான உலகில் வாழ்கிறது.

புத்தர் மறுபடியும் அதே உலகினுள் நுழைகிறார். அந்தக் கவிதை மேம்படுத்தப்படுகிறது. அவருடைய அனுபவங்களில் அது ஆழமாகிறது. களங்கமின்மையோடு எல்லாத் தொடர்பும் விட்டுப்போயிருந்தன. அந்த களங்கமின்மை மீண்டும் கிடைக்கப் பெறுகிறது. சொர்க்கம் மீட்டெடுக்கப்படுகிறது. அது தொலைந்து போனது, தொலைந்த ஒன்று. திரும்பக் கிடைக்கும்போது, முதன் முறையாக அதன் உண்மையான மதிப்பை உணர்வீர்கள். மதிப்பு பற்றிய எந்தக் கருத்தும் அது தொலைந்துபோவதற்கு முன் இருக்காது. கடலிலிருந்து மீனை எடுத்தால்தான் அதற்கு கடலின் அருமை தெரியும். உண்மையில் இதற்கு முன் மீனுக்கு கடல் பற்றிய உணர்வே இல்லாமல் இருந்தது. மீன் சமுத்திரத்தை சாதாரணமாக எடுத்துக் கொண்டது.

குழந்தை எல்லாவற்றையும் சாதாரணமாக எடுத்துக் கொள்ளும். அது அருளில் இருந்து இன்னும் வீழவில்லை. விழ வேண்டும். மீன் கரைக்கு வரவேண்டும், மீன் தாகத்தை உணரவேண்டும். பிரிவை, துன்பத்தை உணரவேண்டும். அதற்குப் பிறகுதான் குதிப்பு. அதன்பிறகு சமுத்திரம் மிக அழகாகத் தோன்றும். அளப்பரிய மதிப்பு தெரியும். பிரிவின்மூலமாக மதிப்பு கூடுகிறது. ஒவ்வொரு குழந்தையும் ஒரு பாபியாக வேண்டும். அதனால்தான் அது மறுபடியும் மறுபடியும் நடக்கிறது. எந்தக் குழந்தையாவது திசைமாறிப்போக முடியாமல் தடுக்கப்பட்டால், எந்தத் தவறுமே செய்யமுடியாமல் பாதுகாக்கப்பட்டால், அது மேலோட்டமாக இருக்கும். அதற்கு ஆழமே இருக்காது. அதன் புனிதத்தன்மை மேற்பரப்பில்தான் இருக்கும். தோல் கணமே இருக்கும். அதுகூட இருக்காது. சற்றே கீறினால் கீழே விழுந்துவிடும்.

அதனால்தான் துறவிகள் என்று அழைக்கப்படுவோரில் பலர் ஆழமில்லாமல் இருக்கின்றனர். அவர்கள் கண்களில் அறிவின் மின்னொளி காணப்படுவதில்லை. அவர்கள் உயிருருவில் அந்தக்

கூர்மை தென்படுவதில்லை. அவர்கள் மந்தமாக, கூர்மையற்று, புத்திசாலித்தனம் இல்லாமல் தெரிகின்றனர். ஞான மரத்திலிருந்து கனி உண்ணாது இருக்க மட்டுமே முயற்சிக்கின்றனர். தங்கள் பால்பற்களைத் தற்காத்துக் கொள்வதிலேயே இருக்கின்றனர். தங்கள் குழந்தைப் பருவத்தை தொலைக்காமல் இருக்க முயற்சி செய்கின்றனர்.

பாவம் என்பது கடவுளிடமிருந்து விலகிப் போவது, உங்கள் குழந்தைப்பருவ வெகுளித்தனத்திலிருந்து விலகிப்போவது என்று அர்த்தமாகும். வேறு ஒன்றுமில்லை. அந்த விலகுதலின் துன்பத்திலிருந்து என்றாவது ஒரு நாள், துன்பம் அதன் முழு நிறைவு நிலையை எட்டும்போது, துன்பம் அதன் உச்சநிலையை அடையும்போது, உங்களுக்கு திரும்பிப்போக வேண்டும் என்ற அவா திடீரென வரும். இதுபோதும்! அந்த கணத்தில்தான் ஒருவர் சீடராகிறார். சன்னியாசம் பெறுகிறார். அந்தக் கணத்தில்தான் ஒருவர் தொலைந்துபோன நிலத்தைத் தேடத் தொடங்குகிறார். நீங்கள் வந்தடையும்பாது, அது அதே இடம்தான். ஆனால் நீங்கள் அதே மனிதரல்ல.

ஆக, குழந்தையும் புத்தரும் ஒரு இடைவெளியில்தான் இருக்கின்றனர். ஆனாலும் அது ஒரே வகையானதல்ல. காரணம் குழந்தை குழந்தைதான். புத்தர் புத்தர்தான். புத்தர் என்பவர், நெடுந்தூரம் போய்விட்ட குழந்தை, இப்போது அது திரும்பிவிட்டது.

ஏசுவின் இந்த நீதிக்கதையை நினைவில் கொள்ளவும்.

ஒரு மனிதனுக்கு இரண்டு மகன்கள். அவர்களுக்குள் சண்டையிட்டு சொத்தைப் பிரித்துக்கொண்டனர். மூத்தவன் தந்தையோடு இருக்க, இளையவன் தலைநகரம் நோக்கிப் போனான். இளையவன் குடி, சூதாட்டம், விலைமகளிர் என பாபமான வாழ்க்கை வாழ்ந்தான். சடுதியில் சொத்தை எல்லாம் இழந்து பிச்சைக்காரனாகிப் போனான். பிழைப்பிற்கு பிச்சை எடுக்கத் தொடங்கினான். மூத்தவன் தந்தையோடு

இருந்து கடினமாக உழைத்தான். கட்டுப்பாடோடு இருந்தான். சமயச்சார்புடன் இருந்தான். சொத்தை பத்து மடங்கு அதிகமாக்கினான். ஒரு நாள் 'பிச்சைக்கார மகன்' திரும்பி வருகிறான் என்ற செய்தி வந்தது.

அவன் அதிகம் துன்பப்பட்டு விட்டான், அவன் கிட்டத்தட்ட நொறுங்கிப் போகும் நிலைக்கு வந்துவிட்டான். அவன் பழைய மாதிரி இல்லை. எல்லாம் தொலைந்து விட்டது. இழிந்த நிலையில் இருந்தான். ஆனால் அவனுக்கு ஒரு யோசனை தோன்றியது. ''நான் அப்பாவிடம் திரும்பிப் போகிறேன். அவருடைய மகனாக இருக்க எனக்குத் தகுதியில்லை. ஆனால் குறைந்தபட்சம் அவர் என்னை ஒரு வேலைக்காரனாகவாவது ஏற்றுக்கொள்ளலாம். என் தந்தையின் வீட்டில் நிறைய வேலையாட்கள் இருக்கின்றனர். அவர்களில் ஒருவராக நான் இருந்துவிடுகிறேன். அவர் காலில் விழுந்து மன்னிப்புக் கோருகிறேன். நான் ஒன்றே ஒன்றை மட்டும் கோருவேன்; நான் ஒரு வேலைக்காரனாக இருக்கிறேன். இங்கே இருக்க அனுமதியுங்கள்.''

மகன் வரும் செய்தி கேட்டதும், தந்தை பெரிய விருந்திற்கு ஏற்பாடு செய்தார். அரிதான மதுவகைகள் கொண்டு வரப்பட்டன. மூத்த மகன் கடும் வெயிலில் வயல்காட்டில் வேலை செய்து கொண்டிருந்தான். மாலையானதும் திரும்பிக்கொண்டிருந்தான். யாரோ ஒருவர் அவனிடம், ''உன் அப்பா செய்யும் அநீதியைப் பார். இது நியாயமே இல்லை. அவருக்கு சேவை செய்து கொண்டிருந்தாய், சமயப்பற்றுடன் இருந்தாய். உனக்கு ஒரு விருந்துகூட கொடுக்கவில்லை. இப்போது உன் அப்பா இருப்பதிலேயே கொழுத்த கன்றை விருந்துக்காக வெட்டுகிறார். சிறப்பான மது வரவழைக்கப்படுகிறது. ஏனென்றால் உன் தம்பி வருகிறான். அவன் நற்பண்புகள் எல்லாம் இழந்துவிட்டான். அவன் பாபி, இது நியாயமில்லை.''

இயற்கையாக, தர்க்க ரீதியாக இது நியாயமற்றதுதான்.

மூத்த மகனுக்கு கோபம். வருத்தம், எரிச்சல் எல்லாம் உண்டாயிற்று. அவன் தன் தந்தையிடம், ''என்ன செய்து

கொண்டிருக்கிறீர்கள்? எனக்கு ஒரு விருந்துகூட வைத்ததில்லை. நான் வரவேற்கப்படவேயில்லை. உன் இளைய மகன் என்ன செய்தான் என்று பெரிய கொண்டாட்டம் ஏற்பாடு செய்கிறீர்கள்?''

தந்தை சிரித்துவிட்டு சொன்னார். ''மகனே, கோபப்படாதே. உனக்குத் தெரியாது - அவன் வழிதவறிப் போனான். இப்போது வீடு திரும்புகிறான். அவன் பாபம் செய்துவிட்டு வீடு திரும்புகிறான். அவன் எல்லாவற்றையும் தொலைத்துவிட்டான். எல்லாவற்றையும் தொலைத்ததில் ஏதோ ஒன்றைப் புரிந்து கொண்டான். நீ எப்போதும் என் கூடவே இருக்கிறாய். உனக்கு அழைப்பு தேவையில்லை. உன் தம்பியை பெருமகிழ்ச்சியோடு நான் வரவேற்க விடு. அவனுக்காக நான் காத்துக் கொண்டிருக் கிறேன்.''

இந்தக் கதையை படிப்பவருக்கு இது சற்றே நியாயமாகப் படாது. ஏசு இதற்கு என்ன காரணங்கள் அளித்தாலும் அது நியாயமாகத் தெரியவில்லை. - ஆனால் அப்படித்தான் நடக்கிறது. இது மிகவும் அர்த்தமுள்ள நீதிக்கதையாகும்.

தங்களின் முதல் குழந்தைப் பிராயத்தை தற்காத்துக் கொள்ள முயற்சி செய்யும் துறவிகள் மேலோட்டமாகவே இருப்பார்கள். இதுதான் முதல் மகனின் விஷயத்திலும். அவன் ஆழமற்றவன். அவனது நற்பண்புகள் எல்லாம் பாசாங்கு. அவனுடைய கீழ்ப்படிவு எல்லாம் வெறும் பயம்தான். அவன் ஒரு கோழை, அவன் துணியவில்லை. இளையவன் துணிவுள்ளவன். துணிவு கொண்டான். சூதாடினான், தொலைத்தான். பாபி ஒரு நாள் உணரத்தொடங்குகிறான். ''நான் திரும்ப வேண்டும். என் தந்தையின் வீட்டில் வெறுமனே ஒரு வேலைக்காரனாக இருக்கிறேன்.'' திரும்ப வேண்டும் என்ற ஆசை புத்தத்தன்மையின் தொடக்கம். ஆதாம் என்றால் குழந்தைத்தன்மையிலிருந்து குழந்தை விலகிப்போகிறது. கிறிஸ்து என்றால் ஆதாமின் வீடு திரும்புதல், குழந்தையானது, தன் களங்கமற்ற இயற்கை நிலைக்குத் திரும்புகிறது.

ஆகவே புத்தரும் குழந்தையும் ஒரே இடைவெளியில்தான் இருக்கின்றனர். குழந்தை வெளியே போகத் தயாராகிக் கொண்டிருக்கிறது. புத்தர் அங்கே திரும்பிவிட்டார். அவர் வீடு திரும்பிவிட்டார். ஆகவே இதில் ஒற்றுமை இருப்பினும் ஒன்றேயல்ல. எவ்வளவு சாத்தியமோ அந்தளவு வேறுபட்டவை. குழந்தைப் பருவம் தொலைக்கப்பட வேண்டிய ஒன்று. அப்படியானால்தான் நீங்கள் புத்தத்தன்மை அடையமுடியும்.

## இறுதிக் கேள்வி:

> *"பகவான், நீங்கள் எனக்கு 13 பிப்ரவரி அன்று சன்னியாசம் வழங்கியதிலிருந்து எனக்கு ஒரு பிரச்சினை. எல்லா சப்தங்களும் எனக்கு 'பகவான்' என்று சொல்வது போல் இருக்கிறது. உதாரணமாக கார், ரிக்ஷாக்களின் ஹார்ன் சப்தம், பட்சிகளின் சப்தம், பொருட்களும் விலங்குகளும் நாள் முழுவதும் ஒரே சப்தத்தை எழுப்புகின்றன. பகவான் என்னால் இதை விட்டுவிட முடியவில்லை. என் தலையில் ஒரு ராகம் போல் ஒலிக்கிறது. இதை எனக்கு விளக்க முடியுமா? நான் நேசத்தில் இருக்கிறேனா? இது மன இசிவா? இதை ஒழிக்க நான் என்ன செய்ய வேண்டும்? தயவுசெய்து உதவுங்கள்.*

உங்களுக்கு எந்த உதவியும் தேவையில்லை. உங்களுக்கு ஆசீர்வாதங்கள் மட்டுமே தேவை. நான் உங்களை ஆசீர்வதிக் கிறேன்.

★★★